# திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்



# மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு
## திருமுறைத் திருநாள்
## நிகழ்ச்சிகள்



திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

24-வது மகா சந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

ஆதீன வெளியீடு 66

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன

மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு—திருமுறைத்திருநாள்

# நிகழ்ச்சிகள்

(28, 29, 30, 31—8—41)

இவ்வாதீனம்
24-வது மகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின்
திருவுளப்பாங்கின்படி வெளியிடப்பெற்றது

1944

விலை ரூ. 1—0—0

# முகவுரை

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தில் ஆதி குரு ஞானசம்பந்தருக்கு 24-வது பிற்றோன்றலாக எழுந்தருளியிருந்து சைவத்தனியரசு நடாத்தும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் சைவசாத்திரப் பொருள்களைப் பலரும் அறிந்து இன்புறும்வண்ணம் நூல்கள் பல அச்சிடுவித்தும், அச்சிட உதவியும், ஆங்காங்கே கூட்டப்பெறும் சைவ மகாநாடுகள் பலவற்றிற்கும் பொருள் உதவிபுரிந்தும் வருகிறார்கள். சாத்திரப்பொருளுக் கிலக்கியமாக விளங்கும் இவ்வாதீனத்துக்குட்பட்ட பல பெருங்கோயில்களிலும் திருப்பணிகள் செய்து நித்திய நைமித்திக விழாக்களைச் செம்மையுற நடத்தியும் பணியாற்றி வருகின்றார்கள்.

மெய்கண்ட சாத்திர உணர்ச்சி அருகியும், நேராகப் பொருள்கொள்ள வேண்டியதற்கு வசதியின்மையால் மொழியுணர்ச்சியால்மட்டும் ஏற்படுகின்ற ஆராய்ச்சியறிவால் மாறுபடக்கொண்டும் பலரும் அல்லலுறுவதுகண்டு, அந்நூல்களை ஆராய்ச்சி செய்வித்துப் பலரும் தெளியும்படியான எளியநடையில் எழுதுவித்து, ஒரு பேரவை கூட்டி அதன்கண் பிரசங்கரூபமாக வெளியிடத் திருவுளங்கொண்டும், அவற்றையும் அச்சியற்றிப் புத்தக வடிவில் வெளியாக்குதல் பெரும்பலன் அளிக்கும் என்னும் பெருங் கருணையினாலே **விசு ஆண்டு ஆவணித்திங்கள் 12**-ம்நாள் தொடங்கி 15-ம்நாள் முடிய ஒரு பேரவை கூட்டிப் பல அறிஞர்களைக் கொண்டு சொற்பெருக்காற்றச் செய்தும், பேசுங்காலத்திலேயே பேசும் பொருளாராய்ச்சிகளை அச்சிட்டு வழங்கியும் பெருங்கருணை பூத்தார்கள். சித்தாந்த முதனூலாகிய **சிவஞான போத ஆராய்ச்சியே** இதில் எடுத்துக்கொள்ளப்பட்டது. அது

அக்கூட்டத்தில் வந்திருந்தார்க்கே பயன்படுவதாம். அதன்பலன் மேலும் பலருக்கும் கிட்டும் பெருநோக்காலேயே மகாநாடு கூட்டிய நோக்கமும் ஏற்பாடுகளும், மகாநாட்டு நடவடிக்கைகள், அதில் வழங்கிய ஆய்வுரைகள் என்னும் இவை முதலியவைகளைத் தொகுத்து இந்நூல் வெளியிடப்படுகிறது.

சிவஞானபோத சூத்திரங்களைப் பல புலவர்களையுங் கொண்டு தனித்தனியே ஏனைய சமயநூல் மேற்கோள்களுடன் ஆராய்ச்சிசெய்து மகாநாட்டிற்கு அனுப்பப்பெற்று அச்சிட்டு வழங்கிய கட்டுரைகள் இப்போதும் அச்சிடுவித்து இதன் தொடர் நூலாகத் தனியே வெளியிடப்பெறுகின்றன.

மெய்கண்ட நாதன் விரைகழல்கள் வெல்க!

# பொருளடக்கம்

## படஅட்டவணை

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

# மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு

# ஆவணிமூலத் திருமுறைத் திருநாள்



## நோக்கமும் ஏற்பாடுகளும்.



முதற் பகுதி.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# தருமபுர ஆதீன மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு
# ஆவணிமூலத் திருமுறைத் திருநாள்

கல்லால் நிழல்மலைவு
இல்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே.

## நோக்கம்



ஆறறிவுடைய மக்கட்பிறவி எடுத்த உயிர்கள் தாம் பெற்ற இவ்வரிய பிறவியிலேயே விரைந்து தூயராய் இறைவன் திருவருளின்பத்தைப் பெறுதற்கு இன்றியமையாத செயற்பாலன, தம் மன மொழி மெய்கள் ஒன்றினொன்று முரணாமல் தமக்கும் பிறர்க்கும் பிறவுயிர்க்கும் நலம் பயப்பனவற்றையே ஒருமுகமாய் நாடி நிற்குமாறு பழகுதலும், துன்பத்திற்கு இடமின்றி இன்பத்தையே ஓவாது தருங் கல்வி கேள்விகளிலும் தவமுயற்சியிலும் தமது அறிவை நிலைப்பித்தலும், இறைவனுடைய பேரருட்டிறத்தை நினைந்து நினைந்துருகுதலும், ஆமென்பது தமிழ்ப் பேரறிஞர் கண்ட முடிபாகும்.

**சிவஞானபோதம்**

அத்தகைய அரும்பெரும் திருப்பணியை ஆற்றுதற்குத் தமிழ் நிலனாகிய சைவப்பெருநாடு செய்த தவப்பயனாகத் திருவெண்ணெய்நல்லூரில் வேளாளர் நன்மரபாகிய திருப்பாற்கடலிலே, அஞ்ஞான இருள் ஒழிய வேண்டி உண்மைஞான ஒளிக்கதிர்களைப் பரப்பி, ஞானசூரியன் போல் எழுந்தனர் நமது **மெய்கண்ட சிவாசாரிய சுவாமிகள்.** இத்தெய்வீகப்

பேரறிஞரே வேதத்துக்கும் ஆகமத்துக்கும் உள்ள ஒற்றுமையினை உணர்த்தித் தெரித்தோதிய செல்வர். இவரே சிவாகமங்களின் முரணை அறுத்து அரண் வகுத்த நுண் மதியாளர். இவரே அத்துவிதத்தின் மெய்ப்பொருள் தெளிந்து **சைவ நன்மக்களை உய்யக்கொண்ட மெய்கண்டதேவநாயனார் ஆவர்** இவரே சைவசமய சித்தாந்த சந்தானாசாரியராவர். இவர் திருவாய்மலர்ந்தருளிய **சிவஞானபோதமே சைவசித்தாந்த முழுமுதற் றமிழ் நூல்** இதுவே சைவசித்தாந்தப் பரமப்பிரமாண நூல்.

---

## ஏற்பாடுகள்

**மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு.**

இத்தகைய சிவஞான போதம் வெளிப்படையாக ஐயமின்றிச் சைவ சித்தாந்தத்தை எடுத்து விளக்கும் பெருநூலாதல் அறிந்தும், இதன் ஒப்பற்ற பெருமையை நோக்கியும், பிறசமயத்தார் ஒருவர் இதற்குத் தமது சமயத்துக்கு ஒற்றுமையாகச் சொற்களை ஈர்த்து வலிந்து பொருள் செய்து ஓர் உரை நூலும் வெளியிட்டிருக்கிறார். சைவ சித்தாந்திகள் தமது நூல்கள் இன்னின்ன எனத்தெரிந்து கொள்வதோடு அமையாமல், அவற்றின் உரைகளிலும் தம்முடைய கொள்கைகளைத் தேடித்தெளிய வேண்டியவர்களாக ஆவார்கள். அவ்விதம் தெளியவைத்துச் சைவ நன்மக்களைத் திருவருள் நெறிப் படுத்தத் திருவுளங்கொண்ட **திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுர ஆதீனம் 24வது குருமூர்த்திகளாய்** எழுந்தருளிச் சிவநெறிச் செங்கோல் நடாத்தும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** இது வரை சமயம், மொழி ஆகியவற்றின் வளர்ச்சி கருதி வெளி வராத, வந்த நூல்கள் பலவற்றையும் வெளியிட்டு உதவிவந்தும், ஆங்காங்கும் அடிக்கடி பற்பல அறிஞர்களைக்கொண்டு அரிய சொற்பொழிவுகளை ஆற்றுவித்தும், பல மகாநாடுகட்கு உரிய பெரும் பொருள் உதவியும் வருவதேபோல், **சிவஞான போதத்தின் பன்னிரண்டு சூத்திரங்களில் ஒவ்வொன்றிற்கும்** தனித்தனி ஒவ்வோரறிஞரைக் கொண்டு ஞானக் கொத்து

களுக்கேற்பப் பற்பல பகுதிகளாக மேற்கோள், ஏது, திருட்டாந் தங்களை, ஏனைய பதின்மூன்று சாத்திரங்கள், துகளறுபோதம், தத்துவப்பிரகாசம், சிவநெறிப் பிரகாசம், பண்டார சாத்திரங் கள், விஞ்ஞானக் கலைகள் ஆகிய இவற்றின் மேற்கோளுடன் விருத்தியுரைத் தெளிபொருள் உபன்யாச பாடமாக எளிய நடையில் எழுதுவித்து அச்சிட்டு எல்லோருக்கும் வழங்கவும் திருவுளங் கொண்டருளினர்கள்; ஓர் பேரவையைக் கூட்டுவித்துப் பலஅறிஞர்களைக்கொண்டு அக்கருத்துக்களைச் சொற்பொழிவுகள் மூலம் வெளிப்படுத்துதல் சைவ நன் மக்கட்குப் பெரும் பயன் அளிக்கும் எனவும் திருவுளம் பற்றினர்கள்.

**திருமுறைத்திருநாள்.** பன்னிரு திருமுறைகளையும் பல புலவர்களையும் கொண்டு ஒவ்வொன்றிற்கும் தனித்தனியே தெளி பொருள் ஆராய்ச்சியை, ஆதீன ஆத்மார்த்த பூஜாமூர்த்தமாகிய எல்லாம் வல்ல சித்த ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்கு மிக உகந்த நாளாகிய ஆவணி மூலத்தன்று, சொற்பொழிவுகள் நிகழ்த்தவும், திருமுறைகளுக்கு விதிப்படி திருநாள் நடத்தவும் திருவுளக் குறிப்புத் தோன்றிற்று.

அதற்கியையவே இம்**மெய்கண்டான் சித்தாந்த மகாநாடும் திருமுறைத் திருநாளும் கூட்டுவிக்கப்** பெற்றன. அவைகளைக் கூட்டுதற்குத் **தருமபுரமே** ஏற்றதொன்றும் எனப்பலவகையினும் தேர்ந்து முடித்ததாம்.

**கூடுமிடம்.** அறக்கடவுளாகிய **தருமராசன்** பூசித்துப் பேறு பெற்ற மையால் இது **தருமபுர**மாயிற்று. இது செந்தமிழ்ப்பரமாசாரியாராகிய **அகத்திய ரும்** இலிங்கம் நிறுவி வழிபாடு செய்து கொண்டு இலை வீடமைத்து வதிந்து வந்த தொல்பதி; இவரோடு எண்ணற்ற தவயோகியரும் தத்தமக்குரிய சிறுகுடில் அமைத்துத் தனியே இருந்து யோகத்தாற் சிவப்பேறெய்திய பழம்பதி. **தமிழ் முனிவர்** வழிபட்ட இது தமிழ் மெய்கண்டார் திருநாடும், திருநெறித் தமிழ்த் திருநாளுங் கூட்டுதற்கேற்றது என்பது கூறும்லே அமைவதாம். அன்றியும் இப்பதி **வில்வாரணியம்** என ஆங்காங்கு நூல்களுள்ளே விதந் தோதப் பெறுகின்றதுவும்

இப்பதி நாற்புறமும் பசிய கழனிகளாலும், தென்னை, தேமா, பலா, கொய்யா, புன்னை, தேக்கு, கமுகு, வாழை முதலிய பயன் மரங்கள் ஓங்கி வளர்ந்து நெருங்கிய சோலைகளாலும் சூழப்பெற்றது. அகன்ற நறுமலர்ப் பூங்காக்கள் ஆங்காங்கு அணி செய்வது.

தருமபுரம் அழகிய நான்கு திருவீதிகளையுடைய சமசதுரமான சிற்றூர். நடுவண் **திருமடாலயம்** நாயகமணியாகப் பொலிவது. திருமடாலயத்தினுக்குக் கீழ்பால் இரண்டு அழகிய பொய்கைகள் உண்டு. திருமடாலயத்தினுக்கு வடமருங்கிலே **ஆதி குரவர் ஞானசம்பந்தர் ஆலயமும்** அதனையொட்டி ஈசான திக்கில் **ஸ்ரீ தருமபுரீசர் ஆலயமும்** விளங்குகின்றன. இம்மடாலயத்திற்கு வடபால் காவிரிக் கரைக்கணித்தாக ஓர் கூவிளந்தோப்பின் நடுவிலே மூன்றும் பட்டத்துக்குருமூர்த்திகள் முதலாக இருபான் மூன்றும் குருமூர்த்திகள் உள்ளிட்டார் திருநிலையங்களும் வரிசையாக அமைக்கப்பட்டு விளங்குகின்றன. குருஞானசம்பந்தர் ஆலயத்தின் நடுநிலைக்கோபுரத்தினை உற்று நோக்கியவண்ணம் சிவாநுபூதி யடைந்த **ஸ்ரீ ஆனந்த பரவச** குருமூர்த்தம் மேலை வீதியின் மேற்பால் அமைந்துளது.

அன்றியும், இப்பதி மாயூரம் என்னும் நகரத்திற்கு மிக்க அணித்தாயிருப்பதால் நவீன வசதிகட்கும் ஒன்றாலும் குறைவுடையதன்று. நெருங்கியிருத்தலால் நேரும் தீமையும், அகல விருத்தலால் ஏற்படும் வசதிக் குறைவுமின்றி அகலாதணுகாது உந்து வண்டிகள் ஏறிச்செல்லவும், வரவும் நற்சாலை யமைத்தும், புகைவண்டி நிலையங்களை அடுத்தும் அமைந்துளது.

இத்தகைய மகாநாடுகளிரண்டும் இத்தருணையில் **ஆதி குருஞானசம்பந்தர் சிவன் முத்தராய்** வீற்றிருந்தருள்கின்ற திருக்கோயிலின் வெளிச்சுற்றிலே அமைக்கப்பெற்றது மேலும் இயைபுடைமை கருதியேயாம்; இது, எச்செயலும் அக்குருமூர்த்தியே நேரிலிருந்து செய்து முடித்திடுவதாக இம்மரபிற் சார்ந்த பெரியோர்கள் கொள்ளும் கருத்தினாலேயேயாம்.

கட்டளை — முதலாவதாகப் பொது விளம்பரம் ஒன்று சிவஞான போதச் சூத்திரங்களை அதிகரணத் தலைப்புப் பிரித்து அடியிற்கண்ட வண்ணம் அச்சிட்டு வெளியிடப்பட்டது.



உ

குருபாதம்.

# மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு விளம்பரம்

காலமுண் டாகவே காதல்செய் துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப் பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின் றான்வந்து முந்துமினே.

ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்
ஆய பசுவும் அடலே (று) என நிற்கும்
ஆய பலிபீடம் ஆகுநற் பாசமாம்
ஆய அரனிலை ஆய்ந்துகொள் வார்கட்கே.

உருவை அருவை ஒளியை வெளியை
இருளைச் சிவமென் (று) இராதே — மருளைப்
பிறிந் (து) அறிவிற் கண்டதனைப் பின்னமற எங்குஞ்
செறிந்தபொருள் தானே சிவம்.

என்னை அறிவென்றான் என்னறிவில் ஆனந்தம்
தன்னைச் சிவமென்றான் சந்ததமும் — என்னையுன்னைப்
பாரா மறைத்ததுவே பாசமென்றான் இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்தர் ஆம்

எடுத்தவுடற் (கு) எய்ந்த கன்மம் எப்போதும் மூட்டும்
விடுத்துவிட்டோம் என்பர் விழலர் — விடுத்த (து)
அதுவன்றே ஐந்துமலம் ஆறுறு நீத்த
இதுவன்றோ யாம்துறவென் பேம்.

காலனைக் காலால் வீழ்த்திக் கான்முளை காத்த லிங்கம்
சீலனாந் திண்ண னார்தம் திருவிழி பெற்ற லிங்கம்
பாலனின் பசியைப் போக்கப் பாற்கட லளித்த லிங்கம்
சீலமார் சொக்க லிங்கத் திருவருள் பெற்று வாழ்வாம்.

இந்தனத்தின் அங்கி எரியுறுநீர் தேன் இரதம்
கந்தமலர்ப் போதுவான் காலொளிகண் — சந்ததமும்
அந்நுவிதம் ஆவதுபோல் ஆன்மாவும் ஈசனுமாய்
நந்நியிலே நிற்கும் முறை.

சித்தி தருநாதன் தென்கமலை வாழ்நாதன்
பத்திதரு நாதன் பரநாதன் — முத்திப்
பெருநாதன் ஞானப் பிரகாசன் உண்மை
தருநாதன் நற்றுணைநா தன்.

ஆய்வார் பதிபசு பாசத்தி னுண்மையை ஆய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி கேள்வியல்லல்
ஓய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றிரண்டுமறத்
தோய்வார் கமலையுண் ஞானப்ரகாசன்மெய்த் தொண்டர்களே.

அநாதிசுக ரூபி அரன்அடிக்கீழ் என்றும்
அநாதி சுகரூபி ஆன்மா — அநாதி
இருந்த மலம்போக்கி இறையருளி னாலே
இருந்தபடி யேகண் டிரு.

கதிவாழ்க வேதநல் லாகமம் வாழ்கநற் கண்மணியுந்
பதிவாழ்க சைவந் திருநீறுங் கண்டியும் வாழ்கவருட்
குருவாகும் நின்றன் திருக்கூட்டம் வாழ்கநற் கோநிரைகள்
தெருவாழ் தருமைத் திருஞான சம்பந்த தேசிகனே.

**சிவம்** என்னும் அக்கர,

அடக்கம் **சிவஞானபோதம்** பன்னிரண்டு சூத்திரங்களில் ஒவ்வொரு சூத்திரத்தையும் தனித்தனி ஒவ்வொருவராகச் சூரணைக் கொத்துகளுக்கேற்பப் பலபல பகுதிகளாக, மேற்கோள், ஏது, திருட்டாந்தங்களையும், பதினான்கு சித்தாந்த சாத்திரங்களையும், இதரத் துகளறுபோதம் தத்துவப் பிரகாசம், சிவநெறிப் பிரகாசம், முதலான சைவபண்டார சாத்திரங்களையும், விஞ்ஞான கலைகளையும் துணைக்கொண்டு விருத்தியுரைத் தெளி பொருள் உபந்நியாச பாடமாக எளியநடையில் எல்லோரும் பொருள் உணரும்படி நாளது வருடம் **1911 ஜூலை 15-ந் தேதிக்குள்** அச்சுப்போட அருகமாய்த் **தருமபுரம் ஆதீனகர்த்தரவர்களுக்கு**, சித்தாந்த முரண்பாடான கருத்துக்களைத் திருத்திக் கொள்ளும் உரிமைக்குட்பட்டு, எழுதி அனுப்பிக்கொண்டு பின் குறிப்பிடும் நாட்களில் நேரிலும் வந்து உபந்நியாசம் செய்யத்

தயாராயிருப்பவர்கள் அது விபரம் கண்டு உடனே 5-6-1941-க்கு முன்னடியே தெரிவித்துக் கொள்ளவேண்டும். சிறப்பாக மதிக்கப் படும் உபந்நியாச பாடங்களுக்குத் தக்கபடி பரிசு அளிக்கப்படும்.

குறிப்பு— மேலேகண்ட விதிப்படி விருத்தியுரைப் பாடமாக எழுதக்கூடுமானல், ஒருவரே இரண்டு, மூன்று சூத்திரங்களுக்கும் எழுதியுந் தரலாம்.

"ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையுமெம் ஆதியே."

திருச்சிற்றம்பலம்.

உனக்குப் பணிசெய்ய உன்றனையெந் நாளும்
நினைக்க வரமெனக்கு நீதா — சொக்கநாதா.

இங்ஙனம்,

தருமபுரம் ஆதீனம்,
மாயவரம் S. I. R. ஜங்.
27—5—1941.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் உத்தரவுப்படி,
மௌன. சோமசுந்தரத்தம்பிரான்,
பொதுக்காரியதரிசி. மௌனமடம். திருச்சி,
மலைக்கோட்டை. (தெப்பக்குளம் போஸ்டு.)

A. கலியாணசுந்தர தேசிகர், உபகாரியதரிசி,
தருமபுரம் ஆதீனம், மாயவரம் போஸ்டு.



தருமபுரம் ஆதீனம் "மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு"
வெளியீடு, 1941௵ ஆகஸ்டு௴

உ
குருபாதம்

## மெய்கண்டான் துதி

சிறிய வாடியிற் பெரியமால் வரைப்பொருள் செறிந்தாங்
கறிவு நூல்களின் முடிபெலா மகத்தடக் கியதோர்
நெறியி னீடிய நிகழ்சிவ ஞானபோ தத்தைக்
குறிய தீந்தமி ழாலுரை குரவனைப் பணிவாம்.

# சிவ ஞான போதம்

மங்கல வாழ்த்து

கல்லால் நிழல்மலை — வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர் — நல்லார் புனைவரே.

## I பொது அதிகாரம் A. பிரமாண இயல்

முதற் சூத்திரம்—(பதிப் பிரமாணம்)

அவன் அவள் அது எனும் அவைமூ வினைமையில்[1]
தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்[2]
அந்தம் ஆதி என்மனார் புலவர்[3].

இரண்டாஞ் சூத்திரம்—(பாசப்பிரமாணம் பதியின் தடத்தப்
பொது இலக்கணம்)

அவையே தானே யாய்[1] இரு வினையில்[2]
போக்கு வரவு புரிய[3] ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே[4].

மூன்றாஞ் சூத்திரம் (பசுப்பிரமாணம்)

உளதில தென்றலின்[1] எனதுடல் என்றலின்[2]
ஐம்புலன்[3] ஒடுக்கம் அறிதலின்[4] கண்படில்
உண்டிவினை யின்மையின்[5] உணர்த்த உணர்தலின்[6]
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா[7].

## B. இலக்கண இயல்

நான்காஞ் சூத்திரம்—(பசுஇலக்கணம் பொது)

அந்தக்கரணம் அவற்றின்ஒன் றன்று[1] அவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா(து)[2]
அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே[3].

ஐந்தாஞ் சூத்திரம்—(பாசஇலக்கணம்)

விளம்பிய உள்ளத்து மெய்வாய்கண் மூக்கு
அளந்தறிந் தறியா[1] ஆங்கவை போலத்
தாந்தம் உணர்வின் தமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே[2].

ஆறாஞ் சூத்திரம்—(பதியின் சொரூபஇலக்கணம்)

உணருரு அசத்தெனின் உணரா தின்மையின்[1]
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்குமன் னுலகே[2].

## II உண்மை அல்லது சிறப்பு அதிகாரம்
## A. சாதன இயல்

ஏழாஞ் சூத்திரம்-(ஆன்ம சொரூபம் பசுச்சிறப்பு இலக்கணம் அதிகாரி இயல்பு)

யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்
சத்தே அறியா த[1] சத்தில தறியா(து)[2]
இருதிறன் அறிவுள(து) இரண்டல ஆன்மா[3].

எட்டாஞ் சூத்திரம்—(குருவுமாய் உணர்த்தும் முறை)

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்[1]
தம்முதல் குருவுமாய்த்[2] தவத்தினில் உணர்த்த[3] விட்(டு)
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே[4].

ஒன்பதாஞ் சூத்திரம்—(அஞ்செழுத் தோதும் ஆன்ம சுத்தி)

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி[1]
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழ லாம்பதி[2] விதி எண்ணும்அஞ் செழுத்தே[3].

## B. பயனியல்

பத்தாஞ் சூத்திரம்—(பாச நீக்கம்)

அவனே தானே ஆகிய அந்நெறி
ஏக னாகி[1] இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே[2].

பதினொராஞ் சூத்திரம்—(வீடு பேறுகிய சிவத்துவ விளக்கம் சிவப்பேறு)

காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காணஉள் ளத்தைக் கண்டு காட்டலின்[1]
அயரா அன்பின் அரன்கழல் செலுமே[2].

பன்னிரண்டாஞ் சூத்திரம்—(சீவன்முத்தர் மும்மலங்களையுங் களைய, குருலிங்க சங்கம வழிபாடு, பத்திநெறி)

செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ[1] அன்பரொடு மரீஇ[2]
மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரனெனத் தொழுமே[3].

**மெய்கண்டான் செம்மலர் நோன்றாளே**
**உலகெலாம் ஓங்குக வெல்க, வாழ்க நீடியா ரெல்லாம்.**

பின்வருவன விளம்பரத்தின் நான்கு ஓரங்களிலும் உள்ளவை:—
ஞான நூல்தனை ஓதல்[1] ஓதுவித்தல்[2] நற்பொருளைக் கேட்பித்தல்[3]
தான் கேட்டல்[4] நன்று ஈனமில்லாப் பொருள்தனைச் சிந்தித்தல்[5]
ஐந்தும் இறைவனடி அடைவிக்கும் எழில் "ஞானபூசை".
இவ்விளம்பரம் பல புலவர் உள்ளிட்ட ஆயிரக்கணக்கான பெரு மக்களுக்கும் அனுப்பப்பட்டது.

இந்நிகழ்ச்சி குறித்து முன்னடியே நாள், கிழமை, திங்கள் தமிழ் வெளியீடுகளிலும், செய்திகள் வெளியிடப் பட்டன. அவற்றின் வாயிலாக அறிந்த பல அறிஞர்கள் கட்டுரைகள் எழுதியனுப்புவதாகச் செய்தி தெரிவித்திருந்தார்கள்.

**கட்டுரைகள் பரிசோதனையும் அச்சு வாகனமேற்றலும்**

அதன்படி வரும் கட்டுரைகளைப் பரிசோதித்து மகாநாட்டுக்கு முன்பே அச்சுக்குக்கொடுப்பதற்காக இரு பெரும் புலவர்கள் நியமிக்கப்பட்டனர். அவர்கள், வடமொழி தென்மொழிகளில் மிக்க புலமை பெற்றவர்களும், அவற்றுள்ளும் பிழிசாறுகிய சைவ சித்தாந்த நூல்களின் நுண்பொருள்களையும், சிவாகம நூல்களையும் தெளிய உணர்ந்து அப்பொருள்களைத் "தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்பதை ஓர்ந்து சைவ சபைகள் தோறும் கலந்துகொள்வோரும் ஆகிய பழனிதேவஸ்தான வேதசிவாகமப் பாடசாலைத் தலைமை ஆசிரியர் ***காசிவாசி சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார்*** அவர்களும், ஸ்ரீ ஸ்கந்த பரம்பரை பசது கோயிலாதீனத்தைச் சார்ந்த இலக்கண சுவாமிகள் எனப் புகழ் நாமங் கொண்ட ***ஸ்ரீ முத்துக்குமார சுவாமித் தம்பிரான்*** அவர்களும் ஆவர்.

அடியிற்கண்ட புலவர் பெருமக்களிடமிருந்து கட்டுரைகள் கிடைக்கப் பெற்றன.

1 திரு. A. முத்தையாபிள்ளை அவர்கள், B. A., B. L.,
அமைச்சர், சைவ சபை, பெருமாள் கீழ ரத வீதி,
பாளையங்கோட்டை, திருநெல்வேலி.

2 ,, வித்வான் முத்து சு. மாணிக்கவாசக முதலியாரவர்கள்,
நகராண்மைக்கழக உயர்நிலைப்பள்ளித் தலைமைத்தமிழாசிரியர், ஆரணி.

3 ,, க. வச்சிரவேல் முதலியார் அவர்கள், B.A.,L.T.,
கணித போதகர், பச்சையப்பர் உயர்நிலைப்பள்ளி, காஞ்சிபுரம்.

4 ,, P. C. சமரபுரி முதலியார் அவர்கள்,
முருகன் அகம், தாம்பரம்.

5 ,, பாரிப்பாக்கம், கண்ணப்ப முதலியார் அவர்கள்,
36, ஆயலூர் முத்தையா முதலித்தெரு, G. T. சென்னை.

6 ,, V. இராமநாதப் புலவர் அவர்கள்,
திருவள்ளுவர் அகம், 189, கெய்ஸர்தெரு, கொழும்பு.

7 ,, முதுதமிழ்ப் புலவர், மு. நல்லதம்பி அவர்கள்,
முதுதமிழ்ப் பண்டிதர், சாஹிரா கல்லூரி, கொழும்பு.

8 ,, அ வரதநஞ்சைய பிள்ளை அவர்கள்,
ஆசிரியர்,
தோரமங்கலம், ஜலகண்டபுரம் போஸ்ட், சேலம் ஜில்லா.

9 ,, மா. வே. நெல்லையப்ப பிள்ளை அவர்கள் B. A.,
விடுதிபெற்ற தாசில்தார், சிந்துபூந்துறை, திருநெல்வேலி ஜங்.

10 ,, இ. கோவிந்தசாமி பிள்ளை அவர்கள்,
தமிழ் விரிவுரையாளர், அரசர் கல்லூரி, திருவையாறு.

11 பிரம்மஸ்ரீ K. அரங்கசாமி ஐயர் அவர்கள் B. A.,
வைகைநல்லூர், குளித்தலை, திருச்சி.

12 திரு. கீ. இராமலிங்க முதலியார் அவர்கள் B. A.,
நகர ஆட்சி ஆணையாளர், விழுப்புரம்.

13 சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக் குருக்கள் அவர்கள்
"சைவ சாஸ்திர பரிபாலனம்" இதழாசிரியர்,
அச்சுவேலி, யாழ்ப்பாணம்.

14 திரு. வித்வான் அவ்வை, சு. துரைசாமி பிள்ளை அவர்கள்,
தலைமைத் தமிழாசிரியர், நாட்டாண்மைக் கழக உயர்நிலைப்பள்ளி,
செங்கம், (Via) செங்கற்பட்டு.

15 திரு. பாலகவி, வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
பாலருவாயர் நிலையம், சம்பந்தர்தெரு, தேவகோட்டை.

16 ,, அடிசைக்கிழார், அ. சிதம்பர முதலியார் அவர்கள்,
அம்மணிவாசம், 176, ராஜவீதி, கோயம்புத்தூர்.

17 ,, ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை அவர்கள்,
ஆசிரியர், நாட்டாண்மைக் கழக நடுநிலைப்பள்ளி,
உத்தர மேரூர், (Via) செங்கற்பட்டு.

18 ,, வித்வான், தண்டபாணி தேசிகர் அவர்கள்,
தமிழாசிரியர், நாட்டாண்மைக் கழக உயர்நிலைப்பள்ளி, திருவாரூர்.

19 ,, கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் M.A., M.L.,
தமிழ்த் துறைத் தலைவர், அண்ணாமலைநகர்.



## பொதுக் கட்டுரைகள்

### தமிழ்

20 ,, பாலகவி, வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியார் அவர்கள், "திருமுறைப் பெருமை"

21 ,, செல்லப்ப முதலியார் அவர்கள்,
விடுதிபெற்ற ரயில்வே ஆபீஸர், பனையூர்,
(1—12 சூத்திரக் கட்டுரைகள்)

### ஆங்கிலம்

22 ,, M. பாலசுப்பிரமணிய முதலியாரவர்கள் B.A., B.L.,
சைவசித்தாந்த மகா சமாஜக் காரியதரிசி, சென்னை.
"சைவசமய சாரம்"

23 திருவாட்டி, T. இராஜேஸ்வரி அம்மையாரவர்கள் M.A., L.T.,
பொருணூற் பேராசிரியர், அரசி மேரியார் கலாசாலை, சென்னை.
"சிவஞான போதக் கருத்துகள்"

24 திருவாளர், இராவ்சாஹிப், S. வையாபுரிப் பிள்ளையவர்கள் B.A., B.L.,
தமிழ்ப்பகுதித் தலைவர், சென்னைச் சர்வகலாசாலை,
மயிலாப்பூர், சென்னை. "சைவ மடங்கள்"

25 ஸ்ரீ சுவாமி, சுத்தானந்த பாரதியார் அவர்கள்,
அரவிந்தாஸ்ரமம், பாண்டிச்சேரி, (1—6 சூத்திரக்கட்டுரைகள்)

அவற்றுள் கீழே காணும் பெருமக்களின் கட்டுரைகள் அச்சுக்குக் கொடுக்கப்பட்டன.

| | |
|---|---|
| திரு. A. முத்தையா பிள்ளை B. A., B. L., | 1—6-சூத்திரங்கள். |
| திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை B. A., | 7-ம் சூத்திரம். |
| சிவஸ்ரீ. ஈசான சிவாசாரியார், | 8-ம் ,, |
| சிவஸ்ரீ. குமாரசுவாமிக் குருக்கள், | 9-ம் ,, |
| திரு. ஈசுரமூர்த்திய பிள்ளை, | 10–12-சூத்திரங்கள். |

அவைகளை இதன் இணைப்பிலே காண்க.

ஆயிரக்கணக்கான விளம்பரங்கள் வாயிலாகவும், செய்தித் தாள்கள் மூலமாகவும், வெளியிடப்பட்டிருந்தும் ஒரு சிலரே கட்டுரை அனுப்ப ஒப்புக்கொண்டனர். அவருள்ளும் மிகச் சிலரேதாம் காலத்தில் கட்டுரை அனுப்பினர்.

**வழிபாடு**

மகாநாடு சென்னையிலே நடைபெறுதலையுன்னித் திருவெண்ணெய் நல்லூரில் ஸ்ரீ பொல்லாப் பிள்ளையாருக்கும், ஸ்ரீ மெய்கண்ட தேவருக்கும், திருத்துறையூரில் ஸ்ரீ அருணந்தி சிவாசாரியாருக்கும், திருநாரையூரிலே ஸ்ரீ பொல்லாப் பிள்ளையாருக்கும், திருக்களாஞ்சேரி (சிங்காரத்தோப்பு)யில் ஸ்ரீ மறைஞானசம்பந்தருக்கும், கொற்றவன்குடியிலே ஸ்ரீ உமாபதி சிவாசாரியாருக்கும், ஸ்ரீ அருணமச்சிவாயர்க்கும் (மச்சுச் செட்டியாருக்கும்) சிறப்பான திருமுழுக்கும், வழிபாடுகளும் மகாநாட்டுப் பொது அமைச்சர் ஸ்ரீ மௌன சோமசுந்தரத் தம்பிரானவர்களால், **ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னிதானத்தின்** ஆணையின்படி நேரிற் செய்யப்பட்டன.

மேற்குறித்த ஆலயங்களிலும், தில்லைச் சிதம்பரத்திலும், சீகாழி, புள்ளிருக்குவேளூர், திருக்கடவூர் வீரட்டம் ஆகிய திருப்பதிகளிலும் எழுந்தருளியுள்ள குரு மூர்த்தங்களுக்கும் விதிப்படி வழிபாடுகள் நடத்தப்பெற்றன.

இவ்வாறே தருமபுரத்தில் உள்ள எல்லா ஆலயங்களுக்கும், குரு மூர்த்தங்களுக்கும் வழிபாடுகள் செய்விக்கப் பெற்றன.

மகாநாடு கூடுவதைப் பற்றி அடியிற் கண்டவாறு விளம்பரஞ் செய்யப்பட்டது:—



உ
குருபாதம்

தருமபுரம் ஆதீனம்

## மெய்கண்டான் சித்தாந்த மகாநாடும்

## ஆவணிமூலத் திருமுறைத் திருநாளும்

## 1941 ஆகஸ்டு 28, 29, 30, 31, (4-நாட்கள்)

## தருமபுரத்தில் நடைபெறும்

N. B:- தருமபுரம் மாயவரம் (ஜங்) வழி 3-மைல். பஸ், வண்டி வசதி உண்டு.

(விளம்பரத்தின் மறுபக்கம்)

### நிகழ்ச்சி முறை

28—8—41 சமயாசாரியார் சந்தானாசாரியார் வழிபாடு.

29—8—41 மகாநாடு ஆரம்பம் "சிவஞானபோதம்" முதல் ஆறு சூத்திரக் கட்டுரைகள் பேசுதலும் படித்தலும்.

30—8—41 மகாநாடு "சிவஞானபோதம்" பின் ஆறு சூத்திரக் கட்டுரைகள் பேசுதலும் படித்தலும்.

31—8—41 ஆவணிமூலத் திருமுறைத் திருநாள். இரவு திருமுறை ஊர்வலம்.

தலைவர்கள்:— சைவத்திருவாளர்கள்,

காசிவாசி, சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார் அவர்கள்,

H. R. E. போர்டு கமிஷனர், இராயபகதூர்,

C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள், B. A., B. L.,

கோவை, சிவக்கவிமணி,

C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள், B. A.,

N. B:— பல தமிழ், இசைப் புலவர்கள் சொற்பொழிவும், திருமுறைபாராயணமும் நடத்துவார்கள்.

இவை எல்லாத் தமிழ் ஜில்லாக்களிலும் பிரசுரப்படுத்தப் பட்டன. தென்னிந்திய இருப்புப்பாதைக் குழுவினரும் ஆதீன வேண்டுகோளுக் கிணங்கிப் பெரும்பாலான புகைவண்டி நிலையங்களில் இவைகளை யொட்டி விளம்பரப் படுத்தி இருந்தது குறிப்பிடத்தக்கது. அன்று விளம்பரங்களை அன்னையிலுள்ள புகைவண்டி நிலையங்களில் ஒவ்வொரு வண்டி வந்ததும் கொடுக்கவும் ஏற்பாடாயிருந்தது.

**சுவரொட்டி, துண்டுவிளம்பரங்கள்.**

இது ஆயிரக் கணக்காக அச்சிட்டுப் பலர்க்கும் அனுப்ப பட்டது. இந்நிகழ்ச்சிக் குறிப்பு "சித்தாந்தம்" என்னும் திங்கள் வெளியீட்டிலும் வெளியிடப்பெற்றது. அதைக் கீழே காண்க.

**நிகழ்ச்சிக் குறிப்பு. அழைப்பு.**



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

## ஸ்ரீ மெய்கண்டான் சித்தாந்த மகாநாட்டு அழைப்பு.

## தருமபுரம் ஆதீனம்

---

சிவநெறிச்செல்வர்களே!

எல்லாம் வல்ல சித்தராகிய ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் திருவருளால் நிகழும் விஷு௵ ஆவணி௴ ௧௨, ௧௩, ௧௪, (28, 29, 30—8—41) ஆகிய நாட்களில் தருமபுரம் ஆதீனம் மடாலயத்தில் நடைபெற நிச்சயித்திருக்கும் ஸ்ரீ மெய்கண்டான் சித்தாந்த மகாநாட்டு விழாவுக்கும், ஆவணி௴ ௧௫-ம் தேதி

(31—8—41) ஞாயிற்றுக்கிழமை ஆவணிமூலத் திருநாளில் நடைபெறும் திருமுறைத் திருவிழாவுக்கும், தாங்கள் தங்கள் நண்பர் முதலியவர்களுடன் வந்திருந்து பேரன்புடன் சிவஞான போத, திருமுறை உபந்நியாசங்களைக் கேட்டும், திருமுறைத் திருவுலாவைக் கண்டும், சைவஞான உண்மைகளைத் தெரிந்து, பெருவாழ்வு பெறும்படி விரும்புகிறோம்.

"செவிகாள் கேண்மின்களோ சிவனெம் மிறை செம்பவள,
எரிபோல் மேனிப் பிரான் திறம் எப்போதும்,
செவிகாள் கேண்மின் களோ."

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சன்னிதானத்தின் உத்தரவுப்படி,

இராமலிங்கத் தம்பிரான் — வரவேற்புக்கழகத்தலைவர்.
அருணந்தித் தம்பிரான் — உபசாரணைச்சங்கத்தலைவர்.
மௌன, சோமசுந்தரத் தம்பிரான் — பொதுக்காரியதரிசி.



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு

## தருமபுரம் ஆதீனம்

---

## நிகழ்ச்சி முறை

ஸ்ரீ பொல்லார், அம்மையப்பர்,
சமயாசாரிய சந்தாநாசாரியர் – வழிபாடு.

### *(க) விஷு ஆவணிமீ கஉஉ (28—8—41)*
### *வியாழக்கிழமை,*

**காலை** மணி 8-11; **மாலை** மணி 5-8

(1) **ஸ்ரீசொக்கலிங்கப்பெருமானைப் பூசித்தல்.**

(2) மகாநாட்டு மண்டபத்தில் ஸ்ரீ பொல்லார், சமயாசாரியர், சந்தான முதற்குரவர், ஸ்ரீ மெய்கண்டார் திருவுருவப் படப் பிரதிட்டை.

(3) ஆதிகுரவர் ஸ்ரீ குருஞானசம்பந்ததேசிக மூர்த்திகளின் அபிஷேக ஆராதனை வழிபாடு.

(4) **சித்தாந்த சைவ வினாவிடை** (மகாநாட்டு வெளியீடு) திருக்கைவழக்கம்.

### *(உ) விஷு ஆவணிமீ கஙஉ (29—8—41)*
### *வெள்ளிக்கிழமை,*

**காலை** மணி 8-12; **மாலை** மணி 3-6; **இரவு** மணி 7 - 8-30.

(1) ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னிதானம் ஆதீனம் மடாலயத்தில் ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானைத் தரிசனஞ் செய்துகொண்டு திருமுறைப்பாராயணத்துடன் ஆதிகுருமூர்த்தி ஸ்ரீ ஞானசம்பந்தர் ஆலயத்தில் அமைக்கப்பட்டுள்ள மகாநாட்டின் மண்டபத்திற்கு எழுந்தருளல்.

(2) சென்னை இந்து சமய அறநிலைக் கழகத் தலைவர் திருமான் திவான்பகதூர் T. M. நாராயணசாமி பிள்ளை M.A.,B.L., அவர்களையும், அக்கழக உறுப்பினர்களையும், **மகாநாட்டின் தலைவர், காசிவாசி, சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார்** (வேதாகம பாடசாலைத்தலைமை ஆசிரியர், பழனி) அவர்களையும் மகாநாட்டு மண்டபத்திற்கு அழைத்தல்.

(3) மகாநாட்டு மண்டபத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ பொல்லாப்பிள்ளையார், சமயசந்தானமெய்கண்ட குரவர்களின் ஆராதனை.

(4) திருமுறை ஓதல்.

(5) ***ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம்*** மகாநாட்டைத் திறந்தருளல்; வழிமொழிதல் காரியதரிசி.

(6) சென்னை இந்து சமய அறநிலைக்கழகத் தலைவர் உறுப்பினர்களின் சமய சம்பந்தமான மகாநாடுகளின் அவசியத்தையும் பயனையும்பற்றிய விரிவுரையும் **சித்தாந்த சைவ வினாவிடை** (மகாநாட்டு வெளியீடு) வழங்குதலும்.

(7) சார்புரை. திருவாளர்கள்:—

1. S. சுப்பராய முதலியார் அவர்கள், மிராசுதார், சீகாழி.
2. இராவ்சாகிப், L. N. பரமசிவம் பிள்ளை அவர்கள் (திருச்சி) லால்குடி.
3. K. அரங்கசாமி முதலியார் B. A., அவர்கள் திருச்சி, காடு நகராண்மைக்கழக உதவி மேற்பார்வையாளர்.

(8) மாநாட்டுத்தலைவர் அவர்களை வரவேற்றல்.

(9) ஷை தலைவர் அவர்கள் முன்னுரையும், **சிவஞான போதச்** சூத்திரக்கட்டுரைகளை வழங்குதலும்.

(10) **சிவஞானபோதம்** 1-6 சூத்திரங்களின் கட்டுரைகளை அடியிற் கண்ட கட்டுரையாளர்கள் பேசுதலும், படித்தலும்.

சூத்திரம் 1. திருவாளர்கள்:

1. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் (ஆரணி) அவர்கள்
2. வச்சிரவேல் முதலியார், B.A., L.T., (காஞ்சீபுரம்) ,,
3. பாரிப்பாக்கம், கண்ணப்ப முதலியார் (சென்னை) ,,
4. A. முத்தையா பிள்ளை, B.A., B.L., (திருநெல்வேலி) ,,
5. சமரபுரி முதலியார் (தாம்பரம்) ,,

சூத்திரம் 2.

1. A. முத்தையாபிள்ளை, B.A., B.L., (திருநெல்வேலி) ,,
2. இராமநாதப்புலவர், (கொழும்பு) ,,

சூத்திரம் 3.

1. A. முத்தையாபிள்ளை, B.A., B.L., (திருநெல்வேலி) ,,
2. முதுதமிழ்ப்புலவர், நல்லதம்பி, (கொழும்பு) ,,
3. அ. வரத நஞ்சையப்பிள்ளை, (ஜலகண்டபுரம்) ,,

சூத்திரம் 4. திருவாளர்கள் :

1. வித்வான், தண்டபாணி தேசிகர் (திருவாரூர்) அவர்கள்
2. A. முத்தையா பிள்ளை B.A., B.L., (திருநெல்வேலி) ,,
3. மு. கதிரேசச்செட்டியார் (அண்ணாமலைநகர்) ,,

சூத்திரம் 5.

1. பண்டிதமணி, மு. கதிரேசச் செட்டியார் ,,
2. A. முத்தையா பிள்ளை B.A., B.L., (திருநெல்வேலி) ,,

சூத்திரம் 6.

1. A. முத்தையா பிள்ளை B.A., B.L., (திருநெல்வேலி) ,,
2 பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் ,,

(11) தலைவர் முடிபுரை.
(12) திருமுறை ஓதல்.
(13) திருமான்.-

1. வித்வான் C. நாகலிங்கம் பிள்ளை (வதிரி யாழ்ப்பாணம்) அவர்களால் 'பதிபசுபாசமும்' 'வடமொழியும், தென்மொழியும்' என்பவைபற்றியும்,
2. பிர்ம்மஸ்ரீ சங்கரசுவாமிநாத சாஸ்திரிகளால் (முடிகொண்டான்)--'அடியார் பெருமை' பற்றியும் பேசப்படும்.
3. தங்காம் பிள்ளை திருச்சி.—யோகாசனங்கள்.



**(ஈ) விஷுஙூ ஆவணிமீ கசஉ (30—8—41) சனிக்கிழமை.**
**காலை** மணி 8-12; **மாலை** மணி 3-6; **இரவு** மணி 7-8-30;

தலைவர் :

சென்னை, இந்து சமய அறநிலைக்கழக உறுப்பினர்
**திருமான் இராவ் பகதூர்,**
**C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள்,** B. A., B. L.,

(1) திருமுறை ஓதல்.
(2) தலைவர் அவர்கள் முன்னுரையும், **சிவஞானபோதச்** சூத்திரக் கட்டுரைகளை வழங்குதலும்.
(3) **சிவஞான போதம்** 7-12 சூத்திரங்களின் கட்டுரைகளை அடியிற் கண்ட கட்டுரையாளர்கள் பேசுதலும், படித்தலும்.

சூத்திரம் 7. திருவாளர்கள் :-

ப.ா. நெல்லையப்ப பிள்ளை B.A., (திருநெல்வேலி) அவர்கள்.

சூத்திரம் 8.

1. இ. கோவிந்தசாமி பிள்ளை வித்வான் (திருவையாறு) ,,
2. இராமலிங்க முதலியார் B.A., (விழுப்புரம்) ,,
3. அரங்கசாமி ஐயர் B.A., (குளித்தலை) ,,

சூத்திரம் 9.

1. அரங்கசாமி ஐயர் B.A., (குளித்தலை) ,,
2. சிவஸ்ரீ, ச. குமரசாமிக் குருக்கள் (யாழ்ப்பாணம்) ,,
3. அவ்வை துரைசாமி பிள்ளை (செங்கம்) ,,

சூத்திரம் 10. திருவாளர்கள் :-

1. துடிசைகிழார் அ. சிதம்பரனூர் (கோயம்புத்தூர்) ,,
2. ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை, வித்வான் (திருநெல்வேலி) ,,
3. சோமசுந்தர தேசிகர், வித்வான் (திருவையாறு) ,,

சூத்திரம் 11.

1. வச்சிரவேல் முதலியார் B.A., L.T. ,,
2. ஆ. ஈசுவரமூர்த்திப்பிள்ளை ,,
3. வரதநஞ்சைய பிள்ளை (ஜலகண்டபுரம்) ,,
4. சுந்தரேச வாண்டையார் வித்வான் (திருவையாறு) ,,

சூத்திரம் 12.

1. பாலகவி, இராமநாதன் செட்டியார் (தேவகோட்டை),,
2. ஆ. ஈசுவரமூர்த்திப்பிள்ளை ,,
3. செல்லப்ப முதலியார் (பனையூர் 1—12. சூத்திரபழைய கட்டுரைகள்-தனித்த முறையில் ஆராய்ச்சிக்குரியது.)
4. ஸ்ரீ சுவாமிசுத்தானந்த பாரதியார் (1—12 சூத்திர புதுக் கட்டுரைகள்-தனித்த முறையில் ஆராய்ச்சிக்குரியது.)

---

## (4) சைவ சித்தாந்தம் - ஆங்கிலக் கட்டுரைகள்.

திருவாளர்கள் :-

1. இராவ்சாஹிப், S. வையாபுரிப் பிள்ளை B.A., B.L., (சென்னை) [அவர்கள்.
2. M. பாலசுப்பிரமணிய முதலியார் B.A., B.L., அவர்கள், (சைவ சித்தாந்த மகா சமாஜ காரியதரிசி, சென்னை.)

திருவாட்டி :

3. T. ராஜேஸ்வரி அம்மையார், M.A., L.T., (சென்னை) அவர்கள்.
4. சென்னை, சோமசுந்தரனார் அருந்தவச் சிறுமி திருமதி மீனாட்சி அம்மையின் 'சிவஞானபோத உரை' (தமிழ்).
5. திரு. சதாசிவ முதலியார் அவர்கள் (சீகாழி)-ஆணவவிஷயம்.

(5) தலைவர் முடிபுரை.

(6) திருமுறை ஓதல்.

(7) (சொற்பொழிவுத் தொடர்ச்சி.)

1. நாகலிங்கம் பிள்ளை அவர்கள்-சைவமும் வடமொழியும்
2. பிரம்மஸ்ரீ கணபதிஐயர் B.A., L.T., வித்வான் (திருச்சி) மெய்கண்ட சித்தாந்தமும்—வேத உபநிஷத்துகளும்:
3. ,, K. V. சுப்பையர் (திருச்சி) அவர்கள் M.A., L.T., விடுதிபெற்ற கல்வி அதிகாரி, 'சைவசித்தாந்தம்.'
4. ,, திருப்புகழ் மணி T. M. கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள், B.A., B.L., சென்னை. சிவகருணை (இன்னிசைக் கருவிகளுடன்) காலக்ஷேபம்.

(8) சிவஸ்ரீ ஈசான சிவாசாரியர் அவர்களின் மகாநாட்டு முடிபுரை.

(9) ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சன்னிதானத்தின் ஆசிமொழி. (காரியதரிசி நன்றி கூறல்)

(10) திருமுறை ஓதல்.

குறிப்பு :—மகாநாட்டில் கட்டுரைகளுக்கு இடையில் ஆதீனம் ஓதுவா மூர்த்திகள் திருமுறைகளை ஓதுவார்கள். நிகழ்ச்சி முறை மாற்றம் சமயோசிதம்.

---



உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# திருமுறை விழா

## ஆவணிமூலத்திருநாள்

(ஈ) விஷுவநி ஆவணி மீ கடு௳ (31—8—11)
ஞாயிற்றுக்கிழமை.

தலைவர்:-
சைவத்திருமான் சிவக்கவிமணி,
C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் B.A.,
பெரியபுராண விரிவுரை யாசிரியர், கோயம்புத்தூர்.

## நிகழ்ச்சிமுறை, காலம், விஷயம்.

| | | | |
|---|---|---|---|
| 1. | காலை மணி | 8-10 | உபன்னியாசங்கள். |
| 2. | ,, ,, | 10-12 | ஆவணி மூலத்திருநாள். ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் ஆராதனை |
| 3. | மாலை ,, | 3-6 | உபன்னியாசங்கள். |
| 4. | இரவு ,, | 7-8-30 | திருமுறைப்பாராயணம். |
| 5. | ,, ,, | 9-12 | திருமுறை வீதிவலம். |

## விஷய விபரம்

(1) திருமுறை ஓதல்.
(2) தலைவர் அவர்களை வரவேற்றல்.
(3) தலைவர் அவர்கள் முன்னுரையும்,
நால்வர் சரித்திர வெளியீடும்.

(4) திருமுறையின் பெருமையைப் பற்றி அடியிற் கண்டவர்களாலே சொற்பொழிவுகள் நடைபெறும்.

திருவாளர்கள் :-

1. மா. பாலசுப்பிரமணிய முதலியார், B.A., B.L., சைவசித்தாந்த மகாசமாஜம் காரியதரிசி (சென்னை)
2. T.K. சிதம்பரநாத முதலியார், B.A.,B.L.(பாளையங்கோட்டை)
3. இராவ்சாகிப், S. வையாபுரிப்பிள்ளை, B.A., B.L., (சென்னை)
4. S. சச்சிதானந்தம் பிள்ளை, B.A., L.T., ,,
5. M. அருணாசலம் பிள்ளை, M.A., ,,
6. K. சுப்பிரமணியபிள்ளை, M.A.,M.L. (அண்ணாமலைநகர்)
7. R. சண்முகசுந்தரம் செட்டியார் (சென்னை)
8. M. நடேசமுதலியார், தமிழ்ப்பேராசிரியர் (திருச்சி)
9. தமிழாசிரியர், சரவணமுதலியார் (அரியலூர்)
10. ,, R. பஞ்சநதம் பிள்ளை (திருச்சி)
11. ,, சண்முக தேசிகர் (நாகை)
12. ஆதீனப்பிரசாரகர், மீ. சுந்தரம்பிள்ளை (தருமபுரம்)
13. சோமசுந்தரனார் (கதிரைவேற்பிள்ளை மாணவர், சென்னை)
14. முருகேச முதலியார் (புரிசை)
15. முத்துக்குமார பிள்ளை (திருநாரையூர்)
16. வேங்கடாசலம் பிள்ளை (சிதம்பரம்)

மற்றும் உள்ள புலவர்களும் பேசுவார்கள்

(5) தலைவர் முடிபுரை
(6) ஆசிமொழியும், நன்றி கூறலும்
(7) திருமுறைகள் பாராயணம்:-

சைவத் திருவாளர்கள்:-

1. சுந்தர ஓதுவா மூர்த்தி (திருநெல்வேலி)
2. அருணாசல தேசிகர் (வேதாரணியம்)
3. வித்துவான், நடராச தேசிகர் (திருவிடைமருதூர்)
4. ,, இராமலிங்க ஓதுவார் (சிதம்பரம்)
5. கந்தசாமி தேசிகர் (சீகாழி)

(8) திருமுறை வீதிவலம்

**திருமுறைகளை**, பாராயணத் திருக்கூட்டத்தினர் சூழ சமயாசாரியத் திருவுருவப் படங்களுடன் வீதிவலமாக எழுந்தருளச்செய்து திருமடாலய ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் திருச்சன்னிதியைச் சார்தலும், **ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னிதானத்தால்** விபூதிவழங்கப்பெறும் சிவபுண்ணியப் பெரும்பேறும்.

### வாழ்த்து

போற்றி திருத்தில்லை போற்றி சிவபோகம்
போற்றியவன் மெய்ஞ்ஞானப் புண்ணியநூல்-போற்றியெங்கள்
வெம்பந்த வாழ்க்கைவிட வேரறுத்துத் துன்னின்ற
சம்பந்த மாமுனிபொற் றாள்.

திருச்சிற்றம்பலம்

## குறிப்பு

1. தருமபுரம், மாயவரம் ஜங்ஷனிலிருந்து கிழக்கே 3-மைல்; வண்டி, பஸ் வசதிகளுண்டு.
2. மாயவரம் டவுன் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 1-மைல்.
3. வருபவர்கள் எல்லோருக்கும் உணவு, உறைவிடம் வசதிகள் உண்டு.
4. தனி இடவசதி தேவண்டியவர்கள் 3-தினங்களுக்கு முன்பு காரியதரிசிக்குத் தெரிவித்துக்கொள்ள வேண்டும்.
5. உபந்நியாச மண்டபத்தில் பெண்பாலார்க்குத் தனி இடவசதி உண்டு.

இவையன்றி ஆங்கிலம், தமிழ், (நாள், வார) வெளியீடுகள் பலவற்றிலும் விளம்பரங்கள் வெளிவந்தன.

மாயூரத்தினின்றும் தரங்கம்பாடிக்குச் செல்லும் கற்சாலையில் இவ்வூருக்கு ஒரு கிளைப்

**அலங்காரம், புருநகம்** பாதை பிரிகின்றது. அவ்விடத்தில் ஒரு பெரிய வளைவு போடப்பட்டிருந்தது. அதில் பொன்னெழுத்துக்களில் மகாநாடு நடக்கும் செய்தி எழுதியிருந்ததும் தவிர,

"காக புறவு கலந்தவனைக் கண்மர் அகண்டா காரசிவ
போக மெனும்பே ரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமா
யேக வுருவாய்க் கிடக்குதையோ! இன்புற் றிடநா மினியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேர வாரும் சகத்தீரே!!"

என்னும் பாசுரமும் பொறித்திருந்தமை, சாலையில் போவோர் வருவோரை இம்மகாநாட்டைக் கண்டு களித்துக் கேட்டு இன்புறக்கூவி அழைப்பதுபோல் அமைந்திருந்தது. அதிலிருந்து மகாநாட்டுக் கொட்டகை வரையிலும் இரு மருங்கிலும் மகர தோரணங்கள் கட்டப்பெற் றிருந்தன. நடு நடுவே தோத்திரப் பாக்களமைந்த வளைவுகள் அமைக்கப் பெற்றிருந்தன.

**பந்தலழகு**

மகாநாட்டுப் பந்தலின் ஒலிமுகம் மிகச்சிறந்த வேலைப் பாடுகளுடன் கோபுரம்போல் கட்டி அமைக்கப் பெற்றிருந்தது. அது கயிலைக் கோபுரமோ என அதிசயிக்கத் தக்கதாக அமைந்திருந்ததாக வந்திருந்தோர் பலரும் புகழ்ந்து கூறினர்.

ஆதீன ஆதிஸ்தாபகர் ஸ்ரீ குரு ஞானசம்பந்தர் ஆலயத்தில் ஆயிரக்கணக்கான மக்கள் அமைதியாக இருந்து கேட்க வசதி தரத்தக்க ஒருபெருங் கொட்டகை அமைக்கப் பெற்றிருந்தது. மகாநாட்டுக் கொட்டகையில் தொங்கல்களும் மேற்கட்டிகளும் விடப்பட்டிருந்தன. தவிர விண்மீன்களெனத் திகழ் மின்னொளி விளக்குகள் அமைக்கப் பெற்றிருந்தன. சொற்பொழிவுகளை அப்பெருங் கூட்டத்தினர் நன்கு கேட்டு உணரத்தக்கனவாக வேண்டியபடி இரண்டு இடங்களில் ஒலிபரப்பிகள் அமைக்கப் பெற்றிருந்தன.

"சம்பந்தன் பதி மடத்தில் கவுளி உரைத்திடும் பதி பசு பாசப் பனுவலுமே" என்று திருமடத்தைப் பற்றிச் சொல்லும் செய்தி ஒன்று உண்டு; அதை உண்மையென்று உறுதிப் படுத்துவான்போல் 'உயிரற்றவைகளாகிய நாங்களும் பதி பசு பாசஞ் சொல்ல வல்லேம்' என்று மொழிவதாய் பந்தற் கால்களிலும், பிற இடங்களிலும், கற்றோரன்றி மற்றோரும் அறிந்துகொள்ளும் வண்ணம் எளிய நடையிலமைந்த சைவ நந்நீதிமொழி அட்டைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. இவைகளை யெல்லாம் பார்த்த

பெரியார் இந்நகரில் எங்கணும் சைவ மணமும் தமிழ் மணமும் வீசிக் கொண்டிருந்தன என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

மகாநாட்டு மண்டபத்தின் நடுவே ஸ்ரீ பொல்லாப்பிள்ளையார், ஆலமர்கடவுள் சந்தான முதற்குரவராகிய திருநந்திதேவருக்கு மெய்கண்டான் சித்தாந்த சிவஞானபோத உபதேசக் காட்சி, ஸ்ரீ மெய்கண்டார், சமயாசாரியர் (நால்வர்) ஆகிய இவர்கள் திரு வுருவப் பிரதிஷ்டா படங்கள் அமைத்து வைக்கப்பட்டிருந்தன. அதன் நடுவிலே ஸ்ரீ-ல-ஸ்ரீ மஹாசன்னிதானம் அடியார் குழாங் கள் புடை சூழ எழுந்தருளியிருப்ப, மற்றொரு புறம் அவைத் தலைவர்களும் சொற்பொழிவாளர்களும் இருக்கவும், மற்றொருபுறம் திருநெறித் தமிழ்மறை இசைவல்லார்களின் குழூஉ அமர்ந் திருக்கவும், நல்ல மேடைகள் அமைக்கப்பெற்றன. புலவர் பெரு மக்களும் பெருநிலக் கிழார்களும், பெண்மணிகளும் ஏனையோரும் அமர்ந்திருக்கத் தக்க முறையிலே பேரவை அமைக்கப்பட் டிருந்தது. இங்கு ஸ்ரீ-ல-ஸ்ரீ மஹாசன்னிதானம் அடியார்கள் புடைசூழ, ஒருபுறம் தமிழ்மறையொலி ஆர்ப்பவும், மற்றொருபுறம் சமய நற்சொற் பொழிவுகள் முழங்கவும், எழுந்தருளியிருப்பவும், மற்றையோர் அவையில் குழுமி இருந்து கண்டு கேட்டுச் சிவானு பூதிச் செல்வர்களாம் தன்மையில் சிவநெறிச் செங்கோல் நடத்தினமையும், கயிலையிலே சிவபெருமான் தம் கணங்கள் சூழ எழுந்தருளியிருந்து அடியார்க்கு அருட்காட்சி நல்கி சிவசபை நடாத்திக் காட்டுவதுபோல அமைந்திருந்ததாக உவமை கூறி பெரியார் ஒருவர் விம்மித மடைந்தார். அவைக்களத்திலும், மேடைகளிலும் பாய்களும் விரிப்புகளும் பரப்பப்பட்டிருந்தன. "**மடங்களைப்பற்றி இம்மகாநாட்டில் பேசுவது பொருந்த மாகாது. இங்கே பிறமடங்களைக் குறை கூற அனுமதிப்பது எங்களுக்கழகல்ல. இதைக் கருத்திற் கொண்டு பேசும்படி விரும்பப்படுகிறது** — காரியதரிசி" என்னும் அட்டைகள் தொங்கவிடப்பட்டிருந்தமை குறிப்பிடத்தக்கது. அரும்பெரும் புலவர் திலகங்களின் இனிய சொற்பொழிவுகளுக் கிடையிடையே வேண்டுவோர் வேண்டியபடி நறுமணமிட்ட குளிர் நீர், வெந்நீர், சுக்குவெந்நீர், நீர்மோர் இதர இக்காலக் குடிநீர் வகை (Soda and Colour) களும் இனிமை ததும்ப வழங்க ஏற்பாடாயிருந்தது.

**விடுதிகள்** தலைவர் காசிவாசி சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார் அவர்கள் மகாநாடு கூட்டுதற்கு ஒரு மாத முன்பே வரவழைக்கப் பட்டிருந்தமையால் அவர்கள் தங்குவதற்காக ஒரு புதிய வீடும் தரப்பட்டிருந்தது. சென்னை இந்து சமய அறநிலைக் கழக உறுப்பினர், இராவ் பகதூர் திரு. C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள் B. A., B. L., கோயமுத்தூர் வழக்கறிஞர், சிவக்கவிமணி C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் B. A., ஆகியோர் (மகாநாட்டுத் தலைவர்கள்) தங்குதற்கு ஆதீன தேவாரப் பாடசாலையைக் கொடுக்கப்பட்டிருந்தது. இக்கட்டிட முகப்பில் அழகிய பந்தல் விளங்கிற்று. இவையன்றிச் சொற்பொழிவாளர்களும் ஏனைய அன்பர்களும் தங்குவதற்கென சாந்தநிலையக் கட்டிடங்களும், மெய்கண்டான் சித்தாந்த மகா நாட்டு நினைவுக்கறிகுறியாகிய **மெய்கண்டான் நிலையம்** எனப் பெயர்பெற்ற கட்டிடங்களும் அமைக்கப்பெற்றிருந்தன. இவற்றோடு நகரத்தின் பல இடங்களிலும் ஆங்காங்கு விடுதிகள் அமைந்திருந்தன. அழகிய மாளிகைகள் மூன்றும் திட்டப்படுத்தப் பட்டிருந்தன; எல்லாவிடங்களிலும் மிக்க ஒளியுள்ள மின் விளக்கு களும் காற்றுலாவத்தக்க உயரிய பந்தல்களும் பொலிவு தந்தன. இருக்கவும், படுக்கவும் தக்க விசிப் பலகைகளும், நாற்காலிகளும், மேசைகளும் வேண்டியபடி போடப்பட்டிருந்தன. இவையன்றி தங்கும் ஒவ்வோரிடத்திலும் சமக்காள விரிப்புகளும், பாய்களும் விரிக்கப்பட்டிருந்தன. படுத்தற்குப் பாயுந் தலையணையும் கூட உதவப்பட்டன.

**உணவுவிடுதி** மடத்துக்கு முன்புறமுள்ள திருக்குளத்தின் கீழ்புறம் சுமார் 500-பேர்களுக்குமேல் ஒரே காலத்தில் அமர்ந்து உணவுகொள்ளத் தக்கதாக ஒரு பெரிய **போனக சாலை** அமைக்கப்பட்டிருந்தது. அதன் தரை செங்கற்கள் பரப்பிச் சிமிட்டி பூசப்பட்டிருந்தது. எங்கும் மின்னொளி விளக்கங்கள் துலங்கின. இதை யொட்டிச் சமையல் விடுதியும், இந்த மகா நாட்டுக்கு வந்திருந்த அனைவோர்களுக்கும் உணவு வகைகள் ஆயத்தஞ் செய்ய எல்லா வசதிகளுடனும் மிகவிரிந்த ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இதுவும் நல்ல தளவரிசையுடன்

இருந்தது. குளக்கரையிலிருந்த போதிலும் சுகாதாரத்தைக் கருதி இவ்விடுதியிலேயே நீருறிஞ்சி (Hand Pump) ஒன்று நிறுவப் பட்டிருந்தது. தலைவர்கள், சொற்பொழிவாளர்கள் அன்றியும் மகாநாட்டுக்கென வந்திருந்தோர் அனைவருக்கும் ஒரு படித்தாக உண்டி முதலியவை வழங்கப்பட்டன. அவரவர் விடுதிகளிலும் உணவு, சிற்றுண்டிகள் முதலியன வழங்கப்பட்டன. எல்லா விடுதி களிலும் நறுமணக் குளிர் நீர் நிரப்பி வைக்கப்பட்டிருந்தது.

**சிற்றுண்டிச்சாலை**

ஸ்ரீ தருமபுரீஸ்வர ராலயத்தின் தென் வெளித் திருச் சுற்றில் ஒரு பெருங்கொட்டகை இதற் கென அமைக்கப்பட்டது. மகாநாட்டுக்கு வந்திருந்த பிராமண அன்பர்களுக்கு இங்கே உணவும் அளிக்கத் தக்க முறையில் ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது.

**உண்டிவகைகளும், நேரமும்**

"செவிக்குணவு இல்லாத போழ்து சிறிது வயிற்றுக்கு மீயப்படும்" எனும் முதுமொழியை ஒட்டி காலை 7-மணிக்குத்தொடங்கி 8-மணிக்குள் சிற்றுண்டி, குடிநீர் வகைகளும் (Coffee, Tea etc.) பகல் 12-30 முதல் 1-30 மணிக்குள் (பாயச பலகாரங் களுடன்) அறுசுவை உண்டியும், இடைவேளை 3-மணி முதல் 3-30 மணிக்குள் சிற்றுண்டியும் குடிநீரும் (Coffee, Tea etc.), இரவு 9-மணிக்கு நல்லுணவும் செவ்வனே வழங்கப் பட்டன. இரவில் வேண்டுவோர்க்கு ஆவின் பாலும் கொடுக்கப் பட்டது. இவைகளை உண்டு களித்தோர் "சோறு மணக்கு மடங்க ளெல்லாம்" என்னும் வாக்கு மெய்யாக இங்கு கண்டதாகச் சொல்லிக் கொண்டார்கள்.

**நீராடுமிடங்கள்**

அழகிய பொன் கொழிக்கும் புனித நீர்க் காவிரியின் தென் கரையில் தருமபுரம் அமைந்து விளங்கு கின்றமையாலும், மகாநாடு நடந்தது ஆவணிமாத மாதலாலும், நீராடும் வசதி யைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ? ஆங்காங்கு, துறைகளில் அதிகமாகக் கற்களிட்டு வைக்கப்பட்டிருந்தன. காவிரி தன் புதுப்புனல் கொண்டு பாய்கின்றமையால் தன்னிடம் படிந்தோர் உடலும் உயிரும் குளிரும் வண்ணம் செய்தது. கரைகளிலே

பற்குச்சி, பற்பொடி வகைகள் வழங்கப் பெற்றன. எண்ணெய் முழுக்குச்செய்வோருக்கு எண்ணெய்வகைகள், சீயக்காய்ப்பொடி முதலியனவும் வழங்கப்பெற்றன. மயிர்வினைஞர்களும், வண்ணார்களும் அமர்த்தப்பட் டிருந்தனர். மயிர்வினைக்காக ஒரு தனியிடமும் அமைக்கப்பட் டிருந்தது. இவைகளெல்லாம் இலவசமாகவும், முகமனுடனும் கவனித்து நடத்த ஏற்பாடாயிருந்தன.

அன்றியும் வெந்நீரில் குளிப்போர்க்குத் தனியாயும் மேற்சொன்ன எல்லா வசதிகளுடனும் இடம் அமைத்து அதனைக் கவனிக்கத் தனிச்சிப்பந்திகளும் அமர்த்தப்பட்டனர்.

குளித்தவுடன் அங்கங்கே திருநீறும், நறுஞ் சந்தனமும் வழங்க ஏற்பாடாயிருந்தது.

**பூசைக்கு வசதி**

சிவபூசை முதலிய வழிபாடியற்றும் பேரன்பர்களுக்கு வேண்டிய பூசைப் பலகைகளும், திருப்பள்ளித் தாமங்களும், நறுஞ்சந்தனக் குழம்பும், நைவேத்திய வகைகளும், தூபதீபங்களும் பிறவும் அவரவர் இருக்கைகளிலே உரிய காலத்தில் கொண்டு தரத்தக்க திருப்பணியாளர்கள் நியமிக்கப்பட் டிருந்தனர்.

**உடல்நல வசதிகள்**
**(Public Health)**

பெருங்குழுவினராகத் திரளும் அன்பர்கள் எவ்வளவு இனிமையாக வரவேற்று உபசரிக்கப் பெற்றாலும் உடல்நலப் பாங்குக் குரிய வசதிகளிலவேல் பயனில்லை யன்றோ! எங்கணும் தூயகாற்று உலாவத்தக்க வகையில் உயரிய பந்தல்களும், பசுந்தொங்கல்களும், குளக் கரையில் மணல்மேடைகளும், அம்மேடைகளில் இடப்பட்ட விசிப் பலகைகளும், கூட்டங்களிற் கைவிசிறிகளும், பிறவசதிகளும் அமைக்கப்பட்டன.

மலசலம் கழித்தற்கும் தனியாக ஆங்காங்கு மறைவுகள் செய்வித்து ஒவ்வோர் இடத்திலும் இருபணியாளர் ஒருவன் தண்ணீர் தேக்கவும், மற்றொருவன் ஒவ்வொருவரும் வந்து சென்ற பின்னர் தூய்மை செய்து மணல் பரப்பி மருந்து தூவுதற்கும் நியமனம் செய்யப்பட்டனர்.

மகாநாடு கூடுதற்கு முன்பே தற்சாலைத் திருப்பத்திலிருந்து காவிரிக்கரை வரையிலும், மற்றும் ஊரிலுள்ள வீதிகளையும், நடப்புக்களையும், சமஞ்செய்து செப்பனிட்டு மணல்பரப்பப்பட்டது. வீதிகளை நாடோறும் இருமுறை துப்புரவு செய்து தண்ணீர் தெளிக்கவும், பிற வசதிகளை மேற்காண்டற்கும், தக்கசிப்பந்திகள் நியமிக்கப்பட்டனர். பொதுவாக எல்லா இடங்களிலும் மாசு மறுவின்றி அடுத்தடுத்துத் தூய்மை செய்வதில் மிகவிழிப்பாக இருக்கும்படி திட்டப்படுத்தப்பட்டது. குளங்கள் பலவிருந்தும், சுகாதாரங் கருதி ஆங்காங்கும் நீருறிஞ்சிக் குழாய் நிலைகள் நிறுவப்பட்டன.

**வண்டி வாகனநிகள்**

மகாநாட்டிற்கு வருவதற்கு வாயிலாகவுள்ள மாயூரம் ஜங்ஷன், மாயூரம் டவுன் ஆகிய இரண்டு புகைவண்டி நிலையங்களிலும் வேண்டிய அளவுக்கு வண்டி வசதிகள் அமைக்கப் பட்டன. திரும்பச் செல்வோர்க்கும் அவ்வசதிகள் அளிக்கப் பெற்றன. வேண்டும்போது உந்து வண்டிகளும் (Motor Cars) பயன்பட்டன.

**உசாவு நிலையம்**
**(Enquiry Office)**

வெளியூர்களினின்றும் போந்திருக்கும் அன்பர்கள் தங்களுக்கு வேண்டிய தகவல்களைச் செவ்வனே உணர்ந்து கொள்வதற்காக இந் நிலையம் பயன்படும்படி அமைக்கப் பட்டது. மகாநாட்டிற் கூடியிருக்கும் அன்பர்களின் முகவரிக்கு வருகின்ற நிருபங்களை அவரவர்க்குச் சேர்ப்பித்தலோடு அவர்கள் எழுதும் நிருபங்களையும் அஞ்சலிற் சேர்த்தலும் செய்து, எழுதுவதற்குரிய எழுதுகோல், கடிதம் முதலியனவும் உதவ இங்கு இரு செயலாளர்களும், பணியாளர் களும், சில ஈருருளிகளுடன் (Bicycles) அமர்த்தப்பட்டிருந்தனர். இங்கு அஞ்சற்றலைகளும், உறைகளும், கடிதங்களும் கூட உதவப்பட்டன.

செய்தித் தாள்கள் படிக்க விரும்புவோர்க்காக நாள், கிழமை, திங்கள் (ஆங்கிலம், தமிழ்) வெளியீடுகளும் இந்நிலை யத்தில் வைத்து வழங்கப்பட்டன.

இம்மாபெருங் கழகம் இனிது நிறைவேற்றிய

## செயலாளர் குழுஉக்கள்

1. வரவேற்பு
2. உபசரணை
3. திருக்கோயில், திருமடம் (வழிபாடு)
4. சரக்கறை :—

    (அ) அரிசி
    (ஆ) மளிகை
    (இ) காய்கறி, பழம்
    (ஈ) குடிநீர் வகை (Soda, etc.)

5. பித்தளை ஏனங்கள்
6. வெள்ளி ,,
7. வெந்நீரறையும், குடிநீர் தேக்கலும்
8. ஆற்றங்கரையில், திருநீறு, பற்குச்சிகள், பற்பொடிகள், எண்ணெய், சீயக்காய்ப்பொடி முதலியன வழங்கல்
9. சமையல் மேற்பார்வை :—

    (அ) சைவக்கட்டு.
    (ஆ) பிராமணக்கட்டு.

10. காலை மாலை சிற்றுண்டி
11. பந்தி விளுதல் :—

    (அ) சைவக்கட்டு
    (ஆ) பிராமணக்கட்டு

    } ஒவ்வொன்றிலும் காலை, மாலை சிற்றுண்டிகள் சாப்பாடு இவைகளுக்குத் தனித்தனி குழுவினர்.

12. சுகாதாரம்
13. பற்றுத்தேய்த்தலும், அலகிட்டு மெழுக்கிடுதலும்
14. பாதுகாவல்
15. பணியாளர் கூட்டம் (அவர்களின் உணவு உட்பட)
16. வண்டி வாகனுதிகள்
17. ஒலிபரப்பி, மின்னொளிகள்

18. நூல் நிலையம்
19. உசாவு நிலையம்
20. மகாநாட்டுப் பந்தலில் உபசரிப்பு
21. திருமுறை ஊர்வலத்தில் :—

    (அ) ஒளி விளக்கங்களும், எடுபிடிகளும்
    (ஆ) தீவர்த்திகள்

22. பூசைத் திருப்பணிக் குதவுதல்
23. ஒளி விளக்கங்கள் (Gas-light)
24. பொது மேற்பார்வை

என்னும் இத்துணைப் பிரிவின்கீழ் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் கட்டளையின்படி அருந் தொண்டுகள் ஆற்றப்பட்டன. இக்குழுவினருள் பெரும்பாலோர் இவ்வாதீனத் திருக்கூட்டத்தின் அடியார் பெருமக்களே தலைமை தாங்கி நடாத்தினார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.



உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீன

# மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு
# ஆவணிமூலத் திருமுறைத் திருநாள்

**28, 29, 30, 31—8—1941**

**1—9—1941**



## நடவடிக்கைகள்



இரண்டாம் பகுதி



பொல்லாப்பிள்ளையார்



திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர்,
மாணிக்கவாசகர்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

# மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு

## முதல் நாள் நிகழ்ச்சி

*விஷு ஆண்டு ஆவணிமீ கஉஉ (28—8—'41) வியாழக்கிழமை*

சொற்பொழிவாளர்களும் பிற அன்பர்களும் காலையி லிருந்து வந்தவண்ணமாகவே யிருந்தனர்.

காலை 8—11 மணிக்கு, ஆதீன ஆத்மார்த்த மூர்த்தியாகிய எல்லாம்வல்ல சித்த **ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்கு** சிறப்பு வழிபாடுகள் முறைப்படி நடத்தப்பட்டன.

மாலை 6 மணிக்கு ஆதீன ஆதி ஸ்தாபகர் **ஸ்ரீ குருஞான சம்பந்தருக்குச்** சிறப்பாகத் திருமுழுக்கு முதலியன செய்வித்த லும், வழிபாடுகளும் செவ்வனே நடைபெற்றது.

இரவு 8 மணிக்கு மகாநாட்டு மண்டபத்தில் **ஸ்ரீ பொல்லாப் பிள்ளையார், சமயகுரவர், சந்தான முதற் குரவர் ஸ்ரீ மெய் கண்டார்** ஆகியோர் தம் திருவுருவப் படங்கள் (திறமையான கைஓவியம்)அழகிய வேலைத் திறமிக்க விமானத்திலே எழுந்தருளு வித்துப் பிரதிஷ்டை செய்யப்பட்டன. திருவுருவங்களுக்குச் சிறந்த பட்டுப் பரிவட்டங்களும், நறுமண மலர் மாலைகளும் சாத்தி அழகு செய்யப்பட்டு, முறைப்படி வழிபாடுகள் நடத்தப்பட்டன. வழிபாட்டின் தொடக்கத்திலிருந்து இறுதிவரை திருநெறித்தமிழ் மறையிசையை ஆதீன ஓதுவார் மூர்த்திகள் மறைத்திருவாளர்கள், திருநாவுக்கரசு ஓதுவார், சம்பந்த ஓதுவார், திருவிடைமருதூர் தேவாரபாடசாலை ஆசிரியர் நடராஜ ஓதுவார், பழநி செட்டியார் தேவாரபாடசாலை ஆசிரியர் சுப்பிரமணிய ஓதுவார், சிதம்பரம்,

முதலியார் தேவாரபாடசாலை ஆசிரியர் இராமலிங்க ஓதுவார், ஆதீன தேவாரபாடசாலை ஆசிரியர் வேலாயுத ஓதுவார், ஆதீன தேவாரபாடசாலை மாணவர்கள் இவர்கள் சிறந்த இன்னிசைக் கருவிகளுடன் ஓதினார்கள். இச் செந்தமிழ் மறையொலி, ஒலி பரப்பியின் வாயிலாக வெளி யெங்கும் பரவி விண்ணினை முட்டிற்று.

இவ்வழிபாட்டில் ஸ்ரீ பொல்லாப் பிள்ளையார் முதலான திருமேனிகளுக்குத் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்தின் பிரதிநிதியாக அனுப்பப்பெற்ற ஸ்ரீ மாயூரநாத சுவாமிகோவில் கட்டளை விசாரணை ஸ்ரீ கந்தசாமித்தம்பிரானவர்கள் பட்டுப் பரிவட்டம் சாத்தி வழிப்பட்டது குறிப்பிடத்தக்கது. இறுதியில் எல்லோர்க்கும் திருநீறு வழங்கப்பெற்றது.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னிதானம் அவர்களால் "**சித்தாந்த சைவ விடை விடை**" என்னும் நூலின் படிகள் வந்திருந்தோர்களுக்கு வழங்கப்பெற்றன.

இவ் வழிபாட்டினுக்கு வந்திருந்த அன்பர்களும் ஸ்ரீ ஆதி குருஞான சம்பந்தர் அமர்ந்திருக்கும் ஸ்ரீ ஞானம்பிகை சமேத ஸ்ரீ ஞானபுரீஸ்வரர் ஆலயத்திற் குழுமி வழிபட்டனர்.



## இரண்டாம் நாள் நிகழ்ச்சி

*விஷு ஆவணிமீ கஙஉ (29—8—'41) வெள்ளிக்கிழமை*



காலை 7 மணிக்கு ஆதீன மடாலயத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்குச் சிறப்பான வழிபாடுகள் நடைபெற்றன. 8 மணிக்கு ஆதீன தேவாரபாடசாலையிலிருந்து அன்றைய மகாநாட்டுத் தலைவர் காசிவாசி சிவஸ்ரீ **ஈசான சிவாசாரியார்** அவர்களையும், சென்னை இந்து சமய அறநிலைக் கழக உறுப்பினர் (H.R.E. Board Commissioner)

மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு — முதல் நாள் (29—8—1941)



தலைவர் :- சென்னிமலை, காசிவாசி
சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார்

இராவ்பகதூர் திருவாளர், C. M. **இராமச்சந்திரஞ் செட்டியார்** B. A., B. L., அவர்களையும், திருச்சிராப்பள்ளி நாடு நகராண்மைக் கழகங்களின் உதவிமேற்பார்வையாளர் (Deputy Inspector of Local Boards and Municipalities) திருவாளர், K. **அரங்கசாமி முதலியார்** B.A., அவர்களையும், மற்ற அன்பர்களையும் ஆதீன நாதஸ்வர வித்வான் திருவெண்காடு T. P. **சுப்பிரமண்யனது** நாதசுர இன்னிசை முழங்கப் பெருஞ் சிறப்புக்களுடன் மகா நாட்டு மண்டபத்திற்கு அழைத்துவரப் பட்டது.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமும் வைதீக சைவ முறைப்படி இன்னிசைக் கருவிகளுடன் திரு நெறித் தமிழ் மறை ஒலிக்க அடியார் குழாங்கள் புடை சூழ மகாநாட்டு மண்டபத்துக்கு எழுந் தருளினார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் இவ்வாறு எழுந்தருளி வந்த அவ்வேளையில் மகாநாட்டுத் தலைவர்கள் முதலிய பெருமக்கள் மகாநாட்டு மண்டபத்தின் நடுவண் வந்து குழுமி ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தைத் தரிசித்தார்கள். பிறகு எல்லோரும் ஸ்ரீ ஆதிகுருமூர்த்திகளின் ஆலயத்தில் முறைப்படி வலம் வந்து தரிசித்து வழிப்பட்டு வந்தனர். வரும் வழியில் மகாநாட்டுத் தலைவர்கள், சொற்பொழிவாளர்கள், வந்திருக்கும் பெருமக்கள் ஆகியோர்களை நிழற்படம் எடுக்கப் பட்டது.

அனைவரும் மகாநாட்டு மண்டபத்தில் வந்து கூடியதும், அங் கெழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ பொல்லார், சமய சந்தான குரவர்களுக்கு வழிபாடு நிகழ்ந்தது. இந் நிகழ்ச்சிகளிலெல்லாம் தமிழ்மறை யின்னிசை செவ்வனே நடை பெற்றது.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் தனியாக அமைக்கப் பெற்ற பொன்னாசனத்தின் கண்ணே எழுந்தருளி இனிது வீற்றிருந் தருள, மகாநாட்டுத் தலைவர்களும், ஏனையோரும் தத்தம் இருக் கைகளில் அமர்ந்தார்கள்.

இத்தகைய மாபெருங் கழகம் கூடும் நிகழ்ச்சி பற்றி ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் திறப்புரை கூறப்பெற்றது. அச்சிட்டிருந்த அத் திறப்புரை அவையிலுள்ளோர் யாவருக்கும் வழங்கப் பெற்றது. அது பின் வருமாறு :—

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

# தருமபுர ஆதீனம் மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு.

## ஸ்ரீ-லஸ்ரீ மகாசந்நிதானம் திறப்புரை

**20—8—1941.**

சித்தாந்த சைவத் திருநெறிச் செல்வர்களே !

ஆடல் ஏற்றினன் கூடலாலவாய்
பாடியேமனம் நாடிவாழ்மினே.

திருக்கயிலாய பரம்பரையில் வந்த எங்கள் சந்தான பரமாசாரிய மூர்த்திகளாகிய ஸ்ரீ மெய்கண்டதேவர் விளக்கியருளிய சித்தாந்த உண்மைகளை எல்லாரும் அறிந்து இன்புற்றிருக்க வேண்டும் என்ற எண்ணத்தால் இந்த மகாநாடு கூடியது என்பதை நீங்கள் அறிவீர்கள். எங்கள் ஆதீன பிரதிஷ்டாபகர்களாகிய பிரதம பரமாசாரிய ஸ்ரீ குருஞான சம்பந்த சுவாமிகளது திருவுளப் பிரசாத மகிமையினாலே இந்த மகாநாடு நடைபெறுகின்றது. நீங்கள் எல்லீரும் நமது விருப்பத்துக்கிசைந்து இங்கே வந்து மகாநாட்டில் கலந்துகொண்டு சிறப்பிக்கிறதுபற்றி நாம் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம்.

இன்றுமுதல் இங்கே நடைபெறும் சிவஞானபோத உபந்நியாசங்களைக் கேட்டும், ஆவணிமூலத் திருநாளில் நிகழும் திருநெறிச் சைவத் திருவிழாப் பொலிவைத் தரிசித்தும் ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானது பேரருளாலும் ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகளது பெருங்கருணையாலும் புண்ணிய புருஷர்களாய்ச் சிவஞானமும், தீர்க்காயுசும், சிந்தித மனோரத சித்தியும், சகல சம்பத்தும் பெற்று, இம்மை, மறுமை, வீடு என்னும் மும்மைப் பெருவாழ்வும் பெறுவீர்களாக எனத் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

அண்ணல் ஆலவாய்
நண்ணி னான்றனை
எண்ணி யேதொழத்
திண்ண மின்பமே.

திருச்சிற்றம்பலம்

மகாநாட்டின் பொது அமைச்சர் ஸ்ரீ மௌன சோம சுந்தரத் தம்பிரான் அவர்கள் இத் திறப்புரைக்கு அடியிற் கண்டபடி வழிமொழிந்தார்கள்.

**சொக்கலிங்கம் துதி**

கண்ணுக் கினிய பொருளாகி யேயென் கரத்தில்வந்தாய்
விண்ணும் பரவிடு மற்புத மேயென்ன விஞ்சையிதான்
மண்ணும் புகழ்ந்திட வேண்ணேயும் பூரண வாரியுள்ளே
நண்ணும் படிசெய் மதுரா புரிச்சொக்க நாயகனே.

மெய்யன்பர்களே !

உலகெலாம் உய்யும்பொருட்டு இன்று இம்மகாநாட்டைக் கூட்டி அருளிய மகாசன்னிதானத்தின் திறப்புரைக்கு வழிமொழியாக, அன்னார் செங்கமலப் பொற்பாதச் செம்மலர் நோன்றாட் டிருவருட் டுணைகொண்டு, (1) குருபரம்பரை, (2) ஆதீன அருட்குரவர்கள் பெருமையும் மகாநாட்டிற்கு உரிமையும், (3) மகாநாட்டின் வரலாறு, (4) மகாநாட்டின் அவசியமும் பயனும், (5) மகாசன்னிதானத்தின் திருவருள் நோக்கும் திருவுளப் பாங்கும் என்பனபற்றிச் சில பேசுகிறேன்.

## 1. குருபரம்பரை.

திருக்கயிலாய மலையிலே எழுந்தருளியிருக்கும் சீகண்ட பரமசிவன் பால், அவன் அருளிய வேதாகமங்களின் சாரமாய், மயக்கமில்லாத தெளிந்த கருத்துக்களைப் போதிப்பதான, சிவஞானபோதத்தின் உண்மைப் பொருளை அருளுபதேசம் பெற்றவர் திருநந்திதேவர். அவர் மரபு விளங்க அவர்பால் ஒருவர்பின் ஒருவர் வழிமுறையாக அருளுபதேசம் பெற்றவர்கள் சனற்குமாரர், சத்தியஞானதரிசினி, பரஞ்சோதி ஆவர்.

பரஞ்சோதியார் கயிலையினின்றும் நீங்கி மண்ணுலகம் நோக்கி வந்தருளினர். திருவெண்காட்டுத் தேவாரத்திலே "பிள்ளையினோடுள்ளம் நினைவாயினவே வரம் பெறுவர்; ஐயுறவேண்டா, வெண்காட்டு முக்குளநீர் தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே" என்ற காழியர் கோனாகிய திருஞானசம்பந்தப் பெருமான் அருள்வாக்கின் பேறாக வெண்காட்டுச் சிவபெருமான் அருளால் உலகு செய் தவப்பயனாகத் திருவெண்ணெய் நல்லூரிலே மெய்கண்டார் திருவவதாரஞ் செய்தருளினர். சுவேதவனப் பெருமாள் என்னும் பிள்ளைத் திருநாமமுடையர், மெய்த்தவ முதல்வர், இரண்டாண்டு நிரம்பப்பெற்ற குழந்தை ஆகிய அந்த ஞானச் செல்வருக்குப் பரஞ்சோதியார் திருவருள் புரிந்தார். அவர் கேட்ட முறைப்படி வேதாகம சாரமாகிய சிவஞானபோத உண்மையை அருள் உபதேசஞ் செய்தார். பொய்ச் சமயங்களின் பொருள் இது இது எனக் கழிப்பித்துச் சித்தாந்த சைவத் திருநெறியின் மெய்ப்பொருள் இது எனக் காட்டும் வித்தகத் திறமைக்கும் "சத்தியஞானதரிசினி" என்னும் தமது குருவின் நாமத்திற்கும் இணங்க "மெய்கண்டான்" என்ற தீட்சா நாமத்தை அப்பிள்ளையாருக்குச் சூட்டினர். தமிழுலகம் உய்யும்படி "சிவஞானபோதம்" என்னும் முழுமுதற் றமிழ்நூலை இயற்றும்படி அனுக்கிரகமும் புரிந்தருளினர்.

பின்னர் மெய்கண்டார் அத் திருவெண்ணெய்நல்லூரில் சுயம்பு மூர்த்தியாய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ பொல்லாப்பிள்ளையாரின் திருவருளுக்கு உரியரானார். தாம் பெற்ற அருளுபதேச உண்மைப் பொருளைச் சுவாநுபூதியிற்கண்டு தெளிந்தார்; "தென்னாடுடைய சிவனே எந்நாட்டவர்க்கும் இறைவன்" எனப்போற்றப்படும் புண்ணிய பூமியாகிய தென்னாட்டுச் சைவ நன்னாட்டின் தெய்வத் தென்றமிழ் மக்கள் செய்தவப் பயனைச் சிவஞானபோதத் தனிப்பெருநூலை அருளிச்செய்தார்.

எனவே இம் மெய்கண்டதேவ நாயனாரே திருநந்தி மரபில் பூலோக அருட் குரவர்களின் சந்தானத்தில் மெய்கண்டான் சந்தானம் என்பதின் முதற் குரவராவர். இவர்தம் அருளுபதேச முறையில் மாணாக்கர்களாக ஒருவர் பின் ஒருவராக வந்தவர்கள் திருத்துறையூர்ச் சகலாகம பண்டிதர் என்னும் அருணந்தி சிவனார், பெண்ணாகடத்திற் றோன்றித் தில்லையிற்சமாதி கொண்ட மறைஞானசம்பந்தர், சிதம்பரம் கொற்றவன்குடி உமாபதி சிவனார், அவ்வூர் மச்சுச் செட்டியார் என்கிற அருணமச்சிவாயர் ஆகியோராவர். இவர்கள் ஒவ்வொருவரும் பல மாணாக்கர்க் கருள் செய்த ஞானாசிரியர்களாய்த் திகழ்ந்தவர்கள். இவ்வருட் குரவரின் சீடர்களிற் சிறந்த இருவர் சித்தர் சிவப்பிரகாசரும், காழிக் கங்கை மெய்கண்டாரும் ஆவர். இந்தச் சிவப்பிரகாசரே திருவாவடுதுறை ஆதீனத்து ஆதி குருவாகிய நமச்சிவாய மூர்த்திகளின் ஞானாசிரியர். மற்றொரு சீடராகிய காழிக் கங்கை மெய்கண்டாரின் வழிவந்த அருட் குரவர் பழுதைகட்டிச் சிற்றம்பலவர். (இவர் காஞ்சீபுரம் தொண்டைமண்டல ஆதீன முதற் குரவராகிய ஞானப்பிரகாசரின் ஆசிரியர்.) இவர் காழியில் அவதரித்தவர்; மாயூரம் சித்தர் காட்டில் 64 சீடர்களுடன் சமாதி கொண்டவர். பழுதை கட்டிச் சிற்றம்பலவரின் சீடர்கள் பழுதைகட்டி ஞானப்பிரகாசரும், தத்துவப் பிரகாசரும் ஆவர். இத் தத்துவப்பிரகாசர் கும்பகோணம் சிவபுரத்தில் அவதரித்தவர். காழியில் சிற்றம்பலவர் அநுக்கிரகம் பெற்றவர்; திருவாரூரில் ஆரூர் ஆலய அபிஷேக அன்னதானக் கட்டளைகளின் அதிபராய்ச் சீடர்களோடு வாழ்ந்து வந்தவர்; அவ்வூர்ச் செட்டித் தெரு ஞானப்பிரகாசருக்கு அருளுபதேசம் செய்தவர்.

பரம்பரைச் சைவ வேளாள அபிடேக மரபினரான இச் செட்டித் தெரு ஞானப்பிரகாசருக்குச் சிதம்பரநாதன் என்னும் திருநாமமுடைய சற்புத்திரர் தோன்றினார். இவருக்கு மாசிலாமணி என்ற பிள்ளைத் திருநாமமுடைய சற்குமாரர் அவதரித்தார். இவருக்கு 'மாசிலாமணிச் சம்பந்தன்', 'கமலை ஞானப்பிரகாசர்' என்று திருநாமங்களும் வழங்கின.

பரம்பரை வழக்கப்படி இவருடைய தந்தையாரே இவருக்கு ஞானசாரியராயினர். ஞானப்பிரகாசர் என்பது இவரது தீட்சா நாமம். மேலும் இவர் திருவாரூரிற் சித்தீச்சரத்தில் கல்லாலின்கீழ் எழுந்தருளியுள்ள தென்முகக் கடவுளின் திருவருளை மிகப்பெற்றுப் பல அற்புத சித்திகள் கைவரப்பெற்றுப் பல அருணூல்களையும் இயற்றினர். இவர் இல்லறம் என்னும் நல்லறத் தமர்ந்து ஞானபுத்திர சீடர்கள் பலரோடு வீற்றிருந்து திருவாரூர் இராஜாங்கக்கட்டளை அதிபராய் அருட்செங்கோல் செலுத்தினர்.

இப்பெரியாரை "ஞானப்பிரகாச, ஞானப்பிரகாச" என்று நாத்தழும்பேறச் சொல்லிக் கற்றுவின் மனம்போலக் கசிந்துருகினவர்தாம் இத்தருமபுர ஆதீன ஸ்தாபகரான ஆதி அருட் குரவர் குருஞானசம்பந்த தேசிகராவர். இப் பரமாசாரியர் தமது ஞானகுரவரால் அநுக்கிரகம் செய்யப் பெற்ற சிவஞானபோதச் சித்திநெறியிலே சிவபோகசாரம், சொக்கநாத வெண்பா, ஞானப்பிரகாசமாலை, முத்தி நிச்சயம் முதலான அருட் சுவாநுபூதி நூல்களை இயற்றிக் "குருஞானசம்பந்தர்" என்று தம் ஞானசிரியரால் நாமஞ் சூட்டப் பெற்றவர்.

எனவே திருக்கயிலாய பரம்பரைத் திருநந்திதேவர் மரபிலே மெய்கண்ட சந்தான வழியிலே பிற்றோன்றலாய் வந்த அருட் குரவர்களில் ஏழாமவர் திருவாவடுதுறை ஆதீன ஆதி ஸ்தாபகரான நமச்சிவாய மூர்த்திகள். எட்டாமவர் காஞ்சிபுர ஆதீன ஞான தேசிகராகிய ஞானப்பிரகாசர்; பதினொராமவர் கமலை ஞானப்பிரகாச தேசிகராவர். பன்னிரண்டாமவர் தருமை ஆதீன ஆதி குருஞானசம்பந்த தேசிகராவர்.

ஆகவே மெய்கண்ட சந்தானம் இற்றைக்கு எழுநூறுஆண்டுகட்கு முன்பே இறைவனருளாலே தோன்றிற்று. திருவாவடுதுறை ஆதீனம், காஞ்சிபுரம் ஞானப்பிரகாசர் ஆதீனம், தருமபுர ஆதீனம் ஆகிய இவ்வாதீனங்களைத் தாபித்த அருட் குரவர்கள் இம் மெய்கண்ட சந்தானத்திலே வந்தவர்களாவார்கள். இம் மடாலயங்கள் பதினாறும் நூற்றாண்டிலே சற்று முன்பின்னாகத் தோன்றியன. இத்தருமபுர ஆதீனம் பதினாறும் நூற்றாண்டின் பிற்பகுதியில் நிறுவப்பட்டதாய் இற்றைக்குச்சுமார் நானூறு வருஷங்களாக அருளாட்சியி லிருந்துவருகின்றது. இப்போது இவ்வாதீன குருபரம்பரை முறையில் 24-வது குருமூர்த்தியாக எழுந்தருளி அருளாட்சி செலுத்தும் போளரே ஸ்ரீ-ல-ஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த மகாசந்நிதானம். இவ்வருளாட்சி, கமலை ஞானப்பிரகாசரும் ஆதி குருஞானசம்பந்தரும் ஒருங்கு கூடியது போன்று, சைவசமயம் எங்கும் சிவஞானசூரியப்பிரகாசமாய்ப் பொலிவுற ஆலவாயமர்ந்த அங்கயற்கண்ணி பாகன் சொக்கலிங்கப் பெருமான் புகழே ஞாலமெங்கும் மிக விளங்கிக்கொண் டிருக்கிறது.

## 2. ஆதீன அருட் குரவர்களின் பெருமையும், மாநாட்டிற்கு உரிமையும்.

சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலுமெஞ் சுந்தரனுஞ்
சிற்கோல வாதவூர்த் தேசிகனு — முற்கோலி
வந்திலரே னீறெங்கே மாமறைநா ருனெங்கே
யெந்தைபிரா னஞ்செழுத்தெங் கே.

இவ்வாதீன அருட் குரவர்கள் வழி வழியாகத் திருவருள் ஞானோபதேசம் பெற்று ஜீவன் முத்தராய் ஞானக்கட லமுதருந்திச் சாக்கிரத்தே துரியாதீதத்தைப் புரியும் தபோதனர்களா யிருந்தனர். "எங்கும் யாம் ஒருவர்க்கும் எளியோம் அல்லோம்", "யாவர்க்கும் மேலானோம்", "யாமார்க்கும் குடியல்லோம்" என்று திருவருள் இறுமாப் பெய்தியவர்களா யிருந்தனர். திங்கள் முடியார் அடியோம் என்று பரனது இச்சைவழி தாடலை (தாள் + தலை) போலவும், காறலை (கால் + தலை) போலவும் சீவபோதம் சிவனருட்போதத்து ளடங்கச் சீவான்மா சிவ போதம் பெற்றுச் சிவமும் ஆம் என்னும் சிவாகம சித்தாந்தத்தையுடைய சிவஞானச் செய்தியராய் இருந்தனர். என்றாலும், "ஐயா, வாசனைப் பழக்கமே மனம்" என்று எம் தாயுமான அடிகள் இரங்கினர். ஆகையால்,

"செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா
அம்மலங் கழீஇ அன்பரோடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும்அரனெனத் தொழுமே." (சிவஞானபோதம்)

எனச் சிவஞானிகள்பாலும், பெருங்காயமிருந்த பாண்டம் போல் வாசனை மலம் வந்து தாக்கா திருக்கும்பொருட்டு (எடுத்த தேகத்தின் ஊழாகிய பிராரத்த கர்மானுபவமாய் அழியும்வரை நின்று) சிவாலயங்களையும், சிவ னடியார்களையும் சிவவேடங்களையும் சிவனெனவே தேறி வழிபடும் கொள்கையினராய் வாழ்ந்திருந்தனர். இதற்கு இலக்கியமாகக் காழி ஞானப்பிரகாசர் ஆரூர் ஆலய இராஜாங்கக் கட்டளையை மேற்கொண்டு வழிபாடாற்றினர்; சிவ சின்னங்களைப் பூண்டு போற்றினர்; அச்சிவ வேடந் தாங்கின சற்சீடர்களாகிய அடியார்குழாங்கள்புடைசூழ "இராஜாங்கத்தில் அமர்ந்தது வைதிக சைவம் அழகிது", "சைவத்தின் மேற்சமயம் வேறிலை" என்று கடைப்பிடித்துப்பரசமய கோளரியாய்ப்பதினாறவது நூற்றாண்டின் பிற்பகுதியில் அருட் செங்கோல் செலுத்தினர். அன்றுமுதல் இன்றுவரை அவாது சிற்பரச் செல்வச் சிறப்புடைச் சீடராகிய இவ்வாதீன ஆதி குரு ஞானசம்பந்த தேசிகரும், அவர் வழிவந்தவர்களும் அக்கொள்கையையே

கடைப்பிடித்துச் சிவவேடங்களைப் போற்றித் திருக்கூட்டத்தினர் புடைசூழப் பலதேவாலயங்களையும் பரிபாலனஞ்செய்து வழிபடும் திருப்பணியே எப்பணியினும் தலைசிறந்த பணியாகக் கொண்டுள்ளனர். அதனாலே சம்பந்தர், வாகீசர், மாணிக்கவாசகர், சுந்தரர் அருளிச் செய்த அருட்பாடல்களும் தன்னிகரில்லாத மெய்கண்ட தேவர் முதல் சற்குரவர் தரு சித்தாந்த சாத்திரங்களாகிய உந்தி, களிறு, உயர்போதம், சித்தியார், பிரகாசம் முதலான பதினான்கு அருணூல்களும் வளர்ந்தோங்கிப் பயன் அடையச்செய்ய ஒரு மானிட உருவெடுத்த சற்குருநாயனே என்று போற்றிப் புகழப்படுகிறார்கள்.

அவ்வாறு அவர்களின் பரிபாலனத்தின்கீழ் நடைபெற்றுவரும் தேவஸ்தானங்கள் இருபத்தேழு. அவை, சைவசமய பரமாசாரியர் நால்வருள் முதல்வராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் மூன்றாண்டிலே உமாதேவியாரின் திருமுலைப்பாலுண்டு சிவஞானம் பெற்ற சீகாழித் திருக்கோயில், திருஞானசம்பந்தப் பெருமான் தமது திருமணத்திலே காதலியாரைப் பற்றிய கரத்தோடும் ஏனைய திருக்கூட்டத்தோடும் நமச்சிவாயத் திருப்பதிகம் ஓதியவண்ணமாகவே சிவன தருட்சோதியிற் கலந்திட்ட புண்ணியப் பதியாகிய திருநல்லூர்ப் பெருமணம் என்னும் ஆச்சாபுர ஆலயம், தமக்கையாராகிய திலகவதியார் கருணையாற் பரசமயத்திலிருந்து சைவசமயம் புகுந்து திருவதிகை வீரட்டானேசுரரால் ஆளப்பெற்றவரும், அப்பூதியடிகளாற் போற்றப்பெற்றவரும், "நாவுக்கரசன்" என அசரீரியாகச் சிவபெருமானால் அழைக்கப் பெற்றவருமான அப்பர் பெருமானுக்குக் கயிலைக்காட்சி தந்த தென்கயிலாயமாகிய திருவையாற்றுத் திருக்கோயில், திருத்தொண்டத் தொகையை அரனருளால் உலகுய்யப் பாடியருளிய நம்பியாரூரரென்னும் சுந்தரமூர்த்தி நாயனார் உடற்பிணி நீங்கிய சிவதீர்த்தமுள்ள திருத்துருத்தி என்னும் குத்தாலம் ஆலயம், தம்மை நிந்தித்துத் தக்கன் செய்த யாகத்தையும், அவ்யாகத்துக்கு வந்திருந்த தேவர்களையும் அழித்துத் தக்கனது தலையைப்பறித்த தலமாகிய திருப்பறியலூர் என்னும் பரசலூர்த் திருத்தலம், ஐங்கணைக் கிழவனாகிய மன்மதனை நெற்றிக்கண்ணால் எரித்த திருக்குறுக்கைத் தலம், காலனைக் கடிந்த கடவூர் வீரட்டத்து ஆலயம், இரணியனைக் கொன்று துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனம் செய்து பிரகலாதனுக் கனுக்கிரகித்தபின் தருக்குற்றுச் சிற்றுயிர்களை வருத்திய நரசிம்மத்தைக் கொன்று உலகவர் நடுக்கந் தீர்த்த கம்பகரேசுரர் எழுந்தருளியிருக்கும் திருபுவன ஆலயம், பவரோகமாகிய மூலநோய் தீர்க்கும் முதல்வனாகிய வயித்தியநாதப்பெருமான் தையல்நாயகியோடும் செல்வமுத்துக்

குமாரரோடும் எழுந்தருளியுள்ள வைத்தீஸ்வரன்கோயில் என்னும் புள்ளிருக்கு வேளூர்த் தலம், கங்காதேவியை மணந்து தக்ஷிணாமூர்த்தியாய் அகத்தியனார்க் கருள்புரிந்த வள்ளலார்கோயில் என்னும் உத்தர மாயூரத்தலம், குண்டையூர் கிழார் தந்த நெல் மலையை ஆரூருக்கு எடுத்துச் செல்ல ஆள்வேண்டிச் சுந்தரமூர்த்தி நாயனாரால் பாடப்பெற்ற திருக்குவளை என்னும் திருக்கோளிலித் தலம், இறைவனைப் புகழும் ஏழிசையும் யாழி லடங்கா வகையைத் திருஞான சம்பந்தப் பெருமான் யாழ்மூரிப் பண்ணி னாலே உலகவர்க்குக் காட்டியருளிய திருத் தருமபுரம் என்னும் தலம், சிவஞான ராஜதானியுள் ஒன்றானதும், திருக்கடவூரிலே தண்டனையடைந்து உயிர் பெற்ற இயமன் பூசித்துப் பேறுபெற்றதும் ஆகிய தருமபுரம் என்னும் திருப்பதி இன்னும் ஏனைய ஆலயங்களும் செம்மையான முறையிற் பரிபாலனஞ் செய்யப்பட்டு இன்னோன்ன திருக்கோயில்களை யெல்லாம் "புது ஆலயப் பிரதிட்டைகளிலும், பழைய திருத்தளிகளைப் புதுப்பித்தலே அதிகப் பயனுடைத்து" என்னும் ஆன்றோர் ஆப்த வாக்கியப்படி பல க்ஷேத்திரங்களை ஜீரணோத்தாரண அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகங்கள் நடைபெறச் செய்யும் சிவப்பணியில் தலைப்பட்டுச் சைவ சமயத்தை வளர்த்து வருகிறார்கள்.

"ஐயா றதனிற் சைவனாகியும்" என்ற மணிவாசகப் பெருமான் ஓதியருளியபடி அநாதி சைவனாகிய சிவபெருமான் தம்மைத் தாமே பூசித்துக்காட்டிய திருத்தலமாகிய திருவையாற்றில் அவதரித்துச் சிவபிரா னிடம் "மறைகள் நிந்தனை சைவ நிந்தனை பொறாதமனம்" முதலிய பதி னாறு பேறும் வேண்டிப்பெற்ற திருநந்திதேவரை அப்பதியிலேயே இன்றும் மாறாத அன்புடன் இம்மரபினர் பூசித்து வருகின்றனர்.

ஆகவே, சமய சந்தான அருட்குரவர்களின் ஆப்த வாக்கிய பரிபாலனமே உற்ற ஆக்கையின் உறுபயனெனத் தவநெறி ஒழுக்கத்தில் தலைநின்றுளார் இம் மரபினர்.

இப்போது இருபத்து நான்காவது குருமூர்த்தியாக எழுந்தருளி யுள்ள ஸ்ரீ-ல-ஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த மகாசன்னிதானம் இவ் வருள்வழிபாடுகளைத் தலைசிறந்த குறிக்கோளாகத் திருவுளம் பற்றிச் சமய சந்தான பரிபாலன பேரார்வம் உளம்பொங்கி எழுந்து புறம் போந்ததன் பயனேதான், ஸ்ரீ ஞானபுரீஸ்வர அண்ணல் பாகத்துறையும் ஞானாம்பிகையின் கருணையின் ஒழுக்கம் போன்றதும் இக்காலத்துக் கேற்ற முறையினதும் ஆகிய இம் மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு ஆகும்.

## 3. மகாநாட்டின் வரலாறு.

உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர் எழுதரு நாற்றம்போல்
பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருள் அப்பொருள் பாராதே
பெற்றவா பெற்ற பயனது நுகர்ந்திடும் பித்தர்சொல் தெளியாமே
அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே.

உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம்
உடம்பினுள் உத்தமனைக் காண்
* * * * வெண்ணெய் நல்லூர்
மெய்கண்டான் என்று ஒருகால் பேசுவரால் வேறின்மை
கைகண்டார் உள்ளத்தின் கண்.

[உற்ற ஆக்கை—வினைக்கேற்பப் பொருத்தப்பட்ட உடல்;
பரம்பொருள்—எல்லாவற்றிற்கும் மேலாய்க் கடந்துள்ளதான கடவுட்
பொருள் கண்டாமே—யாம் கண்டாமே.
உறுபயன்—முடிவாய் அடையவேண்டிய வீடு பேறாகிய, அடிசேர்
அருள் முத்தியே.]

இவ்வுடலானது, மண், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் ஐந்து உண்மை அறிவற்ற சடப்பொருள்களால் ஆக்கப்பட்டுள்ளது. உலகில் சடப்பொருள்களைச் செயற்படுத்த அறிவையுடைய பொருள் ஒன்று வேண்டும்.

ஆகவே, இவ்வுலக உண்மைப் பொருளாகிய மேலே கூறிய ஐந்தையும் கொண்டு, உடலாகிய பிண்ட காரியமாகவும், மரம், செடி, கொடி முதலிய அண்ட காரியங்கள் ஆகவும், செயற்படுத்த ஒரு காரிய கருத்தா வேண்டும். அவன் இவ் வற்புதக் காரியங்களைச் செய்வதற்கு எல்லா முழுமுதல் முற்றுணர்வும், பேராற்றலும் உடையவனாய் இருத்தல் வேண்டும் என்பது எல்லோரும் ஒப்ப முடிந்ததே. அவனையே பலப்பல அறிவு ஆற்றல் நிலை உடையவனாய், மக்களின் அறிவு பல்வகை வேறு பாட்டிற்குத் தக்கபடி அவரவர் அறிவுகண்ட அளவை முடிவான சித்தாந்த மாகக் கொண்டு அவரவர் சமயம் அல்லது மதத்தின் கொள்கையாகக் கடைப்பிடித்து ஒழுகுவது பொருத்தமே. ஆனால் அவ்வளவோடு அமையாமல் தான்கண்ட சித்தாந்தமே முடிந்த முடிவான எல்லாவற்றிற்கும் மேலான பரம் பொருளாய் உள்ள பரம சித்தாந்தம் என்று "பேயும் பெண்டிரும் கொண்டது விடார்" என்றபடி வற்புறுத்தி வாதிப்பது பேதமை ஆம். உதாரணமாக ஒரு சர்வகலாசாலையிலுள்ள நூறு மாணவர் களைப் பற்றிப் பேசும்போது அவர்கள் எல்லாருடைய முழு நிலைமையையும்

அறியாத ஒருவன் அவர்களைப் பொதுவாகச் "சர்வ கலாசாலை மாணவர்" என்றுதான் சொல்லக்கூடும். ஆனால் அக் கலாசாலைத் தலைவராகிய பேராசிரியர் அவர்கள் நிலைமையைப் பகுத்து அதற்குரிய பலவகுப்புக் களையும் அவைகளுக் கேற்பப் பலவித போதனை பாடங்களையும் தன்னுடைய முழு அறிவினாலும் ஆற்றலாலும், முன்னமே பகுத்தறிந்து பாடம் அமைத்தவராகையால் இம்மாணவர்கள் எந்தெந்தப் பாடங்களை ஆசிரிய ரிடம் கேட்டுத் தேறியபடி முறையாக மேல் வகுப்புக்குச் சென்று முடிவான தேர்ச்சியைப் பெற்றுப் பட்டதாரிகள் ஆவார் என்பதை நன்குணர்ந்து எல்லா மாணவர்களையும் ஒரு தரமாகக் கருதாது அவரவர் தரத்திற்குரிய வகுப்பினராக மதித்துப்பேசுவார். அது போலவே, முற்றறி வும் பேராற்றலும் உடைய இறைவன் அவனது அருட் குணமாய் விட்டு நீங்காத கருணையாகிய சக்தியே திருமேனியாகக் கொண்டு வேதா கமங்களை முதலில் தானே அருளியும், மக்களின் அறிவாற்றலுக்குத்தக்கபடி உணர்ந்துகொள்ளப் பலப்பல நிலைகளை உடைய கொள்கைகள் அடங்கிய சமய பேதங்களை அவ்வக்காலத்திற் கேற்றபடி பலதரப்பட தன்னருள் பெற்ற அணுக்களாகிய ஆன்மாக்கள் வாயிலாக உடனின்றும் குருபரம்பரையில் அருளிச் செய்தான். எனவே அன்றும், இன்றும், என்றும் உள்ள எல்லாச் சமயங்களும் தம் தம்மளவு கொள்கை களைப் போதிக்கும் முறையில் சரி என்பதும், அளவு மீறி முடிவாகப் போதிக்கும் முறையில் தவறு என்பதும், ஆனால் எல்லாக்கொள்கைகளையும் படி முறையாக ஒற்றுமைப் படுத்தி விளக்கிப் பல்வேறு நிலைகளையும் ஒப்புக் கொண்டு மேற்சென்று முடிந்த முடிவாக எல்லாம் தன்னகத்தே அடங்கப் பெற்று அப்பாலாய் ஒரே தனி நிலையை விளக்குவது மேலான சமயத்திற்கு இலக்கணமாகும் என்பதும் முடிந்த முடிபுகளாகும். இவ்விலக்கணங் கொண்டு எல்லாச் சமயங்களையும் துருவித்துருவிச் சோதித்துப் பார்த்து இராஜாங்கத்தில் அழகாய் அமர்ந்தது வைதிக சைவ சமயம் ஒன்றே என்பதை ஆராய்ந்து தெளிந்து மெய்ம்மைகண்டு சித்தாந்தப் படுத்துவதே இம் மகாநாட்டின் நோக்கம்.

ஆகவே மேற்சொல்லியவாற்றால் கடவுட் பொருள் (கடவுள்) ஒன்று; இவ்வுலகிற்காணப்படும் பற்பல அறிவற்றபொருள்களெல்லாம் ஒன்று யடங் கும் ஜடப்பொருள் (உலகம்) ஒன்று; இச்சடப்பொருள்களோடு பொருந்தி ஓரறிவு முதல் ஆறறிவுவரையில் ஒவ்வொன்றும் பலதிறத்தனவாக எண்ணில் லாத அறிவுடைப்பொருள் வகையினதான அறிவுப்பொருள் (உயிர்) ஒன்று; ஆக மூவகையான இயற்கை உடைய உண்மைப் பொருளாகிய கடவுள்,

உயிர், ஜடப்பொருள் (உலகம்), அல்லது பதி, பசு, பாசம் என்னும் மூவகை இயற்கை உண்மைப் பொருள்கள் ஆராய்ந்து தெளியப்படுதற்கு இலக்கியமாய் என்றும் அநாதியாயுள்ளன. இறைவனே உணர்த்த அவனால் குருசந்தான முறையில் உணர்த்தப்பட்ட ஞாபக ஏதுவாய் அருளுபதேச ஞானத்திற்குச் சாதகமாகவுள்ள அபர பசு பாச ஞானமாகிய வேத சிவாகம அருள் நூல்களிலே மெய்கண்டார் ஆய்ந்து கண்ட துணிபு பதி, பசு, பாச மூவகை இயற்கைப் பொருள் ஆராய்ச்சியே.

*ஆய்வார் பதிபசு பாசத்தி னுண்மையை யாய்ந்தறிந்து*
*காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி கேள்வியல்ல*
*லோய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றிரண்டுமறத்*
*தோய்வார் கமலையுள் ஞானப்ர காசன்மெய்த் தொண்டர்களே.*

*என்னை யறிவென்று னென்னறிவி லானந்தந்*
*தன்னைச் சிவமென்றன் சந்ததமு—மென்னையுன்னைப்*
*பாரா மறைத்ததுவே பாசமென்று னிம்மூன்று*
*மாராய்ந் தவர்முத்த ராம்.* (சிவபோகசாரம்)

பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதியினை அடைதலே முத்தி என வேதசிவாகமங்கள் அறைந்திடும் சைவத்திறத்தினைச் சிறிது ஆராய்வாம். கடல், நீர், உப்பு ஆகிய இவை போல் பதியும், பசுவும், பாசமும் ஒன்றில் ஒன்று அடங்கியும் கலந்தும் வியாபக வியாப்பிய முறையில் என்றும் அநாதியாய் மூவகைத் தனி இயற்கை யுடையனவாய் உள்ள பொருள்களாம். கடல் நீரினுள்ள உப்பு தண்ணீர் தங்கியுள்ள கடல் என்று சொல்லப்படும் ஆகாச வெளியிலே பற்றும விருப்பதுபோல ஆணவம், கன்மம், மாயை என்ற மூவகைப் பாசமும் பசுவாகிய உயிரைப் பற்றிக்கொண்டும், பதியாகிய சிவத்தைப் பற்றாமலும் இருக்கும். அச்சிவமாகிய பதிப் பொருளோ, 'உலகத்தில் ஒரு பொருளும் நீயல்லை; ஆனால் உன்னை இன்றியமையாத ஆதாரமாகக் கொண்டல்லது ஒரு பொருளும் தனித்த செயற்கொண்டிருத்தல் இல்லை' என்ற பொருள்பட "ஒன்றும் நீயல்லை அன்றி(நீ) ஒன்றில்லை" என மணிவாசகர் அருளியபடி (சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்த) ஐம்புல அறிவினாலும் உலகபாசப் பொருள்கள் பற்றி அறியப்படுவன போல், பற்றலாவதோர் நிலையிலாதது ஒரு பரம் பொருள் ஆயினும் மலரின் மணம் போல் அனுபவத்தில் அறியத் தக்கதே.

செம்பிற் களிம்பு போல் உயிரை அநாதியே செயற்கையாய்ப்பற்றி உயிரின் அறிவை மறைத்து, அறிவு இச்சை செயல் நிகழவொட்டாது உயிரின் குற்றமாய்ப் பலப்பல சக்திநிலை யுடையதாய் உள்ளது ஆணவமலம்.

உயிரை அவ்வறிவு மறைப்பின் ஏற்றத் தாழ்வுக்குத் தக்கபடி பாப புண்ணிய காரியங்களுக்குப் பயன் விளைவிப்பதாயும் காரணரூபமாயும் நல்வினை, தீவினை என இரு பகுப்புடைய மூலமாயும் உள்ளது கன்ம மலம். இக் கன்மமல வேற்றுமைக்குத் தக்கபடி உயிர்களுக்கு உடல்களும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் முதலான கரணங்களும், பூலோக சுவர்க்க நரகபுவனங்களும், மண், பெண், பொன் முதலிய போகப் பொருள்களும் ஆக்குவதற்கு முதற் காரணமாய் உள்ளது மாயை என்னும் மலம். இம் மும்மலமும் அறிவற்ற ஜடமாய் சூக்கும வியாபகமாய் உள்ளன. பதிப்பொருளாகிய சிவம் தன்னை விட்டு நீங்காத குணமாய் அருள், சக்தி, கருணை என்னும் ஆற்றலால் சன்னிதி மாத்திரையாகக் கரணங்களின்றித் தனக்கென்று ஒரு செயலு மில்லாத மும்மல ஜடப்பொருள்களைத் தொழிற் படுத்துகிறான். காந்தம் தன் சன்னிதியில் இரும்பை அசைப்பிக்கிறது போலவும், சூரியன் முன் தாமரைகள் கூம்பியும், அலர்ந்தும், காய்ந்தும் தொழிற்படுவன போலவும், மும்மலங்களும் செயற்படுகின்றன. அப்படிச் செய்வதன் நோக்கம் உயிர்களுக்கு அநாதியா யுள்ள ஆணவ மறைப்பைக் கன்மத்துக்கு ஈடாகத் தநு, கரண, புவன போகங்களை மாயையினின்றும் உண்டாக்கிச் சிறிது சிறிதாகச் சோபான முறையில் உயிர்களின் சிற்றறிவை விளங்கச் செய்து வருமளவில் இறந்தும், பிறந்தும் நரக சுவர்க்கங்களை அனுபவித்தும் வண்டிச் சக்கரம் போலவும், காற்றாடி போலவும் பிறப்பிறப்பிற் சுழன்று வரும் ஒவ்வொரு பிறப்பிலும் சமயக் கொள்கைகளையும் படிப்படியாகச் சார்ந்து கடவுளைப் பற்றிய அறிவைச் சிறிது சிறிதாகப் பெறும். அவ்வுயிர்கள் நால்வகைத் தோற்றம், எழுவகைப் பிறப்பு, எண்பத்து நான்கு லக்ஷம் யோனிபேதங்களில் பல்லூழி காலம் அலமரும். ஆறறிவு பெற்ற மக்கட் பிறப்பிலே விருப்பு வெறுப்பற்றுக் கன்மமலம் தேய்ந்து ஆணவமல சக்தி ஒடுங்கி வரும் சமயம் பார்த்து இறைவன் மூவகை ஆன்மாக்களின் பக்குவத்திற் கேற்பத் தானே அருட்டிருமேனி கொண்டும், ஆசான் அறிவை அதிட்டித்தும், நிலைக்களமாகத் தாவர மூர்த்தங்களில் தோன்றியும் ஞானோபதேசஞ் செய்து, திருவடிப்பேற்றை அனுக்கிரகம் செய்கிற கைமாறற்ற பெருங்கருணையே மேற் கூறியாங்கு ஜடப்பொருள்களை இறைவன் தொழிற் படுத்துவதன் நோக்கமாகும். இதுவே இறைவன் ஆன்மாக்களை உய்விக்கும் பொருட்டுப் பெருங்கருணையோடு உபகரிக்கும் பஞ்ச கிருத்தியத்தின் பயன். இறைவன் வேண்டுதல் வேண்டாமை இலான், ஆகையால் அவன் செயலெல்லாம் தன்பொருட்டல்ல; கருணை கூர்ந்து பிறர் பொருட்டே செய்வனவாம்; இறைவன் சன்னிதி சங்கற்ப

மாத்திரையாய் வெகு இலேசாய்ச் செய்வித்தலால் அவன் திருவிளையாடலே என்றாலும் அது ஆன்மாக்களுக்குப் பேரானந்தப் பெரும் பேறாகிய திருவடி முத்தியளித்துச் சீவன் சிவமும் ஆம் தன்மையை அடையச் செய்யும் பயன் உடையதே.

உயிர்கள் அறிவித்தாலன்றித் தாமே அறியும் தன்மை உடையன அல்ல; அறிவித்தாலும் அறியக் கூடாத அறிவற்ற ஜடப்பொருள்களைப் போலல்லாமல் அறிவிக்க அறியும் அறிவுடையனவாய்ச் சார்ந்ததன் வண்ணமாய், மலத்தைச் சார்ந்தால் மலமாயும், சிவத்தைச் சார்ந்தால் சிவமாயும் விளங்கும் தன்மை உடையன. அனாதியே உயிர்கள் ஆணவ மலத்தோடு கட்டுண்டு கண்ணிலாக் குழவியைப் போல் அறிவு செயலற்று இருந்த நிலை பேத்த கேவல நிலை எனப்படும். பிறகு இறைவன் கருணையால் உயிர்க்குற்றங்களை நீக்கிச் சிவமாகிய தன்னோடு சேர்க்க எண்ணிப் படிமுறையில் அறிவு செயல் விளங்க வினைக்கீடான போகங்களைக் கொடுத்துப் பிறப்பிறப்பிலே செலுத்திப் போக்குவரவு செய்யும் நிலை, பேத்தத்தில் சகல நிலை எனப்படும்.

பிறகு பக்குவம் பார்த்துக் குருவினால் ஞானோபதேசம் செய்யப் பெற்றால் சுத்தமுத்திசாதன நிலை எனப்படும். அருளுபதேசம் பெற்ற முறையில் ஞானக்கண்ணில் சிந்தை நாடி அவனுடன் ஏகனாகி இறை பணியில் நிற்க மும்மல பாசமும் நீங்கிச் சிவப்பேறு அடைதல் சுத்த முத்திசாத்திய நிலை எனப்படும். இதுவே ஜீவன்முத்திநிலை இந் நிலை வழுவாது நிற்கக் குரு லிங்க சங்கம வழிபாடு வேண்டும். சகல பெத்த நிலையிலே காமிய வழிபாடும், சுத்த முத்தி சாதன நிலையிலே நிஷ்காமிய வழிபாடும், சுத்த முத்தி சாத்திய (ஜீவன் முத்தி) நிலையிலே சகச வழிபாடும் வேண்டும். ஆகவே உயிர்கள் அநாதி கேவல நிலையிலிருந்து சகல நிலைக்கு வந்தது தொடங்கி, ஜீவன், முத்தி சகச நிலையில் பிராரத்த உடல் நீங்கிப் போதம் ஒடுங்கித் திருவருள் புக்குச் சிவபரம்பொருளோடு இரண்டறக் கலந்த சாயுச்சியநிலைவரையிலும், 'மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தமாம்' என "ஆலயந்தொழுவது சாலவும் நன்று" என்ற நன்மையைக் கடைப்பிடித்தே வாழவேண்டும். இதுவே மெய்கண்டான் சித்தாந்த வழிபாடாகும்.

## 4. மகாநாட்டின் அவசியமும் பயனும்.

முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள் மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை யவனுடைய ஆரூர் கேட்டாள் பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள் அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தை
தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே.

உலகவாழ்வில் ஒவ்வொரு துறையிலும் நடைபெற வேண்டிய விதிகள் உள்ளன. அவைகள் காலத்திற் கேற்ப மாறுதலடைதலும் சகசமே. ஆனல் மிக அவசியமாய்க் கவனிக்கத் தக்கது ஒன்று உண்டு. அதாவது ஒரு கருத்தைப் பல செயற்கை வழியில் நிறைவேறச் செய்யலாம். நிறைவேற்றும் செயல்முறைகள் மாத்திரம் பழையன கழிதலும், புதியன புகுதலுமாய்க் காலத்திற்கேற்றபடி அமைத்துக்கொள்ளலாம். உண்மைக் கொள்கை என்றும் ஒரு தன்மையதே. உதாரணமாக 'ஒருவன் ஓர் உபகாரம் செய்தால் அதற்கு நன்றிபாராட்டவேண்டும்' என்ற விதிமுறை என்றும் யாவர்க்கும் ஒப்பமுடிந்த உண்மைக்கொள்கையே. ஆனல் அதை வெளிக்காட்டும் முறை பலதிறமுடையதாகலாம். அதாவது வாயினல் வாழ்த்தல், காயத்தினல் பணிசெய்தல், மனத்தினல் நன்மை உண்டாக வேண்டுமென்று சிந்தித்துக் கடவுளை வேண்டல், தக்கபடி பொருளுதவி செய்தல் முதலானவை; இன்னும் சமயோசிதம்போல் செய்யலாம். இச்செயல்கள் எல்லாவற்றினுடைய நோக்கமும் செய்ந்நன்றி பாராட்டல் என்னும் ஒரே சிறப்பான கருத்தைக் கடைப்பிடித்துள்ள தன்மையான கொள்கையே. அதுபோலவே தொன்றுதொட்டு, குரு லிங்க சங்கம பக்தியுடையவராய்க் குருசந்தானபீடங்களுக்கு வந்தனை வழிபாடு செய்து பக்குவத்திற் கேற்ப மக்கள் அருளுபதேசம் பெற்று அவ்வாறே சாதித்து விடுபேறு எய்தினர். காலவளவில் பெரும்பாலான மக்களிடையே பக்தி குறைந்தது. ஆராய்ச்சி அறிவு மேலிட்டது. பக்தி, மூடபக்தி என்று குறைகூறப்பட்டது.

(ஞானத்தால்) மூடுபக்தி என்பது அப்படிமாறி வழங்கலாயிற்று எனலாம். முற்பிறவி பலவற்றிற் கற்ற கல்வியின்பயனகிய பக்தி இப் பிறவியிற் பழுத்தால் அதை மூடபக்தி என்பது எவ்வளவு அறியாமை? 'ஒருவன் ஒரு பிறவியில் கற்ற கல்வி எழு பிறவிகளிலும் பயன் தரும்.' என்றமையால் அக்கல்வியின் பயனக, எடுத்த பிறப்பில் பக்தி வரக் காண்கிறோம். இதற்குத் தக்கசான்று வேடர்குல பக்த சிகாமணியாகிய கலை மலிந்த சீர் நம்பி கண்ணப்ப நாயனரே ஆவர். அவரைப் போற்றாத சமய குரவர் சந்தான குரவர்கள் இல்லை. முற்றத் துறந்த முழுமுனிவரும் இடைமருதார் ஈசனிடம் அருளுபதேசம் பெற்றவருமான திருவெண்காட்டு அடிகளாகிய பட்டினத்தாரும் "நாள் ஆறில் கண் இடந்து அப்ப வல்லேன் அல்லன்" எனப் போற்றியுள்ளார். மணிவாசகப் பெருமானும் கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு தமக்கு இல்லையே என்று இரங்கினர்.

கற்று உணர்தலின் பயன் பக்தியே. ஆனல், கற்பவைகளையும் கற்கும் முறை தெரிந்து கற்று அவ்வழியில் நிற்றலும் அவசியம் வேண்டும். அறிவு நூல்களில் உலகியல், கடவுளியல் என இருவகை. உலகியலில் பசுவும் பாசமும், கடவுளியலில் பதியுமாக மூவகை இயற்கையுடைய உண்மைப் பொருள்கள் அநாதியாக என்றும் உள்ளனவாயிருக்கின்றன. ஆனல் கால பேதத்தினல், நம்பிக்கைக் குறைவால் முறை தெரியாமல், மூவகை இயற்கைப் பொருள்களில் ஒருவகையான அறிவற்ற ஜடப்பொருள்களின் இயற்கையை மட்டும் நுணுகி ஆராய்ந்து விஞ்ஞான கலைஜடஞானி களாய்ப் பலர் பட்டமும் பெற்று விடுகிறார்கள். அச்சடப்பொருளில் இன்றியமையாததாயும், மக்கள் ஆராய்ச்சி அறிவுக்குப் புலப்படாததாயும், ஆன்றோரால் அநுபூதியிற்கண்ட சக்திப் பொருளுமாகிய கடவுள் என்னும் பதிப்பொருளை அறியமாட்டாத மயக்கமுடையராய் உலகியற் சிற்றின்பமே முடிந்த முடிவான நம்பியுள்ளாராய்ப் பலர் வாழ்வதைப் பிரத்தியட்சமாய்க் காண்கிறோம். மக்களுக்கு இவ்வாறு கூடியதும் நிலையற்றதும் ஆகிய பொய் வாழ்விற்குரிய எண்ணங்களைப் பொய்யெனக் காட்டிக்கழித்துப் பதிப்பொருள் எண்ணத்தை மெய்யாகப் பதிப்பித்து அம் மக்களைப் பேரின்ப வாழ்வுக்குட் செலுத்தும் அருள் நோக்கங் கொண்டு, அவ் வாழ்வைத் தாமே தம் சுவாநுபூதியிற் கண்டார் ஸ்ரீ மெய்கண்டார். கண்ட அவ்வநுபூதியிலே பொது, சிறப்பு என இரு வகைப் பிரிவாகவும், அப்பொது பிரமாணம், இலக்கணம் எனவும், சிறப்பு சாதனம், பயன் எனவும் பன்னிரண்டு சூத்திரங்களால் ஒப்புயர்வற்ற 'சிவஞானபோதம்' என்னும் முழுமுதற் றமிழ்நூலை இயற்றியருளினர் குருராய வள்ளலாகிய மெய்கண்டார். அந்த ஞானசாரியர் பெயரையாவது முதலிற் கேட்டுப் பிறகு அவர் அருளிய நூல்வழி சித்தாந்தத்தைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடி வீடு பேருகிய அடி சேர் அருள்முத்திப் பயனடைய அவசியமான சிறந்த ஒரு சாதனமாகப் பெருமக்களுக்கு அறிவுறுத்த வேண்டியே இம்மகாநாடு கூட்டப்பட்டது.

இம்முறையினையே, ஆண்டான் அடிமைத் திறப்பாடாக, உயிரை ஒரு கற்புடைய நாயகியாகவும், சிவபரம் பொருளைப் பதியாயுள்ள ஒரு நாயகனுகவும் கற்பித்து, நாயகி நாயகனை வழிபடுமுறையில் வைத்து விளக்கிக் காட்டி நாயகியானவள் நாயகனின் பெயரை முதலில் கேட்டுப் பிறகு அவனுடைய குணம், ரூபம், தொழில் முதலானவைகளையும் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து, தற்போதமிழந்து, அவனடிக்கு ஆட்படுதல் ஆகிய

திருவருள் வசமாய்ச் சிவபோகம் துய்த்தனன் என்பதை, அப்பர் சுவாமிகள் மேலே கூறிய, "முன்னம் அவன்" என்ற திருத்தாண்டகத்தினால் அருளுபதேசஞ் செய்துள்ளார்கள்.

## 5. மஹா சன்னிதானத்தின் திருவருள் நோக்கமும் திருவருட் பாங்கும்.

இப்போது இங்கு இத்தருமை ஆதீன 24-வது குருமூர்த்தியாக எழுந்தருளியுள்ள ஸ்ரீ-ல-ஸ்ரீ ஷண்முக தேசிக ஞானசம்பந்த மகா சந்நிதானம் கயிலையில் கல்லால் நீழல் மலைவு இல்லாராய் அமர்ந்துள்ள தென்முகக் கடவுள் அருளிய நந்தி மரபு மெய்கண்டான் வழி பின் தோன்றல்களில் நாற்பதாவது தலைமுறை அருட்குரவர் ஆவார். நாற்பது என்னும் இவ்வெண்ணிக்கையில் அமர்ந்துள்ளவர்களாக இருப்பதில் ஒரு அற்புதத் திருவருட் குறிப்பு காணக்கிடக்கிறது. அதாவது, வினைவழி உற்ற ஆக்கையின் உறுபொருளாவது நறுமலர் எழுதரு நாற்றம் போல் பற்றலாவதோர் நிலையிலாப் பரம் பொருளாகிய அத்தன், ஆண்டு தன் அடியரிற் கூட்டிய அதிசயம் கண்டாமே என்பதே.

என்னவெனில், மெய்கண்டான் சித்தாந்தத்தை விளக்கும் சைவ சமயத்திற் கொள்ளப்படும் தத்துவங்களின் எண்ணிக்கை முப்பத்தாறு என்ப. அம் முடிவைக் கடந்த நான்காவது (நாற்பதாவது) நிலையில் இருப்பதன் கருத்து சமயகுரவர் நால்வர், சந்தான குரவர் நால்வர் இவர்கள் நிலையாகிய ஜீவன் முத்தி, ஞான நிலையில் ஞானத்தில் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பனவும் நான்கு.

இன்னும், அவர்களுடைய அருள் நூல்களையும் உலகத்துக்குப் பயன் படுத்தும் முறையில் இம் மகாநாட்டைக் கூட்டியருளியதும் மிகச் சிறப்புடையதே. இக்காலத்திற் கேற்ற முறையில் இவைகளை யெல்லாம் ஒருங்கே விளங்கச் சிவபெருமான்பால் தென்றமிழ் இலக்கணங் கேட்ட அகத்திய முனிவருக்கு அருளுபதேசஞ் செய்தவரும், பிரமனுக்கு பிரணவப் பொருள் உபதேசித்தவரும், சிவகுருபரரும், கலியுக வரதருமாகிய சுவாமிநாத ஷண்முகக் கடவுளே சற்குரு ஷண்முக தேசிகராய் மானிடச் சட்டை சாத்திக் காசினிக்கே தோன்றிச் சென்ற காலத்தின் பழுதிலாத் திறனும், இனி எதிர்காலத்துச் சிறப்புமாகிய ஓர் அற்புதத் திருவுருவாய்

அந்தம் ஆதி அற்ற சிவமூலபண்டாரத் திருவருளே கண்ணாகக் கொண்டு அத்திருவருளை விழியால் அளிக்கும் ஞான விநோதராய் வீற்றிருக்கும் கயிலைக் காட்சி என்றும் அடியார் மனத்தைக் கொள்ளைகொண்டு மகிழ்விப்பதோர் அதிசயம் எனக் கண்டாமே.

இனி, "யாம் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறுக" என அன்னார் திருவுளப் பாங்கின்படி இம்மகாநாடு இனிதே நிறைவேறி அடியார்கள் இன்புறுமாறு அவனருளாலே அவன்றாள் வணங்கிப் பிரார்த்திக்கிறேன்,

உடையாள் உன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும் இருப்ப தானால் அடியேன் உன்
அடியார் நடுவு ளிருக்கும் அருளைப் புரியாய் பொன்னம் பலத்தெம்
முடியா முதலே என்கருத்து முடியும் வண்ணம் முன்னின்றே.

திருச்சிற்றம்பலம்

திரு நெறித் தமிழ்மறை ஓதப்பெற்றது. பிறகு திருவாளர்கள் இராவ்பகதூர் C. M. இராமச்சந்திரஞ் செட்டியாரவர்களும், K. அரங்கசாமி முதலியாரவர்களும், இக்காலத்தில் சமயச் சார்பான மகாநாடுகள் கூட்டுவதன் அவசியத்தையும் அவற்றின் பயனையும் பற்றிக் கீழ்க் காணுமாறு சார்புரை மொழிந்தார்கள்.

## இராவ்பகதூர் C. M. திரு. இராமச்சந்திரஞ் செட்டியாரவர்கள், B. A., B. L., பேசியதன் சுருக்கம்.

திருச்சிற்றம்பலம்.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

**மெய்யன்பர்களே! தாய்மார்களே!!**

என்னையும் எனது நண்பர் திரு. நாராயணசாமிப்பிள்ளை அவர்களையும் இம்மகாநாட்டிற்கு வரவழைத்ததற்காக நன்றி கூறுகிறேம். எனது நண்பர் இம்மகாநாட்டிற்கு வரவேண்டுமென்று ஆவலுடன் இருந்தார். ஆனல் தேக அசௌகரியத்தினல் வர முடியவில்லை. மகாநாடு

நன்றாக நடைபெறவேண்டுமென்ற ஆசியை என் மூலம் சொல்லியனுப்பி இருக்கின்றார். மேலும் என்னை இம் மகாநாட்டிற்கு அழைத்ததன்றி இதன் நடவடிக்கைகளிலும் பங்கெடுத்துக்கொள்ள வசதி அளித்ததற்கும் நான் எனது நன்றியைத் தெரியப்படுத்திக் கொள்கிறேன்.

மகாநாடுகள் கூட்டுவது மிகவும் அவசியமானது. எந்தச் செயலைப் பற்றியும் ஒருவன் தனியாக ஆலோசிப்பதைக் காட்டிலும் பலபேர் சேர்ந்து ஆலோசிப்பதனால் பலன் அதிகமாகக் கிடைக்கும். எல்லா முறைகளிலும் மகாநாட்டு மூலம் ஆலோசனை செய்யும் முறையே மேலானது. இதன் பலனை எல்லா நாட்டார்களும் அறிந்திருக்கிறார்கள். நாகரிகம் பெற்ற நாடுகள் மாத்திரமின்றி நாகரிகம் பெறாதவர்களுங்கூட கூட்டங்கள் கூடியே தீர்மானம் செய்கிறார்கள். இக்காலம்மாத்திரமோ? எக்காலத்திலும் கூட்ட ஆலோசனை இருந்துவந்தது. சமய-ஆலோசனை மாத்திரமல்ல, அரசியல் ஆலோசனை, வாணிப ஆலோசனை, தொழிலாளர் ஆலோசனை முதலியவைகள் எக்காலமுமுண்டு. எந்தக் கொடுங்கோல் மன்னனும் மந்திரி சபையின் உதவியின்றிக் காரியம் செய்ததில்லை. மேலும் சமயச் சார்பிலும் மகாநாடுகளும் நடைபெற்றிருக்கின்றன. ஈசனே ஒரு சபைக்குப் பதியானால் (சபாபதி) வேறு என்ன சான்று வேண்டும்? ஆகவே எக்காரியத்தையும் மகாநாடு மூலமாக ஆலோசிப்பதே சிறந்தது.

உலக சரித்திரத்திலும் இந்த வழக்கத்தைக் கண்டிருக்கிறோம். பௌத்தர்கள் தங்கள் கொள்கைகளை வரையறுத்துக் கொள்ளுவதற்காக இரண்டு, மூன்று பெருங்கூட்டங்கள் கூட்டினார்கள். அக்கூட்டங்களில் தான் தங்கள் மதக் கொள்கைகளை உறுதிப்படுத்தப் பிடகநூலை வெளியிட்டார்கள். கிரிஸ்தவர்களும் பல தடவைகளில் சைனாட் என்ற மகா கூட்டங்களை கூட்டித் தங்கள் கொள்கைகளை வரையறுத்துக்கொண்டார்கள். நமது நாட்டிலும் முன் காலத்தில் பெரிய முனிவர் கூட்டங்களில் சமயக் கொள்கைகள் ஸ்திரப்படுத்தப்பட்டன. ஓர் ஆசிரியன் தனது நூலை அரங்கேற்ற வேண்டுமென்றால் அதை ஒரு புலவர் சபையின் முன்னர் படித்து அவர்கள் சம்மதத்தின் பேரில்தான் வெளியிட வேண்டும். ஆகவே சமயத்தைப் பரப்புதற்கு மகாநாடு அவசியமல்லவா?

இந்த மகாநாடு முதல் முதலாக ஒரு மடத்தின் சார்பில் கூட்டப் பட்டுள்ளது. இதன் கொள்கை மெய்கண்டார் அருளிய சிவஞானபோதத்தின் உண்மைகளை ஆராய்ந்து பல பண்டிதர்கள் மூலமாக அவைகளை வெளியிடு

தலே ஆகும். இதற்கு முன்பு இதேகருத்தைக்கொண்டு வேறு மகாநாடுகள் நடைபெற்றிருக்கின்றன. ஆனால் அவைகளைப் பொதுமக்களும் சங்கத்தார் களுமே நடத்திவைத்தார்கள். சமய முன்னேற்றத்திற்காக ஏற்பட்டுள்ள மடாலயத்தார்கள் சென்ற ஒன்று இரண்டு நூற்றாண்டுகளாக இவ்விதக் கைங்கரியத்தில் ஈடுபடவில்லை. ஆனால் நாம் செய்த புண்ணிய வசத்தினால் இவ்வருமையான மகாநாடு கூட்டப்பட்டுள்ளது. இதற்கு மூலாதார மானது மகாசந்நிதானம் அவர்கள் எடுத்து ஆண்டிருக்கும் ஒப்பற்ற அருள்நோக்கமே. இக்காலத்தில் சமய உண்மை நமது மக்களுக்கு இருக்கின்றது. அதனை அறிவிக்கவேண்டும் என்ற ஆர்வத்துடன் சைவ சமயத்தில் சிறந்ததான சிவஞான போதத்தை அநேக பண்டிதர்களுக்கு வகுத்துக் கொடுத்து அவர்களால் தற்கால முறைப்படி ஆராய்ச்சிகள் செய்வித்து அவர்களை இங்கே வரவழைத்துச் சொற்பொழிவுகளை நிகழ்த்தச்செய்திருப்பது சைவ உலகமும், தமிழ் உலகமும் போற்றத் தக்க அருஞ்செயல் ஆகும். இன்று முதல் புலவர் பெருமக்களுடைய ஆராய்ச்சி உரைகளை இங்கு வந்து கூடியிருக்கும் ஆயிரக்கணக்கான மக்கள் அறிந்து சிவஞானம் பெறுவார்கள். இச்சொற்பொழிவுகள் அச்சுவாகனம் ஏறுமாகையால் இங்கு வராதவர்களும் அவைகளைப் படித்து ஞானம் பெறுவார்கள்.

இத்தகைய மகா நாடுகள் அவசியம் என்று கண்டோம். இக் காலத்தில் அவைகள் மிகவும் அவசியம் எனச் சொல்லவேண்டும். நமது மக்களிடம் சமயப்பற்று குறைந்திருக்கின்றது. சமய உண்மைகளை நமது மக்கள் அறியாமல் இருப்பதால் நாஸ்தீகத்திற்கும் ஏனைய சமயங் கட்கும் செல்லுகிறார்கள். நமது சமயத்தின் உண்மைச் சிறப்பை அறிந்தால் அவ்விதம் செல்வார்களா ? இவ்வித மகாநாட்டிற்கு வருகிறவர்கள் இதன் அவசியத்தை அறிவார்கள். சமய நிலையங்கள் சமயப்பிரசாரத்தை மேற்கொள்ளவேண்டியது அவசியம். சமயக் குறிப்புகளைப் பற்றிப் பொதுமக்களுக்குத் தெரியாவிட்டாலும் ஆலயப் பணியாளருக்குந் தெரிவதில்லை. நேற்று அருகில் உள்ள மூவலூருக்குச் சென்றேன். அவ்வூர்ப் பெயரின் ஆதாரத்தைக் கேட்டேன். ஒருவருக்கும் தெரியவில்லை. அர்ச்சகர்களுக்கும் தெரியாது. தேவாரத்தில் மாத்திரமே அன்றித் திருக்கோவையாரிலும் அப்பெயர் பிரயோகப் பட்டிருப்பதை அவர்கள் அறியவில்லை. இப்படி இருக்கையில் சைவப்பிரசாரம் மிகவும் அவசியம் அல்லவா ?

இவ்விதம் செயற்கரிய வேலையாகிய ஒருமகாநாட்டைக் கூட்டுவ தற்கு அளவிறந்த ஆர்வங்கொண்டு இதனை வெற்றிகரமாக நடத்த முன்

வந்திருக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் அருஞ்செயலைத் தமிழ் மக்கள் எல்லோரும் பாராட்டவேண்டும். இதனைப் பின்பற்றிப் பலமகாநாடுகளை நடத்த வேறு சமய நிலையங்களும் முன்வரவேண்டும். என்னை இம் மகாநாட்டிற்கு அழைத்ததற்காக மீண்டும் ஒருமுறை என் நன்றியைச் செலுத்துகின்றேன்.

### திரு. அரங்கசாமி முதலியார் அவர்கள்:—

இம் மகாநாட்டின் அமைச்சராகிய ஸ்ரீ மௌன. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் சமய சம்பந்தமான மகாநாடுகளின் அவசியத்தையும், பயனையும் பற்றிச் சொல்லும்படி எனக்குக் கட்டளை யிட்டுள்ளார்கள்.

மகாநாட்டின் அவசியம் வேறு, பயன் வேறல்ல. ஓர் காரியம் பயனைத் தந்தால் அக்காரியத்தை அவசியமென்று சொல்லுகிறோம். பயனில்லையேல் அவசியமில்லை. இம்மகாநாட்டின் பயனைப் பற்றி அதிகம் சொல்லவேண்டியது அனாவசியமே. இங்குள்ள இத்தனை மக்களும் அவ்வித பயனைப் பற்றி ஐயமுற்றிருந்தால் பொருட்செலவையும் மெய் வருத்தத்தையும் பாராது பெருந்திரளாக இங்கு வந்திருப்பார்களா? ஆகவே, தமிழ் நாட்டிலுள்ள எல்லா பாகங்களிலிருந்தும் என்னைப் போன்றவர்கள் இங்கு திரண்டு வந்திருப்பதே அதற்குச் சான்றாகும்.

இம்மகாநாட்டில் அறிவூட்ட வந்திருப்பவர் சிலர்; அதைப்பெற வந்திருப்பவர் பலர். என்னைப் போன்ற சிற்றறிவுடையவர்களுக்குள்ள ஐயங்களை இம்மகாநாட்டில் உபந்நியாசம் செய்ய வந்திருக்கும் கல்வி யொழுக்கங்களில் முதிர்ந்த பெரியோர்கள் தீர்ப்பார்களென்பதில் ஐயமில்லை.

உலகத்தில் 150 கோடி மக்கள் வசிக்கின்றனர். அவர்களில் தமிழ் நாட்டில் வசிப்பவர் 2½ கோடிக்குக் குறைவே. "தென்னாடுடைய சிவன் என்னாட்டார்க்கு மிறைவன்" என்று மாணிக்கவாசகர் சொல் லியபடி எல்லா வுயிர்களுக்கும் கடவுள் ஒன்றே. சைவ சமயம் உட்பட எந்தச் சமயத்தின் கொள்கையும் யாவரிடத்தும் அன்பு பரவவேண்டு மென்பது தானே? உலகத்தில் பெரும்பாலாரால் தழுவப்பட்ட சமயங் களைச் சிறிது சிந்திப்போம். கிருஸ்து மதத்தைத் தழுவும் ஐரோப்பாவில் நடக்கும் பெரும் போரில் கோடிக்கணக்கான மக்கள் கொன்றும் கொல்லப்பட்டும் வருகிறார்கள். இருகக்ஷிக்காரரும் கடவுள் தங்களுக்கு

உதவிபுரிகிறாரென்றே கூறுகிறார்கள். பௌத்த சமயத்தைத் தழுவும் ஜப்பானியர், சீனர் ஆகிய இருநாட்டாரும் வெகு வருடங்களாகப் போர் புரிவதால் லக்ஷக்கணக்கான மக்கள் சேதமாகி வருகின்றனர். காரணம் என்ன? இச்சமயங்களது கொள்கைகளில் குற்றமொன்று மில்லை. கொள்கைப்படி நடக்கவில்லை என்பதுதான். சைவசமயத்தின் தாயக மாகிய தமிழ் நாட்டை நோக்குவோம். இச்சமயம் அன்பையே அடிப் படியாக உடையது. கடவுள் அன்புமயமென்கிறோம்.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்" என்ற திருமூலர் வாக்கைப் படிக்காத சைவரில்லை. சொல்லாத பிறருஞ் சைவரில்லை. ஆனால், "சொல்லுதல் யார்க்கும் எளிய, அரியவாம் சொல்லிய வண்ணஞ் செயல்" என்ற பொய்யா மொழிப்படி கொள்கையை அனுஷ்டானத்திலே கொண்டுவருவது தானே அரிதாகவிருக்கிறது. தமிழ் நாட்டில் நீர்வளமில்லாதிருக்கும் ஆயிரக்கணக்கான கிராமங் களில் பொதுக்கிணற்றில் தாழ்ந்த வகுப்பினராகிய ஒரு சாரார் நீர் எடுக்கக் கூடாதென்று தடுப்போர் பெரும்பாலும் திருநீறணியும் சைவர்களே.

அன்பே வுருவாகிய ஈசன்அமர்ந்திருக்கும் கோயிலில் ஒரேசைவ சமயத்தைத்தழுவும் பல பிறப்பினர் வெவ்வேறு எல்லைக்குட்படுத்தப் பட்டிருக்கும் நிலைமையைப்பற்றி நான் இங்கு விரிவாகச் சொல்ல வேண்டியதில்லை. இந்நிலைமைகளுக்கு சைவ சித்தாந்தமாவது சைவ சமய மாவது இடந்தருகிறதா? சைவ சித்தாந்த சாரமாகிய மெய்கண்டார் நூலின் கடையிரண்டு சூத்திரங்களில் காணும் "அடியார் அன்பு" "மலிந்த நேயம்" என்றதன் உண்மைப்பொருளென்ன? இறுதிச் சூத் திரத்தில் சொல்லப்பட்ட "ஆலயம்" தற்காலத்தில் என்ன நிலையி லிருக்கிறது? தமிழ்நாட்டில் ஆலயங்கள் நிறைந்திருந்தும், அங்கு சென்று வழிபடுவோர் மிகக் குறைந்திருப்பதற்குக் காரணமென்ன? ஆலய அமைப்பில் குறைவுண்டா? ஆலயங்களில் பூசையும், அலங்காரமும் கிரமமாக நடந்து வருகின்றனவா? சர்க்காரில் 20 ரூபாய் சம்பளமுள்ள அட்டெண்டர் (Attender) வேலைக்கு 8 வருஷம் படித்து மத்தியதரக் கல்விச் சாலை பரீக்ஷை தேறியிருக்க வேண்டுமென்றால், கோயில் பூசைத் தொழிலுக்கு இவ்விதமான கட்டுப்பாடு ஒன்றுமே யில்லாம லிருக்க லாமா?

இவ்வித ஐயங்களைத் தீர்த்துக்கொள்ள வந்திருக்கும் என்னைப் போன்றவர்களுக்கு இங்கு வந்துள்ள பெரியோர்கள் சைவ சித்தாந்த

சாத்திரத்தை ஆராய்ச்சி செய்து அவ்வாராய்ச்சியின் பயனை அளிக்க நாங்கள் பெற்றுப் பயனடைவோமென்பது உறுதி.

அடுத்தபடியாக சித்தாந்த சைவவிழாவிடைப் பிரதிகள் அவையோர்கட்கு வழங்கப்பட்டது.

தலைவர் வரவேற்பு:- காசிவாசி **சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார் அவர்கள்** அன்றைய நிகழ்ச்சிகளுக்குத் தலைமை பூண்டார்கள். அவர்கட்கு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் திருவுளப்படி ஸ்ரீ அருணந்தித் தம்பிரானவர்கள் அடியிற்கண்ட வரவேற்புப் பத்திரத்தை வாசித்து அளித்தார்கள்.

சைவமுந் தமிழுந் தனிப்பொரு ளுண்மையுந்
தெய்வத் திருவருட் டிறத்தினாற் றிகழ்ந்திடும்
தருமையம் பதிவாழ் சற்குரு தேசிகன்
அருமையை யகில மறிந்ததே யாகும்
கயிலைப் பரம்பரை கைகண்ட சித்தி
பயிலப் பயிலப் பழம்பொரு ளருளுங்
குருஞான சம்பந்தக் கோமான் குரைகழல்
வருஞான சம்பந்த வழியினால் வாழ்த்திடும்
இருபத்து நாலா யெழுந்தரு ளெங்கள்
குருபத்தி மிக்க கொள்கையைப் பெருக்கிடுஞ்
சண்முக தேசிக சற்குரு நாதன்
உண்முகக் கொள்கை உலகெலாங் கண்டிட
மெய்கண்ட சித்தாந்த மெய்ம்மகா நாட்டைக்
கைகண் டிடவே கருத்துட னருளினன்
இப்பெரு விழாவை ஒப்பவே நடத்தத்
திப்பிய தலைவரைத் தெரிந்தழைத் தனம்யாம்
அன்னவர் யாரெனிற் பன்னகர் புகழ்ந்திடுஞ்
சொன்னகற் கழனிசூழ் நன்னகர்ப் பழனி
ஆண்டவ னடியவர்க் கருள்தின மளித்திடும்
பூண்டநற் பெரும்பதி புண்ணியத் தலத்தில்
உரியவே தாகம உயர்பாட சாலையி
லரியநற் றலைமையி லாசிரிய ராய்வருங்
காசி வாசி ஈசான சிவாசாரியார்
பேசிடுஞ் சிவனையுட் பெற்றநற் பெற்றியார்

சற்குணம் பெற்றவர் சாத்திரங் கற்றவர்
நிற்குணன் பேரருள் நித்தமும் பெற்றவர்
மாதவம் பெற்றநன் மகிழ்ச்சியோய் வருக!
ஆதவ னெனத்திக ழறிவுளோய் வருக!
தருமைமெய் கண்டநற் சைவமா நாட்டின்
அருமைத் தலைவராய் அமர்ந்திட வருக!
வருக! வருக!! சீர் வாழ்த்திட வருக!!!
வருக! நின் வரவு நல்வர வாகவே!!.

சுபம்.

இவ்விதழ்கள் அவையினர்கட்கும் வழங்கப் பெற்றன.

வரவேற்புக்கு மறுமொழியாகவும் வடமொழிச் சிவஞானபோதம், தென்மொழிச் சிவஞானபோதம் இவைபற்றிய ஆசங்கை தீரவும் தலைவர் அவர்கள் கீழ்க்காணுமாறு தலைமையுரை யாற்றினர்கள்.

நன்றுடை யானைத் தீயதில் லானை நரைவெள்ளே
றொன்றுடை யானை யுமையொரு பாக முடையானைச்
சென்றடை யாத திருவுடை யானைச் சிராப் பள்ளிக்
குன்றுடை யானைக் கூறவென் னுள்ளங் குளிருமே.

நேச நிறைந்த வுள்ளத்தா னீல நிறைந்த மணிகண்டத்
தீச னடியார் பெருமையினை யெல்லா வுயிருந் தொழவெடுத்துத்
தேச முய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பணித்த திருவாளன்
வாச மலர்மென் கழல்வணங்க வந்த பிறப்பை வணங்குவாம்.

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
    பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவிரு தயகமல முகைக ளெல்லாங்
    கண்டிறப்பக் காசினிமேல் வந்தவருட் கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணை மேவும்
    மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
    பொற்பாத மெப்போதும் போற்றல் செய்வாம்.

திருச்சிற்றம்பலம்

உலகில் காணப்படும் உயிர்கள் அண்டசம் (முட்டையிற்றோன்று வன), சுவேதசம் (வேர்வையிற் றோன்றுவன), உற்பீசம் (வித்து, வேர்

முதலியவைகளினின்றுந் தோன்றுவன), சராயுசம் (கருப்பையிற்றோன்றுவன) என நால்வகைப்பட்டுத் தாவரம், நீர்வாழ்வன, ஊர்வன, பறவை, விலங்கு, மனிதர், தேவர் என்னும் எழுவகைப் பிறவிப் பேதமுடையன. இவ்வெல்லா வுயிர்களுக்கும் உண்டி, உறக்கம், பயம், இன்பம் உரியன; ஆயினும் இன்பத்தைத் தெரிந்துணர்ந்து சாதனத்தால் பெறக்கூடிய உயிர்கள் மக்களும் தேவர்களுமே. அவற்றுள்ளும் தேவர் முதலியோர் உயர்ந்த பதவிகளைப் பெறுவதற்குரிய சாதனங்களைச் செய்துகொள்ளுதற்கு மக்கட் பிறவியே உரிமையுடையது. இம்மக்கள் துன்பத்தை விடுத்து இன்பம் பெறுதற்கு நாடி முயன்று நிலைபேறுள இன்பம் இது இதுவென்று தாம் தாம் அறிந்த அளவில் முடிபு கட்டினர்; இங்ஙனமே மக்களுட் சிறந்தோரும், முனிவரும், தேவரும், தேவரின் மேலாய நிலையினரும் நிலைபேறுகிய இன்பமும் அது பெறுதற்குரிய நெறியும் தாம் தாம் அறிந்த அளவு ஆராய்ந்து முடிவு செய்தனர். அம்முடிபுகளே சமயங்களாம்.

அவைகளுள் மக்களுட் சிறந்தோரால் அமைக்கப்பெற்ற சமயங்கள் உலகாயதம், பௌத்தம், ஆருகதம் என்னும் பழைய சமயங்களும், பிற்காலத்துத் தோன்றியவைகளும், இக்காலத்துத் தோன்றுகின்றனவுமாம். இனி முனிவர் முதலியவர்களால் அமைக்கப்பெற்ற சமயங்கள் மீமாம்சை, சாங்கியம், யோகம், வேதாந்தம் முதலிய வைதிக சமயங்களாம். பாஞ்சராத்திரம், இரணிய கருப்பம், பாசுபதம் முதலாயின தேவர்களாலும் அவரின் மேலாகிய உருத்திரர்களாலும் அமைக்கப்பெற்ற சமயங்களாம்.

இனி முழுமுதற்கடவுளாகிய பரமசிவனால் அருளிச் செய்யப்பட்ட சமயம் சைவமாம். அது சிவனால் ஆக்கப்பெற்றமையின் அப்பெயர்பெற்றது.

சமய நூல்களெல்லாம் கூறும் பொருள்கள் இறைவனும், இறைவனுலியம்புநூலும், அளவைகளும், பொருளியல்பும், வேண்டுஞ் செய்தி முறைமைகளும், பெத்தமும், முத்தியும் என்னும் இவைகளேயாம். இவைகளை ஒவ்வொரு சமயநூல்களும் வெவ்வேறாகக் கூறும். நம்முடைய சைவத்துக்குரிய இறைவன் சிவபெருமானே என்பது வெளிப்படை. அவ்விறைவனியம்பிய நூல்கள் வேதசிவாகமங்களே; அளவை, பொருள்களையறியும் ஆன்ம சிற்சத்தியே; பொருள்கள், பதி பசு பாசங்களே; வேண்டுஞ் செய்தி முறைமைகள், சரியை கிரியா யோக ஞானங்களே; பெத்தமாவது ஆன்மஞானம் மும்மலங்களால் மறைப்புண்டு கிடத்தலே; ஆன்மா மும்மலங்களும் நீங்கப்பெற்றுச் சிவானந்தம் அனுபவிக்கப்பெறுதலே முத்தியின்பமாம். இது,

"படிக்கு நூல்கள் சிவாகம மம்பசு பாச மோடு பதித்திறம்
எடுத்தி யம்புவ தீசன் வார்கழ லேத்தி டுந்தொழி லென்றுமே
விடுத்தி டும்பொருள் காம மாதிகள் வேண்டி டும்பொரு ளீண்டருள்
முடித்து மும்மலம் விட்டு நின்மல னோடு நின்றிடல் முத்தியே"

என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தாலும் உணரலாம்.

இனி நம் சமயத்துக்குரிய இறைவனூல் இரண்டனுள் வேதத்தின் பொருள், சைவாசாரியர்பால் சிவாகமங்களை முறையே ஓதியுணர்ந்தார்க்கன்றி ஏனையோர் அறியும் பான்மைத்தன்று. அது,

"இருட்பெருங் கடலுள் யாமத் தெறிமருத் திடைப்பட் டாங்குப்
பொருட்பெருங் கடலாம் வேதம் புடைதொறு மலைப்ப விந்நாள்
அருட்பெருங் கடலே யெய்த்தே மமைந்தில துணர்வி யாங்கள்
மருட்பெருங் கடலி னீங்கும் வண்ணமொன் றருடி யென்றார்"

என வேதமுழுவது மோதியுணர்ந்த பிரமபுத்திரராகிய முனிவர் கூற்றாக வருங் கந்தபுராணச் செய்யுளாலும்,

"ஞான சம்பந்த ஞான தேசிக
நல்லருட் டிறத்தா னம்பி நீயே
பல்லுயிர்த் தொகுதியும் பயன்கொண் டுய்கெனக்
குடிலை யென்னுந் தடவய லுப்பண்
அருள்வித் திட்டுக் கருணைநீர் பாய்ச்சி
வேத மென்னும் பாதபம் வளர்த்தனை
பாதப மதனிற் படுபயன் பலவே, அவற்றுள்,
இலைகொண் டுவந்தனர் பலரே; யிலையொரீஇத்
தளிர்கொண் டுவந்தனர் பலரே; தளிரொரீஇ
அரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை
விரும்பினர் கொண்டுகொண் டுவந்தனர் பலரே;
அவ்வா றுறுப்பு மிவ்வாறு பயப்ப
ஒரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த
ஆரா வின்ப வருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவசித் தாந்தத்
தேனமு தருந்தினர் சிலரே"

எனவரும் இவ்வாதீனத்துக் குமரகுருபர சுவாமிகள் திருவாக்காலும் இனிதறியப்படும்.

இக்காலத்துள் வேதபாஷ்யங்களும், அவைகளை ஆங்கிலத்திலும் தமிழிலும் பெயர்த்தெழுதிய மொழிபெயர்ப்புக்களும் புறச் சமயத்தார்கள் இயற்றியனவாதலின், அவையெல்லாம் மெய்யான பொருளுரைகளெனக் கொள்ளலாகாது. இது பற்றி ஒரு சிறிது ஈண்டுக் காட்டுதல் நன்மை தருமென எண்ணுகிறேன். வேதங்களின் சிறந்த பகுதியாகிய ஸ்ரீருத்ரம் பதினொரு அநுவாகமுடையது; ஆதலின் 'உருத்ரைகாதசனீ' என்றும், நூறு உருத்திரர்களை அதிதெய்வமாகவுடைமையால் 'சதருத்ரீயம்' எனவும் பெயர் பெறும். இதற்குச் சாயனாசார்யர், பட்டபாஸ்கரர் முதலியோர் பாஷ்யங்கள் எழுதியுள்ளார்; இத்திருவுருத்திரத்தின் இறுதியநுவாகத்திலே இதன் அதிதேவதைகளாகிய நூறு உருத்திரர்களுக்கும் வணக்கங் கூறப்படுகிறது. அது வருமாறு,

नमो रुद्रेभ्यो ये पृथिव्यां येऽन्तरिक्षे ये दिवि येषामन्नं वातो
वर्षमिषवस्तेभ्यो दश प्राचीर्दश दक्षिणा दश प्रतीचीर्दशोदीचीर्द-
शोर्ध्वास्तेभ्यो नमस्ते नो मृडयन्तु

'நமோருத்ரேப்யோயே பிருதிவ்யாம் யேந்தரிக்ஷேயே திவி யேஷாமந்நம் வாதோ வர்ஷமிஷவஸ்தேப்யோ தச ப்ராசீர்தச தக்ஷிணா தச ப்ரதீசீர்தசோதீசீர்தசோர்த்வாஸ் தேப்யோ நமஸ்தே நோ ம்ருடயந்து' என்பது அவ்வுருத்திர மந்திரப்பகுதி. இப்பகுதிக்குப் பாடிய மெழுதினோர் கூறிய பொருள்களையும் நமது சைவஞானசாரியர் கூறிய பொருள்களையும் நாம் அறிவோமானால் அதுகொண்டே ஏனைய வேதப்பொருள்களின் பாடியங்களும், மொழிபெயர்ப்புக்களும் எவ்வாறிருக்குமென்பது தெளிவாகும். பாடியகாரர் இருவருங் கூறிய பொருள் வருமாறு:–

"உருத்திரர்களுக்கு வணக்கம் எவர்கள். நிலத்திலும், இடைவெளியிலும், விண்ணிலும் இருக்கின்றார்களோ? எவர்களுக்குச் சோறும், காற்றும், மழையும் அம்புகளாயுள்ளனவோ? அவர் (ருத்ரர்) களுக்கு வணக்கம். எவ்வித வணக்கமெனின்? கிழக்கே பத்து; அஃதாவது கிழக்கு முகமாக அஞ்சலி செய்யுங்கால், பத்து விரல்கள் கிழக்கு முகமாக ஆகின்றன, இவ்வாறே தெற்கு முதலிய திக்குகளிலும் கூட்டியுரைக்கற்பாற்று. இத்தகைய (பத்து விரல்கள் அவ்வத்திசை நோக்கியுள்ள) அஞ்சலி விசேடங்களால் அவ்வுருத்திரர்களுக்கு வணக்கம் ஆகுக; அவ்வுருத்திரர்கள் எங்களுக்கு இன்பஞ் செய்வார்களாக;" என்பதாம்.

இனி, ஸ்ரீமத் உமாபதி சிவாசாரிய சுவாமிகள் பௌஷ்கராகம விருத்தியின் அத்துவ சோதனைப் பிரகரணத்தில் நிவர்த்திகலாசோதனை

கூறுங்கால், அதன்கண்ணுள்ள நூற்றெட்டுப் புவனங்களின் அதிபர் களாகிய உருத்திரர்களைக் கூறி இவர்கள் தைத்ரீய சாகையின் உருத் திரப் பிரசின முடிவிலே அவ்வத்திக்கின்கணுள்ள உருத்திரர்கள் பப் பத்து எண்ணிக்கையோடும் வணக்கத்தோடும் சுருக்கமாகக் குறிப்பிடப் பட்டுள்ளார்கள் என்று உரைத்தருளினார்கள்; இருகை விரல்கள் பத்தும் கிழக்கு முதலிய திசைகளில் நுனியாக வமைந்த வணக்கமென்ற பாஷ்ய காரர் உரையும், கிழக்கு முதலிய திக்குகளில் பப்பத்து உருத்திரர்களாக இருக்குமவர்க்கு வணக்கமென்ற சைவாசாரியருரையும் எவ்வளவு வேறு பாடு உடையன வென்பதும் எது உண்மை என்பதும் நாம் உணரத்தக்கன.

**சிவநேயச் செல்வர்களே!**

ஸ்தாலீபுலாக நியாயமாக இங்குக் கூறியது கொண்டு வேதங்களுக்கு வேற்றுச்சமயிகள் கூறிய உரைகளும் அவற்றின் மொழிபெயர்ப்புக் களும் வேத வாய்மைச் செம்பொருளைத் தெரிய வொட்டாமல் மயக்கஞ் செய்வனவேயாம் என்பதறியப்படும். ஆதலின், வேதப்பொருளைச் சிவாகம ஞானக்கண் கொண்டு உணரவேண்டுமென்பது தெளிவாம்.

இனி, வேதத்தின் மெய்ப்பொருள் இனிதாக விளங்கும் பொருட்டு அதன் பாடியம்போல அருளிச் செய்யப்பெற்ற சிவாகமங்கள் இருபத் தெட்டாம். அவற்றின் சாரங்களைத் தொகுத்தெடுத்து உபதேசிக்கப் பெற்ற உபாகமங்கள் இருநூற்றேழு உள்ளன; அம்மூலாகமங்கள் பல வற்றிற்கும், உபாகமங்கள் பலவற்றிற்கும் பேருரை வகுத்த ஆசிரியர் கள் ஸ்ரீ ராமகண்டர், ஸ்ரீ நாராயணகண்டர் முதலிய ஆதி சைவ குல சிகாமணிகளேயாவர்; இவர்கள் அருளிச்செய்த ஆகம உரைகளில் இப் போது கிடைக்கக்கூடியனவாயுள்ள மிருகேந்திர விருத்தி, மதங்கவிருத்தி, பௌஷ்கரவிருத்தி முதலியன வெளிவராதிருப்பதும், தமிழில் வராதிருப் பதும் பெரிதும் வருந்தத்தக்கதே. சிவாகமங்கள் வெளிவராதிருப்பது இப்போதுதான் என்பதில்லை. மெய்ப்பொருணயனார்பால்,

> "உங்கணா யகனார் முன்ன முரைத்தவா கமநான் மண்மேல்
> எங்குமில் லாத தொன்று கொடுவந்தேன்"

என முத்திநாதன் கூறியதனாலும்,

> "பேறெனக் கிதன்மே லுண்டோ பிரானருள் செய்தவிந்த
> மாறிலா கமத்தை வாசித் தருள்செய வேண்டும்"

என நாயனார் கூறிய ஆர்வ மொழியாலும் நாம் ஆறுதலடைவோமாக.

மிருகேந்திர விருத்தியில் ஆசிரியர் நாராயணகண்டர் தாம் உரை செய்ததற்குக் காரணம் கூறும் வழி,

उपर्युपर्येव कृतानि कैश्चि न्मतान्तराणां हि निबन्धनानि ।
नोद्भिन्नमुद्रं त्विदमद्य याव त्तस्माद्गुरुर्मामिदमन्वशात्स : ॥

"உபர்யுபர்யேவ க்ருதாநி கைச்சின் மதாந்தராணும்ஹி நிபந்தநாநி | நோத்பின்னமுத்ரம் த்விதமத்ய யாவத் தஸ்மாத்குருர்மா மிதமன்வசாத்ஸ: || பிறமதங்களின் கிரந்தங்கள் சிலரால் மேன்மேலும் செய்யப் பட்டுள்ளன; இந்த (மிருகேந்திராகம) நூல் இதுகாறும் இடப்பட்ட முத்திரை திறக்கப்படவில்லை. ஆதலால் எமது குரவர் இதற்கு உரை செய்யும்படி கட்டளையிட்டார் என்று கூறுவதும், ஸ்ரீ உமாபதி சிவா சாரியர் பௌஷ்கர விருத்தியில், "உத்தேசமாக எடுத்துக்கொண்ட ஆறு பதார்த்தங்களுள் காரகபதார்த்தம் பரீக்ஷிக்கப்படாமைக்குச் சமா தானங் கூறி முடிவில், இப்படலம் எங்கேனும் கிடைக்குமாயின் இச் சங்கைக்கு இடமில்லை" என்று கூறுவதும் சிந்திக்கத்தக்கன.

இனிச் சிவாகமங்களுடைய தோற்றம் பற்றியும், அதனைச் சிவ பெருமான் நாரணன் முதலாயுள்ள தேவர்கட்கு அருளிச்செய்த முறை பற்றியும் சிவாகமங் கூறுவதைத் திருமுறைகளும்,

"அண்டர்தமக் காகமநூன் மொழியும் ஆதியை"

என்பது முதலிய திருப்பாடல்களால் உபதேசிக்கின்றன. நமது உமாபதி சிவனாரும் பௌஷ்கர விருத்தியில் சிவாகம வரலாறு சுருக்கி எழுதியதை இங்குத் தருதல் நலந்தரும். அது வருமாறு:—

"மலர்தலை யுலகின்கண் மும்மலங்களான் மறைப்புண்ட அறிவுந் தொழிலு முடைமையாற் கடப்பதற்கரிய பிறவிப் பெருங்கடனடுவு ளழுந்தி, அதனைக் கடந்துய்யுமா றறியாத அனைத்துயிர்களையும் உய்யக் கொள்ளும் பொருட்டுப் பேரருள் நிறைந்த மூவிருகுணத்து முதல்வனாய பரமசிவன் காமிக முதல் வாதுள மிறுதியான அருணூல்களை நாத முதலிய வடிவினவாக அருளிச்செய்தான்".

"பின்னர், அம்முதல்வன் சதாசிவ வடிவினனாகியும் நின்று நாத முதலிய வடிவினவாகிவந்த அவ்வாகமங்களையே எண்ணிறந்த செய்யுள் வடிவாகப் பகுத்துப் பிரணவர் முதலிய சிவன்கள் பதின்மருக்கும், அநாதி உருத்திரர் முதலிய உருத்திரர் பதினெண்மருக்கும் காமிக முதலிய தொகுதி முறையானே உபதேசித்தருளினன். இதனைத் தந்திராவதார படலத்தில் விரித்துக் காட்டுவாம்.

இனி, அவ்வவ்விடங்களினின்றும் முறையானே மாமேரு சிகரத்தை அடைந்த அவ்வாகமக் கடலினின்றும் சாரமாக எடுத்து மந்தவுணர்வுடையோர்க் கருளுதற்பொருட்டு நான்கு பாதங்களுடைய பௌட்கரமெனப் பெயரிய ஆகமத்தை அறிவுறுத்தருளிய சீகண்ட முதல்வன்பாற் சரியை கிரியை (யோக) பாதங்களைக்கேட்ட சனற்குமார முனிவர் முதலாயினோர் பதி முதலிய ஆறு பொருள்களையுந் தெரித்துரைக்கும் ஞானபாதத்தைக் கேட்குங் காலுடையராய் அம்முதல்வன் துதியையே மங்கலமாகக் கருதி அப்பெருமானது திருமுக நோக்கம் பெற்றுத் துதித்தன் முன்னுக வினவுகின்றனர்''.

இங்ஙனம் கூறிய சிவாகமங்களின் நாற்பாதங்களுள் ஞானபாதத்து ஓதும் பொருள்களை ஆராய்ந்து நிர்ணயம் செய்வதற்கு எழுந்தது சிவ ஞானபோத மென்பது, கயிலாய பரம்பரைச் சந்தான குருமரபின் வந்த ஆசாரியர்கள் எல்லோரும் அருளிய உண்மையாகும். சிவஞானபோதம் என்ற பெயரும் இப்பொருள் தருவதென்பது திராவிட பாடியகாரர் முதலிய பேராசிரியர்கள் காட்டியவாறு பற்றி யுணரப்படும். அஃதாவது:– சிவஞானம் இரண்டு வகைப்படும். அது,

**शिवस्य समवेता या शक्तिर्ज्ञानात्मिकामला ।**
**सैव ज्ञानमिति प्रोक्तं शाब्दन्तदनुमापकम् ॥**

சிவஸ்ய ஸமவேதா யா சக்திர் ஞாநாத்மிகாமலா, ஸைவஜ்ஞான மிதிப்ரோக்தம் சாப்தந்ததநுமாபகம்.''

(இதன் பொருள்):– ''உயர்ஞானமிரண்டாம் மாறுமல மகல அகலாத மன்னுபோதத் திருவருளொன் றொன்றதனைத் தெளியவோதுஞ் ''சிவாகமமென் றுலகறியச் செப்புநூலே'' என எமது ஸ்ரீமத் உமாபதி சிவம் விளக்கியருளியபடி, திருவருள் ஞானம் ஒன்று, மற்றொன்று அதனை அனுமானஞ் செய்துணர்த்தும் சிவாகமமாம்; சிவாகமம் பற்றி அநுமானஞ்செய்து திருவருண்ஞானத்தை யுணருமாறு, நமது சந்தான துவிதீய குருமூர்த்திகளாகிய ஸ்ரீமத்அருணந்தி சிவம் ''ஆரியமாய் அறம் பொருளோடின்பம் வீடெல்லாம் அறைந்துயிர்கட்கு அறிவு செயல் அளிப்பது நூல்; அந்நூல், கூறியராய் உள்ளவர்கள் ஓதவோதிக் கொண்டுவரலால் முன்னே குற்றமின்றிச் சீரிய பேரறிவுடையோன் செப்பவேண்டும்'' என அருளியவாற்று னறியப்படும்.

திருவருள் ஞானத்தை யுணர்த்துவது சிவாகமங்களெல்லாவற்றிற்கும் உரியதேயாம். ஆதலின், இங்கு சிவஞானத்தைப் போதிப்பதென்பது சிவாகமங்களின் பொருள்களை முரணறுத்து நிர்ணயிப்பதாம்.

சிவாகமங்கள் அனைத்திலுங் கூறப்படும் பொருள்களை முழு துணர்ந்து முரணறுத்துரைத்தல் ஏனையோரால் இயலாததாதலின், முற்றுணர்வுடைய இறைவனே அது செய்தல்வேண்டுமென்பது பெறப் பட்டது. ஆதலின் சிவஞானபோதம் முதற்கண் கல்லாலின்மூலின் வீற்றி ருந்த ஆதிகுருவாகிய சிவபெருமானே அருளிச்செய்தாரென்பது குருமர பின் வந்தோர் துணிபாம். சித்தாந்த மென்ற பெயர் சிவாகமங்கட்கே யுரியது. அது "சிவாகமங்கள் சித்தாந்தமாகும்" என்னும் சித்தியார் திருவாக்கும் உணர்த்தும். எனவே சிவாகமங்களாகிய சித்தாந்தத்தின் பொருள் நிச்சயித்துரைக்கும் சிவஞான போதத்தைக் குருமரபிற் பெற்று விளக்கியருளிய அருட்குரவர் ஸ்ரீமெய்கண்டதேசிகராவர்; ஆதலின் அவரருளிச்செய்த சித்தாந்தமாகிய சிவஞானபோதமும், அதன் வழிநூல் சார்பு நூல்களும் மெய்கண்ட சித்தாந்தம் என வழங்கப்பெறும். இந்த மகாநாடு மெய்கண்ட சித்தாந்தமாகிய சிவஞானபோதத்தைப் பற்றிய ஆராய்ச்சி உரைகளை நாமெல்லாம்கேட்டு மெய்யுணர்வு பெறுதற் பொருட்டுத் திருக்கயிலாய பரம்பரை மெய்கண்ட சந்தானத்தின் வந்த திருத்தருமை யாதீனத்துக் குருஞானசம்பந்த மூர்த்திகளின் திருமரபில் இருபத்து நான்காவது குருமூர்த்திகளாய் இங்கே எழுந்தருளிய ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த சுவாமிகளால் கூட்டுவிக்கப்பெற்றது. ஆகலின் இந்த மகாநாடு மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு எனப்பெயர் பெற்றது மிகவும் பொருத்தமுடையதே.

மெய்கண்டதேவர், குருமரபில் சிவஞானபோதத்தைப் பெற்றுத் தமிழில் எமக்களித்தருளினர் என்பது "முன்னாள் இறைவனருள் நந்தி தனக் கியம்ப நந்தி, கோதிலருட் சனற்குமாரர்க்குக் கூறக் குவலயத்தின் அவ்வழி யெங் குருநாதன் கொண்டு, தீதகல எமக்களித்த ஞானநூல்" என அருணந்திகுரவர் விளக்கியருளியதனல் தெளியப்படும். இப்பாட லில் எமக்கென்றது தமிழ்மக்களாகிய நம்மவர்க்கென்பது பொருள். ஆதலின் தமிழ் மொழியால் அருளிச் செய்தாரென்பதும், இயம்ப, கூற, கொண்டு, அளித்த ஞானநூல் என்பதனல் இயம்பியதும் கூறிய தும் வாக்கியத் தொடரால் யாக்கப்பட்ட நூலேயா மென்பதும் பெறப்படும்.

இனி ஆசிரியர் மெய்கண்ட தேசிகருக்குப் பரஞ்சோதி முனிவர் உபதேசஞ்செய்ய, அவ்வுபதேச மொழியையே நூலாகச்செய்து தந்தா ரென்றும், வடமொழியில் மெய்கண்டார்க்குமுன் இந்நூலில்லை என்றும் இக்காலத்துக் கூறுவாருமுளர்; வடமொழிச் சிவஞான போதத்தை மெய் கண்ட சந்தான குரவராகிய ஸ்ரீமத் உமாபதி சிவனர் தாமருளிய

பௌஷ்கர விருத்தியில் ஐந்திடங்களில் பிரமாணநூலாக உதாரணங் காட்டுதலானும், அவ்வாசிரியர் காலத்துக்கு அடுக்கவிருந்த சதாசிவ சிவாசாரியர் வடமொழிச் சிவஞான போதத்துக்கு அம்மொழியில் உரை செய்து நூல் வரலாறு கூறுவதாலும் சிவாக்கிரயோகிகள் இந்நூலுக்குப் பாடியம் செய்திருத்தலானும், அப்பய்ய தீக்கிதர் சிவார்க்க மணி தீபிகையில் இரண்டாஞ் சூத்திரத்தை எடுத்துரைத்தலானும் ஞானப் பிரகாச முனிவர், வெள்ளியம்பலவாண முனிவர் முதலிய வடமொழி வல்லுனரெல்லாம் உரை செய்தும் உதாரணமாக வெடுத்தாண்டும் பிரமாணமாகக் கொள்ளுதலானும், உலகுடை நாயனுர் "அருட்டுரை யண்ணல் மொழிபெயர்த் தருணூல் முதலா மூன்று நூற் கருத்தும்" என மொழிபெயர்ப் பென்பதைக் கிளந்துரைத்தலாலும், இங்ஙனமே திராவிட மாபாடியம் வகுத்த ஆசிரியர் சிவஞான யோகிகள் சூத்திரந் தோறும் "இங்ஙனம்" பாடத்தை மொழிபெயர்த்துக்கொண்டு" என்று கிளந்துரைத்தலானும், இவ்வாறு மெய்கண்ட சந்தான குருமரபில் வந்த ஆசிரியன்மா ரெல்லாரும் ஓரேமுகமாகக் கூறிவரு முண்மையை அல்லா தார் இல்லை என்பது பொருந்துமா என்பது அறிஞர் ஆராயத்தக்கது.

இனி, தமிழ்ச் சிவஞானபோதத்திலுள்ள நயம் வடமொழிச் சிவஞானபோதத்துக்கு இல்லை எனக் கூறுவாருமுளர். வடமொழியி லும் செந்தமிழிலும் நிரம்பிய பெரும் புலமை வாய்ந்த அருளாளர் களாகிய ஸ்ரீமதுமாபதிசிவனுர், சிவாக்கிரயோகிகள், அப்பய்ய தீக்கிதர், திராவிடமாபாடியகாரர் முதலிய தொல்லாசிரிய ரெல்லாரும் இருமொழி நூற்கும் ஒரே பொருள் கண்டு ஒற்றுமைப்படுத்தி உபதேசித்தருளு தலால் தமிழ்நூலுணர்ச்சி யொன்றுமே யுடையார் இது நயமுடையது அது நயமில்லாதது என்று கூறுவதன் பொருத்தம் அறிஞர் ஆராயத் தக்கது.

இனி, அவர் கூறுபவற்றுள் இரண்டொன்று இங்குக்காட்டப் படும். தமிழ்ச் சிவஞானபோத முதற் சூத்திரத்தில் "அவனவ ளது வெனும்" என்று கூறியிருக்க, வடமொழிச் சூத்திரம் "பெண்ணு ணலியாதி" என்று கூறியிருக்க, வடமொழிச் சூத்திரம் "பெண்ணு ணலியாதி" என்று கூறுவது நயமில்லை யென்பர், "பெண்ணுகி யாணு யலியாய்" என்பது முதலாகத் திருமுறைகளுள் வருவன பலவும் நயமில் முறையென்று கொள்ளலாமா? "அன்னையும் பிதாவும்" "அம்மையே யப்பா" "அம்மையப்ப ரேயுலகுக் கம்மையப்பர்" என்பனவும் இங்குச் சிந்திக்கத் தக்கன. "எனும்" என்னும் தமிழ்ச் சூத்திரவாக்கியத்துக்

கும் "ஆதி" என்னும் வடமொழிச் சூத்திர வாக்கியத்துக்கும் பொருள் ஒன்றே யென்பது திராவிடமாபாடியகாரர் விளக்கி யருளினர்.

இனி, "மூவினைமையின்" என்ற தொடரின் பொருணயம் "கார்யதர்சநாத்" என்ற வடமொழிச் சூத்திரப்பகுதிக்கு இல்லையென்பர். கர்த்தாவுண்மையைச் சாதிப்பதற்குக் கார்யம் என்ற சொல் சிறந்த சாதனமா மென்பது உமாபதி சிவனர் பௌஷ்கரத்தில், "கார்யபதந்து த்ருஷ்டாந்தே சாதனவைகல்ய சங்காபரிகாராய" என்று கூறியதுபற்றி யறியப்படும். இதன் பொருள் "கார்யமென்னுஞ்சொல் திருஷ்டாந்தத்தில் சாதனக் குறைவு பற்றிய ஆசங்கையை நீக்குதற்பொருட்டு" என்பதாம்.

இனி, மலத்துளதாம் என்ற சொற்றொடர் வடமொழிச் சூத்திரத்தில் இல்லை என்பர். இதனைத் திராவிடமாபாடியகாரர் முதற் சூத்திர பாடிய முடிவில், "அற்றேல் வடமொழி முதற் சூத்திரத்தில் மலத்தால் என்பது இல்லையாலோவெனின், அற்றன்று; நாலாம்பாதத்தில் இதனல் என்பது (அஸ்மாத்) மலத்தால் என்னும் பொருட்டு; ஆண்டுச் "சிருட்டிப்பான் இதனல்" என்பதை "இதனல் சிருட்டிப்பன்" எனமாறிப் பொருளுரைக்க; அற்றேல் சுட்டுப் பெயர் முன்வந்ததனைச் சுட்டுவதே யாகலின், அங்ஙனம் வாராத மலத்தைச் சுட்டுமாறு என்னையெனின், அற்றன்று; சுட்டுப்பெயர் முன்வந்ததனையே சுட்டுமென்னும் நியமம் செய்யுளுக்கின்மையானும், சூசிப்பது சூத்திரமாகலானும் நாலாஞ் சூத்திரத்து வருவதனை ஈண்டுச் சுட்டுப்பெயராற் சூசிப்பித்தாரெனக் கொள்க; இஃதுணராதார் ஆண்டு இதனல் என்பதற்கு 'இங்ஙனமாகலின்' எனப் பொருளுரைப்பர். அது கூறுமையே பெறப்படுமென்றொழிக; அற்றாகலினன்றே, ஆசிரியர் "இங்ஙனமாகலின் அந்தமாதி" யென்று ஓதாதுவாளா கூறியொழிந்ததூஉமென்க" என்று தமிழ்மொழி வடமொழிச் சூத்திரங்கட்கு ஒற்றுமைப் பொருணயங்காட்டி மேல்வருஞ் சூத்திரங்களிலும் அவிரோத நயனம் செய்தருளுகின்றார்.

இனி, என்மனர் புலவரென்பது வடமொழிச் சூத்திரத்துள் இல்லை என்பர். ஒரு மொழியிலுள்ள நூலை மற்றொரு மொழியில் பெயர்த்துச் செய்வோர் அந்நூலினுள்ள மொழிகளுக்கெல்லாம் நேரான பதம் தாம் பெயர்க்கும் நூலில் எழுதவேண்டுமென்பது பொருத்தமில்லை. அது

निधाय हृदि विश्वेशं विधाय गुरुवन्दनम्
बालानां सुखबोधाय क्रियते तर्कसंग्रहः ॥

"நிதாய ஹ்ருதி விச்வேசம் விதாய குருவந்தனம்
பாலாநும் சுகபோதாய க்ரியதே தர்க்க சங்க்ரஹ:

यस्याहुरागमविद : परिपूर्णशक्तेरंशे कियत्यपि निविष्टममुं प्रपञ्चम्।
तस्मै तमालरुचिभासुरकन्धराय नारायणिसहचराय नम : शिवाय॥

யஸ்யாஹு ராக மவித: பரிபூர்ண சக்தே
ரம்சே கியத்யபி நிவிஷ்டமமும் பிரபஞ்சம்
தஸ்மை தமாலருசி பாஸுர கந்தராய
நாராயணீ ஸஹசராய நமச்சிவாய"

என்னும் தர்க்க சங்கிரக சிவதத்துவ விவேகங்களின் சுலோகங்களோடு,

"மன்ற வாணனை மனத்திடை நிறுவிவண் டுறைசை
வென்ற சீர்நமச் சிவாயமெய்க் குரவனை யிறைஞ்சி
என்ற னைப்பொருஉ மிளையவர்க் குணர்வினி துதிப்பச்
செந்த மிழ்ச்சொலாற் செயப்படுந் தருக்கசங் கிரகம்.

உலகெ லாந்தன தொருசிறு கூற்றினு ளமைய
அலகி லாற்றலா னிறைந்தவ னெனவரு ணூலோர்
குலவி யேத்துவோ னெவனவ னுமையொரு கூற்றின்
அலர்க றைக்களச் சிவபிரா னடியிணை போற்றி"

என்னும் மொழிபெயர்ப்புச் செய்யுட்களை ஒப்புநோக்க வல்லார் ஒவ்வொரு மொழிக்கும் மொழிபெயர்ப்பில் நேரான பதமிருக்கவேண்டுமென்று கூறுர்; ஏனைய சூத்திரங்களுக்குக் கூறியவைகளும் இங்குக்கூறிய ஒற்றுமை நயம்பற்றியுணர்ந்து மாறுபாடின்மை தெளியப்படும்.

இவ்வாறு வடமொழியிலும் தமிழ் மொழியிலுமுள்ள சிவஞான போதம் ஒன்றே என்பதும், வடமொழியில் அருளிச்செய்தவர் கல்லால் நிழலில் எழுந்தருளியிருக்கும் ஆதி குரவராய சிவபெருமானே என்பதும், அக்குருமரபில் அந்நூலைப் பெற்று நாமெலாம் உய்யும்படி தமிழில் அருளிச்செய்த கருணையாளர் திருவெண்ணெய் மெய்கண்ட தேவரென்பதும் தெளிவாயிற்று. ஸ்ரீஅருணந்தி குரவரும் ஸ்ரீஉமாபதி சிவனரும் தமிழ்ச் சிவஞான போதம் மொழிபெயர்ப்பு நூலென்பது கூறிற்றிலர் எனின், அவ்விரண்டு ஆசிரியன்மாரும் மேற்கோள் ஏது உதாரண

மென்னுமிவை மெய்கண்டார் அருளிச் செய்தா ரென்பதையும் கூறிற்றிலர்; ஆதலின், அவர் கூறுதிருத்தலின் நாம் மெய்கண்டதேவர் செய்திலர் என்று கூறுவோமா? கூறேம். அதுபோலவே மொழிபெயர்ப்பென்று கூறுவிடினும் மெய்கண்ட சற்குரு சம்பிரதாயத்தில் வந்த அருட்பெரியா ரெல்லாம் மொழி பெயர்ப்பு நூலென்றே கிளந்துரைக்கும் உண்மையை, அல்லாதார் இல்லை என்பது பொருத்தமற்றதாம்.

இனிச் சிவஞான போதப்பாயிர மிரண்டினும்,

"எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பாய்
நந்தி யுரைத்தருளு ஞானநூல்—சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் றாரணியோர் தாமுணர
வேதுதிருட் டாந்தத்தா லின்று."

என்றும், 'நந்திமுனிகணத் தளித்த வுயர் சிவஞானபோதம்' என்றும் கூறப்படலால் நங்குருமரபுக்கெல்லா முதற்குரு நாதனாய திருநந்தி குரவரே சீகண்ட முதல்வர்பாற் கேட்ட சிவஞான போதத்தை முனிவர் கணங்களுக்கு உபதேசித்தருளினரென்பது தெளிவாகப் பெறப்படுகின்றது. இவ்வாறு கிளந்துரைத்தல் பற்றித் தங்கொள்கை நிலை பெருதொழிதலின் பாயிரச் செய்யுட்கள் வேண்டா வென்பாருமுளர். அவ்வாருயின் ஒவ்வொருவரும் தத்தங்கொள்கைக்கு மாறுபட்ட பகுதிகளை வேண்டா வென்பர்; வேண்டாவெனின் ஒருநாலும் நிலைபெருதொழியும்; ஆகலின் இது கொள்ளற்பாலதன்று.

### சித்தாந்த ஞானச் செல்வர்களே!

இக்காலத்தில் ஏனைய சச்சரவுகள் போலத் தமிழ் மொழி வடமொழி பற்றிய விவாதங்களும் நிகழுகின்றன. நாம் நம்முடைய பரமாசாரிய சுவாமிகள், 'ஆரியத்தோடு-செந்தமிழ்ப் பயன் அறிய வேண்டும் என்று' தமிழ்ச் சொல்லும் வடசொல்லும் சிவபிரான் தாணிழல் சேர்தற்குச் சாதனங்களாமென்றும், சைவத்திற்குரிய உண்மைநூல்கள் எந்த மொழியிலிருப்பினும் அவை யெல்லாம் வேதநூல் சைவநூல்களாகிய முதனூல்களினின்றும் விரிந்தநூல்களே என்றும் நமக்கு உபதேசித்தருள்வதால் அவ்வுபதேசவழியினின்று பெருமானை வழிபாடு செய்து பேரின்பவாழ்வுற முயல்வதே நாம் செய்யத்தக்கது.

இனி அங்ஙனம் மெய்யான இன்ப வாழ்வு பெறுதற்குரிய நம்முடைய இயல்பும், அதனைப் பெறுவித்தற்குரிய பெருமானினியல்பும்,

அதனை இதுகாறும் நாம் பெறுதற்குத் தடையாயிருந்த பொருளினியல்பும், அத்தடையை நீக்கி அப்பேற்றைப் பெறுவிக்கும் சாதனத்தினியல்பும், அச்சாதனத்தைப் பெறும்வழியும், அதனைச் சாதிக்கும் முறையும், சாதித்த தனுல் வரும் இன்பத்தின் இயல்பும் என்னுமிவைகளை நாம் உள்ளவா றுணரவேண்டுவது நமது கடமை. அங்ஙனம் உணர்தற்கு இந்தமனித சரீரம் இன்றியமையாத சாதனம். இது இன்ன காலத்தில் நீங்கு மென்பது நம்மால் அறியப்படாதது. இச்சரீரம் கருவினுள் அழியி னும் அழியும். கருவினுள் பரிணமித்தழியினும் அழியும்; கருவி னின்று பிறந்தழியினும் அழியும்; பாலனுய் அழியினும் அழியும்; தருணனுய் அழியினும் அழியும்; முதியனுய் அழியினும் அழியும்; ஆதலால் இந்தக் கிடைத்தற்கரிய சரீரத்தைப் பெற்ற நாம் இது உள்ள பொழுதே மானுடப் பிறவியாற் பெறவேண்டிய பேற்றைப் பெறுதற்கு உரிய ஞானத்தை அறிதற்கு இச்சிவஞானபோதக் கேள்வி சிந்தனை முதலியவைகள் அவசியமாகச் செய்யத்தக்கன; ஆயினும் நமக்குள்ள வினைப் பயன்களை அனுபவித்தற்கு உரிய முயற்சியிலேயே நம்மை நம துள்ளம் தள்ளுகின்றது. அவ்வழியும் ஏதோ புண்ணிய வசத்தால் சிவஞானபோத முதலிய மெய்கண்ட சித்தாந்த நூல்களைப் படிக்கவும், கேட்கவும் விருப்பமெய்தினும் அவற்றை நமக்கு எடுத்துச் சொல்வாரும், விளங்க வைப்பாரும் எங்கும் கிடைப்பது அரிதினுமரிது; நானும் இமய மலைவரை சென்று பார்த்தும் எங்கும் எவரையும் காணப்பெற்றிலேன்; இங்ஙனம் சிவஞானத்தை விரும்பும் அன்பர்களுக்கு அதனை அளிப்போர் அரியராகிய இக்காலத்தில் நம்முடைய ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் கருணைகூர்ந்து இத்த மகா சபையைக் கூட்டுவித்துச் சிவஞானபோதச் சொற்பொழிவை நாமெல்லோரும் கேட்டு நலம்பெறும் வண்ணம் செய்தருளுகின்ற சிவஞான தானச்செயல் அறிஞர் களெல்லாம் போற்றுதற்குரியது.

அன்பர்களே!

நம்முடைய சைவாதீனங்கட்கு ஞானதானஞ் செய்யுமியல்பு புதிய தன்று; இந்த ஆதீனத்திலிருந்தே நம்முடைய குமரகுருபரசுவாமிகள் இமயமலைவரையுஞ் சென்று சித்தாந்த ஞான வெற்றிக்கொடி நாட்டி யருளினுர்கள்; ஸ்ரீவெள்ளியம்பலவாண சுவாமிகள் பலதேசங்களிலுஞ் சென்று பலமாணவர்களுக்குக் கருவி நூல்களும் சமயநூல்களும் கற் பித்ததுமன்றி முத்தி நிச்சயபாஷ்யம், ஞானுவரண பாஷ்யம், மிருகேந்திர மூலமொழிபெயர்ப்பு முதலிய அரியபெரிய நூலுரைகளைச் செய் தருளினுர்கள். கற்பனைக் களஞ்சியமாகிய துறைமங்கலம் சிவப்பிரகாச முனிவர் முதலியோர் வெள்ளியம்பலவாண சுவாமிகள் திருநெல்வேலி

விருக்கும்பொழுது அங்குச் சென்று தொல்காப்பியம் பாடங்கேட்டா ரென்றுங் கூறுப; மற்றும்பல இவ்வாதீன ஞானமுனிவர்களும் நம் பாரத நாடெல்லாஞ் சென்று சைவக்கொடி நாட்டி அங்கங்கேயுள்ள அரசர் முதலியோர்பால் பூதானங்களைப்பெற்று அவற்றை மூல குருபீடங் களுக்குச் சமர்ப்பித்து அந்த நிலங்களினின்றும் பெருநிதியம் பெறும்படி செய்துள்ளார்கள்; இங்ஙனம் செய்துவந்த ஞான பீடங்கள் சிறிது காலம் பராமுகமாய் இருந்த குறையை நீக்குதற்பொருட்டு நம்முடைய ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் இந்தப்பீடத்துக்கு எழுந்தருளியது முதல் பலபல சைவ நூல்களை அச்சிடுவித்து விலையின்றி (இலவசமாக) வழங்கியும், சிவாலயங்களையெல்லாம் கண்டார் கண்களிக்கும்படி ஜீர்ணோத்தாரணஞ் செய்தும், பல கோபுரங்களைப் புதுக்கியும், ஆலயந் தோறும் பூசை, விழா, சைவோபந்யாசம், சைவ நூல் நிலயங்கள் முதலியன சிறப்பாக நடைபெறச் செய்தும், இத்தருமையம்பதியில் திராவிட வேத பாடசாலை ஸ்தாபித்தும் சைவசமய பரிபாலனம் செய்து வருவது எல்லோருக்கும் மகிழ்ச்சியைத் தருகின்றது. இன்னும் சைவ சித்தாந்த சாஸ்திர பாடசாலை, சிவாகம பாடசாலை முதலிய வித்தியா நிலயங்களும் தாபனஞ் செய்யத் திருவுளங்கொண்டிருப்பது தெரிந்து மிகவும் மகிழ்கின்றோம்.

இப்பொழுது இங்கே இந்த ஞான மகாசபையைக் கூட்டி நாம் எல்லோரும் நன்மையுணர்ந்துய்யும்படியான பரோபகாரிகளாய் விளங்கு கின்றார்கள்; இன்னும் இதுகாறும் வெளிவராத பௌஷ்கர விருத்தி, ஸ்ரீ மிருகேந்திராகம சரியை கிரியாபாத விருத்தி, முத்தி நிச்சயபாஷ்யம், ஞானாவரண பாஷ்யம், சைவபரிபாஷை முதலிய அருமையான நூல் களைச் சைவமக்களுக்கு எளிதில் கிடைக்கும்படி அச்சிடுவித்து மொழி பெயர்ப்பித்து வெளியிடவும் திருவுளம் பற்றியிருப்பது நாமெல்லோரும் செய்த தவப்பயனே.

இன்னுமொரு சிறு விண்ணப்பம் இங்குத் தெரிவிக்க விரும்பு கின்றேன். நம்முடைய சிவாலயங்களுக்கெல்லாம் விதிவிதாயகமாயுள்ள சிவாகமங்கள் பலவும் அச்சிடப்படாமல் சிதைவுற்று வருகின்றன. முன் அச்சிட்ட காமிகம், காரண முதலிய ஆகமங்களும் பிழை மலிந்து கிடக் கின்றன; இவைகளில் ஒவ்வொரு பெரிய ஆலயங்களுக்கு ஒவ்வொரு ஆகமமாக அச்சிடுவித்து வெளியிடுவதும், சிவாகமங்களையும் தமிழ் ஞான நூல்களையும் கருவி நூல்களோடு தகுதியுடைய மாணாக்கர் களுக்கு உணவு உறையுள் முதலியன உதவி நல்ல ஆசாரியர்களால்

கற்பிப்பதும் இன்றியமையாது செய்யத்தக்கன; இவற்றிற்குச் சமய அறநிலயப் பாதுகாப்பாளரும், ஆலய அதிகாரிகளும், சைவப் பிரபுக் களும் துணை செய்து நமது ஆதீன குருபீடாதிபதிகளுடன் ஒத்துழைப் பார்களானுல் நம் சமய அறங்களெல்லாம் தழைத்தினி தோங்குமென்று எண்ணுகிறேன்; இங்ஙனம் இந்த மகாநாட்டில் என்னுடைய எண்ணங் களை யெல்லாம் தெரிவிக்கும்படி உரிமை தந்து இந்தத் தலைமைத் தானத்தில் அமரும்படி செய்த நம்முடைய மகாசந்நிதானத்துக்கும், அவர்களுடைய திருக்கூட்டத்தாருக்கும், இவ்விடம் விஜயம் செய்திருக்கும் அன்பர்களுக்கும் தீர்க்காயுளும் அரோக திடகாத்திர முதலிய எல்லா நலன்களும் மேன்மேலும் பெருக அருள் செய்யும் வண்ணம் அங்கயற் கண்ணி தன்னேடு மமர்ந்த ஆலவாய்ச் சொக்கலிங்கப் பெருமானைச் சிந்தித்து வணங்கி வாழ்த்துகிறேன்.

உருவா யருவா யுளதா யிலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்க்
கருவா யுயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவா யருள்வாய் குகனே.

**திருச்சிற்றம்பலம்.**

## சொற்பொழிவுகள்

### சிவஞானபோத முதற்சூத்திரத்தைப்பற்றியன:-

ஆரணி, வித்துவான், திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்.

திருச்சிற்றம்பலம்

குருவணக்கம்

நேரிசை வெண்பா

முத்துக் குமார முனிவா குருநாதா
சத்துச்சித் தாநந்தத் தாணுவே—பத்துடையேன்
என்னதென யாதுமுறு தெல்லாம் எனையாள்நின்
பொன்னடிக்கே வைத்தேன் புரிந்து.

**சிவநேசச் செல்வர்களே!**

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களது திருவருளால் அடியேனுக்கு இம்மெய்கண்டான் சித்தாந்த மாநாட்டில், சிவஞான

போதத்தின் முதற் சூத்திரத்தைப்பற்றிப் பேசக்கிடைத்த பெரும் பேற்றை யெண்ணி மகிழ்கின்றேன்.

இம்முதற் சூத்திரம், (1) உலகத்தின் முத்தொழிலுடைமை, (2) உலகம், தான் அம்முத்தொழிலும் உறச்செய்வோன் ஒருவனை யுடைமை, (3) உலகம் அவனை முதல்வனாக உடைமை என்னும் இம் மூன்று கருத்தையும் உணர்த்துவது. இதனைச்சுருக்கிச், "சங்காரகாரண னுள்ள முதலையே முதலாக உடைத்து இவ்வுலகம்" என விளக்குவர் ஆசிரியர். அக்கருத்துடைய சூத்திரமாவது

"அவன்அவள் அதுஎனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்"

என்பது. இதனை முற்கூறிய மூன்று கருத்துக்கேற்ப மூன்றாகப் பகுத்துக் கொள்வர்.

முதலாவது "அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின்" என்பது,

இரண்டாவது "தோற்றியதிதியே ஒடுங்கி (மலத்து) உளதாம்" என்பது,

மூன்றாவது "அந்தம் ஆதி (என்மனார் புலவர்)" என்பது.

## முதற்பகுதியின் விளக்கம்

1. காயப்பிரபஞ்சம் ஆண், பெண், அலி என்னும் பகுப்புடையது. உலகப்பிரபஞ்சம் நிலம், நீர், தீ, வளி, வானம் என்றற்றொடக்கத்துப் பகுப்புடையது.

2. இவ்விரு கூற்றுப் பிரபஞ்சமும் பலவேறு வகைத்தாய்ச் சடமாயிருப்பது.

3. உளதாய்ச் சுட்டியறியப்படுவது.

இம்மூன்று ஏதுவானும் இப்பிரபஞ்சம் தோன்றி நின்று அழியப் படும் என்பது துணியப்படும். படவே உலகத்துக்கு முத்தொழிலுண் டென்பதுறுதியாம்.

காட்சி யளவைக்கு எய்தாது சொல்வனவற்றைக் கொள்ளாத உலகாயதர் 'உலகம் உள்ளது கண்கூடு. தோன்றுதலும் அழிதலும் கண்கூடல்ல' என்பர். உலகத்தின் இருப்பானது தோற்றத்தையும், அழிவையும் துணைக்காரணமாகக்கொண்டே நிகழும் என்பதை அறியாமையால் அங்ஙனங் கூறுவர்.

மீமாஞ்சகர் முத்தொழிலுடைமையை உடம்பட்டு, ஓர் இடம் அழியப் பின்னும் ஓர் இடம் நிற்கும். ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழியக் கண்டிலம் என்பர். அவர் ஒவ்வொரு கால விசேடத்தில் தம்முள் ஒருசாதிப் பலபொருளாகிய வித்து முதலிய சடங்கள் ஒருங்கே தோன்றுதலும் ஒருங்கே அழிதலும் கண்டும் உளங் கொண்டிலர். உளரேல் அவ் வியல்பிற்றாகிய உலகமும் (அத்தோன்றலழிதற்குரிய) அவ்வக்காலம் வந்துழி அவ்வாறு முழுவதும் ஒருங்கே தோன்றி (நின்று) அழியும் என்றுணர்வர்.

## இரண்டாவது பகுதியின் விளக்கம்

இல்லாத பொருட்குத் தோற்றம் இல்லை. அதனால் தோற்றம் உடைய உலகம் உள்பொருளேயாம். இல்பொருளாய் வித்தின் கேட்டின் அங்குரம் போலத் தத்தம் சார்பிற்றோன்றியழிதல் இயல்பென்பார் கூற்றுப் பொருந்தாது. இல்பொருளாகிய முயற்கோட்டுக்கு முக்காலத்தும் தோற்றமில்லை.

தொழிலைச் செய்வோரையின்றித் தொழில் நிகழாது. அதனால் முத்தொழிற்படும் உலகம் அம்முத்தொழில் செய்வோனை யுடையது. தத்தம் முதற்காரணத்தினின்றும் தானே தோன்றியழியு மென்பார் கூற்றுப் பொருந்தாது. ஓரிடத்து ஒடுங்கிய பொருள் மீளத்தோன்றும் போது அவ்வொடுங்கிய இடத்தினின்றே மீளத்தோன்றும்; வேறிடத்தில் தோன்றாது.

அதனால் உள்பொருளாகிய உலகத்தோற்றமானது அவ்வுலகம் ஒடுங்கிய இடத்தினின்றே நிகழும். தோன்றற்கு ஆணவமல பரிபாகமும் ஒடுங்கற்குக் கன்மமல பரிபாகமும் காரணங்களாகும்.

ஒடுங்கிய உலகம் ஒடுங்கியவாறே ஒழியாது; மீளத்தோன்றுவது கன்மங் கழியுமுகத்தான் ஆணவமல பரிபாகத்தின் பொருட்டாகும். ஒடுங்கியது கன்மமல பரிபாகத்தின் பொருட்டாகும். (சித்தியார் 57)

எப்பொருள் ஒடுங்கிற்று? அப்பொருளே தோன்றுதல் வேண்டும். விரையொன்று போடச் சுரையொன்று முளைக்காது. அதனால் முன் னின்ற உலகம் ஒடுங்கிப் பிறிதோருலகு தோன்றிற்று என்பார் கூற்றுப் பொருந்தாது. நெல்லானது கமுகாய் நீளாது; நெல்லாயே நீளும்.

காரியங்கள் தத்தம் முதற்காரணத்தில் ஒடுங்கும். உலகுக்கு முதற்காரணமாம் மூலப்பகுதி, வாசுதேவனுருவாகலான், அவனிடத்து உலகம் ஒடுங்கும் என்பர் பாஞ்சராத்திரியர். மூலப்பகுதிக்கு மேலும் புவனங்கள் உள்ளன என்றும், அவை அம்மூலப் பகுதியால் வியா பிக்கப்படாதன என்றும், கீழுள்ளது (ஏகதேசம் முற்றுமன்று) மட்டும் அம்மூலப் பகுதியில் ஒடுங்கும் என்றும், மாயா காரியத் தொகுதி முழு தும் ஆங்கு ஒடுங்காது என்றும், காத்தற் கடவுளும் படைத்தற் கட வுளும் அழித்தற் கடவுளிடத்தினின்றே தோன்றுவர் என்றும், அவ்விரு வரும் ஒடுங்குங்கால் அத்தோன்றிய இடத்தேயே ஒடுங்குவர் என்றும் அவ்விருவரும் ஒடுங்கும்பொழுது அம்மாயா காரியத் தொகுதி முழுதும் கூட அழிவதாம் என்றும் அறிந்தாராயின் அவர் அவ்வாறு கூறுர். (இருவரும் தம் உறுதியில் நின்றுர் என்னின் இறுதிதான் உண்டாகாது.)

உலகம் தனக்கு முதற்காரணமாகிய மாயையின் ஒடுங்கும். "யாது யாண்டு ஒடுங்கும் அஃது அதனில் உற்பத்தியாம்." என்னும் அவிநாபாவத்தான் மாயையின் ஒடுங்கிய உலகத்தை மாயையே தோற்று விக்கும். நிமித்த காரணன் ஒருவன் உண்டெனக் கொள்ளினும், அவ னிடத் தொடுங்கும் என்றல் பொருந்தாது என்பர் சாங்கியர். "காரணம் உண்டாகக் காரியம் உள்ளதாகி வருதலால் மற்றொரு கடவுள் இத்தைத் தருதல் என்" என்பது பொருந்துவது போலத் தோன்றினும் நுண்ணுணர்விஞர்க்கு அது பொருத்தமற்றதாக எளிதிற்றேன்றும். மாயைக்கு வித்தும் உலகத்துக்கு முளையும் நிகராம். வித்துக்கு ஆதாரம் நிலம். நிலம் குளிர்ந்தால் வித்தில் முளை தோன்றும். மாயைக்கு ஆதாரம் சிவசத்தி. சிவசத்தி சங்கற்பித்தால் மாயையில் உலகம் தோன்றும். உயிர்களின் வினைக்கீடாக அவ்வக்காரியங்களை அவ்வவ்வியல்பிற் பிறழாது பயக்கும் வித்தகம் சிவசத்தி சங்கற்பித்தாலன்றி மாயைக்கு உண்டா காது. மாயையின் ஒடுங்கிய உலகம் அம்மாயைக்கு ஆதாரமாகிய சிவ சத்தியினெடுங்கியதே யாகும். ஆதலின் தோற்றமும் அச்சிவசத்தியினிடத் தினின்றே நிகழும். இந்நுட்பம் அறியாத சாங்கியர் கூற்றுப் பொருந் தாமை இதனால் அறிக.

"வையக மாயை யின்கண் வினைவழி வருங்க டாதி
செய்பவ ரொழியத் தோன்ரு." (கோயிற் புராணம்.)

[உயிர்களின் வினைக்கீடாக இறைவன் தோற்றுவிப்பானுயின் அவன் வினைவயத்தானுவன். தன்வயத்தானல்லன். அல்லனுயின் இறைவனுகான் என்பது இடையில் எழும். அவ்வெழுச்சி பின் வருவதால் அடங்கும். அஃதாவது வேட்டுவற் குறித்த பச்சைமென் புழுவிற்கு அவ்விரும்பிய வடிவைக் கொடுக்குமாறு போல இறைவனும் அவரவர் வேண்டும் உருவைக் கொடுத்து அவ்வினைக்குத்தக்க பயன்களையுங் கூட்டுவன். (வேட்டுவன்=வேட்டைவாளி என்னும் குளவி. புழு=பச்சைபுழு) வேண்டுவார் வேண்டும் உருவினைக் கொடுத்துச் செய்வினைப் பயனைக் கூட்டுதல் பற்றிச் சுதந்திரனுகிய தன்வயத்தனுதற்கிழுக்கில்லை என்பது.]

உலகிற்கு முதற்கடவுள் உண்டெனக் கொள்ளினும் அவன் படைப்பு முதலிய தொழில் செய்வானுயின் விகாரம் அடைந்து அதனிற்றொடக்குண்டபின் என்பார்க்கு மறுப்பாவது:—

1. காலம் இறப்பு, நிகழ்வு, எதிர்வு முதலியனவாய் வேறுபட்டு எல்லாத் தொழிலுஞ் செய்தும் தனக்கொரு விகாரமின்றி நிற்கும்.

2. "கற்றநூற் பொருளுஞ் சொல்லுங் கருத்தினில் அடங்கித் தோன்றும்"போது அக்கருத்து அவற்றிற் றொடக்கொண்ணுது.

3. கனவிற் கண்டவற்றை(ப்புறத்து விடயங்களை) அறிந்து வந்த நனவுணர்வில் விளங்க அறிந்தவன் அப்பொழுது அவற்றிற் றொடக்குண்ணுன்.

காலம் போல விகாரப்படாது நின்று உலகைக் கரணத்தாற் படையாது சங்கற்ப மாத்திரையானே படைத்துக் காவாது காத்து, அழிக்காது அழித்தலால், தான்கற்ற நூற்சொற் பொருள் தன்பாற் ருேற்றுங்கால் தொடக்குண்ணுத உள்ளம் போன்றும், தான் கனவிற் கண்டவை, தன் நனவிற்ருேன்றுங்கால் அவற்றில் தொடக்குண்ணுதவன் போன்றும் தொடக்குண்ணுன் இறைவன் என்பது. இஃது இவ்வாருக என்று எண்ணுதலாகிய சங்கற்ப மாத்திரையாற் செய்வது என்றும், கரணத்தாற் செய்வது என்றும் வினைமுதல் இருவகைப்படும். குயவன் முதலியோர் கரணத்தாற் செய்யும் வினைமுதல். இறைவன் சங்கற்ப மாத்திரையாற் செய்யும் வினைமுதல். இவ்வாறு குயவனும் இறைவனும் செய்வகை

யால் ஒவ்வாராயினும் வினைமுதலாதற் பொதுமைபற்றி ஒப்பர். அவ்வொப்புமை ஒருபுடை யுவமையாம். முற்றுவமையாதல் செல்லாது. சங்கற்ப மாத்திரையாற் செய்யுஞ் செய்திக்குத் தொடக்குண்ணல் முதலிய குற்றங்கள் பகைப்பொருளாகும். ஆதலின் அக்குற்றம் ஆண்டு இருத்தற்கு ஓர் இயைபில்லை. (சிவஞான சித்தியார் சுபக்கம். 53)

## மூன்றாவது பகுதியின் விளக்கம்

உலகம் அறிவுடையது, அறிவிலாதது என்றிருவகைப்படும். அவற்றை முறையே சேதனம், அசேதனம் என்னும் வழக்காலுணர்த்துவர். சேதன வுலகம் உயிர்கள் அசேதன வுலகம் முற்கூறிய காயமும் உலகும் ஆய இருகூற்றுப் பிரபஞ்சம். உயிர்க்குப் பொது வியல்பு சுட்டியறிவது; தன்னியல்பு சிவத்தைச் சார்ந்து சுட்டிறந்தறிவது. முத்திநிலையில் உயிர் சிவத்தைச் சார்ந்து, தன்னியல்பைத் தலைப்பட்ட வழிச் சுட்டுணர்வு நிகழாது. அநாதிமல முத்தனாகிய முதல்வன் தன்னுள் வியாப்பியமான பசுபாசங்களைச் சுட்டியறிய வேண்டாது சுட்டுணர்வின்றி நின்றவாறே அறிவான். நம்மனோர் போலத் தனக்கு வேறாகச் சுட்டியறிவானல்லன். சுட்டுணர்வு முற்றுணர்வைத் தடுப்பது. சேதனப் பிரபஞ்சம் சுட்டுணர்வுடையது. சுதந்திரமில்லாதது. அழிவின்றி நித்தமாயிருப்பது. சுட்டுணர்வின்றி நின்ற சங்காரக்கடவுள் சுதந்திரமுடையவன். அவன் எல்லாத் தொழிலையும் செய்தும் செய்வித்தும் நிற்றற்குரிய வினைமுதல். சேதனப் பிரபஞ்சம் முத்தியிலும் பல வாற்றானும் அவ்வினைமுதலுக்கு அடிமையேயாம்.

பலவாறுவன:— 1. இருள்நீங்கிய விடத்தும் ஞாயிற்றையின்றிக் கண்ணுக்குக் காட்சியமையாது. அதுபோல மலம் நீங்கிய முத்தி நிலையிலும் வியஞ்சகமாய் உடன்நின்று அறிவிக்கும் முதல்வனையின்றி உயிர்க்கு அறிவு அமையாது. சிவன் அருட்சித்து; தானே அறியுஞ் சித்து. உயிர் அருளைச் சேருஞ்சித்து; அறிவிக்கப்படுஞ்சித்து.

2. உயிர் முதல்வன்போலத் தனித்து நிற்கும் இயல்பின்றிக் கண்ணும், படிகமும், ஆகாயமும் போலச் சார்ந்ததன் வண்ணமாய் நிற்பது.

3. முதல்வன் ஐந்தொழிற்கும் வினைமுதலாம் உரிமையுடையன். உயிர் சிவானுபவம் ஒன்றினுக்கே உரியது; சிவன் பவத்தைக்கெடுத்துப் புத்திமுத்தி பண்ணுஞ்சித்து. உயிர் அப்புத்தி முத்தியிற்படியுஞ்சித்து. இவ்வாறு பலவாற்றானும் யடிமையாதலறிக.

4. இரண்டும் ஒன்றாயணைந்தாலும் அந்நியமாயிருக்கும்.

5. புத்தி தத்துவமும் ஆன்மாவும் சித்தாயினும், புத்தி ஆன்மா வாகாது. ஆன்மாவை நோக்கப் புத்தி அசித்து. சிவனை நோக்க ஆன் மாவும் அசித்தேயாம்.

6. சீவனும் இச்சா ஞானக் கிரியையாற் சிவனை யொப்ப
ஞவனென் றிடின நாதி மலமிவற் றினை மறைக்குங்
காவல னிவன்செய் கன்மத் தளவினிற் கொடுப்பக் காண்பன்
பாவியாம் புத்தி முத்திப் பயன்கொளும் பண்பிற் றாகும். (சித்தியார். 84)

7. திருவருள் உயிர்க்கு உண்டான காலத்திலும் அஃது அவ் வுயிரின் அறிவு இச்சை செயல்களை(ச்சுட்டிறந் தறிவதாகிய தன் னியல்பை) விளக்கும் ஐந்தொழின் முதன்மையைத் தாராது. இறைவன் அத்திருவருளைத் திருமேனியாக்கொண்டு ஐந்தொழிலைப்புரிவன்.

சேதனப் பிரபஞ்சம் அவிச்சையாற் கட்டுற்றுச் சுட்டுணர்விற்றாய் நிற்பது. தோன்றியழியாது நித்தமாயது. ஆயினும் அஃது உடம்பொடு கூடி உளதாய் நின்று ஈருதல் உடையது. காரிய (அசேதன)ப் பிரபஞ்சம் சடமாவது. உருவும் அருவுமாகிய இவற்றுள் ஒன்றல்லாத ஒப்பற்ற முதற்கடவுள் இவற்றைத் தொழிற்படுத்தற்கு இவற்றின் வேறாய் உளன். அவன் அளவிலாற்றலும், முற்றுணர்வும், பேரருளும், சுதந்திர மும் முதலிய நிரதிசய குணங்களுடையன். அவன் ஒருவனே விசித்திர காரியமாய்க் காணப்படும் பிரபஞ்சத்துக்கு முதற்கடவுளாதல் அமையும். அத்தன்மையர் வேறும் பலர் உண்டெனக் கொள்ளின் மிகையாம். இலக்கணத்தால் வேறுபாடில்லாவழி இலக்கியம் பலவாதல் செல்லாது. அவ்வீறே முதல். ஈறில்லாத உயிர் பலவாறு முத்தியிலும் அவ்வீற் றுக்கு அடிமையாம்.

இவ்வுண்மை யறியாத அநேக சுரவாதிகள் முதலியோர் ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை. எனவே சங்கார கருத்தா உலகிற்கு முதற்கடவுள் என்பது போந்ததாயினும் தேர் முதலாயின பலர் கூடிச் செய்யக் காண்டலின், அத்தேர் முதலியவற்றினும் அதிவிசித்திரமான உலகம் ஒருவனாற் செய்யப்படும் என்றற்குப் பிரமாணம் இல்லை. மற்றும் அத்தன்மையராய (வேதத்துட் காரண வாக்கியங்களுட் கூறப் படும் மாயோன் முதலிய) முதற்கடவுளர் பலர் உளர் எனக்கொள்வேம் என்பர்.

தேர் முதலாயின பலராற் செய்யப்படினும் பலரும் ஒருவனது ஏவல்வழி நின்றே செய்வர். அதுபோற் சங்கார கருத்தாவின் ஏவல் வழி நின்றே மாயோன் முதலிய பலரும் தொழில் செய்வர். சுட்டுணர் வினராய நாராயணன், இரணியகருப்பன், இந்திரன், அங்கி, சூரியன் முதலியோரைக் காரண வாக்கியங் கூறியது குயவன்போல அவாந்தர காரணமாதல்பற்றியே யாகலின், அவையெல்லாம் ஆகுபெயராற் சங்கார காரணனாகிய முதற் கடவுளையே உணர்த்தி நிற்கும் எனக்கொள்க. இதனைச் சுவேதாச்சுவதரத்து மூன்றாமத்தியாயத்து மந்திரத்தானும் உணர்க என்பர் நம் ஆசிரியர் சிவஞான முனிவர்.

(1) காட்சி முதலிய அளவைகளான் தோற்றக்கேடுகளுண்மை அறியவாராமையின் பிரபஞ்சம் நித்தப்பொருளே என்பாரும், (2) தோன்றி யழியுமெனக் கொள்ளினும் இப்பொருள் வித்தின் கேட்டின் அங்குரம்போலத் தத்தம் சார்பிலே தோன்றி நின்றழிதல் இயற்கையென அமையும், செயற்கை என்றற்கு ஓர் ஏது இல்லையென் பாரும், (3) உள்பொருளாயின் அதுவே அமையும், இரண்டு உள் பொருள் கோடல் மிகையாம் ஆகலின் இறைவன் வேண்டா என்பாரும், (4) இறைவன் வேறு வேண்டுமாயினும் மாயோன் முதலிய கடவுளரில் ஒருவனே அமையும், அவரை யொழித்துச் சங்கார கருத்தா முதற் கடவுள் என்றற்குப் பிரமாணம் இல்லை என்பாரும், (5) பிரமாண முண்டாயினும் அதிவிசித்திரமாகிய பிரபஞ்சம் ஒருவனாற் செய்தல் கூடாமையின், மற்றும் அவ்வியல்பினராகிய முதற்கடவுளர் பலர் உள ராதல் வேண்டும் என்பாரும் ஆகிய பலர் கூற்றும் பொருந்தாமையைச் சுருங்கச் சொல்லி விளங்கவைத்து முதற்கடவுள துண்மை பொதுவகை யானும் சிறப்புவகையானும் கருதலளவையின் உணர்த்தியவாற்றான் பதி யுண்மைக்குப் பிரமாணங்கூறிய இம்முதற் சூத்திரத்தின் கருத்து, சங்கார காரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம் என்பது.

காஞ்சிபுரம், திரு. க. வச்சிரவேல் முதலியார் B. A., L. T., அவர்கள்

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி என்மனார் புலவர்.

### இதன் கருத்து:-

"சொல்லும் பொருளும் என இருவகைப்பட்டு விரிந்துள்ள உலகம் ஒரு முதல்வனை யுடையது; அம்முதல்வனும் எல்லாவற்றையும் ஒருங்கே

சங்கரிக்கும் ஆற்றலுடைய மகா சங்காரக் கடவுளாகிய பரமசிவனே'' என்பது முதல் நூல்களாகிய வேதாகமங்களில் கூறப்படுகின்றது. அங்ஙனம் ஆகம அளவையாற் பெறப்படும் உண்மையை இம்முதற் சூத்திரம் அநுமான அளவையான் உணர்த்துகின்றது. அளவை, பிரமாணம் என்பன ஒருபொருட்சொற்கள்.

### ஐவகைக் கலைகள்:-

ஒருநாடு பலமாகாணங்களாகப் பிரிவுபடுவதுபோல நம் காட்சிக்குட்பட்டும், படாமலும் விரிந்துள்ள பிரபஞ்சம் (உலகம்) நிவிருத்திகலை, பிரதிட்டாகலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியதீதகலை என ஐந்துகலைகளாகப் பிரிக்கப்படும். ஒருமாகாணத்திற்குள் ஜில்லாக்களும், ஜில்லாக்களுள் தாலூகாக்களும் அடங்கியிருத்தல் போல ஒரு கலைக்குள் தத்துவங்களும், அத்தத்துவங்களுள்ளே புவனங்களும் அடங்கியுள்ளன.

### கலைகளுள் தத்துவ புவனங்கள் அடங்குமாறு:-

நிவிருத்திகலையில் 'பிருதிவி' (மண்) என்னும் தத்துவம் ஒன்றும், அதில் காலாக்கினி யுருத்திர புவனமுதல் வீரபத்திர புவனம் இறுதியாகப் புவனங்கள் நூற்றெட்டும் அடங்கியுள்ளன. பிரதிட்டாகலையில் 'அப்பு' முதல் 'பிரகிருதி' வரையுள்ள தத்துவங்கள் இருபத்துமூன்றும், அவற்றில் அமரேச புவனமுதல் சீகண்ட புவனம் இறுதியாகப் புவனங்கள் ஐம்பத்தாறும் அடங்கியுள்ளன. வித்தியாகலையில் 'புருடன்' முதல் 'மாயை' வரையுள்ள தத்துவங்கள் ஏழும், அவற்றில் 'வாமன்' முதல் அங்குட்டமாத்திரன் இறுதியாகப் புவனங்கள் இருபத்தேழும் அடங்கும். ஆக இம்மூன்றுகலைகளுள் அடங்கிய தத்துவங்கள் முப்பத்தொன்றும் புவனங்கள் நூற்றுத்தொண்ணூற்றென்றும் முறையே தோன்றி விரியவும், பின்னர் அம்முறையே ஒடுங்கவும் இடமாகவுள்ள முதற்காரணம் அசுத்தமாயை எனப்படும்.

இனி, சாந்திகலையில் 'சுத்தவித்தை' 'ஈசுரன்,' 'சாதாக்கியம்' என்னும் தத்துவங்கள் மூன்றும், அவற்றில் வாமை முதல் சதாசிவம் இறுதியாகப் புவனங்கள் பதினெட்டும், சாந்தியதீதகலையில் சத்தி, சிவம் என்னும் தத்துவங்கள் இரண்டும், அவற்றில் 'நிவிருத்தி' முதல் 'அநாசிருதை' இறுதியாகப் புவனங்கள் பதினைந்தும் அடங்கியுள்ளன. இந்தத்துவங்கள் ஐந்தனுக்கும் புவனங்கள் முப்பத்துமூன்றனுக்கும் முதற்காரணம் சுத்தமாயை எனப்படும்.

இங்ஙனம் ஐந்துகலைகளு ளடங்கிச் சுத்தமாயை, அசுத்தமாயை என்பவற்றின் காரியமாகவுள்ள முப்பத்தாறு தத்துவங்களும், இருநூற்றிருபத்துநான்கு புவனங்களும், சுத்தமாயா காரியமாகிய கலைகள் ஐந்தும் பொருட்பிரபஞ்சம் எனப்படும். சொற்பிரபஞ்சம் வன்னம் (எழுத்து), பதம், மந்திரம் என மூவகைப்பட்டு ஐவகைக் கலைகளுள் அடங்கும்.

### முழுமுதற்கடவுள் பரமசிவனே:-

மேற்கூறிய ஒவ்வொரு கலையினுட்பட்ட தத்துவங்களையும், புவனங்களையும் ஒடுக்குதற்குக் காரணமான கடவுளர் வெவ்வேறுவுளர். அவருள் கீழ்உள்ள கலையினடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரத்தைச் செய்யுங் கடவுளுக்கு மேலுள்ள கலையினடங்கிய தத்துவ புவனங்களைச் சங்கரிக்கும் ஆற்றலிலது; இறுதிக் கண்ணதாகிய சாந்தியதீத கலையினடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரத்தைச் செய்யும் மகாசங்காரக் கடவுள் அவற்றோடு எல்லாவற்றையும் ஒருங்கே சங்கரிப்பர். அவரே முழுமுதற்கடவுளாகிய பரமசிவன்.

### பரமசிவன் வேறு, குணியுருத்திரர் வேறு:-

இங்குக் கூறிய பரமசிவன் அயன்மாலோடு ஒருங்குவைத்தெண்ணப்படும் குணியுருத்திரர் அல்லர். சித்தாந்த சைவத்தின் இறைவன் எனப்பேசப்படுபவர் முக்குணமுங் கடந்தவராய், அயன், மால் உருத்திரர் என்னும் மூவர்க்கும் முதல்வராயுள்ளவர். 'இவ்விறைவனையே உலகு தனக்கு முதலாக வுடையது' என முதனூல்கள் கூறுகின்றன. இவ்வுண்மையை அநுமான அளவையான் வலியுறுத்தி யுணர்த்துதலே முதற்சூத்திரத்தின் கருத்தாம். முக்குணங்களாவன சத்துவம், ராசதம், தாமதம் என்னும் மாயாகாரியமாகிய குணங்கள்.

இதுகாறும் கூறிய எல்லாப் பொருளும் ஆசிரியர் மெய்கண்டதேவநாயனார் தாமே சூத்திரத்திற்கு உரைத்தருளிய கருத்துரையான் விளங்கும். ஆசிரியர் முன்னர் சூத்திரத்தை வைத்து, 'என்பது சூத்திரம்' எனக்காட்டிப் பின்னர் அதன் கருத்துரையை அருளிச்செய்கின்றார்.

ஆசிரியர் அருளிச்செய்த கருத்துரை,

"ஏன்னுதலிற்றோவெனின், சங்காரகாரணனாயுள்ள முதலையே முதலாக வுடைத்து இவ்வுலகம் என்பது உணர்த்துதல் நுதலிற்று" எனவரும்.

இதனுள், 'என் நுதலிற்றோ எனின்' என்று '(இச்சூத்திரம்)' "எதனைக் கருத்திற்றோ என்றால்" எனப்பொருள்படும். நுதலுதல்—கருது தல். இங்ஙனம் வினாவி எடுத்துக்கொண்டு, மேல் அவ்வினாவிற்கு விடை கூறுகின்றார். அதனை "இவ்வுலகம் சங்கார காரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து என்பது உணர்த்துதல் நுதலிற்று" என உரைநடை செய்து கொள்க. இதன்பொருள்:— 'அவன் அவள் அது என்றிவ்வாறு சுட்டியுணரப்படும் உலகம் மகாசங்காரக் கடவுளாகிய பரமசிவனை முதற்கடவுளாக வுடைத்து என வேதாகமங்களுட் கூறப்படுவதனை அநுமான அளவையான் உணரும்படி செய்தலைக் கருதிற்று இச்சூத்திரம்' என்பது.

இவ்வுலகம் = இ + உலகம் = (அவன் அவள் அது என்றிவ்வாறு) சுட்டியுணரப்படும் உலகம். இ—என்னும் சுட்டெழுத்தின் பொருள் ஊன்றி யுணரற்பாலது.

பொதுப்படச் 'சங்கார காரணனை' என்ற அளவில் விடாமல் "சங்கார காரணனாயுள்ள முதலையே" எனமிகுத்துக் கூறியது 'இங்குக் கூறிய சங்கார காரணன் சுத்த மாயா புவனமுடிய எல்லாம் ஒருங்கே சங்கரிக்கவல்ல பரமசிவன்' எனவும், 'இவர்வேறு; பிரகிருதி புவனம் வரை சங்கரிப்பவராய் அயன்மாலோடு உடன்வைத் தெண்ணப்படுபவ ராய் உள்ள குணியுருத்திரர் வேறு' எனவும் வேறுபாடு உணர்த்து தற்பொருட்டு.

முதலாக உடைத்து—முதற்கடவுளாக உடைத்து. என்பது—என்று (வேதாகமங்களுட்) கூறப்படுவதனை. உணர்த்துதல்—அநுமான அளவை யான் வலியுறுத்தி யுணரச்செய்தல்.

இனி "முதலையே முதலாக வுடைத்து" என்றதனால் "முதலை முத லாக வுடைத்து" என்னும் விதிப்பொருளும் (Assertion), "பிறரை முதலாக வுடைத்தன்று" என்னும் விலக்குப் பொருளும் (Negation) உடன்கொள்ளுதல் வேண்டும். 'முதலையே' என்றதிலுள்ள ஏகாரம் விதிப்பொருளை முற்படக்கொண்டு, விலக்கையும் தெரிவிக்கும் பிரிநிலை. இதனை இலக்கண நூலார் இயைபின்மை நீக்குதற்கும் (அயோக வியவச் சேதம்), பிறிதினியைபு நீக்குதற்கும் (அந்யயோக வியவச் சேதம்) பொதுவாய் நின்ற பிரிநிலை என்பர். இங்ஙனங் கொள்ளவே, இச் சூத்திரம் 'இவ்வுலகம் மகா சங்காரக் கடவுளாகிய பரமசிவனை முதற் கடவுளாக வுடைத்து' என எய்தாதனை எய்துவித்தலும், 'அது பிறரை

முதற்கடவுளாக வுடைத்தன்று' என எய்தியதொரு பருங்கு மறுத்தலும் உடையதென்பது பெறப்படும். அது சூத்திரத்தின் பொருளுரைப்ப விளங்கும்.

### உரைவகை:-

பொழிப்புரை இருவகைப்படும். ஒன்று சூத்திரத்தின் பொருளைப் பிண்டமாகக்கொண் டுரைப்பது. மற்றொன்று சூத்திர பாடத்தைக் கண்ணழிவுசெய்து உரைத்துக்கொண்டு, அதன் பல கூறுகளை ஏது, எடுத்துக்காட்டு (உதாரணம்) என்பவற்றோடு கூட்டி, அவை ஒன்றோ டொன்று மாறுபடாமை காட்டல். இவற்றுள் பின்னையது வார்த்திகப் பொழிப்பு எனப்படும். ஆசிரியர் மெய்கண்டதேவ நாயனார் உரைத் தருளியது வார்த்திகப்பொழிப்பேயாகும். அதுபற்றி ஏனைய பிண்டப் பொழிப்பு உரைத்துக்கொள்ளுதல் எளிதாமாகலின், அதனை, "இதன் பொழிப்பு உரைத்துக் கொள்க" என, உரைத்துக்கொள்ளுமாறு ஆணை தந்தருளினார்.

### சூத்திரத்தின் உரைநடை:-

சூத்திரத்தை, "அவை மூவினைமையின் தோற்றிய திதியே (ஆம்); (அது தோன்றுங்கால்) ஒடுங்கி (யினின்றும்) மலத்து (ஆல்) உளதுஆம். (ஆகலின்) அந்தம் (ஏ) ஆதி என்மனார் புலவர்" என உருபுகள் முதலியன விரித்து உரைநடை செய்து கொள்க. "அவன் அவள் அது எனும்" என்றது "அவை" என்றதனாற் குறிக்கப்பட்ட உலகத்தொகுதிக்கு அடை (விசேடணம்).

### சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு:-

அவன், அவள், அது என்றிவ்வாறு சுட்டியறியப்படும் உலகத் தொகுதி தோன்றல், நிற்றல், மறைதல் (உற்பத்தி, திதி, நாசம்) ஆகிய முத்தொழிற் படுந்தன்மையையுடையது; உடையதாகலின், அது (தானே தோன்றாது) ஒருவன் தோன்றும்படிச் செய்யத் தோன்றிய உள்பொருளேயாம். அஃதெங்கிருந்து தோன்றியதோவெனின், தான் ஒடுங்குதற்கு இடமாயிருந்த மாசங்காரக் கடவுளினின்றும், முன் ஒடுங்குங்கால் மலந்தீர்ந்து ஒடுங்காமையால் அது தீர்தற்பொருட்டு மீளத்தோன்றும். இங்ஙனமாகலின், அந்தத்தைச்செய்யுங் கடவுளே முதற்கடவுளாம் என அறிஞர் கூறுவர் என்பது.

## சூத்திரத்திலுள்ள சில சொற்களையும் சொற்றொடர்களையும் பற்றிய சில குறிப்புக்கள்:-

"அவை" என்ற சொல் 'தோகுதி' எனப்பொருள்படும்; படவே 'உலகத்தொகுதி' என உரைக்கப்பட்டது. உலகம் சொல்லும், பொருளும் என இருவகைப்படும். சோல்லுலகம் வன்னம் (எழுத்து), பதம் (சொல்), மந்திரம் என மூவகைப்படும் என்பதும், போருள் உலகம் கலை, தத்துவம், புவனம் என மூவகைப்படும் என்பதும், இவற்றிற்கு முதற்காரணம் சுத்தமாயை, அசுத்தமாயை என இருவகைப்படும் என்பதும் மேலே உரைக்கப்பட்டன.

மூவினைமை—மூவினையுடைமை; உடைமை—உடைத்தான் தன்மை. வினை—தொழில். மூவினையாவன தோன்றல், நிற்றல், மறைதல் என்பன. காணப்படும் உலகத்திற்கு இப்பொழுது 'நிற்றல்' அல்லது 'இருப்பு' என்னும் ஒரு தொழில்மாத்திரையே காணப்படுகிறது. ஆனால் ஊன்றி நோக்கின் 'இருப்பு' ஆகிய இவ்வொருதொழில் நிகழும்போதே, இதனோடு ஏனைய தோன்றல், மறைதல் என்பவற்றையும் உடன் நிகழக்காண்கின்றோம். அஃதாவது உலகம் முழுவதும் ஒருங்கே தோன்றவும், ஒருங்கே அழியவும் காணவில்லையாயினும் அதன் உறுப்புக்கள் இடையறாது தோன்றல் , நிற்றல், மறைதல் என்னும் மாறுதல்களை யடையக்காண்கின்றோம். இம்மாறுதல்களில்லையேல் உலகம் நடைபெறாது. எடுத்துக் காட்டாக ஞாயிற்றின் வெப்பத்தால் கடல் நீர் மேகமாகி நிலத்தில் மழையாக வருதலும், அந்நீர் மீளவும் ஆறுகள் வழிச்சென்று கடலில் அடங்குதலும், தாவரங்களின் அழிவு விலங்குகளின் வளர்ச்சிக்கும், விலங்குகளின் அழிவு தாவரங்களின் வளர்ச்சிக்குமாக மாறிமாறி ஒன்றற்கொன்று உபகாரமாதலும், பெரிய சாம்ராஜ்யங்கள் தோன்றுவதும், வளர்வதும், பின்னர் மாய்ந்தொழிந்து போவதும் கண்கூடாக அறியப்படுகின்றன. இவற்றைக் கருதிப்பார்க்கின் உலகிலுள்ள பொருள்கள் சாதிபற்றி (வகைபற்றி) ஒருங்கே ஒவ்வொரு காலவிசேடத்தில் தோன்றுதலும், ஒருங்கே நிற்றலும், ஒருங்கே அழிதலும் புலனும். புலனுகவே, உலகம் முழுவதும் சடத்துவசாதி (அறிவில்லாதாதலாகிய பொதுத் தன்மை)யுடைய ஒரே தொகுதியாதலின், அது ஒருங்கே தோன்றுதற்குரிய காலவிசேடமும், ஒருங்கே அழிதற்குரிய காலவிசேடமும் உடையதென்பதை ஆய்ந்து உணர்ந்து கொள்ளுதல் கூடும். இங்ஙனம் உலகிற்கு 'இருப்பு' ஆகிய தொழிலின் உண்மை நன்கு விளங்கிக் கிடப்பதென்றும், ஏனை இருதொழிலும் அங்ஙனம் விளங்க அறியக்கூடவில்லை யாயினும் காட்சிபற்றி யாய்ந்து துணியப்படும் என்றும் உணர்த்தவே ஆசிரியர்

"மூவினையின்" எனச் சூத்திரஞ் செய்யாமல் "மூ வி னை மை யி ன்" என(த்தன்மையின் வைத்து)ச் சூத்திரஞ் செய்தனர். "மூவினையின்" என்றே சூத்திரஞ் செய்திருப்பின், "உலகம் முத்தொழி லுடைத்தாகலின்" என உரை செய்வோம். செய்யின், "உலகத்தின்கண் இப்பொழுது நிற்றல் அல்லது இறப்பு என்னும் ஒருதொழிலையே காண்கின்றேமேயன்றி ஏனையிருதொழிலையும் கண்டிலமே என ஆசங்கை நிகழும். "மூவினை மையின்" எனத் தன்மையின் வைத்தோதினமையின் அவ்வாசங்கை நிகழ் தற்கு இடமில்லை. ஏனெனில், உலகின்கண் முத்தொழிலும் ஒருங்கே காணப்படவில்லையாயினும், அதற்கு, மேற்கூறியவாற்றான் ஏனையிரு தொழிலும் உள என்பது துணியப்படுமாகலின், முத்தொழிலுடைத்தாந் தன்மை எப்போதும் உண்டு ஆகலின், எடுத்துக்காட்டாக, பிராமண குலத்திற்பிறந்து உபநயனமாகாத சிறுவனைச் சாத்திரவிதிப்படி "பிரா மணன்" என்றல் பொருந்தாதாயினும் "பிராமணனுந் தன்மையுடையவன்" என்றல் குற்றமுடைத்தன்றாதல் அறிக. இத்தகைய நுட்பங்கள் எண்நூல் (தருக்கநூல்) உணர்ச்சிகொண்டு அறிந்து இன்புறற்பாலன.

'தோன்றிய' என்னுது 'தோற்றிய' என்றதன் நுட்பமும் அறிந்து கொள்ளற்பாலது. தோற்றிய—ஒருவன் தோன்றும்படிச்செய்ய, அதனால் தோன்றிய—ஒருவனால் தோற்றப்பட்ட.

திதி—உள்பொருள்; அஃதாவது தோன்றல், நிற்றல், மறைதல் என்னும் நிலைவேறுபாடுடைய, என்றும் உள்பொருள் கயிற்றின்கண் அரவுபோன்று இப்பொருள் அன்று என்றபடி. எனவே உலகத்தில் விளங்கித் தோன்றிய ஒரு பொருள் அழிந்தது என்றால் அஃதில்லையாய்ப் போயிற்று என்பதில்லை; முன்னர்க் காரிய ரூபமாய் விளங்கித் தோன்றிய பொருள் காரணரூபமாய் (அவ்வக்காரியமாய்ப் பரிணமித்தற்குரிய சக்தி ரூபமாய்) விளங்காமலுள்ளது என்பதே பொருள்.

ஒடுங்கி—சங்காரக்கடவுள் (ஒடுங்குதற்கு இடமாய் இருந்த கடவுள்).

'அந்தம் ஆதி' என்ற தொடரில் 'அந்தமே ஆதி' எனப் பிரிநிலை ஏகாரத்தை விரித்து உரைத்துக்கொள்ளுதல் வேண்டும். இதனை அறி வுறுத்தவே ஆசிரியர் கருத்துரையுள் "முதலையே முதலாகவுடைத்து" என ஏகாரம் விரித்துரைத்தார்.

புலவர்—அறிஞர்; புலம்—அறிவு, (ஈண்டு) அளவை நூலறிவு

"என்மனார் புலவர்" என்றமையின், இக்கருத்து வேதாகமங்களுட் கூறப்பட்டுத் தொன்றுதொட்டு அவற்றின் பொருள்களை அளவைகளானும் பொருந்துமாற்றானும் சிந்திப்பார் யாவரானும் ஒப்புக்கொள்ளப்பட்டு வருவது என்பது உணரப்படும். அதன் உண்மை இறந்த காலத்தும், நிகழ்காலத்தும் நிகழ்ச்சிபற்றி அறியக்கிடத்தலின், அஃதெதிர் காலத்தும் உளதாத லுணர்ந்து 'முக்காலத்தும் நிலைபேறுடைத்து' என் றறிந்துகொள்ளுதற் பொருட்டு"என்மனார்" என எதிர்காலச் சொல்லாற் கிளந்தார். என்மனார்—என்பர்.

"அவன் அவள் அது எனும்" என்ற அடையை ,அவயவப் பகுப்புடைத்தாய் உள்ள' எனவும், 'சடமுமாய்ப் பலவுமாய் உள்ள' எனவும் '(சிறப்பியல்பு பற்றி அநுபவமாய்ச்) சுட்டியறியப்படுவதாயுள்ள' எனவும் மூன்று வகையாகப் பொருள்கொள்ளும்படி ஆசிரியர் அமைத்தருளினர். அருளவே, அம்முப்பொருளும்பற்றி, உலகத்திற்கு முத்தொழிலுண்மை சாதித்தற்கு மூன்று ஏதுக்கள் கிடைக்கும். அவற்றுள், முதல் ஏதுவை விட இரண்டாம் ஏதுவும் இரண்டாம் ஏதுவை விட மூன்றும் ஏதுவும் வலியுடையன. மூன்றும் ஏதுவே மேற்காட்டிய அடையின் உண்மைப் பொருளாய்ச் சித்தாந்தமாயுள்ளது. மாணுக்கர்க்கு உணர்வு பெருகுதற் பொருட்டு இங்ஙனம் உய்த்துணரவைத்து ஓதியதன் நுட்பங்கள் சிவஞானமாபாடியத்தில் விளக்கப்பட்டுள்ளன.

### சூத்திரத்தின் அதிகரணங்கள்:-

இனி இச்சூத்திரத்தில் விவாதாமிசங்களாய் (Issues) உள்ளவை மூன்று. அவை (1) 'உலகத்தொகுதி முத்தொழின்மையுடையது,' (2) உடையதாகவே, அஃது உள்பொருளாய், ஒருவனுல் தோற்றப் பட்டுத், தோன்றுங்கால், ஒடுங்கியினின்றும் தோன்றும்,' (3) 'இங்ஙனமாகலின் அந்தத்தைச் செய்யும் கடவுளே முதற்கடவுள், ஏனையரல்லர்' என்பன ஆம். இவை முறையே "அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின்" "தோற்றிய திதியே ஒடுங்கி உளதாம்", "அந்தம் ஆதி என்மனார் புலவர்" என்ற சூத்திரப் பகுதிகளின் பொருள்களாம். ஆதலினுல் இச்சூத்திரம் மூன்று அதிகரணங்களை உடையது எனச் சொல்லப்படும். அதிகரணம், கூறு, பகுதி என்பன ஒருபொருட் சொற்கள்.

இவ் அதிகரணங்கள் மூன்றும் முறையே ஒன்றற்கொன்று ஏதுவும் பயனுமாய் ஒருபொருண்மேல் வருகின்றன. அஃதாவது முதலதிகரணம்

இரண்டாவதனைச் சாதிக்கும் ஏதுவாக இரண்டாவது அதன் பயனாக வும், இரண்டாவது மூன்றாவதனைச் சாதிக்கும் ஏதுவாக மூன்றாவது அதன் பயனாகவும் 'வந்து உலகத் தொகுதி மாசங்காரக் கடவுளை முதற் கடவுளாக உடையது' என்னும் கருத்தைப் பெறுவிக்கின்றன. இங்ஙனம் வருதலின், அவை ஒரு சூத்திரத்தாற் கூறப்பட்டன.

ஆசிரியர் சூத்திரத்தை இங்ஙனம் அதிகரணங்களாகப் பிரித்து எடுத்துக்கொண்டு, ஒவ்வோர் அதிகரணத்தும் தம்மாற் கூறப்படும் பொருளும் (Proposition) அதன்கண் ஐயமும், அதற்குப் பிறர் கூறும் பக்கமும் (Views advanced by others requiring to be refuted), அதனை மறுத்துரைக்கும் சித்தாந்தத் துணிபும் (Refutation and final Judgment), இயைபும் (Sequence) என்ற ஐந்தும் தோன்றும்படி வார்த்திகப் பொழிப்பை அருளிச் செய்திருக்கின்றார்.

எனவும்,

[சென்னை, பாரிப்பாக்கம் வித்துவான், திரு. கண்ணப்ப முதலியார் அவர்கள்.]

ஞானசம்பந்த தேசிக மூர்த்தியின் திருவருள்விலாசப் பரவெளியாக விளங்குகின்ற இப்பேரவைக்களத்தின்கண், என்னால் விரிவுரை செய்யப் படுமாறு அறிவிக்கப்பட்ட பொருட்பகுதியாவது சிவஞானபோத முதற் சூத்திரமாகும்.

அம்முதற் சூத்திரத்தினைப்பற்றி முதற்கட்பேசிய நண்பர் அவர்கள் அச்சூத்திரப்பொருள் அனைத்தினையும் ஒருவாறு தொகுத்துரைத்தார்கள். இரண்டாவதாகப் பேசிய அன்பர் அவர்கள், இச்சூத்திரப் பொருள் பற்றிப் பேசவிருக்கும் அன்பர்கள் ஒவ்வொருவரும் இவ்வாறே பேசு வதாயின், அது கூறியது கூறலாய் முடியுமாகலின் இதனைப் பல பகுதி களாகப் பிரித்துக்கொண்டு ஒவ்வொருவரும் ஒவ்வொரு பகுதியை எடுத் துரைத்தலே நலமாமெனவும், பின்பேசவருபவர்கள் இம்முறையைப் பின் பற்றியே பேசுவார்களென நம்புவதாகவும், தான் அச்சூத்திரத் தின் கருத்துரை வார்த்திகத்தை எடுத்துரைத்துப் பின் கூடுமாயின் முதலதிகரணத்தையும் எடுத்து விளக்குவதாகவும் கூறித் தாம் அக்கருத்துரை வார்த்திகத்தினை எடுத்துரைத்தலோடு நின்றார்களாதலின் யான் இப்பொழுது எடுத்துரைக்க வேண்டுவது முதற் சூத்திரத்தின் முதலதிகரணமேயாகும்.

அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின் தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம் அந்தம் ஆதி என்மனார் புலவர்,

என்னும் இச்சூத்திரம், அவன் என்றும், அவள் என்றும், அது என்றும் இவ்வாறு பகுத்துப் பலவாராய்ச் சுட்டியுணரப்படும் சொல்லும் பொருளுமாய இரு கூற்றும் பிரபஞ்சத் தொகுதி, தோற்றம், நிலை, இறுதி என்னும் முத்தொழிலுடைமையால் ஒருவனுல் தோற்றப்பட்டதாய உள்பொருளேயாம். அது தோன்றுங்கால், தானெடுங்குதற்கு ஏதுவாய் நின்ற கடவுளினின்றும் சகசமலம் நீங்காமையால் அது நீங்குதற்பொருட்டு மீளத்தோன்றுவதாம். இவ்வாருகலின், சங்காரத் தொழிலைச் செய்யும் கடவுளே உலகிற்கு முதற்கடவுள், ஏனையோர் அன்னுரல்லர் எனக்கூறுவர் அளவை நூலுணர்ந்தோர், என்னும் பொருளை உடையது.

இவ்வுலகம் சொற்பிரபஞ்சம், பொருட் பிரபஞ்சம் என இரு வகைப்படுவதாம். சொற்பிரபஞ்சம் வன்னம் பதம் மந்திரம் என மூன்ருகவும், பொருட் பிரபஞ்சம் கலை தத்துவம் புவனம் என மூன்ருகவும் பகுக்கப்படுகின்றன.

சொல்வடிவும் பொருள்வடிவுமான இந்த ஆறும் அத்துவாக்கள் எனப்படுவதாம். இவற்றுள் வன்னங்கள், பதங்கள், மந்திரங்கள் என்னும் மூன்றும் புவனங்களில் தோன்றும் உடல்களைப்பற்றி நிற்கும்; புவனங்கள் தத்துவங்களைப்பற்றி நிற்கும்; தத்துவங்கள் கலைகளைப்பற்றி நிற்கும்; அக்கலைகள் நிவிர்த்திகலை, பிரதிட்டாகலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியதீதகலை என்ற ஐவகைப்படுவதாம். இவற்றுள் அறிவால் அறியப்படுகின்ற எல்லா உலகங்களும் அடங்குகின்றன. இவ்வைங் கலைகளுட்பட்ட ஐவகைச் சங்காரத்துள் இறுதிக்கண்ணதாகிய மாசங் காரத்தைச் செய்யும் வினைமுதலாயுள்ள முதல்வனையே தனக்கு முதற் கடவுளாக வுடைத்து இவ்வுலகம் என்ருர்கள். ஒடுங்கி என்பது பெயர் என்றும், அந்தத்தைச் செய்யுங் கடவுளை அந்தமென்பது உபசார மென்றும் அறிதல் வேண்டும். இதனுல் உலகம் பல ஆமாறும் அவ் வுலகின் தலைவர் பலராமாறும், அவ்வுலகங்களும், அவர்களும் எல்லாம் சங்காரத்தின் ஒடுங்குமாறும் குறிக்கப்பட்டு, அங்ஙனம் ஒடுங்கிய அவை கள், 'யாது யாண்டொடுங்கும் அஃது அதனில் உற்பத்தியாம்' மண்ணிற் குடம்போலும் என்ற முறைப்படி, அவ்வொடுங்கியினின்றும் மீள உளதாமாறும் விளக்கப்பட்டன. அங்ஙனம் மீள உளதாதற்குக் காரணம் சகசமலம் பரிபாகமடையாமை என்பதும் காட்டப்பட்டது. மலம் என்னும் சொல்லே இவ்வெல்லாவற்றிற்கும் உயிராக இச்சூத்திரத்தின் கண் துலங்கிக்கொண்டிருக்கின்றது. அச்சொல் லொன்றில்லை யாயின் இச்சூத்திரப்பொருள் எல்லாம் நிலைகுலைந்துபோம் என்றறிதல் வேண்டும்.

இப்பொருள்களுள்ளே அவன் என்றும், அவள் என்றும், அது என்றும் இவ்வாறு பகுத்துப் பலவாய்ச் சுட்டியுணரப்படும் சொல்லும் பொருளுமாய இருகூற்றுப் பிரபஞ்சத்தொகுதி, தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழிலுடையது என்னும் பகுதியே முதலதிகரணமாகும். இது, 'ஈண்டு உளதாய் ஒருவன், ஒருத்தி, ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்து என்றது' என மெய்கண்ட தேவ பரமாசாரியரால் அறிவுறுத்தப்பட்டது.

ஈண்டதிகரணமென்பது தன்னாற் கூறப்படும் பொருளும், அதன்கண் ஐயப்பாடும், அதற்குப் பிறர் கூறும்பக்கமும், அதனை மறுத்துரைக்கும் சித்தாந்தத்துணிபும், இயைபும் என்னும் இவற்றது நிலைக்களமாம்.

ஆசிரியர் மெய்கண்டதேவர் ஒவ்வொரு சூத்திரத்தின் கண்ணும் கடா விடைகளான் விவாதித்து நிச்சயிக்கவேண்டிய பொருள்கள் இன்னின்னவைகளேயாம் என வரையறுத்து விடையிறுத்து இவ்வதிகரணங்களை வகுத்துரையாது விட்டிருப்பாராயின் இப்பொழுது இச்சிவஞான போதத்தான் நாமறிந்தனுபவிக்கும் பொருள்கள் ஒருவராலும் அறியற்பாலனவல்லவாம். சகலாகமங்களையும் கற்றுத் தெளிந்து சகலாகமபண்டிதரெனச் சிறப்புப்பெயர் பெற்றுப் பல சான்றோர்களுக்கு ஆசிரியராய்த் திகழ்ந்திருந்த ஒரு பெரியாரை அவர் தம் மாணவருள் ஒருவரது அருண்மகவிற்கு மாணவராய்ச் சரண்புகச்செய்தது இவ்வதிகரண வார்த்திகங்களாம் உறுப்புக்களுடன் துலங்கும் சிவஞானபோத மெய்ப்பொருளாம் என்பதனை நாம் உய்த்துணரவேண்டும்.

> ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்
> நீறாக முத்திநிலை நிற்போர்க்குப்—பேறாகப்
> பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே
> யோர்விருத்தப் பாதிபோ தும்.

என இவ்வாறினைத்து முதற்குரவர் போற்றிப் புகழ்ந்த சிவஞானசித்தியாரால் போற்றிப் புகழப்படுவது இவ்வார்த்திகப் பொழிப்பொடு துலங்கும் செந்தமிழ்ச் சிவஞானபோதமே என்று நாமுணர்தல்வேண்டும்.

இவ்வதிகரணம் காணப்பட்ட இவ்வுலகம் ஒருவனென்றும், ஒருத்தியென்றும், ஒன்றென்றும் இவ்வாறு அவயவப்பகுப்புடைத்தாயும், பலவேறு வகைத்தாய்ச் சடமாயும், 'மெய்யாகச் சுட்டியறியப்படுவதாயும்

இருத்தலின் தோன்றி நின்று அழிதலை உடையது என நிருணயஞ் செய்கின்றது.

காணப்பட்ட இவ்வுலகம் தோற்றம், நிலை, இறுதி என்னும் முத் தொழில் உடைமையால் அத்தொழிலைச் செய்வான் ஒருதலைவனை உடையது என தலைவனது உண்மை இத்தொழிலால் நிச்சயிக்கப்படு வதால், இத்தொழில் உண்டோ இல்லையோ என்னும் ஐயத்தினை நீக்கி இம்முத்தொழிலும் உண்மையாக உண்டு என்பதனை நிச்சயிப்பதே இவ் வதிகரணத்தாற் போந்தபொருளாம்.

இவ்வுலகம் மண், நீர், நெருப்பு, வளி, வெளி என்ற ஐந்து முதற் பொருள்களின் சேர்க்கையாலாயது. இவையனைத்தும் சடப்பொருள்களாம். இச்சடப்பொருள்களின் தொடர்புடைய உலகில் அறியப்படும் சித்தும், பொருள்களும் கலந்ததே இவ்வுலகமாம். இங்ஙனம் கூறப்பட்ட இவ் வுலகம் அவன், அவள், அது என்னும் மூன்று பகுப்புடையதாகக் காணப் படுகின்றது. இவற்றுள் அவன், அவள் என்பன சித்துலகினையும், அது என்பது சட உலகினையும் உணர்த்தாநிற்கின்றன. இதனால் இது அவயவப் பகுப்புடைத்தாயும், பல்வேறு வகைத்தாய் சடமாயும், சுட்டியுணரப்படுவ தாயுமிருப்பது தெளியப்படுகின்றது. எல்லையுடைய பொருள்கள் எல்லாம் சுட்டுப் பொருள்களேயாம். அதனை உணர்த்தவே ஆசிரியர் இவற்றை அவன், அவள், அது எனச் சுட்டிப் போதுவாராயினர்; எனவே இவ்வுலகம் தோன்றி நின்றழிதலை உடையது என்பது சாதிக்கப்பட்டது.

மீமாஞ்சகரும் உலகாயதரும் நித்தமாய்க் காணப்படும் பிரபஞ்சம் தோற்றம், நிலை, இறுதி என்னும் முத்தொழில் உடைத்தென்றால் பொருந் தாது எனக் கூறுவர்.

உலகில் தினமும் எத்தனையோ உயிர்கள் தோன்றுகின்றன; எத்தனை யோ உயிர்கள் மறைகின்றன. இவ்வாறு உயிர்கள் தோற்றமுறுவதனையும், அவைகள் மறைவெய்துவதனையும் நாம் அவ்வுயிர்களது உடல்களாகிய சடப்பொருள்களாலேயே உணர்கின்றோம். இதனால் சடப்பொருள்கள் புதிது புதிதாகத் தோற்றமுறுவதும் அங்ஙனம் தோன்றிய அவைகள் காலகதியில் அழிவெய்துவதும் கண்கூடா யறியப்படுதலின் நம்மாற் காணப்படும் திதி என்னும் நிலைத்தொழில் தோற்றம் இறுதி என்னும் இரண்டு தொழிலினையும் தனக்குத் துணைக்காரணமாகக்கொண்டே நிகழாநிற்கின்றது என்பது தெளியப்படுகின்றது. இதனையே 'தோற்ற

மும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்தலின், என்னும் ஆசிரியர் திருவாக்கு விளக்குவதாயிற்று.

காரியப்பாடாக இருப்பன எல்லாம் ஒருகாலத்து ஒருவனல் தோற்றப்பட்டதேயாம் என்பது எப்பொருளும் ஒப்புவதொன்ரும்; எனவே காரியப்பாடாகக் காணப்படும் இவ்வுலகம் இதற்குரிய காரணப் பொருளினின்றும் ஒருகாலத்து உண்டாயிருத்தல் வேண்டும், காரண மின்றிக் காரியம் தோன்றமாட்டவாம். உள்ளது போகாது, இல்லது வாராது என்பது சத்காரியவாதம் (Mattar can neither be created nor be destroyed.) என்றும் தற்காலத்திய விஞ்ஞானக்கலை இதனை நன்குவலியுறுத்துகின்றது. 'அபாவமான சூனியப் பொருளுக்குக் குணமுந் தொழிலும் இல்லையாம்' என்பது தருக்க சாத்திரம். இங்கே குணமும் தொழிலும் காணப்படுதலின் இது சூனியப் பொருளாகமாட்டாது. இதனனே ஆசிரியரால் 'ஈண்டு உளதாய்' எனக்குறிக்கப்பட்டது. அதுவே திரிபையங்களான் அன்றி மெய்யாகச் சுட்டி அறியப்பட்ட பிரபஞ்சம் என மாபாடிய காரரால் விளக்கப்பட்டது.

ஒன்றை மற்றென்ருகப் பார்த்தல் திரிபு அல்லது விபரீதமாம்; ஒன்றை அதுவோ இதுவோ எனச்சந்தேகித்தல் ஐயமாம். முயலின் செவியைக் கொம்பெனப்பார்த்தல் திரிபு ஆம்; மாலைப்பொழுதில் வளைந் திருத்தல் முதலியவற்றைக்கொண்டு கயிற்றைப் பாம்போ கயிருே என எண்ணுதல் ஐயமாம். இங்ஙனம் திரிபாகக் காண்பதும் ஐயமாகக் காண்பதும் ஆராய்ந்த பொழுது இல்லையாய் முடியும். உலகம், இங்ஙனம் சந்தேகப்பொருளாதலும் விபரீதப்பொருளாதலும் இன்றி உண்மை யான் உணரப்படுகின்றது. எனவே இதன்கட் காணப்படுகின்ற தொழில் மூன்றும் உண்மையேயாம் என்பது சாதிக்கப்பட்டது. அற்றுயினும் ஒன்று தோன்ற ஒன்று நிற்ப ஒன்றழிவதன்றி ஒருங்கேதோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழிதல் இல்லையேல் எனின் காலவிசேடத்தில் வித்து முதலிய பொருள்கள் ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழிவது கண்கூடாதலின் ஓரினப் பொருள்களாலாய இவ்வுலகிற்கும் அத்தகைய காலம் என்றேனும் உண்டாம் என்றறிதல் அறிவுடையார் செய்கையாம். ஆதலின் அவயவப் பகுப்புடைத்தாயும், பலவேறு வகைத் தாய்ச் சடமாயும், சுட்டியறியப்படுவதாயும் காணப்படும் இவ்வுலகம் தோன்றி நின்றழியும் முத்தொழிலுடையதாமென்பது நிலைநாட்டப்பட்ட தாம். எனவே அம்முத்தொழிற்குரிய முதல்வன் ஒருவன் உண்டு என்பது தெளிபொருளாம்.

எனவும்,

[தாம்பரம், திரு. P. சமரபுரி முதலியார் அவர்கள்.]

*மெய்யன்பர்களே!*

ஈண்டு அடியேன் பேச முன்னிற்கும் பொருள், சிவஞானபோதத்து முதற்சூத்திரத்துள் இரண்டாம் அதிகரணத்துள் மூன்றும் பகுதியாகும்:—

அது, "தோற்றிய திதியே ஒடுங்கி உளதாம்" என்பதில் "ஒடுங்கி உளதாம்" என்பது.

இவ்விரண்டாம் அதிகரணம் முக்கூற்றது (1) தோற்றிய (2) திதியே (3) ஒடுங்கி உளதாம் என்பது. எனக்கு முன் பேசியவர்கள் அவன் என்றும், அவள் என்றும், அது என்றும் இவ்வாறு பகுக்கப்படுகின்ற அவயவப் பகுப்புடையதாயும், அப்பகுப்பு ஒவ்வொன்றும் வேறு வேருதலினுல் பல்வேறு வகைத்தாயும், சடமாயும், உண்மையாய்ச் சுட்டி அறியப்படுவதாயும் உள்ள சொற் பிரபஞ்சம் பொருட் பிரபஞ்சம் எனும் இருவகை உலகங்களும் பிறப்பு, இருப்பு, இறப்பு என்னும் மூன்று தொழில்களை யுடையன; என்றும், அவ்வாறு மூன்று தொழில்படக் காணப்படுகின்ற அவ்வுலகங்கள் அறிவில் சடப்பொருள் ஆனபடியால், அவை தாமே தொழிற்படா; ஆகையால் அவற்றைத் தொழிற்படுத்தற்கு ஒரு கருத்தா வேண்டுமென்றும்; அதனுல் அவை ஒருவனுல் தோற்றுவிக்கப்பட்ட உள்பொருளேயாம் என்றும்; மேற்கோள், ஏது, திருட்டாந்தங்களினுல் வலியுறுத்திப் பேசினுர்கள்.

ஆகையால், அவ்விரண்டாம் அதிகரணத்தில் அடியேன் பேச நிற்பது "ஒடுங்கி உளதாம்" என்பது. அது "ஒடுங்கியின் நின்றும் உளதாம்" என விரியும். அதாவது, ஒருகருத்தாவினுற் ருேற்றுவிக்கப் பட்ட உள்பொருளாகிய அப்பிரபஞ்சத் தொகுதி, சகசமலம் எனப்பேசப் படும் ஆணவமலம் நீங்காமையால், அது நீங்குதற்பொருட்டு, மீளத் தோன்றும்; மீளத் தோன்றுங்கால், அப்பிரபஞ்சத்தொகுதி ஒடுங்குதற்குக் காரணமாயிருந்த கடவுளினின்றும் மீளத் தோன்றுவதாகும் என்பது.

எனக்குமுன் பேசியவர் "நிலையுதற்ருெழி"லொன்றே நம்மால் பார்க்கத்தக்கது; மற்ற "தோன்றுதல்" "அழிதல்" ஆகிய இருதொழில் களும் நம்மால் பார்க்கத்தக்கனவல்ல; அந்த நிலையுதற்ருெழில் கொண்டே இது தோன்றியிருக்க வேண்டும் என்றும், தோன்றவே இது அழிதற் ருெழிலும் படும் என்றும் தெளிகிருேம் என்ருர். இவ்வுண்மையை

நம்மனோர் உணரும்பொருட்டு மணிவாசகனார் தம்மணிவாசகத்தில், திருவெம்பாவை என்னும் பகுதியில், "ஆர்த்தபிறவித்துயர்கெட" என்னும் முதலையுடைய திருப்பாசுரத்தில் "இவ்வானும் குவலயமு மெல்லாமுங், காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி" என்று, படைத்த பிறகே காத்தற்றொழில் நிகழ்வதானாலும், எல்லாரானும் கண்கூடாக அறியப் படுவது காத்தற்றொழிலே யானமையின், "காத்தும்" என்பதை முன்னே வைத்து, மற்ற இருதொழில்களையும் பின்னே வைத்து ஓதினார். செய்யுள் ஆகையால் முறை பிறழவைத்தார் என்று கூறுவது அத்துணைச் சிறப் பின்றாம்.

இனி, உலகம் ஒடுங்கியினின்றும் மீளஉளதாம் எனின், அற்றன்று; "மூவினைமையின் தோற்றிய திதியே" என்பவற்றால் உலகத்தைத் தோற்று விப்பதற்கு ஒரு கருத்தா வேண்டப்படும் என்று சாதிக்கப்பட்டதே ஆயினும், அக்கருத்தா திதிகருத்தாவாகிய விட்டுணு, சிருட்டிகருத்தா வாகிய பிரமன் முதலியோரில் ஒருவர் ஆதல் அமையும் எனப் பாஞ்ச ராத்திரி மதம், இரணியகருப்ப மதம் உடையார் கூறும் கூற்றை ஆசங் கித்துக்கொண்டு அவர்கள் காரணர்களலல்லர்; உலகந்தோன்றுதற்கு முன்னர் அது ஒடுங்குதற்கு இடமாயிருந்த ஒடுங்கியாகிய சங்காரக் கருத்தாவினின்று அன்றி உளதாகாது என்று மெய்கண்டதேவர் "இனி ஒடுங்கின சங்காரத்தினல்லது (அதாவது சங்காரத்தைச் செய் யுங் கருத்தாவினின்று அன்றி) உற்பத்தியில்லை" என்றும் மேற்கோ ளால், உலகம் ஏனைக்கடவுளரிடத்துநின்றும் உற்பத்தியாகாது என் பதை "அல்லது இல்லை" என எதிர்மறை முகத்தால் வற்புறுத்தி, சங்கார கருத்தாவின் நின்றே தோன்றுவதாம் என்று சாதித்தார்.

அற்றேல், ஒவ்வொரு கடவுளரிடத்தும் உலகம் உற்பத்தியாகும் என்று நூல்கள் கூறுகின்றனவே, அந்நூற்கருத்துத்தான் என்னையோ எனின், அக்கடவுளர் தாமே தோற்றுவிக்காது தமக்கு மேற்பட்ட, தம்மையெல்லாம் "இறுதியாங் காலந்தன்னில்" தன்னிடத்தே ஒடுக்கிக் கொள்கின்ற, கடவுளது ஆணையாற்றோற்றுவிப்பர் என்பதே கருத் தாகும். உலகத்தில் ஒரு அரசாட்சியில் கீழ்க்கீழ் இருக்கின்ற அதிகாரிகள் செய்கின்ற எத்தொழிலும் அரசனது ஆணைவழி நிகழ்தலைக் காட்டும் ஆகலின், அதுபோலவே எக்கடவுளர் எச்செயலைச் செய்யினும் அச் செயலெல்லாம் சங்காரக்கடவுளாகிய கருத்தாவின் ஆணையினாலேயே நிகழும்; அச்சங்காரக் கருத்தாவையின்றி மற்றைக் கடவுளருக்குத் தனித்த செயலின்மையும் அறியக்கிடக்கின்றது. அதற்குப் பிரமாணம்

என்னை யென்னும் வினவை ஆசங்கித்து, இம்மேற்கோளை "ஆண்டு ஒடுங்குதலின்" என்னும் ஏதுவால் சாதிக்கின்றார் ஆசிரியர்.

அதாவது, யாது யாண்டு ஒடுங்கும்? ஒடுங்கிய அஃதுதான் ஒடுங்குதற்கு ஆதாரமாய் இருந்தது எதுவோ அதனினின்றும் மீளத் தோன்றும் என்பதாம்.

"அவ்வாறாயின், சற்காரியவாதம் (உள்ளது காரியப்படும்; உள்ள பொருளினின்றும் காரியம் தோன்றும் என்று வாதித்தல்—இதுவே சைவசித்தாந்தம் கூறும் சற்காரிய வாதம். சாங்கியர் கூறும் சற்காரிய வாதமும் உண்டு) பேசும் கொள்கைப்படி, காரியம் ஒடுங்குங்கால், அவை தத்தம் முதற்காரணத்தில் ஒடுங்கும் எனவே கொள்ளக்கிடத் தலின், நிமித்த காரணனாகிய குயவனால் முதற்காரணமாகிய மண்ணி னின்றும் துணைக்காரணங்களாகிய தண்டசக்கரங்களைக்கொண்டு தோற்றுவிக்கப்பட்ட குடம் உடைந்தக்கால், அது தனக்கு முதற்காரண மாகிய மண்ணினிடத்து ஒடுங்குமாறுபோல, உலகம் ஒடுங்குங்கால் அதற்கு முதற்காரணமாகிய மூலப்பகுதி வாசுதேவனது உருவாகலான், உலகம் அந்த வாசுதேவனிடத்து ஒடுங்குமென்றலே பொருந்தும்; அவ் வாறன்றி அவ்வாசுதேவனின் வேறாகிய நிமித்தகாரணன் எனக்கொண்ட சங்காரக் கருத்தாவினிடத்தில் ஒடுங்கும் என்பது பொருந்தாது" என்று பாஞ்சராத்திரிகள் கூறுவர். ஆகலின், அவர் கடாவை ஆசங் கித்துக்கொண்டு,

இலயித்த தன்னில்இல யித்ததுஆம் மலத்தால்
இலயித்த வாறுளதா வேண்டும்—இலயித்தது
அத்திதியில் என்னின் அழியாது அவை அழிவது
அத்திதியும் ஆதியும்ஆம் அங்கு.

என்னும் உதாரண வெண்பாவின் இரண்டாங் கூற்றினால், (இலயித்தது அத்திதியில் என்னின் அவை அழியாது; அத்திதியும் ஆதியும் ஆம் அங்கு அழிவது) உலகம் ஒடுங்கியது மூலப்பகுதி வடிவமாகிய திதிகருத்தா வாகிய வாசுதேவனிடத்தே என்று கொண்டாலும், மூலப்பகுதிக்கு மேலே உள்ள வித்தியா தத்துவங்களிலும், சிவதத்துவங்களிலும் உள்ள உலகங்கள் (வித்தியா தத்துவத்தில் 27 புவனங்களும், சிவதத்துவத்தில் 33 புவனங்களும் ஆக 60 புவனங்கள் உள்ளன) அம்மூலப்பகுதியினால் வியாபிக்கப் படாமையின், கீழுள்ள உலகங்களே அம்மூலப்பகுதியின் ஒடுங்குவதன்றி மாயாகாரியத்தொகுதி முழுவதும்(சுத்தமாயா புவனங்கள்

சுத்தாசுத்த மாயா புவனங்கள், அசுத்தமாயா புவனங்கள் என்பன) அம்மூலப்பகுதியின் ஒடுங்குவதில்லை. உலகம் முழுவதும் யாண்டு ஒடுங்கு மெனின், மேற்கூறிய திதிக்கடவுளும் படைப்புக்கடவுளும் தோன்றுதற்குக் காரணமாகிய அச்சங்காரக் கடவுளிடத்தே அவ்விருவரோடுங் கூட ஒடுங்கும் என்று சாதித்தார்.

அவ்வாறாயின், அச்சங்காரக்கடவுள் நிமித்த காரணமாய் நிற்ப தன்றி, முதற்காரணமாய் நிற்றல் இல்லை. ஆதலால், முதற்காரணமாகிய மாயையினிடத்து உலகம் ஒடுங்குமன்றி, நிமித்த காரணமாகிய முதல்வ னிடத்து ஒடுங்கும் என்றல் எவ்வாறு பொருந்தும் என்னும் ஆசங்கை நிகழும். அதுபற்றி, முதல்வன் உலகுக்கு முதற்காரணன் அல்லனாயினும், முதற்காரணமாகிய (பரிக்கிரக சத்தியாகிய) மாயைக்கு ஆதாரமாய் நிற்றலின், ஆதாரமாய் நிற்கும் அம்முதல்வனிடத்து உலகம் ஒடுங்கி அவனின்றும் மீளத்தோன்றும் என்றது பொருந்து மாற்றை,

> வித்துண்டா மூல முளைத்தவா தாரகமாம்
> அத்தன்தாள் நிற்றல் அவர்வினையால்—வித்தகமாம்
> வேட்டுவனும் அப்புழுப்போல் வேண்டுருவைத் தான்கொடுத்துக்
> கூட்டானே மண்போற் குளிர்ந்து.

என்னும் உதாரண வெண்பாவினாற் றெரித்தார்.

இதுகாறும் கூறியவாற்றான், "உலகம் ஒடுங்கியினின்றும் மீளத் தோன்றும்" என்பது ஒருவாறு பேசப்பட்டது.

எனவும், இவ்வாறு தாங்கள் தாங்கள் மிகநுணுகி ஆய்ந்த அருங் கருத்துக்களை மக்கள் தெள்ளிதின் உணரும் வண்ணம் எளிய செந்தமிழ் உரையிலே விளக்கினார்கள்.

### இரண்டாஞ் சூத்திரம்

> அவையே தானே யாய்இரு வினையில்
> போக்கு வரவு புரிய ஆணையின்
> நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.

இச்சூத்திரத்தைப்பற்றி திருநெல்வேலி, திருவாளர், **A. முத்தையா பிள்ளை B. A., B. L.,** அவர்கள் தாம் எழுதியனுப்பி அச்சிடப்பட்ட கட்டுரைக் கருத்துக்களைத் தழுவிப்பேசினார்கள்.

இத்துடன் காலை நிகழ்ச்சி நிறைவேறி மீண்டும் இடை வேளைக்குப் பிறகு மாலை 3-30 மணிக்குப் பேரவை தொடங் கியதும் மூன்றாம் சூத்திரத்தைத் தெளிவுபடுத்தும் நோக்கத்தான்

ஜலகண்டபுரம், ஆசிரியர், திரு. அ. வரதநஞ்சைய பிள்ளை அவர்கள்,

தருமையம்பதி மருவிநின்று விளங்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களே சிவமாகிய பதிக்கு உவமை. அவர்கள் எழுந்தருளி யிருக்கும் இவ்வோலக்கமே கைலைச் சபாமண்டபம். இங்குக் குழுமியுள்ள சைவ சித்தாந்தச் செல்வர்களாகிய நீவிர் எல்லீரும் சிவகணங்கள். உங்களில் ஒருவனாக முந்தும் யான் குண்டோதரன் என்னும் பூதகணத்தேன்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் கடைக்கண்ணோக்கி வாளா இருப்பவும் சொல்லற்கரிய இவ்வகைப் பல வைபவங்கள் நன்கு நடைபெறு வது, இறைவன் சந்நிதிமாத்திரையில் யாவும் நிகழ்கின்றன என்பதற்கு எடுத்துக்காட்டு. இவ்வளவு அற்புதச் செயல்களைச்செய்வித்தும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அசைவற அமர்ந்து விளங்கல், இறைவன் எல்லாவற்றை யும் இயக்கியும் தான் விகாரியாவான் அல்லன் என்பதை உணர்த்தும். இறைவன் சந்நிதியில் மும்மூர்த்திகளும் பணியியற்றல் போன்று காரிய தரிசிகளாகிய மூவர் அமைந்திருத்தல் மிகவும் பொருத்தமே. வரகுண னுக்குச் சிவலோகம் மதுரையிற் காட்டியவாறு போலவும், ஆளுடைய அரசர்க்கு நம் பரமன் திருவையாற்றிற் கயிலைக்காட்சி யளித்தாற் போலவும் நந்தமக்கு இம்மகாசந்நிதானம் இன்று இங்கோர் கயிலைக் காட்சி வழங்கிய பேரருள் நாளும் ஓங்கி நலம் விளைப்பதாக.

மெய்கண்ட வித்தகன் மெல்லடி வாழ்க.!

உளதில தென்றலின் எனதுடல் என்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலில் கண்படின்
உண்டிவினை யின்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா இயந்திர தநுவினுள் ஆன்மா.

(இச்சூத்திரம் ஆன்மப் பிரகாசம் உணர்த்துகின்றது.)

இச்சூத்திரத்தின் பொழிப்புரை, விசேடக் குறிப்புக்கள், முதலிய வற்றை விரித்து எழுதப்புகின் அதுவே ஒரு நூலாக விரியுமாகலின் இதிலுள்ள சுருங்கிய கருத்துக்கள் எளிதில் விளங்கிப் பயன்படும் வண்ணம் உரைநடையில் வினாவிடையாக எழுதப்பெற்றிருக்கின்றது.

மேல் பதினோராம் சூத்திரமும் இவ்வாறே வரையப்பட்டுளது.

ஆன்மாவின் நிச்சயமும், அது பெறும் இறுதிப் பெரும்பேறும் உணர்த்தும் தொடர்புகருதி, யான் ௩, ௧௧, என்னும் இரு சூத்திரங்

களையும் அறிந்தவாறு கூறத்துணிந்து ஏற்றுக்கொண்டனன். குற்றங் களைந்து குணங்கொண்டு கோதாட்டுதல், அருந்தமிழ்ச் செல்வராய்ச் சித்தாந்த நாவலராய்ச்சிறி வாய்ந்த ஆன்றோர் கடன் எனக்கருதி அன்னவர் பொன்னடி சென்னியிற் புனைகின்றேன்.

## ஆத்திரக் கருத்து

(ஆன்ம நிச்சயம்)

வினா:— உடலுக்கு வேறாக உயிர் உண்டு என்பது பொய், உள்ள பொருளானால் காட்சிப்பட வேண்டும். அஃதின்மையால் ஆகாயத் தாமரை, ஆமைமயிர்க்கம்பலம் முதலியன போல் சூனியப்பொருள் ஆன்மா என்றால் பொருந்தாதோ?

விடை:— நீ இல்லையென்பதனாலேயே உயிர் உண்டு என்று எளிதில் நிரூபிக்கலாம்.

வினா:— இது என்ன வேடிக்கை. இல்லையென்பதனால் ஒருபொருள் உண்டென்று சாதிக்கப்படுமோ? அங்ஙனமானால் உண்டு என்பதே காரணமாக இல்லையென்றும் கூறிவிடலாமே. அது பிரத்யக்ஷ விரோதமாகாதோ?

விடை:— இல்லையென்பதனால் உண்டு என்று கூறுவது, உயிர் என்ற ஒருபொருள் இல்லையென்று நீ சொன்னதற்குமாத்திரம் பொருந்தும்; மற்றவைகளுக்குச் சிறிதும் பொருந்தாது. ஆகையால் பிரத்யக்ஷ விரோத மில்லை.

வினா;— அது எப்படி?

விடை:— இது உடம்பு, இவை கைகள், இவை கண்கள் என ஒவ்வொன்றையும் அறிந்து. உயிர் என்பது ஒன்று காணப்படவில்லையென அறிந்தன்றோ கூறுகின்றாய்? அப்படி அறிகின்ற பொருள் ஒன்று இருக்கவேண்டுமல்லவா? அந்த அறிவே உயிராகிய நீ என்று தெளிக. பத்துப்பேர் ஓர் ஆற்றைக்கடந்து கரை ஏறித் தம்மை எண்ணிப் பார்க்கையில் எண்ணுகிறவன் ஒவ்வொருவனும் தன்னைக் கணக்கிடாமல் விட்டு ஒன்பது பேரே இருக்கக்கண்டு ஒருவனை ஆறு அடித்துக்கொண்டு போய்விட்டதாகக் கருதி அழுத கதைபோல், இல்லையென்று கூறும் அறிவாகிய உன்னையே இல்லையென்று சொல்லத் துணிந்தாய். இதுவே பிரத்யக்ஷ விரோதம்.

வினா:— அவ்வறிவும் பிரத்யக்ஷப் பொருளாகாமையால் இல்லையென்கிறேன். ஆதலால் இது பிரத்யக்ஷ விரோதமாகுமா?

விடை:— நான் ஒன்று கேட்கிறேன். உன்தாய் உன்னைப் பெற்றபோது இவள் தாய் என்று நீ அறியமாட்டாய், ஆகையால் உன்தாய் மலடி என்று நீ கூறுவாயா? அல்லது உனக்கு அறிவேயில்லை என்று சொல்வாயா?

வினா:— அப்படிச் சொல்லமாட்டேன். இதனை உயிர் என்று ஏதோ ஒன்றிருப்பதாகத்தான் துணிகின்றேன். ஆனால் இதுவரையிலும் நான் இல்லையென்று துணிந்த உயிர் இப்போது உண்டு என்று அறியப்படுதல் போலவே இவ்வுயிரினுக்கு மேலான ஒன்று வேறொருகாலத்தில் அறியப்படலாமல்லவா? அப்போது இந்தச் சித்தாந்தம் நிற்காதே!

விடை:— இப்படியே இதற்கு மேலும் மேலும் நினைத்துக்கொண்டே போனால் அதற்கோர் எல்லையில்லாமற்போம்; பொருள் நிச்சயமே வாராது; வீண் எண்ணங்களாகும். ஆதலினால் அதைவிடுத்து உண்மையாகத் தோன்றும் உயிர் உண்டு என்ற அளவில் நிற்க.

வினா:— அறிவுதான் உயிர் என்று தெளிந்தேன். அவ்வறிவும் இவ்வுடம்பில் நிகழ்வதாதலால் இவ்வுடம்பையே உயிர் என்று கொண்டால் இழுக்கென்ன? நான் பருத்தேன், இளைத்தேன், கரியேன், என உடம்பைப் பற்றியே நான் என்னும் உயிர்த் தன்மைச் சொல்லும் வழங்கப் படுகின்றதல்லவா?

விடை:— பொதுவாக உடம்பு என்று வழங்கப்பட்டாலும் இது தலை, இது முகம் என ஒவ்வொன்றும் பெயர்கொண்டு பகுத்து உணரப் படும்போது உடல் என்ற ஒன்றே யில்லையாகும். அல்லாமலும் என்தலை என்கால் என்றும், என் உடம்பு என்றும் தனக்கு வேறாக வழங்குவதனாலும் இவ்வழக்கு மிக்கும் வருவதனாலும் உடம்பிற்கு வேறாய் உயிர் உண்டு என்றறிக. நான் உடம்பு என்று வழங்குகின்றதா?

வினா:— என் உடம்பு என்றதனாலேயே அது உயிரின் வேறு என்பது பொருந்தாது. தலைமாத்திரையேயுள்ள இராகு என்னும் கிரகத்தை இராகு என்றும் இராகுவின் தலையென்றும் இருவிதமாய்க் கூறுவதுபோல் உடம்பையே உயிர் என்றும் கூறுகின்றோம். இதில் தவறு என்ன?

விடை:— ஒருபொருளின் உரிமையை விளக்கும் ஆறும் வேற்றுமை (1) ஒற்றுமை (2) வேற்றுமை என்னும் இருபொருட்களில் வரும். இராகுவையே இராகுவின் தலையென்று கூறுவதுபோல், உயிரையே என்னுயிர் என்றும் ஓரோர் சமயம் அருகி வழங்குவதுண்டு. அது ஆறும் வேற்றுமையில் ஒற்றுமைப்பொருளில் வருவது. இங்கு ஒற்றுமை என்பது ஒரேபொருள், நான் என்றும் எனதென்றும் வழங்கப்படுவதனை; மற்று வேற்றுமை யென்பது ஒன்றாய்த்தோன்றல், உரிமையாய்த்தோன்றல், வேறாய்த்தோன்றல் என மூன்று வகைப்படும். அவற்றுள் ஒன்றாய்த் தோன்றலாவது:— என் கை, என் கால்கள் என்பன உயிர்க்கு வேறாயினும் அவ்வுயிர் கலந்து நிற்றற்குரிய உடலுறுப்புக்களாகி ஒன்றுபோல் நிற்பதாகிய ஒற்றுமைத் தோற்றம். உரிமையாய்த் தோன்றலாவது:— முருகனது குறிஞ்சி, திருமாலினது சக்கரம் என ஒருவருக் குரித்தாகிய பொருளைச் சுட்டுவது. வேறாய்த் தோன்றலாவது:— என்வீடு, என்நிலம் என்று தன்னதாயும் தன்னைவிட்டுப் பிறரிடம் செல்லுதலுடைத்தாயும் இருந்து நிலைமாறும் பொருள்களைப் பற்றியது. இவ்வகையால் என்உயிர் என்று வழங்குவது ஒற்றுமையில் வருவது. என்உடம்பு என்பது முதலாயின வேற்றுமையில் வருவன. இவ்வேறுபாட்டை நுட்பமாக உணர்தல் வேண்டும்.

வினா:— அது சரி. ஆனல் அறிவுதான் உயிர் என்பதனுல் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புலன்கள் அறிகருவிகளாகலாலும்; நான் தீண்டினேன், சுவைத்தேன், கண்டேன், முகர்ந்தேன், கேட்டேன் என வழங்கலாலும் இவ்வைந்துமே உயிர் என்றால் ஆகாதோ?

விடை:— ஆகாது. என் கண், என் வாய் என முன்கூறிய வேற்றுமைப் பகுதியில் வருதலானும், நான் உடம்பு, நான் கண் என வாராமையானும்; ஒருபுலன் அறிவதை ஒன்று அறியாமையானும், ஐம்புலன்களும் தத்தம் முதற்காரண பூதங்களின் குணமாகிய ஒன்றைமட்டும் (அதாவது, செவி தன் ஆகாய பூதகுணமாகிய சப்தத்தை மட்டும், உடல் தன் வாயு பூதகுணமாகிய ஸ்பரிசத்தை மட்டும், விழி தன் தேயு பூதகுணமாகிய உருவத்தை மட்டும், நாக்கு தன் அப்பு பூதகுணமாம் சுவையை மட்டும், மூக்கு தன் பிருதிவி குணமாகிய கந்தத்தை மட்டும்) அறிவதாலும்; இப்புலன்களும் உயிர் இயக்கத்தால் அறியுந் தொழிலைச் செய்வ

தானாலும் இவற்றைக் கருவியாகக் கொண்டு இவ்வைந்து விஷயங்களையும் அறிகின்ற உயிர் ஒன்று தனிப்பொருள் என்றறிக.

வினு:— நல்லது. கனவு காணும் காலத்தில் நனவைப்போலவே எல்லா நிகழ்ச்சிகளும் தோன்றலால் அப்படி அறிகின்ற ஒரு சூக்கும தேகம்தான் உயிர் என்னலாமே!

விடை:— அச்சூக்கும உடம்பே உயிரானல் நனவைப் போலக் காணமல் கனவில் மயங்கி அறியக் காரணமில்லை; நனவில் தோன்றிய நிகழ்ச்சிகளிற் சில பல கூடிக்குறைந்து காட்சிப்படுகின்றன. அப்போது உயிர் அகமுகமாக உலாவுகின்றதனுல் இம்மாறுதல் வந்தது.

வினு:— உயிர் நீங்கும்போது பிராணவாயு நீங்குவதாலும், சுவாசம் ஓடிக்கொண்டிருக்கும் வரையிலும் உயிர்யிருப்பதாக நம்பப்படுவதாலும் இந்தப் பிராணவாயுவே உயிர் என்ருலோ?

விடை:— நாம் உறங்கும் வேளையில் தொழிலும் இன்பதுன்பத்தோற்றமும் கிடையா. அப்போது பிராணவாயு வழக்கப்படி இயங்கிக் கொண்டிருக்கிறது. அதுவே உயிராயிருப்பின் நனவுக்காலத்திற் போல் உறக்கத்திலும் அறியவேண்டும். அவ்வாறின்மையால் பிராணவாயுவினும் வேருய்ச் சிறந்த உயிர் ஒன்று தனியே உண்டு.

வினு:— உறங்கியபின் எழுந்து நன்ருய்த் தூங்கினேன், சுகமாய்த் தூக்கம் வந்தது என்ற உணர்ச்சி தோன்றுகிறது. ஆதலால் பிராணவாயு உறக்கத்தில் அறியவில்லை என்பது பொருந்தாது.

விடை:— அது கேள்வியன்று; விழித்திருக்கும்போது இயங்கியவண்ணமே உறக்கத்திலும் பிராணவாயு இருந்தும் ஏன் ஒரு தன்மையாய் அறியவில்லை. ஆகையால் பிராணவாயு உயிரன்று என்பதைக் கவனிக்க.

வினு:— அங்ஙனமாயின், உயிரிருந்துந்தானே உறக்கத்தில் உணர்வு கூடவில்லை? என்ன காரணம்?

விடை:— பிராணவாயுவைப்போல் ஒருபடித்தாய் நிகழாமல் உயிர் தன் செயல் அடங்கி ஒடுக்கத்தில் நிற்பதனுல் ஐம்புலன்களும் அந்தக் கரணங்களும் தொழிற்படுவதில்லை. அறிவதுமில்லை.

வினு:— ஆன்மாவைத்தவிர அறியும் பொருள் வேறில்லை என்கிறீர். ஆயின் பிரமம் ஒன்றே உளது, அதுவே சடமும் சித்துமாகிய

எல்லாப் பொருள்களாகவும் உருவுகொண்டு நிற்கின்றது, பின் ஒடுங்குகின்றது என்னும் ஒரு சமயவாதி கொள்கைப்படி இவ்வுயிர் அந்தப் பிரமமே என்றால் பொருந்தாதோ ?

விடை:— பொருந்தாது; பிரமம் வேறு, உயிர் வேறு. உயிர்க்கு மூன்று அவத்தைகள் (நிலைகள்) உள்ளன.

1. உயிரானது தொழிற்படும் கருவிகளோடு கூடாமல் அதனால் அறிய வழியின்றி விளக்கமற்று, இருட்டறைப்பட்ட குருட்டுக் குழவிபோல் தனித்து நிற்கும் கேவலாவத்தை,

2. உயிர்க்குரிய சிற்றறிவை விளக்கி வழிப்படுத்தப் பரம்பொருள் கருணைகூர்ந்து தநு கரண புவன போகங்களைத் தந்து, உயிரின் ஞானத்தை வித்யா தத்துவத்தாலும், இச்சையை அராக தத்துவத்தாலும், செய்கையைக்கலா தத்துவத்தாலும் தூண்டிவிட உடல்பெற்று வாழ்ந்து நிற்கும் சகலாவத்தை,

3. உயிரின் தன்மையையும், அதனை அநாதியே பற்றி மறைக்கும் பாசமாகிய ஆணவத்தின் இயல்பையும், இம்மலத்தினின்றும் நீங்கி என்றும் அழியா ஆனந்த மயமாகிய தன்னையடையும் மார்க்கங்களையும் அப்பரம்பொருள் தானே குருவடிவாக எழுந்தருளி உபதேசிக்கப் பெற்று, முத்தியின்பம் பெற்று வாழும் சுத்தநிலை இம்மூன்றவத்தைகளும் எய்திப் பாசத்தைச் சேர்ந்து பாசமயமாகியும், பின் இறைவன் பேரருளால் உண்மை ஞானம் பெற்றுப் பதியை அடைந்து பதிமயமாயும் இங்ஙனம் சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும் ஆன்மாவை அதனின்வேறாய், சர்வக்ஞனாய், எல்லாம் வல்லவனாய், எங்கும் நிறைபவனாய் உள்ள பரமான்மா என்று மயங்கிக் கூறுதல் ஊர்தோறும் பிச்சைபுக்குண்ணும் பரமதரித்திரனை உலகெலாம் ஒரு குடைக்கீழ் ஆளும் மன்னர் பெருமானென்று கூறுவதோடொக்கும். பரமான்மாவைப்போல் உயிர்க்கு முற்றறிவும் நிர்விகாரமும் இல்லை.

வினா:— மூர்ச்சை, மயக்கம் முதலியவை வந்தபோது அறியுந்தன்மையுடைய உயிர் எப்படி ஒடுக்கமுற்று அறிவின்றிக் கிடக்கின்றதோ அவ்வாறே, பிரமமும் அவிச்சை (அஞ்ஞானம்) வயத்ததாகித் தன்நிலை தோன்றாமல் ஆன்மாவின் தன்மையை அடைகின்றது என்போமே.

விடை:— பிரமத்தை வேதாகமங்கள் நிர்மலன், நிர்விகாரி, சர்வகர்த்தா, சர்வநியந்தா எனப் பலவாறு புகழ்ந்தோதுவதால் அப்பொருள் அவிச்சையோடு சேர்ந்து அறிவு மயங்கிற்றென்பது முற்றும் பொருந்தாது.

வினு:— கண்ணுடையவர்களுக்கும் இல்லாதவர்களுக்கும் இருள் எப்படி ஒருதன்மைத்தாய ஒளிகொடாமல் தடுக்குமோ அப்படியே பிர மத்தையும் அஞ்ஞானம் மறைக்குமென்ருல் என்ன? அந்த மறைப் பால் பிரமமே உயிராக நிற்கின்றது என்போம்.

விடை:— இல்லை இல்லை. உயிர்வேறு; சிவம் வேறு. உயிர் உடலோடு இயைந்து ஐம்புலன்கள், அந்தக் கரணங்கள் முதலியவற்ருேடு கூடி சாக்கிராவத்தை (விழிப்பு நிலை)யில் பொருளை அறிகின்ற போதும் எல்லாப் பொருளையும் ஏககாலத்தில் அறியமாட்டாது; ஒவ்வொன்ருக அறியும். அங்ஙனம் அறிந்தபின் வேறென்றை அறியப்புகும்போது முன் அறிந்ததை மறக்கும். இவ்வாறு அறியும்போதும் இடைவிடாமல் அறிவதின்றி இடைவிட்டறியும். சாக்கிரம், சொப்பனம் முதலிய அவத்தைகளில் மயங்கி அறியும். சுழுத்தியவஸ்தையில் ஒடுங்கிக்கிடக்கும். பின்னும் உணர்ச்சி பெற்றெழும். இவ்வாறு நிகழ்வதால் உயிர் மிகவும் அறிவுக் குறையுற்றது (சிற்றறிவுடையது). இத்தன்மையுடைய வுயிரை முற்றறிவுடைய முழுமுதலென்பது தகாது.

வினு:— நம் அநுபவத்தில் உடம்பு, பொறி, பிராணவாயு முதலிய எல்லாம் சேர்ந்தவழி உயிர் என்னும் அறிவு தென்படுவதனுல் இவைகள் எல்லாம் கூடிய கூட்டமே உயிர். அது தனிப்பொருள் அன்று என்று கூறலாமே!

விடை:— பயிர்த்தொழில் செய்யுமொருவன் ஏர், உழவுகோல், மண் வெட்டி முதலிய கருவிகளைக்கொண்டு தொழில் செய்து பயன் பெறுவதுபோல் இவ்வான்மாவும் உடல் முதலிய கருவிகளைக் கொண்டு செலுத்தி உபயோகப்படுத்திப் பயன் அடைகின்றதென் பதே துணிவு.

வினு:— ஐம்புலன்களினும் சிறப்புடையதாய் விளங்கும் அகக் கருவி களாகிய சித்தமும், சித்தப் பகுதியாகவுமுள்ள சமுதாயம் ஐந்தும் மாயா காரியமல்ல. ஆகலின் அதனை எனக்குடம்பாடில்லாத வகையில் நீர் மாயா காரியமென்று கூறி உயிர் வேறென்றுண்டு

என்று சாதிப்பது என்னையோ? எதிரி உடன்படுகின்ற வகையி லல்லவா தன் கட்சியைச் சாதிக்கவேண்டும்?

விடை:— சித்தமும் சித்தப் பகுதியுமாகிய அகச்சமுதாயங்களை மேற் கொள்வது புத்தர் சமயத்தில் சவுத்திராந்திகர், வைபாடிகர் என்னும் பிரிவினர் கொள்கை. அவர்கள் 'உருவம், வேதனை, ஞானம், குறி, வாசனை என்னும் பஞ்சகந்தம் (ஐம்பொருட் கூட்டம்) உள்ளன. அவற்றின் காரியமே சித்தமும் சித்தப் பகுதியும்; இவற்றுள் எல்லாப் பொருளும் அடங்கும்' என்பர். அவர்களே இவற்றை உயிர் என்று கூறுர்கள்; ஆதலால் அவை உயிராவதில்லை.

வினு:— உறுப்புக்கள் பலவேறு பெயர்பெற்று நிற்பவும் அவை கூடிய பிண்டம் உடல் எனப்படுகின்றது என்று முன்னரே நீங்கள் உரைத்தீர்கள். அதுபோலவே இவ்வகச்சமுதாயம் ஐந்தும் கூடிப் பிண்டமாகப் பெயர் பெற்றது உயிர் என்றுல் பிழை என்னை?

விடை:— நீ கூறுவதுபோல் பல பொருள்களின் கூட்டமும் ஒன்றற் கொன்று காரண காரியத் தொடர்புடையதாய்த் தோன்றி, நின்று, அழியும் தன்மையால் மாயாகாரியங்களே; ஐயமில்லை. அவை கூடிய விடத்தும் கந்தம், சமுதாயம் அல்லது கூட்டம் எனப்பெயர் வேறுடையன வல்லவா? ஆகலின் இவைகள் அறிவுக் கருவிகளாக நிற்பதல்லது அறிவாகமாட்டா. ஒருவிளக்கு கண்ணுக்குப் பொருளைக்காட்ட உதவுவதல்லது தானே காட்டிக் காணுது, அத்தீப வெளிச்சத்தைக்கொண்டு பொருள்களை அறியும் கண்ணைப்போல் ஆன்மா வேறெரு அறிவுடைப் பொருளாய் உள்ளது.

எனத் தம் அரிய ஆராய்ச்சியை நகைச்சுவை ததும்ப விரித் துரைத்தனர்.

## நான்காஞ் சூத்திரம்

*அந்தக் கரண மவற்றினென் றன்றவை*
*சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா*
*தமைச்சர சேய்ப்பசின் றஞ்சவத் தைத்தே.*

நான்காம் சூத்திரத்தைப்பற்றித் திருவாளர், வித்துவான் திரு. தண்டபாணி தேசிகர் அவர்கள்,

"இக்காலம் ஆராய்ச்சிக்காலம். எதனை எடுத்தாலும் ஆராய்ச்சி. ஆராய்ச்சி அறிவை வளர்க்கின்றது. அவ்வறிவு உலக அறிவு, மெய்யறிவு என இருதிறப்படும். உலக அறிவு மனம் முதலிய அகக் கருவிகளைப் பற்றி புறப்பொருள்களை ஆராய்வது. மெய்யறிவு "நான் யார், என் உள்ளம் யார்" என்று எழுந்த ஓர் மணிமொழியைப்பற்றி ஆராய்வது. 'அறிந்த இடத்தில்லை அறியாமை. அத்தைப் பிரிந்தபின் பேசல் பிழையன்றோ' என்று பேசி நிற்பது. அம்மெய்யறிவைப் பயப்பது சிவஞான போதம். இதன் பெருமை; "சிவஞானபோதத்தாற் சென்ம விடாய் தீர்ந்து சிவஞான சித்தியால் தேறிச்—சிவஞானபோதத்தை மெய்கண்டான் போதித்தான்" என்ற வள்ளலார் வாய்மொழியால் தெள்ளத் தெளிய நிற்கின்றது.

**நான்யார்?**

அவையே தானேயாய் என்று சுட்டப்பட்ட சேதனப்பொருள் நான். இதனை ஆராயப்புகுந்த மாணவர் ஒவ்வொருவரும் தத்தம் கருத்துக் கேற்ப மறுத்துரைப்பவும் 'உளது இலது' என்பது முதலாகப் பல ஐயங்களை மறுத்து சித்தாந்தத்தேனை புகட்டிவருங்காலையில் ஒரு மாணவர் எழுந்து "ஆசிரியப் பெருந்தகையே! "மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது" என்றது மிகமிக நேர்மையானபொருள். தனுவினுள் உள்ளவை எவை? உட்கரணங்களாகிய மனமுதலியனதாமே. அவை ஆன்மா என்பது தங்களுக்கும் உடன்பாடுபோலத் தோன்றுகிறதே; அல்லாமலும், சித்தியாரினும், "புத்தியை மனமதென்றும்" என்ற பாசுரத்து மனம், புத்தி, அகங்காரம், சித்த நான்கு மருவியான்மாவே ஆகும் என அந்தக்கரணங்களே ஆன்மாவாக அழைக்கப் பெற்றிருக்கின்றதே; ஆதலால் அந்தக் கரணங்களை ஆன்மா என்றால் என்ன? இது எனது மனத்து எழுந்த ஐயம்" என்று வேண்டிக் கொண்டான். ஆசிரியர் "ஐய! சித்தம் தானகப் பொருளைச் சிந்திக்குமா? பொறி உணர்த்திய பொருளைத்தானே சிந்திக்கும். அப்படிச் சிந்தித்தேன் என்று அறியும் ஆற்றல்கூட அதற்கில்லையே. அது போலவே மற்ற அந்தக் கரணங்களும், கலைமுதலிய சூக்கும அந்தக்கரணங்களோடு சேர்ந்து இது சுகம், இது துக்கமென அனுபவமாக இருந்தறிந்தும், பின்னர் யான் துக்கித்தேன், மகிழ்ந்தேன் என அனுபவத்தின் வேறாக அறிந்தும், எங்கும் அறிவுடைப் பொருள்களாக இருப்பது ஆன்மா. அங்ஙனம் சித்தாகிய ஆன்மாமேல் நின்ற சூட்சும அந்தக்கரணங்களை நோக்க அசித்தாகவுள்ள அந்தக்கரணங்கள் எவ்வாறு ஆன்மாவாக முடியும். இன்னும் கூர்ந்து ஆராயின் உள் நின்றியக்கும் அக்கரணங்கள் அந்தக்கரணங்களை இயக்குகின்றன. சூக்குமைவாக் காகிய நாதம் உயிரைச் செலுத்துகிறது. பைசந்தி பற்றுக் கோடாக

நின்று இயக்க,சித்தம் சிந்திக்கின்றது. அகாரம் இயக்க அகங்காரம் எழும்புகிறது. உகாரம் இயக்க புத்தி பகுத்தறிகிறது. மகாரம் இயக்க மனம் சென்று பற்றுகின்றது. இந்த ஐந்திற்கும் சூக்கும பஞ்சாக்கரம் என்று பெயர். இவ்வைந்தும் கூட்டி உச்சரிக்கும்போது பிரணவமாகிறது. இதுவே ஒலி உலகிற்கு அடிப்படை. எமது உயிர்த்தலைவர் குமரக்கடவுளால் பிரமனுக்கு உணர்த்தப்பட்ட உண்மை என்று கந்த புராணம் கூறுகின்றது. இவ்வெழுத்து அசபையாய் உயிர்ப்பை உள்ளடக்கியும் விட்டும் உணர்த்த நினைப்பு மறப்புக்கள் நிகழ்கின்றன. இதனைப் 'போதம் கடல் திரையே போன்று' என்று உவமிக்கின்றது சிவஞானபோத மேற்கோள் வெண்பா. இக்கருத்துக்களை யாம் ஒருங்குணர உற்ற துணையானது 'அந்தக்கரணம் அவற்றின் ஒன்று, அன்று' என்ற அருள்மொழிப் பகுதியாகும்.

## அறிவுடைய ஆன்மா எப்போதும் ஏன் அறிவதில்லை?

மணி இயற்கை ஒளி உடைய பொருள். மேல் மாசு படிந்திருக்கிறது. மாசு கழுவ மணி மணியாகின்றது. அதுபோல ஆன்மாவை அநாதியாகப் பந்தித்திருப்பது ஆணவமலம். அதனால் உயிர் தானே அறியாது. உணர்த்த உணர்கின்றது. அவ்வாணவத்தைப் போக்க மாயை மற்றொரு அழுக்காக உதவி செய்கிறது. ஒன்று என்றுமிருப்பது; மற்றொன்று அதன் வலி தொலையத் துணைசெய்து நிற்பது. இக்கருத்தை நமக்குக்காட்டும் அறிவியற் சிறுநூல் பகுதி "அந்தக்கரணம் அவற்றின் ஒன்றன்று அவை சந்தித்தது... சகசமலத் துணராது" என்று சுருங்கச் சொல்கின்றது.

## உடற்கோட்டைக்குள் உயிர் அரசன்

உடற்கோட்டை இரண்டுகால் நாட்டியது. இரண்டுகை போடப் பெற்றது. முதுகெலும்பாகிய கட்டுமரம் உடையது. பழுவெலும்பாகிய சுவற்றினை உடையது. இவ்வீடுகட்ட நரம்புகள் கயிறுகின்றன. மாமிசம் மண்ணுகின்றது. மயிரும், தோலும் கூரைப்பொருளாகின்றன. பொறிகள் ஐந்து சாளரங்களாகின்றன. அக்கோட்டை உடற்கோட்டை. அதன்கண் அரசாட்சி மண்டபம், உலாப்போது மண்டபம், மந்திராலோசனை மண்டபம், பள்ளிமண்டபம் முதலியன அமைந்திருக்கின்றன. அக்கோட்டைக்குள் அரசன் ஒருவன் இருக்கின்றான். அவன் ஆன்மா. ஆன்ம அரசன் உடற்கோட்டைக்குள் உள்ள மண்டபங்களில் உலாவரும் போது ஐந்துநிலைகளை யடைகிறான். அவை சாக்கிரம், சொப்பனம் சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பன. ஆன்ம அரசன் உடற்கோட்டையில் புருவ மத்தியாகிய அத்தாணி மண்டபத்து ஞானேந்திரிய

மாகிய ஐம்பெருஞ் சுற்றமும், கன்மேந்திரியங்களாகிய கருமவீரர் ஐவரும், விடயங்களாகிய பரிவாரமும், தசவாயுக்களாகிய உறுதிச் சுற்றமும், அந்தக்கரணங்களாகிய அமைச்சரும் புடைசூழ, அறிவன அறிந்து செய்வன செய்து, ஆய்வன ஆய்ந்து அரசுசெய்வன். இந்த நிலை விழிப்பு நிலை யல்லது சாக்கிரமாகும். இதனை வழிநூல் "சாக்கிர முப்பத்தைந்து நுதலினில்" என்று சாற்றுகிறது.

கனு:— எதனை நனவிற் கண்டோமோ அது கனவிற் கற்பனையோடு கலந்து பெருகியும் சிறுகியும், கலவாது உள்ளபடியும் காணப்பெறும். புறமதநூல்கள் 'சாக்கிரவாசனையாற் பிறப்பிக்கப்பெற்ற விஷயத்துடன் கூடிய ஞானம், இவ்வவத்தையில் சூக்கும சரீரத்தி லபிமானிக்கப்பெற்ற ஆன்மா, அபிமானித்த நிலைபற்றி தைசதன், பிரதிபாதிகன், சொப்பன கற்பிதன் எனச் சொல்லப்படுவதுண்டு' என்று கூறுகின்றன. நமது நூல் களில் அத்தாணியாகிய புருவமத்திக்கும், கழுத்திற்கும் இடையில் உள்ள உலாமண்டபத்தில் ஆன்ம அரசு உலாவரும்போது தன் மாத் திரை யைந்தும், வசனுதி யைந்தும், வாயுக்கள் பத்தும், அந்தக்கரணங் களும், புருடனும் ஆகிய இருபத்தைந்தோடு கூடி நிற்கும். இது கனு நிலை யல்லது சொப்பனுவஸ்தை என்று சொல்லப் பெறும். நனவறிவே கனவிற் காணுவதைக் கலித்தொகையினும் "நனவினு னலம்வாட நலிந்த நடுங்கஞர், கனவினு லழிவுற்று கங்குலும் ஆற்ருக்கால்" என்று கூறப் பெறுகின்றது. அவ்வாறே புலியொன்றைத்தாக்கித் தூங்கும்யானை அத்தோற்றத்தைக் கனவிற் கண்டுவருகின்றது, என்ற கருத்தும் அந் நூலிலேயே அமைந்திருத்தல் ஒப்புநோக்கற்பாலது.

### கனு பொய்யா? மெய்யா?

"கனவிற் கண்ட பொருள் கைக்குக் கிட்டுமா?" "உண்ணக் கனுக் கண்டால் உடல் வளருமா?" முதலிய பழமொழிகள் கனவு பொய்யென் பதைக் காட்டுகின்றன. புறமத நூல்களும் 'நித்திராதோஷ அவித்தை யாலுண்டான சொப்பன வஸ்து கிளிஞ்சலில் வெள்ளிபோல மித்தை' என்கின்றன. நமது மாதவச் சிவஞான யோகிகள் சூக்கும தேகம் உண் டென்று நிறுவப் பிரமாணங் கூறும்பொழுது "தூலதேகம் செயலற்றுக் கிடப்பவும், கனவின்கட் போகநுகர்ச்சி காண்டும். ஆண்டும் நுகர்ச்சி தேகத்தின் தொழிற்பாடன்றி அமையாமையின் சூக்கும தேகமே போக நுகர்ச்சிக்கு நிலைக்களமாவது என அறிக" என்று எழுதிக் "கனவின் பயனும் நனவின் பயனும்—வினையின் பயனவை பொய்யெனல் வேண்டா என்றறிக. பொய்யென்பதற்குப் பிரமாணமின்மையாலும் ஆண்டும் போகநுகர்ச்சி மெய்யாதலறிக" என்று எழுதியருளுகிருர்கள். ஆதலால்

கனு மெய்யெனவே கொள்ளக்கிடக்கும். சிலப்பதிகாரத்துக் கண்ணகி கனுவும், ராமன் கதையுள் மண்டோதரி கனுவும், கந்த புராணத்துப் பதுமகோமளை கனுவும் பொய்யாயினவா? அல்லவே. இது நிற்க.

இங்ஙனம் உலாமண்டபத்து உற்ற அரசன் சித்தமும், பிராண வாயுவும், புருடனும் தவிர மற்றவை தொழிற்பாடற்று மடங்கிக் கிடக்க முற்கூறிய மூன்றுபேரோடு இதயத்தானத்தில் உறுவன். அந் நிலையில் பிராணவாயு உடலுக்குக் காவலாகும் வரையில் ஆங்காரத் தாற் செலுத்தப்பெறும். இதற்கு அழுந்திநிலை என்று பெயர். இந் நிலையில் புத்திதத்துவம் தொழிற்படாமையால் சுழுத்தி இவ்வாறு இருந்தது என்று நனவு நிலையில் அறியமுடியாமல் இருக்கும்.

முற்கூறிய மூன்றனுள் சித்தமும் ஆற்றலடங்கத் தானும் பிராணனுமாகத் தன்னையே நோக்கிக்கொண்டு உந்திக்கமலத்துறும். இது துரியநிலை. பிராணனும் செயலறத் தான்மட்டும் மூலாதாரமாகிய பள்ளி மண்டபத்துத் தன்னைப் பிரியாத மூலப்பகுதியோடு அவித்தையை யறிந்து நிற்கும். இது துரியாதீதநிலை.

இங்ஙனம் ஒடுங்கிச் சென்ற உயிர்அரசன் மீண்டும் புறப்பட்டு மேல்வர தனித்தார் எவரும் வந்து முறையே பொருந்த அத்தாணியை யடைந்து அரசு செய்வன். இது மேலாலவஸ்தை.

இதுகாறுங் கூறியது கேவலநிலையில் ஆன்மா ஐந்தவத்தையையும் அடைவது. மேல் சகல நிலையிலும், சுத்த நிலையிலும் அவத்தையடைதலை ஐந்து ஆறும் சூத்திரங்கள் எடுத்துக்காட்டுகின்றன.

வழிநூல் "படைகொடு பவனிபோது மன்னவன்" என்ற பாசுரத் தால் பவனிவரும் அரசன், படை முதலியவைகளை ஆங்காங்கு நிறுத்திச் செல்லுமதற்கு எடுத்துவமித்திருக்கின்றது. இத்துணைக்கருத்துக்களையும் தொகுத்துக் காட்டுங் கண்ணாடி "அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே" என்பதாகும்.

## முடிவுரை

இதுகாறுங் கூறியவாற்றால் ஆன்மா அந்தக் கரணங்களால் தனித் தனியறியப்பெறும் அறிவின்பயன் எல்லாவற்றையும் நுகர்ந்து தனித்து நிற்பது என்பதும், மூல மலத்தோடு இயற்கையே இயைந்து தத்துவங் களோடு பொருந்தி அவத்தையடையும் என்பதும், அவத்தையுறும் போது ஆன்மாவோ டுடனியங்குந் தத்துவங்கள் முறையே முப்பத்தாறு,

இருபத்தைந்து, மூன்று, இரண்டு, ஒன்று என்பதும் தொகுத்து அறியக் கிடக்கின்றன.

இங்ஙனம் ஒருவாறு கூற உண்ணின்றுணர்த்தும் ஞானவேற் கடவுளுக்கும், உரையாக்கி உள்ளுக்குத் தெளிவித்த மாதவச் சிவஞான யோகிகட்கும் வணக்கம் செலுத்தக் கடமை பெற்றுள்ளேன். அபர சிவமாய் அமர்ந்து சந்நிதிமாத்திரையில் எல்லாவற்றையும் இயக்குவித்து ஆட்டுவித்தால் ஆடாதார் யார் என்ற வேதத்தின் விழுமிய கருத்தை விளக்கி நிற்கும் மகா சந்நிதானம் அவர்களுடைய பேரருளுக்கும் என் வணக்கம் நன்றியும் உரித்தாகுக.

என அரிய மொழிகள் பகர்ந்தனர்.

## ஐந்தாம், ஆறும் சூத்திரம்

*விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்*
*களந்தறிந் தறியா வாங்கவை போலத்*
*தாந்த முணர்வின் றமியருள்*
*காந்தங் கண்ட பசாசத் தவையே.*

*உணருரு வசத்தெனி னுணரா தின்மையின்*
*இருதிற னலலது சிவசத் தாமென*
*இரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.*

என்னும் ஐந்தாம், ஆறும் சூத்திரங்களைப் பற்றித் திருநெல் வேலி திருவாளர், **A. முத்தையா பிள்ளையவர்கள்** தாம் எழுதி யனுப்பிய கட்டுரைக் கருத்துக்களைத் தழுவி தெளிவுரைகள் புகன்றனர்.

இவ்விரிவுரை நடக்கையிலே ஒன்று முதல் ஆறுஞ் சூத் திரம் முடிய திரு. பிள்ளையவர்கள் ஆராய்ந்தெழுதி யனுப்பி அச்சிடப்பட்டிருந்த கட்டுரைகள் அவையோர்க்கு வழங்கப் பட்டன.

அவைத் தலைவரவர்கள் இன்றைய சொற்பொழிவுகள் எல்லாவற்றுக்கும் தக்கபடி கருத்துக்களை விளக்கியும் பாராட் டியும் அரிய நல்லுரை புகன்றனர்.

இன்று தொடக்கம் முதல் இறுதிவரை தமிழ் மறை இசையொலிகவின் செய்தது.

இவற்றோடு இன்றைய மகாநாடு இனிது நிறைவேற, குழுவினர் எல்லாரும் அனுட்டானதிகளை முடித்துக்கொண்டு மீண்டும் இரவு 8-மணிக்கு அவையிற் கூடினர். அப்போது திருச்சிராப்பள்ளி திரு. தங்காம் பிள்ளை "யோகாசனங்கள்" பலவற்றைப் போட்டுக் காட்டி, அவற்றின் பயன் இன்னின்ன என எடுத்துச் சொல்லி அவையினரை மகிழ்வித்தனர். இடையிலே அவர் தம் மாணவரான சிதம்பரம் திரு. N. தண்டபாணி பிள்ளை இவ்யோகாசனங்களின் உட்கருத்துக்களைப் பற்றித் தெளிவாய் உணர்த்தினர். அதன் முடிவில், காரியதரிசி ஸ்ரீமௌன **சோமசுந்தரத் தம்பிரான்** அவர்கள்,

"உடலை வளர்த்தேன் உயிர் வளர்த்தேன்,' என்ற திருமூலர் வாக்குப்படி 'உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம் உடம்பினுள் உத்தமனைக் காணவே' எனவும் சாதனமாயுள்ளது உடலாகையால் அது உறுதி பெற்றிருந்தால் அன்றி உயிர்க்கு உறுதியாகிய வீடுபேறு அரிதாகலின், அவ்வுடம்பிற்கு உறுதிப் பயிற்சியை யோகாசன முறையில் விளக்கிக் காட்டி முன்னோர் கொள்கையைப் பொன்னே போல் போற்றி வளர்த்து, உலகவர் பயன்பெற பரோபகாரச் சிந்தையைத் தன் எளிய வாழ்க்கையிலும் மேற்கொண்டொழுகும் புண்ணியரான அன்பர், திரு. தங்காம் பிள்ளைக்கு எல்லா நலங்களும் அருளுமாறு அன்று ஆலவாயில் கேழல் அருங் குழவிக்குப் (பன்றிக் குட்டிக்கு) பால் கொடுத்த திருவிளையாடலைப் புரிந்த ஸ்ரீ தாயுமான சொக்கலிங்கப் பெருமான் திருவருளைப் பிரார்த்திக்கின்றேன்."

எனப் பாராட்டிப் புகழ்ந்தனர். இங்ஙனம் இனிது நிறைவேறியதும் இரவு விருந்தளிக்கப்பட்டது.

## மூன்றாம் நாள் நிகழ்ச்சி

விஷு வருஷம் ஆவணி மாதம் 14உ (30—8—41) சனிக்கிழமை

முன்னாட் போன்றே இன்றைய மகாநாட்டுத் தலைவர்களாகிய இராவ்பகதூர் C. M. **இராமச்சந்திரஞ் செட்டியாரவர்களை** முந்திய நாள் மகாநாட்டுத் தலைவரவர்கள், மற்றைய நாள் தலைவர், கோவை வழக்கறிஞர், சிவக்கவிமணி C. K. **சுப்பிரமணிய முதலியாரவர்கள் B. A.,** மற்றும் பல அன்பர்கள் புடைசூழப் பெருஞ் சிறப்புக்களுடனும், பல்லியங்கள் முழங்கவும் மகாநாட்டு

மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு — இரண்டாம் நாள் (30—8—1941)



தலைவர்:- சென்னை இந்துசமய அறநிலையக்கழக உறுப்பினர்,
இராவ்பகதூர், திரு. C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள் B. A., B. L.

மண்டபத்துக்கு அழைத்து வரப்பட்டனர். **ஸ்ரீ-ல-ஸ்ரீ** மகாசந்நிதானமும் அடியார்கள் புடைசூழ, தமிழ்மறை யிசையொலி முழங்க முன்னாட் போலவே மகாநாட்டு மண்டபத்திற்கு எழுந்தருளி வந்தனர். மகாநாட்டுத் தலைவர்கள் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தைத் தரிசித்து வணங்கியதும், ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் ஆசீர்வதித்து முகமன் கூறினார்கள். அவைத்தலைவர்கள், பெருநிலக்கிழார்கள், பேரன்பர்கள் இவர்களை நிழற்படம் பிடிக்கப்பட்டது.

இன்றும் மண்டபத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ பொல்லாப் பிள்ளையார் முதலான பெருந் தேவர்களுக்கு வழிபாடாற்றித் திருமுறையொலிப்ப அவைதொடங்கியது.

**தலைவர் வரவேற்பு:-** இராவ்பகதூர் C. M. இராமச்சந்திரஞ் **செட்டியார் அவர்கள்** இன்றைய நிகழ்ச்சிகளுக்குத் தலைமை பூண்டார்கள். அவர்கட்கு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் திருவுளத் தோற்றத்தின்படி இவ்வாதீனத் திருக்கூட்டத்தைச் சேர்ந்த **ஸ்ரீ சிவகுருநாதத் தம்பிரானவர்கள்** அடியிற்கண்ட வரவேற்புப் பத்திரத்தை வாசித்து அளித்தார்கள்.

*திங்க ளிளம்பிறை செஞ்சடை சேர்த்த*
*சங்கர னன்ப சமயக் கடவுள்*
*பலவாக் கொண்ட பான்மைத் திருத்தளி*
*நலமாத் திகழ நற்பொருள் நன்னிலம்*
*வைத்திடு நோக்கம் சுத்தமாய்த் திகழ*
*இந்துமத தரும வுந்துபரி பாலன*
*நியமவுத் தியோகம் நேர்படப் பெற்றே*
*பயமுறப் பக்தியின் நயமொடுங் கவனம்*
*மன்னிட வாற்றும் உன்னத சீல!*
*கோவைமா நகர்வாழ் தேவினுக் கன்ப!*
*தாமெச் சும்புகழ் இராமச் சந்திர!*
*சழக்கிலா வழக்கின் பழக்க முணர*
*ஆங்கிலக் கல்வி பாங்கினிற் படித்தே*
*பீஏ பீஎல் ஆய பட்டம் பெற்*
*றோங்கிய செந்தமிழ்த் தாங்கிய சங்கம்*
*கோவையில் நிறுவிய நாவல சிகாமணீ!*

"கொங்கு மல"ரெனத் தங்கு பத்திரிகை
செந்தமிழ் முறைமையில் தந்தோய்! சைவ
சித்தாந்த முறைகளில் வைத்திடும் பக்திப்
பேரவா வுடையோய்! நேரிய பண்போய்!
ஆலயக் கல்வெட் டேலவே யறிவோய்!
பழமைசால் சரிதம் இழமை நன்குணர
ஆய்ந்து பொறித்திடும் அழகுசால் குறிப்புணர்
நாயக! எவைக்கும் தாயக! கேண்மோ
சோழநன் னாட்டிற் றலங்குமா யூரக்
கீழைத் திசையிற் கெழுமிய தருமைக்
கயிலாய பரம்பரை எயிலார் மடாலயத்
தேற்ற முறைமையின் இயல்பினை விளக்க
மெய்கண்டான் சித்தாந்த மேல்மகா நாட்டுத்
தெய்வத் திருவிழாச் சீர்ச்சபை தன்னில்
தலைமை வகித்தே சாந்தபொன் மொழிகள்
பலபடப் பொழிந்தே பண்பின்
நிலவு மெய்யன்பின் நிலைத்து வாழுகவே!

திருச்சிற்றம்பலம்.

இது அவையில் வழங்கப்பட்டது.

தலைவரவர்கள் இதைச் சார்ந்து கீழ்க்காணுமாறு தலைமை முன்னுரை கூறினார்கள்.

மனத்தகத்தான் தலைமேலான் வாக்கி லுள்ளான்
வாயாரத் தன்னடியே பாடுந் தொண்டர்
இனத்தகத்தான் இமையவர்தஞ் சிரத்தின் மேலான்
ஏழண்டத் தப்பாலான் இப்பாற் செம்பொன்
புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதி னுள்ளான்
பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றி னுள்ளான்
கனத்தகத்தான் கயிலாயத் துச்சியுள்ளான் காளத்தி
யானவனென் கண்ணு ளானே.

இன்று நடைபெறும் மெய்கண்டான் சித்தாந்த மகாநாட்டின் நிகழ்ச்சிக்கு என்னைத் தலைமை வகிக்கும்படிச் செய்ததும், அதனை அனுசரித்து எனக்குச் செய்த வரவேற்பும் எனக்காக அல்லவென்று நான் கொள்ளுகிறேன். அவையெல்லாம் நான் வகித்துவரும் அறநிலையக்காப்புச் சங்கத்

திற்கே உரித்தாகும். சிறிது காலமாக அச்சங்கத்தைப் பற்றிப் பொது மக்களுள் தவருன எண்ணமே இருந்தது. சங்கத்தின் வேலையும் அதற்கு ஏற்றபடியே இருந்தது. சங்கம் வெறும் உலக வேலைகளைமட்டும் கவனிக்கக் கடமைப்பட்டது என்று எண்ணியிருந்தது. அதாவது ஆலயம், மடம் இவைகளுடைய கணக்கு வழக்குகளைப் பார்த்து ஒழுங்குபடுத்துவதுதான் தன்வேலையென்று எண்ணியிருந்தது. சமயச்சார்பான வேலையில் ஈடுபடவில்லை; ஆனால் சங்கத்தின் பெயரிலேயே 'சமயம்' என்ற சொல்லும் கலந்து இருப்பதால் சமய சம்பந்தமான வேலையும் செய்தல் எங்கள் கடமை என்று நாங்கள் வேலைக்கு வந்தவுடன் எண்ணினேம். அதை அனுசரித்து ஒரு அறிக்கையும் விடப்பட்டது. அந்த அறிக்கை பலன்தந்து வருகிறது என்றறிய மகிழ்கின்ருேம். இன்னும் அதிகமான பலனைத் தருமென்று எதிர்பார்க்கின்ருேம். இப்போது நடக்கும் இம் மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு அவ்வியக்கத்திற்கு ஒரு சான்ருகும். சமயம் முன்னேறுவதற்கு இவ்வியக்கம் ஒரு நல்ல அறிகுறியாகும். மடாலயங்கள் இவ்வியக்கத்தில் ஈடுபடவேண்டியது அவர்கள் கடமை. ஆகவே அவைகளைப் பற்றிச் சிறிது கூறவேண்டியது அவசியமல்லவா!

உலகில் காணும் பிறவிகள் எல்லாவற்றிற்கும் உடல், உயிர் என்ற இரு பகுதிகள் உள. கீழ்நிலையில் உள்ள பிறவிகள் உடலை மிகுதியாகப் போற்றுகின்றன. மேல்நிலையடைந்த பிறவிகள் உடலைக் காட்டிலும் உயிரை அதிகமாக ஓம்ப முயல்கின்றன. மக்கட் பிறவி மேல்நிலை அடைந்ததாகும். அப்பிறவியிலும் பல நிலை கொண்டவர்கள் உளர். அவர்களில் அறிவில் முதிர்ந்தவர்கள் உடலைக் காட்டிலும் உயிரை மிகுதியாக ஓம்புகிருர்கள். உடலை ஓம்புவதற்கு உலகப்பொருளைப் பற்றிய அறிவு வேண்டும். அதனைக் கூறும் நூல்களே உலகநூல்களாகும். அவைகளை மேற்கு நாட்டவர்கள் பெரும் பான்மையாகப் போற்றி வருகிருர்கள். உயிரைப் பற்றிய நூல்கள் சமய நூல்கள் ஆதும். அவைகளைக் கிழக்கு நாட்டார்கள் மிகுதியாகப் போற்றுகின்ருர்கள். இவ்விருவித அறிவையும் போற்றிப் பரப்புவதற்குப் பல நிலையங்கள் உள. உலக அறிவு பொதுவாகக் கல்விச்சாலைகளிலும், சங்கங்களிலும், மக்கட்கின்றியமையாத அரசியல், வாணிபம், வேளாண்மை முதலியவைகளின் நிலையங்களிலும் பாராட்டப்பட்டு வருகின்றது. சமய அறிவோ ஆலயங்களிலும் மடங்களிலும் போற்றப்பட்டு வருகின்றது. மேல்நிலை அடைந்த மக்கட்கு இவ்விரு பகுதிகளும் மிகவும் இன்றியமையாதவையே.

கிழக்கு நாடுகளிலே சமயக் கொள்கைகள் மக்கள் அறிவு பெறத் தொடங்கிய நாட்கொண்டே இருந்து வருகின்றன என்னலாம். அக் கொள்கைகளை அடுத்து ஆலயங்கள் ஏற்பட்டன. தாம் குடியிருக்கும்

இருப்பிடங்களிலே உலக வாழ்விற்கு வேண்டிய ஏற்பாடுகள் இருக்க, உயிரின் பொருட்டாகப் பொது நிலையங்கள் ஏற்படுத்தி அங்கே ஒருங்கு கூடியே முதல் முதலில் செயல்களை மக்கள் மேற்கொண்டார்கள். குடும்பச் செயல்களை ஒழுங்குபெற நடத்த அரசியலார் ஏற்பட்டதுபோல் சமயச் செயல்களை நடத்த அறிஞர்கள் ஏற்பட்டார்கள். தொடக்கத்தில் பொதுமக்களுக் குள்ளேயே மிகத் தேர்ந்தவர்கள் அவ்விதச் செயல் களுக்குத் தலைவர்கள் ஆனார்கள். ஆனால் நாளடைவில் சில குடும்பத் தார்கள் அத்தொழிலை நடத்திவைக்கும் கடமையைச் சிறப்பாக ஏற்றுக் கொண்டார்கள்.

சமய நிலையங்களான ஆலயங்களில் நாளடைவில் சடங்குகள் பெருகி வந்தன. இவைகள் பெரும்பாலும் உயிர் ஓம்பலுக்கு மாறாக உடலோம்புதலைச் சார்ந்து வரத்தொடங்கின. ஆகவே அறிவுபெற்ற மக்களிடம் இம்மாறுதலுக்கு ஓர் எதிரிடை ஏற்பட்டது. சில அறிஞர்கள் தோன்றிச் சடங்குகள் இல்லாத நிலையங்கள் இருத்தல் வேண்டும் என்று முயன்றார்கள். உலகப் பொருள் அறிவும், பொருள் வருமானமும் இல்லறத்திற்கு உகந்தன. சமய அறிவு பரவச் செய்யும் தொழில் அவ் வில்லறத்தாரால் ஏற்கக் கூடாததாகும். ஆகவே சமய அறிவு பரவச் செய்பவர் துறவிகளாய் இருத்தல்வேண்டும் என்ற கொள்கை பரவிற்று. இதனைப் புகுத்தியவர்கள் சமணர்களும் பௌத்தர்களுமே. இக்கொள்கை களால் துறவறம் ஏற்பட்டது. முதலில் காடுகளிலும் பொழில்களிலும் தொடங்கிய இக்கொள்கை பிறகு குகைகளிலும் குன்றுகளிலும் நிலைக்கத் தொடங்கிற்று. நாளாக ஆக ஊரருகில் குடிசைகளும் தனிக் கட்டிடங் களும் ஏற்பட்டன. இவ்வாறு மடாலயங்கள் தொடங்கின.

சமண பௌத்தம் தாழ்வடையச் சைவ வைணவம் மேம்பாடடையச் சமய நிலையங்களில் இன்றியமையாதனவற்றை விட்டுவிடாமல் மக்கள் ஆதரித்தனர். சமயத் தலைவர்கள் சமயத்தைப் பரப்புவதற்கும், தங்கள் இருப்பிடத்திற்கும் மடாலயங்களை வைத்துக்கொண்டனர். இம்மடாலயங் களினால் சமயப் பரப்பிற்கு மிகுந்த நலம் கிடைத்தது. பொது மக்களுக்குள் சமயஞானம் பரப்புவதற்கு மிகுந்த வசதி இங்கே இருந்தது. மாணாக்கர்களை வைத்துச் சமயபோதனை தந்து அவர்கள் மூலமாக ஊர் களிலே சமயக் கட்டுப்பாடு செய்ய இயன்றது. பாடசாலைகள் மூலம் பொதுப் படிப்பும் சமயப்படிப்பும் கொடுக்கமுடிந்தது. சமய நூல்களைத் தொகுத்து ஆராயவும் இடங் கிடைத்தது. கிளைமடங்களை ஏற்படுத்தி நாடெங்கும் சமயத்தை நிலைநாட்ட முடிந்தது. ஆகவே சமய நிலையங் களில் மடாலயங்கள் சிறந்து நிலைபெற்றன. இச்சிறப்புக்களைக் கண்ட

அரசர், வணிகர், வேளாளர் முதல் யாவரும் இந்நிலையங்களைப் போற்றி வரத் தொடங்கினர். பெரும் பொருள்கள் வரத் தொடங்கின. அம் மடத்துத் தலைவர்களுக்குச் சில இடங்களில் ஆலய பரிபாலனமும் தரத் தொடங்கினர். ஆகவே சிறப்பு மிகுந்தது. ஆனால் பொருள் எங்குச் சேருமோ அங்குப் பொருளின் குணமும் சேரும் அல்லவா? முதலில் அறிவு நிலையங்களானவை பிறகு பொருள் நிலையங்களாயின; ஆகவே குணதோடங்களும் உட்புக்கன; இதுவே நமது மடாலயங்கள் அடைந் திருக்கும் தற்போதைய நிலைமைக்குக் காரணம் ஆகும்.

தற்காலம் மடங்கள் அடைந்திருக்கும் நிலைமையைப் பற்றி இங்கே எடுத்துக் கூறவேண்டியதில்லை; தமிழ்நாடு முழுவதும் அறியும். சில மடங்களைத் தவிர, பெரும்பான்மையானவை தத்தம் கடமைகளை அறியா மலும் போற்றுமலும் இருக்கின்றன. அக்கடமைகளைப் போற்றும் வண்ணம் சில மொழிகளை எடுத்துக் கூறுவோம்.

சில மடங்களுக்குச் சமய பரிபாலனம் மாத்திரம் உண்டு. சில பெரிய மடங்களுக்குச் சமயத்துடன் ஆலய பரிபாலனமும் கொடுக்கப்பட் டுளது. முன்னொரு காலத்தில் சிறந்து விளங்கிய காரணங்கொண்டு அருகில் இருந்த ஆலயங்களின் மேற்பார்வை தரப்பட்டது. மற்றப் பொதுமக்கள் செய்து காட்டக்கூடிய பரிபாலனத்தைவிட ஒரு படி உயர்வாகவே நடத்திக் காட்டுவது இவர்களுடைய கடமையாகும். ஆனால் நேரில் அறிந்தவர்கள் அதனை ஒத்துக்கொள்ள முடியாது. தங்களால் பார்வையிட ஓய்விராவிட்டால் அதனை விட்டுவிட்டுத் தம்மைக் காட்டி லும் ஓய்வுள்ளவர்களுக்குக் கொடுத்துவிடலாம். அப்படி இன்றித் தமக்கே உரிமை உண்டு என்று வாதாடுவது அவர்களுக்கு அழகல்ல. ஆலயங்கள் சீரானால்தான் நாடு முன்னேற்றம் அடையும். சமயமும் எளிதில் ஊன்றிப் பரவும்.

**1. ஆலய பரிபாலனம்**

ஆலய பரிபாலனத்தைவிடச் சமயத்தைப் பரப்புதலே மடங் களுடைய சிறந்த கடமை ஆகும்; சில மடத்துத் தலைவர்கள் இதைத் தம்கடமைகளில் ஒன்றல்ல என நினைக்கிறார்கள். மடங் களுக்குச் சமயப் பிரசாரம் இன்றியமையாதது என்று இவர்கள் அறியவேண்டும். மடாலயம் உண்பதற்கும் உறங்குவதற்குமே ஏற்ற இடம் என்ற கருத்து அடி யோடு தொலையவேண்டும். சமயம் பரப்புதலைச் செய்யும் நிலையங்களாக அவை ஆகவேண்டும். நாடோறும் சமய வகுப்புகளும், சமயச் சொற்

**2. சமயம் பரப்புதல்**

பொழிவுகளும் நடைபெற வேண்டும். மக்களை மடத்திற்கு இழுத்துச் சமய ஞானம் பெறச்செய்ய வேண்டும். இதற்குத் தகுந்த சமயப் புலவர்களை ஏற்படுத்த வேண்டும். மேலும் அவ்விதம் புலவர்களை நாடெங்கும் அனுப்பிச் சமயச் சொற்பெருக்குகளை ஆற்றச் செய்யவேண்டும். சமயாசாரியர்களும், பிற்காலத்தில் வந்த புலவர்களும், இக் கைங்கரியத்தில் ஈடுபடவில்லையா? இப்போதைய மடத்துத் தலைவர்கள் மாத்திரம் இந்தக் கடமையிலிருந்து ஏன் நழுவவேண்டும்?

**3. பாடசாலை**

மடங்களை ஒட்டிப் பாடசாலைகள் அவசியம் இருத்தல் வேண்டும். இயற்றமிழ்ப் படிப்பு, இசைத்தமிழ்ப் படிப்பு, சமயப் படிப்பு இம்மூன்றும் பாராட்டப் படவேண்டும். சில நூற்றாண்டுகளாக மடங்களே இம்மூன்றுவித பாடசாலைகளைப் போற்றி வந்தன. இப்போது அவை எங்கு ஏகின? வெகு சுலபத்தில் இவைகளை ஏற்படுத்தலாம். மிக்க பயனையும் தரலாம். ஒரே ஒரு மடம்தான் வித்துவான் பரீட்சைக்குத் தமிழில் போதனை ஏற்பாடு செய்திருக்கிறது. தெலுங்குக்கும், வடமொழிக்கும் எத்தனை ஆதரவு இருக்கிறது! தமிழன்னைக்கு மாத்திரம் ஏன் இக்குறையோ? அறியக் கூடவில்லை. இசைப் பயிற்சி இல்லாமல் போக இசையரங்குகளில் வெளிநாட்டு மொழிகளே பரவுகின்றன. சமீபத்தில்தான் இதற்கு ஓர் ஆதரவு கிடைத்திருக்கிறது. தேவாரத்தையும், பிரபந்தத்தையும் எவ்வளவு ஆலயங்களில் கேட்கின்றோம். அவ்வாறு கேட்கையிலும் சில ஆலயங்களில் பண்ணோடு கேட்கின்றோமா? இசைப் பயிற்சியை மடங்கள் ஏற்றுக்கொண்டால் நமது ஆலயங்கள் தேவார இசையினால் மிளிர்ந்து தெய்வத் தமிழ் மணக்குமல்லவா? ஆகமப்படிப்பு குன்றிப்போக ஆலயங்களில் சமயவழிபாடே குறைந்து விட்டது. ஆகம பாடசாலைகளில் தேறிய மாணவர்களை அர்ச்சகர்களாக்கி விட்டால் எவர்தான் ஆலயம் செல்வதை மறப்பார்.

**4. நூல் நிலையங்கள்**

முற்காலத்தில் மடங்கள் நூல் நிலையங்களுக்குப் பேர் பெற்றிருந்தன. இக்காலத்தில் அந்நூல்கள் எங்கு மாய்ந்தனவோ அறியக் கூடவில்லை. முன்னே விலை மதிப்பற்ற ஓலை ஏடும், செப்பேடும் இருந்தன. இப்போது அவை மறைந்து ஒரு சில காகித ஏடுகளே கிடக்கின்றன. அவைகளையும் ஆறறிவு மக்கள் படியாது ஓரறிவுப் பிறவிகள் துளைக்கின்றன. தமிழ், சரிதம், கலை, இயல், சமயம் முதலிய எல்லா

விதமான நூல்களும் மடங்களில் இருக்கவேண்டும். பொதுமக்கள் படிப்பதற்கு வசதியும் ஏற்படல் வேண்டும். தமக்குக் கீழ் உள்ள கிளைமடம், ஆலயம் இவைகளிலும் நூல் நிலையங்கள் வைக்கப் பெறுதல் வேண்டும்.

முற்காலத்தில் மடங்கள் புலவர்களை ஆதரித்து நூல்களை எழுதி வைத்தன. தமிழில் உள்ள சமய நூல்கள் பெரும்பான்மை அன்னவர்களாலேயே எழுதப்பட்டன. இப்போது புலவர்களும் இல்லை; நூல்களும் இல்லை; பதிப்புகளும் இல்லை. பெயருக்காக ஒரு சிறு செயல் ஒரு சிறிதளவு செய்யப்பட்டு வருகின்றது. தமிழ், சமயம் என்ற இருபகுதிகளிலும் ஏன் பதிப்பு இயக்கம் ஏற்படக்கூடாது? சிறப்பாகத் தோத்திரங்களையும், சாத்திரங்களையும் எளிய விலைக்குக் கொடுப்பதற்காக முயலவேண்டும். சைவ மடங்கள் 12-திருமுறை 14-சாத்திரம் இவைகளை அடக்க விலைக்குக் கொடுக்கும்படியாக நிரந்தர முயற்சி ஒன்றைத் தேடவேண்டும். வைணவ மடங்கள் பிரபந்தங்களை எளிய விலைக்குத் தரவேண்டும். தமிழ் நாட்டில் உள்ள ஒவ்வொரு வீட்டிலும் இவைகள் இருக்கும்படி ஏற்பாடு செய்ய வேண்டும். இதுவே சிறந்த கடமையாகும். ஆலய மட வரலாறுகளை எழுதி வைத்தும், எழுதுபவர்களுக்கு ஊதியம் கொடுத்தும் சிறப்பிக்க வேண்டும். மடங்கள் இத்தொழிலில் ஈடுபட்டால் ஒரு நூற்றுண்டில் செய்யக்கூடிய சமய வேலையை ஒரே ஆண்டில் செய்துவிடும்.

**5. நூற்பதிப்பு**

பெரிய மடங்களுக்குப் பல கிளைமடங்கள் இருக்கின்றன. இவைகளுக்கு மேற்பார்வை இல்லை. நாளுக்கு நாள் மெலிந்துபோய்க் கட்டிடங்களும் இடியத் தொடங்கிவிட்டன. அவைகள் செய்யக்கூடிய கடமைகள் எவ்வாறு நிறைவேறும். கிளை மடங்களைப் புதுப்பித்துத் தகுந்த அதிகாரிகளை ஏற்படுத்துவது முதற்கடமை. இக்கிளைகளால் சமயம் பரப்புதல் வெகுசுலபத்தில் ஏற்படக்கூடும். முற்காலத்தில் கிளைகள் சொத்துள்ள இடங்களிலும், நாட்டுப் புறங்களிலும் இருந்தன. இக்காலத்தில் அவைகளால் அதிகப் பலன் இல்லை. சென்னை முதலிய தலைமை நகரங்களில் கிளைகள் இருக்கவேண்டும். அவைகளால் பெரும் பலன் ஏற்படும். இராமகிருஷ்ண சமாசமும், கௌடீய சமாசமும் உலகப் பிரசித்தி அடைவதற்குக் காரணம் யாது? அமெரிக்கா, லண்டன் இவைகளில் பட்டி மண்டபங்களை ஆக்கி அறிஞர்களை அங்கு ஏற்றி விட்டதனுல் அல்லவா? வைணவ மடங்களுக்குச் சென்னையில் கிளைத் தாபனங்கள் உள. ஏன் சைவ மடங்களுக்கு இல்லையோ! சைவம் நாட்டுப் புறச்சமயமாகி விட்டதா?

**6. கிளை மடங்கள்**

சமயம் சில வகுப்பாளர்களுக்கு மாத்திரம் அல்ல. பணக்காரர் களுக்கு மாத்திரம் அல்ல; எல்லாருக்கும் பொதுவானது; ஏழைகளுக்கு அதில் உரிமை அதிகம். ஆகையால் ஏழைகளின் முன்னேற்றத்தை மடங்கள் முக்கியமாகக் கவனிக்க வேண்டும். மக்களின் ஒழுக்கத்தைச் சீர்ப்படுத்த வேண்டும். வறுமை, நோய், வருத்தம் இவைகளைத் தீர்க்க ஏனைய சமய நிலையங்கள் எத்தனை பாடுபடுகின்றன! நமது மடங்கள் இதில் ஒரு லட்சத்திற்கு ஒரு கூறுவது செய்கின்றனவா? ஏழை மகனுக்கு உற்ற துணையாக அல்லவா ஒரு மடம் இருக்கவேண்டும்? இவ்வித கைங்கரியத்தில் நமது தமிழ் மடங்கள் இறங்கித் தமிழையும், சமயத் தையும் மேம்படுத்துமாறு இறைவனை இறைஞ்சுகின்றேன்.

7. சமூக ஊழியம்

இதுவரை கூறியவை குறிப்பிட்ட எந்த மடத்தைப்பற்றியும் அல்ல. நூற்றுக்கணக்காய் உள்ள பொது மடங்களைப் பற்றியாம். நாம் இப் பொழுது கூடியிருக்கும் இந்த மடாலயமோ இக்கூற்றுகளுக்கு விலக்காக இருந்து ஒப்புயர்வற்ற தொண்டுகளைச் செய்து வருகிறது. இச்சித்தாந்த மகாநாடு மிகச்சிறந்த திருத்தொண்டாகும். நாம் காணும் இத்தனை சிறப் புக்களுடன் இதனைத் தொடங்கினது மிகவும் கடினமான வேலையாகும். "தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும்" என்றார் இம்மடால யத்தில் விளங்கிய முற்காலத்துக் கவிஞர் பெருமான். இம்மகாநாட்டை முதன் முதலாகத் தொடங்கினது பெருத்த சங்கடங்களைத் தந்திருக்கும். இவ்வளவு துன்பத்துடன் தொடங்கி இருக்கும் இம்மகாநாடோ முடிவில் பெருத்த இன்பம் பயக்கும் என்பதில் என்ன ஐயம். இப்பெரும் முயற்சியை எடுத்துக்கொண்டு அதனை வெற்றி பெறச் செய்திருக்கும் சந்நிதானத்திற்குத் தமிழ்நாடு என்றும் மறவாக்கடமைப் பட்டிருக்கும் என்று மறு முறையும் வற்புறுத்திக் கூறுகின்றேன்.

திருச்சிற்றம்பலம்.

## ஏழாஞ் சூத்திரம்

*யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலின்*
*சத்தே யறியா தசத்தில தறியா*
*திருதிற னறிவுள திரண்டலா வான்மா.*

என்னும் ஏழாம் சூத்திரத்தைப்பற்றி, திருநெல்வேலி விடுதி பெற்ற தாசில்தார் **திரு. மா. வெ. நெல்லையப்ப பிள்ளை யவர்கள் B. A.,** தமது மூதறிவுகொண்டு நுணுகி ஆராய்ந்த

அருங்கருத்துக்கள் அமைந்த அவர்களின் கட்டுரை அச்சிடப் பட்டிருந்ததை அனுசரித்துப் பேசினார்கள்.

அக்கட்டுரை சபையில் வழங்கப்பட்டது.

## எட்டாஞ் சூத்திரம்

எட்டாஞ் சூத்திரத்தின் அரும்பொருள்களைத் திருவையாறு, அரசர்கல்லூரித் தமிழ் விரிவுரையாளர், வித்துவான் **திரு. இராம. கோவிந்தசாமி பிள்ளை** அவர்கள்,

"கல்லால் நிழன்மலை, வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர், நல்லார் புனைவரே"

"மடமோட்டுங் கருணைதனை மறவேன் நெஞ்சளவளவு மாற்றார்நூலைத்
தொடமாட்டேன் அவருரைக்கு முரைகேளேன் அநியாயத் தொடக்கர்கோட்குட்
படமாட்டேன் அருள்சுரந்து வினயவொரு மொழிப்பயனிற் படருநோக்கம்
விடமாட்டேன் இனிதளித்தி யெனதுகுகப் பிரமமென விளங்கெம்மானே"

கயிலையிலிருந்தருள்செய் கண்ணுதற்கடவுளே முக்கட்டுடைய மக்கட் பிறப்பினர்க் குற்றவிடுக்கணை முற்றுக் களைவான்வேண்டி மக்கட்சட்டை தாங்கிவந் தருள்செய் அருட்கடலாம் எங்கள் பரமாசாரியராகிய தருமைத் திருத்தளித் தலைவர்பெருமான்அவர்கள் திருவடிகட்கு அடியன் அளவில் வணக்க முரித்தாகுக.

அவைத்தலைவர் அவர்களே! ஆன்றவிந் தடங்கிய முனிவரர்களே! அவைக்கண் குழுமிய ஆன்றோர்களே! அடியன் வணக்கம் உங்கட்கு முரித்தாகுக.

அடியேற் கிம்மாநாட்டினரால் பணித்தபணி சிவஞானபோத வெட்டாஞ் சூத்திரத்தைப்பற்றிப் பேசவேண்டுமென்பதாம். அவ்வெட்டாஞ் சூத்திரத்தினைச் சற்று எட்டிப்பார்த்துச் சிலவற்றினை யொருவகையா மட்டுப்படுத்தி விண்ணப்பிப்பேன். ஆவனகொண் டல்லனவகற்றி யகமிக மகிழவேண்டுவல். முதலாவதாக இந்நூல் செய்தார் திறனும், இவர் தம் மாணவர் திறனும், அன்னவர் வழிநூல் செய்தார் பலர் திறனும், இந்நூல்களே சித்தாந்த சாத்திரம் என்பதும் ஒருவகையாக உன்னி யாய்தல் வேண்டும். சித்தாந்தம் = சித்தம் + அந்தம். வேதாந்தத்தின் முடிந்த முடி-

பாகிய பொருளைமுடித்துக் காட்டுவ தெதுவோ அது சித்தாந்த மெனப் படும். அம்முடிபுதாமும் பதி, பசு, பாசம் ஆகிய முப்பொரு ளியல்களை முற்றத்தெரிப்பனவே. அவற்றிற்கென வெழுந்த நூல்கள் உந்தி, களிறு முதலிய பதினான்குமேயாம். அவற்றுள் உயர் போதம் என அடையடுத்து வந்த பெயரையுடையதெதுவோ? அதுவே யீண்டுரைக்கப்படும், கூட்டப் பட்டிருக்கும் மாநாட்டின் மகிழப்படும் சிவஞானபோதமாகும். இந்நூலை யாக்கினார் கண்ணுதலுங் கண்டக்கறையும் கரந்தருளி மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும் வெண்ணெய்நல்லூர் மெய்கண்டதேவ நாயனாராவர். இப்பெயர் சத்தியஞானதரிசனி என்னும் பெயரின் திரிபுபோலும் எனக் கொள்ள வமைந்துளது ஆய்தற்பாற்றும். இவர் வரலாற்றினை சிவஞான பாடிய முகப்பிற் காண்க.

இந்நூல் பொது, சிறப்பென விருவதிகாரங்களையும்; பிரமாணம், இலக்கணம், சாதனம், பயன் எனும் நான்கியல்களையும்; பன்னிரு சூத்திரங் களையும்; முப்பத்தொன்பது அதிகரணங்களையும்; 82 வெண்பாக்களையும் உடையதாம். இதன் வழிநூல் சிவஞான சித்தியாராகும். அதன் வழிநூல் சிவப்பிரகாசமாகும். ஈண்டுச் சிவமாவது யாது? ஞானமாவது யாது? போதமாவது யாது? என ஆய்தல் வேண்டுமன்றோ!

பொய்ம்மையிலாச் சிவஞானபோதம் எனப் புகன்ற குருமணி யினை மணிவாசகப் பெருந்தகையார் “என்றலுமே சிவமேது ஞானமேது இங்கிலங்கியிடும் போதமேது இயம்புவீரேல், அன்றுவட நீழலில் வந்திருந் தார் நீரே யடியேனு முமக்கடிமை ஆவேனென்ன, நின்ற சிவமொன்று அதனைத் தேர்தல் ஞானம் நிகழ்போதந் தேர்ந்ததனைத் தெளிதலாமென்று, ஒன்றிய நற்பொருள் வினவி நிற்பார் சிந்தை யுருகும்வகை யுரைசெய்தார் உவமை யில்லார்” எனக் கடவுண்மாமுனிவரர் கழறுவர். இவற்றால் சிவமும் ஞான மும் போதமும் இவையென்பது புலனாயிற்றன்றோ!

இச்சிவஞானபோதம் பன்னிரு சூத்திரங்களை யுடைத்தென்றும். முன்னாறும் பொதுவியல்பு பற்றியும், பின்னாறும் சிறப்பியல்பு பற்றியும் கூறும். பொதுவதிகாரத்தில் பிரமாணவியல், இலக்கணவியல் என விரு வியல் பகுத்து ஆண்டவனுடைய தடத்தவிலக்கணம் கூறப்படும். சிறப் பதிகாரமாகிய உண்மை யதிகாரத்தில் சாதனவியல், பயனியல் எனப் பகுத்து ஆண்டவனுடைய சொரூபவிலக்கணம் கூறப்படும். ஒவ்வொரு வியலுக்கும் சூத்திரம் தனித்தனி மூன்றாய்ப் பன்னிரண்டாம்.

சாதனவியல் கூறும் மூன்று சூத்திரங்களுள் நடுவணதாகிய எட் டாஞ் சூத்திரமாவது,

"ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே"

என்பதாம். இச்சூத்திரம் நுதலுவது:-

(1) உயிர்க்கு நல்லறிவு தவத்தினுலேயேவரும்.

(2) உயிர்க்குச் சற்குருவாய் வருவது அரனே.

(3) உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினுலே தன்னையும் அறியமாட்டாது.

(4) உயிர் பஞ்சேந்திரியங்களின் பற்றற்ருல் தன்னையும் அறியும். என்பதாம்.

சிவஞான முனிவர் உரை:- தவத்தினிலுணர்த்த தம்முதல் குருவுமாய் (உணர்த்த) ஐம்புலவேடரி னயர்ந்தனை வளர்ந்து, விட்டு அன்னிய மின்மையின் அரன் கழல் செலும் என்பதாம். சிற்சில விடங்களில் சூர்ணிக்கொத்தும் மறுக்கப்படுதலை அறிஞர் தெளிவாராக. இவை அதிகரணங்களாம். இந்நான்கும் உட்பிரிவெனினுமமையும்.

பொருள்:- மன்னவகுமாரனுவா னெருவன் பிள்ளைமைப் பருவத்து மடமையால் வேடருட்பட்டுப் பரதந்திரனுய்த் தன் சாதிக்குரிய பெருந்தகைமை யிழந்து இழிதொழில் பயிற்றப் பெற்று வளர்ந்து அவ்வரசனையுந் தன்னையுமறியாது மயக்கமுற்று நிற்க, பின்பு தந்தையாகிய அரசனும் நீ என் மகனென்று அறிவுறுத்தி அவ் வேடரினின்றும் அவனைப்பிரித்துப் பெருந்தகைமையோடும் தானும் வண்ணஞ்செய்து போற்றுமாறுபோல, தன்னிலையிற்பிறழ்ந்து நெருங்கிய ஐம்பொறிவேடர் சூழலிற்பட்டு அறிவிழந்து தன்னை யறியாமையேயன்றித் தலைவனையும் அறியாது நிலைபெற்ற உயிர் முன்னே செய்துகொள்ளப்பட்ட புண்ணியச் சிறப்பால் நண்ணிய இப்பொழுது தமக்கு அந்தர்யாமியாய் உண்ணின்று இதுகாறும் உணர்த்திவந்த பரம்பொருளே குருவடிவமும் கொண்டெழுந் தருளிச் சிவதீட்சை செய்து, "மன்னவ குமாரனுகிய நீ ஐம்பொறி களாகிய வேடர்களோடு கூடி வைகி வளர்ந்து நின்பெருந் தகைமையை அறியாது மயங்கி யிடர்ப்பட்டாய், நின்பெருந்

தகையாவது இவ்வியல்பிற்று" என்று அறிவுறுப்ப, அறிந்த மாத்திரையே அவரைவிட்டு நீங்கி அநந்யமின்றி அநந்யமாந் தன்மையினிலைபெற்று அம்முதல்வன் திருவடிகளை யணையும். "பல்லூழிகாலம்பயின் றரனை யர்ச்சித்தால் நல்லறிவு சற்றேநகும்" என்பதால் நல்லறிவு பல்க உயிர்கள் முயறல்வேண்டும். இனிச் சிறப்பாக ஆராயப்படுவன உயிர், உடல்களின் திறம் ஆம். உயிர்த்தலால் உயிர், உடலுதலால் உடல் எனக் காரணக் குறி பெற்றதென்பார். உயிர், தொடக்கு, இறை என முப்பொருள் உண்டென்பது ஆகமநூற்றுணிபன்றோ.

(1) பல்வகைத்தாதுவின் உயிர்க்குடல் போல்பல (2) காலம் உலகம் உயிரே யுடம்பே (3) வானின் றிழிந்து வரம்பிகந்த மாபூதத் தின் வைப்பெங்கும் ஊனும் உயிரும், (4) ஊனினுள் உயிரை வாட்டி (5) ஊனுயிர் வேறு செய்தான் நொடித்தான்மலை யுத்தமனே (6) ஊனாலு முயிராலு முள்ளபயன் கொள நினைந்து (7) ஊனாகி யுயிராகி யதனுள் நின்ற வுணர்வாகிப் பிறவனைத்தும் நீயேயானாய், நானேது மறியாமே யென்னுள் வந்து நல்லனவுந் தீயனவுங் காட்டா நின்றாய், தேனாருங் கொன்றையனே நின்றியூராய் திருவானைக்காவி லுறை சிவனே ஞானம், ஆனாயுன் பொற்பாதம் அடையப்பெற்றால் அல்லகண்டங் கொண்டடியேன் என்செய்கேனே (8) என்பிருத்தி நரம்புதோல் புகப்பெய்திட் டென்னையோ ருருவமாக்கி, இன்பிருத்தி முன் பிருந்த வினைதீர்த்திட் டென்னுள்ளங் கோயிலாக்கி, அன்பிருத்தி யடியேனைக் கூழாட்கொண் டருள்செய்த வாரூர்தம், முன்பிருக்கு விதி யின்றி முயல்விட்டுக் காக்கைபின் போனவாறே, என்பனவற்றால் உயிர் உடனிலே யறியக்கிடக்கின்றதன்றோ!

*1.* உயிருக்கு நல்லறிவு தவத்தினாலேயேவரும். நல்லறிவு எனவே புல்லறிவு ஒன்றுண்டுபோலும். அறிவு பூதங்கள் ஐவகைப்படும். பகுத் தறிவு (தக்கவின்ன தகாதன வின்னவென் றெக்க வுன்னும்) ஒன்று கூட்ட அறுவகையாம்.

தவம் - சரியை, கிரியை, யோகம் ஆம். பொதுமறையாசிரியர் தவத்தினை "உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை யற்றே தவத்திற் குரு" எனப்பகர்வர். "விளக்குப் புகவிருண் மாய்ந்தாங் கொருவன், தவத்தின்முன் னில்லாதாம் பாவம்" என்பது நாலடியார். அறியாமைக் குரியவிடம் ஒழியப்பெறுமாயின் அறிவுடைமை தானே செறியுமன்றோ?

**2**-ம் அதிகாரணம்:- "தம்முதல் குருவுமாய் உணர்த்த". உயிர்க்குச் சற்குருவாய் வருவது அரனே. உயிர்கள் தொடக்கினல் பாசத்தால் மூவகைப்படுவர் எனவாம்.

உயிர்க்குத்தனியாக அறிவு இச்சை தொழில் வேண்டுதல் வேண்டாமை உண்டாம். உயிர்கட்குப் பதி பதிதலால் நல்வினையும், பாசம் வலித்தலால் தீவினையும் அருவப்பட்டு மீண்டுருவப்பட்டு வரும். ஆகவே உயிர்கள் ஒருமல இருமல மும்மலமுடையர்.

உலகெலாமுணர்ந் தோதற்கு அரியவனுகிய ஆண்டவன்,

வென்றுளே புலன்களைந்தார் மெய்யுணர் உள்ளந்தோறும்
சென்றுளே யமுதமூற்றுந் திருவருள் போற்றியேற்றுக்
குன்றுளே யிருந்துகாட்சி கொடுத்தருள் கோலம்போற்றி
மன்றுளே மாறியாடு மறைச்சிலம் படிகள்போற்றி.

என மூவகையான் அருவமும் அருவுருவமும் உருவுமாய் நின்று உணர்த்துவான் என்பது புலனும். குரு = அறியாமையினை யொழித்து அறிவுடைமையினை யருள்பவன். கௌரநிலையுடையன் எனப்பொருள் கூறுவர். இதன் பரியாயப்பெயர்களாகிய ஆசிரியன், ஆசாரியன், கணக்கன், ஓசன், தேசிகன், ஆசான், உபாத்தியாயன் என்பனவும் அப் பொருளையே வலியுறுத்தாநிற்கும்.

குருவெனக்கிளக்கவே சகலராகிய (ஆணவ கன்ம மாயாமலங் களுடைய) உயிர்களே பருவமுற்ற மாணவர்கள் என்பது புலப்படும். மீளாவடிமையுமைக்கேயாளாய் என மாணுக்கராகி, உடையார்மு னில்லார்போல் ஏக்கற்றுங் கற்ருர் தலையாயினர். அந்நிலைக்கு நாணிக் கல்லாதார் கடையராயினர் என்பது பொதுமறையன்றே! இச்சிவஞான போத நூலின்கணும்

"காணுங் கண்ணுக்குக் காட்டுமுளம்போல்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா வன்பி னரன்கழல் செலுமே.

செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானு மரனெனத் தொழுமே"

எனப் பகர்தலும் இதனோடொட்டுக. ஆகவே நல்ல நாமம் நவிற்றி யுய்ந்தேனன்றே எனுநாமம் அர அர மகாதேவ என்பதாம், அரனெனும் நாமம் பெரும்பெயர்க்கடவுள், இயவுள், இறை எனும் பொருளுள்ளதாக வடங்கிக்கிடக்கும்.

3. உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினால் தன்னையும் அறியமாட்டாது என்பது மூன்றாமதிகரணமாம். ஐம்புலம் - பொறிகட்குத் தானியாதுபெயராயிற்று. ஐம்பூதக்குணங்கள் ஐந்தாம். அவை சுவை யொளி யூறோசை நாற்ற மென்பனவாம். அவைகளை யறியுங் கருவியு மைந்தாம்; பூதமைந்தாகலான் பொறிகளும் ஐந்தாயின. அறிவுக் கறிவுயென வறையப்படும் தொழிற் கருவி ஐந்தாம் (கர்மேந்திரியம் எனப்படும்). இவ் விருதிறக் கருவிகளைக்கொண்டு மனம் பற்றுதலைச் செய்யும் உயிர்கள் உறுவன உடனலமும் உயிர்நலனுமாகிய விருதிறநலனுமாம். இவையே கண்டுகேட் டுண்டுயிர்த்துற்றறிதலாம். உலகியலில் கொண்டு மனம் செலுத்துறின் பிறவிப்பிணிகளாக்கும். இறைவ னறுமலரடிகளில் "மாசில் வீணையும் மாலைமதியமும், வீசுதென்றலும் வீங்கிளவேனிலும் மூசுவண்டறைப்பொய்கையும் போன்றதே, ஈசன் எந்தை யிணையடி நீழலே" எனக்கொளின் உலகியலையறுத்து மேனிலையாகிய உயிர்நலனை யுறச்செய்யும்.

மனம் பற்றுதலைச் செய்தலினாலே இந்திரிய வயமயங்கி, பிறப்பதற்கே காரணமாய் ஆகின்றது. அக்காலை தன்னிலை யறியமுடியா மயக்குறு நிலையிற் றியக்குறுகின்றதுயிர். பற்று - அவா இரண்டும் வேறு வேறு பொருளைக் குறிப்பனவாம். "பற்றவா வேரொடும்" எனும் பாட்டால், அஃதறியற்பாற்றும். அவாவென்ப வெல்லாவுயிர்க்கும் தவாப் பிறப்பீனும் வித்தாமாகலின், "பற்றுக பற்றற்றான் பற்றினையப்பற்றைப் பற்றுக பற்றுவிடற்கு" என்றாங்கு கோடல்வேண்டும். பாதமல்லது பற்றிலர் பற்றிலார் ஆகலின் அவற்றினைப்பற்றின் அம்மயமாய் அந் நிலையினை யெய்துவர். தன்னையும் என்றவும்மையான் ஆண்டவனையும் அறியாது அறிவிக்க அறிபவை உயிர்களே. தாமே யறியும் உரிமையு மின்று. அவன்றாளே கண்ணாகக் காணுதல் வேண்டும். அவனருளாலே யவன்றாள் வணங்கியென்பதுமது. ஐம்புலவேடரின் அயர்ந்தனை வளர்ந்தென

4. உயிர் பஞ்சேந்திரியங்களினுலே பற்றற்றல் உயிராகிய தன்னையும் ஆண்டவனையும் அறியும். அறியாமைக்கேது பற்றுடைமை. அறிவதற்கேது பற்றுவிடுகை. அந்நியமின்மையின் அரன்கழல் செலும் பற்றறுதற்கேது,

"முன்பெலாம் இளையகாலம் மூர்த்தியை நினையாதோடிக்
கண்கண விருமிநாளும் கருத்தழிந் தருத்தமின்றிப்
பின்பக லுணங்கலட்டும் பேதைமார் போன்றேனுள்ளம்
அன்பனுய் வாழமாட்டேன் அதிகைவீ ரட்டானுரே"

ஓம்பினேன் கூட்டைவாளா உள்ளத்தோர் கொடுமைவைத்துக்
காம்பிலா மூழைபோலக் கருதிற்றே முகக்கமாட்டேன்
பாம்பின்வாய்த்தேரை போலப் பலபல நினைக்கின்றேனை
ஓம்பிநீ யுய்யக்கொள்ளாய் ஒற்றியூ ருடையகோவே"

எனக்கருதல் வேண்டும். பற்றுதற்கான தவத்தினைப்புரிதல் வேண்டும்.

நம் சைவசமய நூல்கள் முப்பொருள் உண்டென முறையிடுகின்றன. அவற்றினை நம்மெய்கண்டார் எங்ஙனம் நவில்கின்றார்.

(1) இறை:— ஏகனுகியிறைபணிநிற்க. அரன்கழல், ஊனக்கண் பாசம் உணாரப்பதி, சிவசத்தாம் எனவும்.

(2) உயிர்:— இரண்டலவான்மா, சந்தித்ததான்மா, மாயா வியந்திர தனுவினுளான்மா, சதசத்தாம் எனவும்.

(3) தொடக்கு (பாசம்) ஊனக்கண்பாசம், அம்மலம், மலமாயை, சகசமலம் எனவும் கூறுநிற்கும்.

மேலும் இறப்பு, பிறப்பு, மறுபிறப்பு, சுவர்க்கம், நரகம், புண்ணியம், பாவம் முதலியன உண்டென்கின்றது. "துறக்கப்படாத வுடலைத் துறந்து வெந்தூதுவரோடு இறப்பன் இறந்தால் இருவிசும் பேறுவன் ஏறிவந்து பிறப்பன் பிறந்தால் பிறையணிவார்சடைப் பிஞ்ஞகன்பேர் மறப்பன்கொலோ வென்று என்னுள்ளங் கிடந்து மறுகிடுமே.

"செடியாய வுடஙீர்ப்பான் றீவினைக்கோர் மருந்தாவான்" "இந்திரிய வயமயங்கி" "இருவினையின் மதிமயங்கித்திரியாதே," "ஆயிரு வினையிற் போக்குவரவு புரிய" ஆதியன மேற்குறித்தனவற்றைக் குறிப்பன வன்றோ! ஆகவே உயிர்கட்கு ஆண்டவன் உடல், உலகம், கருவி, நுகர் பொருள் ஆயவற்றை வினைக்கேற்ப வருள்பவன்.

வினை பிராரத்த, ஆகாமிய, சஞ்சிதங்களாம். இச்சூத்திரம் நான்கதிகரணங்களை யுடைத்தெனச் சூர்ணிக்கொத்துரைத்தது. தவத்தினில் தம்முதல் குருவுமாய் ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்ந்தனை என உணர்த்த விட்டுச்செல்லுமென வியையும் என அங்வயித்துரைப்பார் சிவஞானமுனிவர். சாதனத்தால் எய்துவது சாத்தியமாம். அதுவே பயனியலாம் என்க.

மன்னவனுகிய நீ என்பது வேடர் என்பதால் கிடைப்பதாம். "அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத்தைத்தே" எனக்கூடக் குறித்திருப்பர் போலும் எனத்தோன்றுகின்றது.

1. தவத்தினில் உணர்த்த 2. தம்முதல் குருவுமாய் 3. ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தென 4. விட்டு அந்நியமின்மையின் அரன் கழல் செலும் என முடிவு காணத்தக்கதாம். இனிச் சிறப்பாகத் தவ மாவது யாதென வாராயின் சரியை, கிரியை, யோகம் இவற்ருலுறுவது பதமுத்தி. ஞானத்தாலுறுவது பரமுத்தி. மார்க்கம் தவமார்க்கம், சன்மார்க்கம் எனவிருவகைத்தாம். சகலர்க்கருளிய குருவருணிலையினை நன்காய்தல்வேண்டும். செந்தில் ஆண்டவன் நம் குமரகுருபரவடிகட்கு தீட்சைபுரிந்து ஞானமருள நம் திருத்தளிமுதல்வர் மாசிலாமணித் தேசிகரைச் சாரவைத்ததும், சிற்றம்பலவர் பெற்றுன் சாம்பானுக்குப் பேதமறத் திக்கைபுரிய உமாபதி சிவத்தைச் சாரவைத்ததும் முதலியன தம்முதல் குருவுமாய் உணர்த்திய நிலைமையாமன்றோ. இதனை அறிஞர் கடைப்பிடிக்க வேண்டும். "காட்டினுய் கழுக்குன்றிலே" "குருமணிதன் ருள்வாழ்க" ஈது மதனை வலியுறுத்தாநிற்கும். இதன் விரிவினைக் கட்டுரையிற் காண்பாராக.

மெய்கண்டநாதன் விரைகழல் வாழ்க.

எனவும்,

விழுப்புரம் நகராண்மைக்கழக மேற்பார்வையாளர் **திரு. K. இராமலிங்க முதலியார்** அவர்கள் B. A.

வாழ்க்கை யொரு விந்தையாக இருக்கின்றது. நாம் அன்னையின் வயிற்றில் தோற்றங் கொள்வதற்கு முன்பு எங்கே இருந்தோம் என்று அறியக்கூடவில்லை. இவ்வுடலைவிட்டு நீங்கியபின்பு எங்கே போகின்றோம் என்றும் தெரிந்துகொள்ள முடியவில்லை. இடைநடுவில் நடக்கும் நிகழ்ச்சிகளின் போக்கையும் நாம் திட்டமாக விளக்கிக்கொள்ள இயலாமல் இருக்கின்றோம். எத்தனையோ முறை, இவ்வாழ்க்கையை விட்டுத்தொலைத்து வெளியே எங்காவது செல்லக்கூடுமாயின், சென்று விட வாய்க்காதா என்று அவாவுகிறோம். எத்தனையோ தடவை, இவ் வாழ்க்கையில் வரும் இன்பங்களைப் போலுண்டா என்று இதனைப் போற்றவும் செய்கிறோம்.

இவ் வாழ்க்கையின் அடிப்படையான உண்மை யென்ன யென்று கண்டு பிடிப்பதே அறிஞர்கள் செயலாகும். நமது நாட்டிலே அவ் வுண்மையினைக் கண்ட ஞானிகள் பலராவர். கண்ட அவ்வுண்மையினை மெய்யிலேயே அதாவது உடம்பிலேயே உணர்ந்தார்கள் அப்பலரில் சிலருளர். அவ்வாறு மெய்கண்ட சிலரிலே மெய்கண்டதேவநாயனுர் சிறந்தார் ஆவர். அவர் நமக்காக வரைந்து வைத்துப் போயிருக்கும் மெய்கண்ட நூலே சிவஞானபோதமாகும். உலகமாகிய உடல் உண்டு, அதனுள் உயிர்கள் பலவுண்டு, உடலங்களை உயிர்களுக்குத் தந்துஆளும் உடையான் ஒருவன் உண்டு என்று அந்நூலின் முதலாறு சூத்திரங்கள் கூறும். உயிர்களாகிய நாம் உலகத்தை உணர்ந்து அதனேடு இரண் டறக் கலந்து வாழ்கிறோம். ஆனல் நாம் உடையவனை உணர்ந்து அவனேடு இரண்டறக் கலந்து இன்பம்பெறும் ஆற்றலையும் உடையோம் என்று ஏழாஞ் சூத்திரங் கூறுகின்றது.

இத்தகைய சிறந்த ஆற்றலையுடைய நாம் ஏன் உலகத்தோடு கலந்து எண்ணிறந்தகாலம் துன்பம் உழன்று வரவேண்டும்; அதனை அறவே நீக்கி ஏன் இறைவனேடு கலந்து இன்னே இன்பம்பெறுவது கூடாது என்று முனைந்து நினைந்து, முயற்சி மிகுந்து வந்தால் இறைவன் எதிரே தோன்றி ஞானமாகுந் திருவடியைத் தருவான் என்று சொல்லு வதே எட்டாஞ் சூத்திரமாகும்.

ஞானமாகிய திருவடியைப் பெறுதற்கு, ஐம்புலவேடரால் இன்பம் பெற முயன்று வருதலால் படுந்துன்பம் போதும் போதும் என்ற

அயற்சி முதலில் உண்டாகவேண்டும். அந்த அயர்ச்சி நாம் செய்யும் தவத்தினளவாகவே உண்டாகும். தவம் எனப்படுவது சரியை, கிரியை, யோகம் என்பனவாகும். சரியை என்பது நான்காக விரியும். சரியையில் சரியை, சரியையில் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம்; அப்படியே கிரியையும், கிரியையில் சரியை, கிரியையில் கிரியை, கிரியையில் யோகம், கிரியையில் ஞானம் என்றும்; யோகமும் யோகத்தில் சரியை, யோகத்தில் கிரியை, யோகத்தில் யோகம், யோகத்தில் ஞானம் என்றும் விரிவனவாகும். சரியையாவது கடவுளுக்கு உருவம் அமைத்து நமது உடம்பின் தொழிலால் வழிபடுவது. கிரியையாவது ஆண்டவனை அருவுருவமாக காயத்தொழிலும், மனத்தொழிலுஞ் செய்து வழிபடுவது. யோகமாவது எங்கும் உள்ள பொருளை அருவமாக மனத்தொழிலால் மட்டும் வழிபடுவது. ஞானமாவது எல்லாங்கடந்த எந்தையைச் சச்சிதானந்தப் பிழம்பாகக் காயத்தொழில் மனத்தொழில் இரண்டையுங் கைவிட்டு அறிவுத்தொழிலால் மட்டும் வழிபடுவது. இவை நான்கும் அரும்பு, மலர், காய், கனி போல்வனவாம்.

சரியை கிரியை யோகம் தீட்சைகளினுல் தொடங்கப்பெறுவனவாம். சரியைக்கு ஒரு தீட்சை. கிரியை யோகம் இரண்டுக்கும் ஒரு தீட்சை. சரியை கிரியை யோகங்களில் பலபடியானவை உள. அவற்றில் ஈடுபடுவதற்கு முதற்கண் இருவினை யொப்பும், பின்னர் மலபரிபாகமும், இறுதியாகச் சத்திநிபாதமும் வேண்டும். அவற்றிலும் சரியை கிரியை யோகங்களின் திறனுக்கு ஏற்பப் பல படிகள் உள. **இருவினை யொப்பு** என்பது நல்லது கெட்டது, வெற்றி தோல்வி, இன்பம் துன்பம் இவ்விரண்டையும் ஒன்றுக நினைப்பது. இது எவ்வளவு திட்டம் கைவருகிறதோ அவ்வளவு திட்டத்திற்கு மலமானது அதனுடைய ஆற்றல் அற்றுத் தேய்ந்து போதற்கு உரிய துணைக் காரணங்க ளெல்லாவற்றேடுங் கூடுகிறது. இதற்கே **மலபரிபாகம்** என்று பெயர். இம் மலபரிபாகம் எம்மட்டு நேர்கிறதோ அம்மட்டிற்குத் திருவருள் அந்த இடத்திலே கதுமெனத் தோற்றங் கொடுக்கும். அதுவே **சத்திநிபாதம்**. அஃதாவது, சத்தி திடீரென மேல்விழுதல் என்பதாகும். திருவருள் எந்த அளவிற்கு நம்மேல் விழுகிறதோ அந்த அளவிற்குத் தக்கபடியான சரியை கிரியை யோகங்கள் செய்தற்குரிய தீட்சைகளைப் பெற்று அவற்றைச் செய்யும் நிலைமை வாய்க்கப்பெறுவோம்.

இவ்வாருகப் படிப்படியாகச் சரியை கிரியை யோகங்களிலும் அதன் பலவகைகளிலும் பயின்று மேலோங்கி வருவோமானுல், அதன்

பயனுய் ஞானத்தின் பகுதிகளாகிய ஞானத்தில் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம் இவை பயில வாய்க்கப் பெறுவோம். அவற்றிலே பயிலப்பயிலப் புலன்களில் வெறுப்பு அடர்ந்து தோன்றும். இந்நிலேயே ஞானத்தில் ஞானத்தைப் பெறக்கூடிய உன்னத நிலேயாகும்.

அந்த ஞான ஞானத்தைத் தருதற்கு இறைவன் எதிரேவருவான். அதுகாறும் நமக்கு உள்ளேயும் உலகப்பொருள்களின் ஊடேயும் மறைந்து இருந்து உணர்த்தி வந்த நமது ஒரு **தனிமுதல்வன்** அப்போது நமது ஊனக்கண் முன்னே நிற்கும் பேறு பெறுவோம். அவன் நேரே வந்தால் அல்லாமல் முழுஞானம் கைவராது. ஒருமலம் இருமலம் உடையவர்களுக்கு மனிதவடிவிலே வராமலும் உணர்த்துபவனுயினும், மும்மலமுடைய நமக்கு நம்மைப்போன்ற உருவத்திலே முடிவாக வந்து எதிர்தோன்றியே ஞானம் வழங்குவன். அவன் நேரே வராவிட்டால், நம்மையும் தலேவனேயும் உணரவொட்டாது தன்னேயே காட்டி மயக்கிக் கொண்டிருக்கும் புலன் உணர்வு நீங்காது. படிகத்தின் கீழ் ஒட்டிய பச்சைநிறக் காகிதத்தால் படிகம் பச்சைநிறம் என்றே நாம் மயங்குவோம் அல்லவா? யாராவது ஒருவர் வந்து படிகம்வேறு பச்சைக்காகிதம் வேறு என்று பிரித்துக் காட்டிய பின்பே, பச்சைநிறம் படிகத்தினதென்று, படிகம் படிகமே என்று எண்ணுவோம். அப்படியே நம்மினின்றும் உலகத்தைப் பிரித்துணர்த்த வல்லவன் ஒருவன் வேண்டியிருக்கிறது. அவ் வல்லவன் எல்லாம் வல்ல இறைவனேயாகும். வேடர்களால் களவாடப் பெற்று அவர்களிடையே குழந்தைப்பருவமுதல் வளர்ந்து தந்நிலேயை மறந்த மன்னன் மகனுக்கு, மன்னவனே நேர் வந்து உணர்த்தினு லல்லாமல் நிலேமை எப்படித் தெரியும்.

உலகம் நாமல்ல என்று நாம் அதனே ஒதுக்கியதுமே இறைவன் திருவடியே தஞ்சம் என்று அதனே அடைபவர்களாவோம். ஊஞ்சற்கயிறு அற்றுப்போமானுல் ஊஞ்சற்பலகை விழுவது நிலத்தின்மேல்தானே? ஏற்கனவே அப்பலகையைக் கயிற்றின் வழியாகவும், கயிற்றைப்பற்றிக் கொண்டிருந்த தூலம், கூரை கயிறுகள் இவைகளின் வழியாகவும் மறைந்து தாங்கிக்கொண்டிருந்த பூமியே, கயிறு அறுபட்டதும் நேரே தானே தாங்கிக்கொள்வது போல, மறைமுகமாக நம்மைத் தாங்கிக் கொண்டிருந்த இறைவன் உலகம் ஒதுங்கியதும் நேரே நம்முன் நின்று அவனது திருவடிமீது நம்மைத் தாங்கிக்கொள்ளுகிறுன்.

திருவடி பெறுவதே பிறவிஎடுத்ததன் பயன் என்று சமயகுரவரை உள்ளிட்ட நாயன்மார்களும் பிற பெரியோர்களும் கூறுகின்றனர்.

திருவடியை ஞானமாக நினைத்து வழிபடவேண்டும் என்று அப்பெரியோர்களே எடுத்து மொழிகின்றனர். ஞானத்தை ஞானம் என்றே கொள்ளாது, திருவடியென்றது **இறைவனே குருவாய் வந்து திருவடி தந்த போதே ஞானம் வாய்க்கும்** என்பதை உணர்த்தவேயாகும். சரியை கிரியை யோகத்தால் யான் எனது அற்று வருவதே ஞானம் பெறும் வழியாதலின், 'யான் எனது அற்ற இடமே திருவடியாம்' என்று குமரகுருபரர்போன்ற பெரியோர் சொல்லுகின்றனர். கோவிலிலும் வீடுகளிலும் உருவவழிபாடு செய்வதெல்லாம் கடவுளைக் குருவாகப் பெறுவதற்கே யாகும். இறைவன் குருவாக வந்தபின்னரேதான் ஞானமும் முத்தியும் கிட்டுவன என்று மற்றைய மதங்களுங் கூறுகின்றன.

அவனே குருவாக முன்தோன்றி ஞானமாகிய திருவடிகளைத் தந்தருளவேண்டுவதற்கு ஆவன செய்வோமாக.

எனவும்,

குளித்தலை மறைத்திரு. **அரங்கசாமி அய்யர்** அவர்கள் B. A.,

ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே.

இதன் அங்வயம் 'தவத்தினில் தம்முதல் குருவுமாய், ஐம்புல வேடரில் வளர்ந்து அயர்ந்தனை என உணர்த்தவிட்டு அன்னிய மின்மையின் அரன் கழல் செலும்' (ஏ என்பது அசை)

ஈண்டுத் தவமென்றது கிருச்சிராதி விரதங்களையல்ல. பின் எதையெனில் சரியை, கிரியை, யோகாதிகளையே. இதை எதனால் அறியலாமெனில் ஸ்ரீ மெய்கண்ட சிவமே "மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி, நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டி அல்லது மோட்சத்தைக் கொடாவாகலான்" என்ற ஏதுவாலும்; "பசித்துண்டு" என்னும் உதாரணவெண்பாவில் "இறப்பில் தவத்தான்" என்பதாலும் அறிகின்றோம். "இறப்பில் தவத்தால்" என்றதால் இறப்புடைய தவமும் உண்டென்பது பெற்றும். "இறப்புடைய தவத்தை" பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கும், இசைத்து வருவினையின் இன்ப—மிசைத்த விருவினை யொப்பில் இறப்பில் தவத்தான், மருவுவனும் ஞானத்தை வந்து" என்ற வெண்பாவினாலும், வழிநூலார் எட்டாஞ் சூத்திரத்தில் காட்டிய,

தானம்யா கம்தீர்த்தம் ஆச்சிரமம் தவங்கள்
சாந்திவிர தம்கன்ம யோகங்கள் சரித்தோர்
ஈனமிலாச் சுவர்க்கம்பெற் றிமைப்பளவின் மீள்வர்
ஈசனியோ கக்கிரியா சரியையினில் நின்றோர்
ஊனமிலா முத்திபதம் பெற்றுலக மெல்லாம்
ஒடுங்கும்போ தான்முன்னிலா தொழியின்உற்ப வித்து
ஞானநெறி அடைந்தடைவர் சிவனை அங்கு
நாதனே முன்னிற்கின் நணுகுவர் நற்றாளே.

என்ற விருத்தத்தாலும் அறியலாம்.

சைவம் வாயுசம்ஹிதையிலும், ஸ்காந்தம் உபதேச காண்டத்தி லும் இப்படி ஆசிரியர்கள் அருளியதற்குப் பிரமாணங்களுள. வாயு சம்ஹிதையில் பூர்வத்தில் பரதர்மங்கள் அபரதர்மங்கள் என இருவகை தர்மங்கள் கூறப்பட்டு, அபரதர்மங்கள் சுருதியி னடிப்பாகத்திலும், பரதர்மங்கள் சுருதி சிரங்களிலும் இதிகாசபுராணங்களில் சிறிதள வும், சிவாகமங்களில் விரிவாகவும் எடுத்தாளப்படுகின்றனவெனவும், அபரதர்மங்கள் மனுவாதி தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டனவென் றும், அபரதர்மங்களுக்குப் பசுக்கள் அதிகாரிகளென்றும், பரதர்மங் களுக்குப் பசுத்தன்மைகடந்த அபச்வாத்மா அதிகாரியென்றும், அபச் வாத்மா அதிகார தர்மங்கள் சரியை, கிரியை, யோக, ஞானமெனும் நான்கே யென்றும் அருளியிருக்கிறது காணலாம். உத்தரபாகத்திலும் "அபர தர்மங்களை சிரத்தையுட னியற்றியவர்களுக்கே சுகமான வழியில் சரியை யாதிகளை இறைவன் விதித்தா" னென்றும் கூறப்பட்டிருக்கின்றன. உபதேசகாண்டத்தில் பசு புண்ணியம், பதிபுண்ணியம் இவையென விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கின்றன.

அறியாதார் அச்வமேதாதி யாகங்கள் முதலிய பசு புண்ணியங் களுக்கு அதிகமதிப்பும், சரியையாதிகளுக்குக் குறைவான மதிப்பும் கொண்டுள்ளார்கள். அது தவறுடைத்து. சரியையாதிகளின் சொரூபந் தெரியாததால் இந்த விபரீதமான அறிவு ஏற்பட்டிருக்கிறது.

मदर्चा कर्मविज्ञेयं बाह्यं यागादिनोच्यते ।
मदर्थेदेह संशोष स्तपो कृच्छ्रादि नोमतम् ॥
जपः पञ्चाक्षराभ्यासो प्रणवाभ्यासएवच ।
रूद्राध्यायादिकाभ्यासो नवेदाध्ययनादिकम् ॥

ध्यानं मद्रूप चिन्ताद्यं नात्माद्यर्धसमाधयः ।
ममागमार्थ विज्ञानं ज्ञानं नान्यार्थ वेदनम् ॥

சரியையாதிகளை சிவதர்மங்களெனக் கூறுவானேனெனின், ஒரு மனிதனைச் சாத்தா, கொற்றா என அழைத்தால் அவன் வரும்போது அவனிடமுள்ள தேகம், இந்திரியம், அந்தக்கரணம் இவைகளைத் தாங்கிய சேதனன் எனும் நான்குடன்வந்து ஏனென்று விடை கூறுகின்றான். தேகத்தையும், இந்திரியங்களையும், அந்தக்கரணங்களையும், ஆன்மாவையும் தந்தருளியவன் இறைவன். தனு கரண புவனாதிகளை ஆன்மாவுக்களித்து 'இவைகளைக்கொண்டு உய்திநிலை தேடிக்கொள்வாயாக' என்று அனுப்பியபோது, சிவார்ப்பிதமாக தேகத்தையும், சிவார்ப்பிதமாக இந்திரியங்களையும், சிவார்ப்பிதமாக அந்தக் கரணங்களையும், முடிவில்தன்னையும் சிவார்ப்பிதமாக அர்ப்பணஞ்செய்வதில் தேகத்தை அர்ப்பிப்பது சரியையாகவும், இந்திரியத்தை அர்ப்பிப்பது கிரியையாகவும், அந்தக்கரணங்களை அர்ப்பிப்பது யோகமாகவும், ஆன்மாவாகிய தன்னையே அர்ப்பிப்பது ஞானமாகவும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. பூப்பறித்தல், அலகிடல், மெழுகல் என்பவைகளையே சரியையாதிகளாகக் கூறியதாகக் கொள்ளக்கூடாது. இவைகள் சரியைக்கு அறிகுறி. அப்படியே இந்திரியங்களைக்கொண்டு பஞ்ச சுத்திசெய்து பூசிப்பதுமாத்திரம் கிரியையன்று. இவை கிரியைக்கு அறிகுறி. சித்த விருத்தியை நிரோதம் செய்வதுமாத்திரம் யோகமன்று. அந்தக்கரணங்களை யடக்கித் தியானம் பண்ணுவது முதலியவை யோகத்திற்கு அறிகுறி. அப்படியே தன்னைச் சிவார்ப்பிதம் செய்யும் அறிகுறியாக அடியற்றமரம்போல் வீழ்வது மாத்திரம் ஞானமன்று. இது தன்னைத் தத்தம் செய்யும் ஞானத்தின் அறிகுறி. ஆகையால் சரியையாதிகள் இறப்பில் தவங்களாகின்றன. இறப்புடைய தவங்களான யாகாதிகளைப்போல் ஸ்வர்க்காதிக்ஷுத்ர பயனைத் தருவனவல்ல. சரியையாதிகள் சாலோகாதிபத முத்திகளைத் தருவன. உபாய சரியையாதிகள் இலயாதி பதங்களைத்தந்து அறிவு குன்றாமலே உயர்குலங்களி லவதரிக்கச்செய்து மேலும் உயரச்செய்து பரமுத்தியையே அளிக்கும். உண்மைச்சரியையாதிகள் மீண்டும் பிறவியைக் கொடாமலே பதமுத்தியிலிருந்து பரமுத்தியை அளிக்கும். லோக தர்மிணியால் உபாய சரியையாதிகளுக்கு அதிகாரமும், சிவதர்மிணியால் உண்மைச் சரியையாதிகளுக்கு அதிகாரமும் ஏற்படுகின்றன.

'தம்முதல் குருவுமாகி' என்றதில் தன்முதல் என்றது தனக்கு எவ்விதத்திலும் ஆதாரமாகியிருக்கும் முதல்வனென்பது பொருள்.

அன்பின் உரிமைபற்றித் தம்முதல் என்றது, எல்லா ஆன்மாக்களுக்கும் எல்லாவுலகங்களுக்கும் எது முதலோ அதுதான் தனக்கும் ஆதாரம்.

"கற்றநூற் பொருளும் சொல்லும் கருத்தினில் அடங்கித் தோன்றும்
பெற்றியும் சாக்கி ராதி உயிரினிற் பிறந்தொ டுக்கம்
உற்றதும் போல வெல்லா உலகமும் உதித்தொ டுங்கப்
பற்றொடு பற்ற தின்றி நின்றனன் பரனு மன்றே"

என்ற மூதுரைப்படி சகலத்திற்கும் சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகமெனுஞ் செயல்களைச்செய்து, எல்லாவற்றிற்கும் ஆதாரமாகிநிற்பது யாதொன்றுண்டோ அதுவே தன்முதல். வேதங்கள் இவனை **திருதி, விதிருதி, ஆதாரம்** என்று அருளுகின்றன.

"தம்முதல் குருவுமாகி" என்றார், காணுமாறு குருவுமாக வந்தவரிறைவனேயன்றி வேறொருவருமல்லர். குருவாக என்றும் உள்ளவன் சிவனே. இதனைச் சுவேதாச்சுவதரம்,

**"अजातसिम मेवैकं कश्चित्भीरुः प्रपद्यते ।
रुद्रयत्ते दक्षिणमुखं तेनमांपाहि नित्यम् ॥**

என்று கூறுகின்றது. ஸ்ரீ சங்கராசாரியர் இந்த சுவேதாச்சுவதர உபநிஷத்தைச் சூத்திர பாஷியத்தில் சுமார் நாற்பது இடங்களிலும், வனிதா திரிசதி பாஷியத்தில் சுமார் முப்பது இடங்களிலும் உபயோகித்திருக்கின்றார். ராமாநுஜர், மத்துவர் முதலிய பாடியக்காரர்களும் பரமப்பிரமாணமாக எடுத்தாள்கின்றார்கள்.

**अजातसिम मेवैकं ज्ञात्वा जन्मनिभीरवः ।
रुद्रस्यास्य प्रपद्यन्ते रक्षार्थं दक्षिणं मुखम् ॥**

என்று வாயுசம்ஹிதையும்,

**अजातमिममेवैकं ज्ञात्वा जन्मनिभीरवः ।
रुद्रत्यास्य प्रपद्यन्ते रक्षार्थं दक्षिणं मुखम् ।
तस्मात्सर्वात्मनां मुक्तिः दक्षिणामूर्तिसेवया ॥**

என்று ஸ்காந்த உபதேசகாண்டமும், "ஜனன மரணமாம் பீதியைத் தவிர்த்து ரக்ஷிக்கப்பட்ட ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியான பரம குருவையே

பிரபத்திசெய்கின்றன" என வேதோபப்பிரம்மணங்கள் அருளின. வேதத்தில் இந்த தக்ஷிணாமூர்த்தியாம் பரமகுருவைத் தவிர வேறு எந்த குருவும் கூறப்படவில்லை. இவன் வழியிலேயே குருசந்தானக் கிரமங்கள் வந்தன. இதையே அருணந்திசிவமும்,

> ஆரணம் ஆகமங்கள் அருளினால் உருவுகொண்டு
> காரணன் அருளானாகில் கதிப்பவ ரில்லையாகும்
> நாரணன் முதலாயுள்ள சுரர்நரர் நாகர்க் கெல்லாம்
> சீரணி குருசந் தானச் செய்தியும் சென்றிடாவே"

என்று அருளினார்கள். ஸ்காந்தத்தில் அம்பிகை, கணபதி, சுப்பிரமணியர், வீரபத்திராதிகளுக்கும், நந்தீச்வரர், சோமநந்தி முதலியவைகளுக்கும், பிரம விஷ்ணு இந்திராதி தேவர்களுக்கும், சனகர் முதலியவர்களுக்கும் கயிலையின் நான்கு கிருகங்களிலிருந்து நான்கு குரு ரூபங்கள் கொண்டு உபதேசித்தும், பின்பு அவர்கள் வழியில் வந்த குருக்களை பூமியில் அவதரித்து அந்தந்தத் தானப்பெயர்களுடன் கயிலாயபரம்பரையைத் தாபித்தார்கள் என்றும் கூறப்பட்டிருப்பது காணலாம். பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்களுக்கும் அவர்கள் உபதேசித்திருப்பதால் கயிலாய பரம்பரை நான்கு ஜாதிகளிலும் உண்டு. மேலும் பிரதி கலியுகத்திலும் பிரமனமிசமாக ரிஷிகள் தர்மசாத்திரங்களையும், பிரதி துவாபரத்திலும் விஷ்ணுவினமிசமாக வேதவிபாகம் செய்யவும் புராணங்களை இயற்றவும் வியாசர்களும், பிரதி கலியுகாரம்பத்திலும் ஸ்ரீகண்டர் அமிசமாக யோகாசாரியர்களும் வருவார்களென்றும், அந்த யோகாசாரியர்களே சுவேதாதி இருபத்தெட்டாசாரியர்களென்றும், ஒவ்வொருவருக்கும் நான்கு சீடர்களாக 112 சீடர்களாவார் என்றும், ஆக (28+112=)140 பேர்களையும் இலிங்கம், கூர்மம், வாயுசங்கிதை, சதருத்ரசங்கிதை, சூதசங்கிதை முதலியவைகள் அவர்கள் பெயர்களுடன் கூறுகின்றன. மேற்சொன்ன புராணங்களும், விஷ்ணுபுராணம் இருபத்தெட்டும் வியாசர்களின் பெயர்களைக் கூறுகின்றன.

ஞானசந்ததி யோகாசாரியர் பரம்பரையிலேயே ஏற்படுமென்று இவைகளில் கூறியிருப்பதால் சைவசித்தாந்த ஞானாசாரியர்களாக வந்தவர்களெல்லாம் இந்தச் சந்ததியிலேயே இருந்தவர்களாவர். வேதோபநிஷத்து, திவ்வியாகமங்கள், வேதோபப்பிரும்மணங்கள் எல்லாவற்றிலும் ஞானசந்ததி இந்த யோகாசாரிய பரம்பரையிலேதான் வருமென்று கூறப்பட்டிருக்கின்றது. இப்படி வேறு எந்த ஞானமும் பெறப்பட்டதில்லை.

ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியாகப் பரம குருவாய் உபதேசித்தது பதி, பசு, பாசமெனும் திரிபதார்த்த ஞானமே. சரியை, கிரியை, யோகமெனும் மூன்று பாதங்களில் நிஷ்டாவான்களுக்கே ஞானம் உபதேசிக்கப்பட்டது. யோகாசாரிய பரம்பரையில் பெறப்பட்டதும் பதி, பசு, பாசமெனும் திரிபதார்த்த ஞானமும் சரியையாதி நாற்பாதங்களின் அநுஷ்டானமே. இவைதான் இறப்பில் தவம் எனப்பட்டன.

இறைவனே குருவாய் வருவானென்றால், இறைவனே பிறந்து வருவானோவெனில், அல்ல. சைவ சந்தானத்தில் வந்த பெரியோனொரு வனது கரணங்களைத் தன் கரணங்களாகவும், அவனது ஆன்மாவையே தன்னிருப்பிடமாகவும் கொண்டேவருகின்றான். ஆகையால் "ஸாதாரண மாகவே" வருகின்றான் என்று சொல்லப்பட்டது. சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் என்பவர்களின் நிலைகளுக்குத்தக்கவாறு இறைவன் உணர்த்துகின்றான். கேவலம் விஞ்ஞானரூபிகளான உயர்தர ஆன்மாக் களுக்கு அவர்களது உயிர்களிலேயே இரண்டறக்கலந்து நின்று உள் ளிருந்தபடியே உண்மை காணுமாறு அருளுகின்றான். காலகண்ட திரி நேத்திராதி ஸ்வரூபங்களைக்கொண்ட பிரளயாகலர்களுக்கு அவ்வுரு வங்கள் மூலமாகவே உண்மைகாணுமாறு அருளுகின்றான். மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் இந்திரியங்களையும் அந்தக்கரணாதிகளையும் கொண்டுள்ள சகலர்களுக்கு அவ்விந்திரிய அந்தக்கரணாதிகளையுங் கொண்ட மானிடவுருவத்தையே ஆதாரமாகக்கொண்டு வாய்ச்சொல், நூற்கள், குறிகள் முதலியவைகளான் உணர்த்துகின்றான். இதனால் விஞ்ஞானகலர்களுக்குத் தன்மையிலும், பிரளயாகலர்களுக்கு முன்னிலை யிலும் சகலர்களுக்குப் பின்னிலை அல்லது படர்க்கையிலும் உணர்த்து கின்றான். இறைவன் எப்படி ஒருமானிடனது உயிரையும், கரணாதிகளை யும், இந்திரியங்களையும் ஆதாரமாகக்கொண்டு நிற்பன் எனில், உலகத்தில் பேய்பிடியுண்டவனையும், தேவதைகள் ஆவேசம் கொண்டுள்ளவர்களையும் பார்த்திருக்கிறோம். ஆவேசப்பட்டவனது ஆன்மாவையும், கரணாதிகளை யுமே தனதாகக்கொண்டு பேயும், தேவதைகளும் உரையாடிச் செய்கை களைச் செய்கின்றன. ஆனால் ஆதாரமாக வந்த குருவின்றன்மை எவ்வா றெனில், ஆவேசம் வந்தவர்கள் ஆன்ம அறிவை மறக்கின்றனர். ஆனால் குருவாய் வந்தபோது அவனது ஆவியையே தீக்ஷணமாக விளங்கச் செய்தும்; நோக்கு, வாக்கு முதலிய உறுப்புக்களின் மூலமாய் (மின் ஸாரம் போன்ற) தனது சக்தியை பிரஸரித்து ஆட்கொள்ளுகிறான். இதுதான் வித்தியாசம்.

ஏன் மார்க்கத்துக்கு குருவாகத்தான் வரவேண்டுமெனின், ஆன்மா "**உணர்த்த உணரும் சித்து, தானே உணரும் சித்தல்ல**": இறைவனொருவனே தானே உணர்ந்து ஆன்மாக்களுக்கு உணர்த்தும் சித்து. இஃது சைவக் கொள்கை. பசு லக்ஷணத்தைக் கூறும்போது "என்னிலவாய் வகை மூன்ருய் வென் சிலை போற்பற்றியவை தாமாய்" என்றும், "உண்மைய வாய் சத்தசத்தும் படுத்துணர்சத்தாய் இருளும் ஒளியுமலாக், கண்ணி யல்பாய் வசிப்பவரு நிறைவாய் எம்மருளாற் கட்டறுத்துவிடு நன்றுடைய வாய் உணர்த்த உணர் சிற்றறிவா நற்பசுக்கடமை" என்றும், "அறி விக்கவன்றி அறியா உளங்கள்" என்றும், "நீ உணர்த்த நானுணரும் நேசத்தால் அறிவென்றபேர் நன்று" என்றும், "யாதொன்று பற்றினத னியல்பாய் நின்று பந்தமறும் பளிங்கனைய சித்து நீ, உன் பக்குவங் கண்டறிவிக்கும் பான்மையேயாம்" என்றும் எழும் பற்பல வாக்கியங் களால் **உணர்த்த உணர் சிற்றறிவே ஆன்மா**. 'உணர்த்தினலன்றி உணராதது ஆன்மா' என்ற வுண்மைலக்ஷணத்தை ஆன்மாவிற்குக் கூறும் கொள்கை யுடைய மதமே குருவைக்கொள்ள நியாயமிருக்கின்றது. ஆனல் இந்த உலகத்தில் "குருவைக்" கொள்ளாத மதங்களில்லை, காரணம் யாது என் பதை மாத்திரம் அவர்கள் கண்டுபிடிக்கவில்லை. "நானே பிரமம்"—"யாங் களே கடவுள்" என்று கூறும் பாதகத்தவர்களுக்குக் குருவைக் கொள்வ தற்கு நியாயமுண்டோ? பஞ்சகந்தங் கெடலே முத்தி எனும் புத்தர்களுக்கு குருவைக் கொள்வதற்கு இடமுண்டா? உயிருண்டோ இல்லையோ என்ற அஸ்திநாஸ்திவாதக் கொள்கையை யவலம்பிக்கும் சமணனுக்கு "குரு" வேண்டியதவசியமா! மகம்மதியர்களுக்கும், மோஸஸ்மதவாதிகளுக்கும், எதற்குக் குரு? கிரிஸ்தவர்கள், கிரிஸ்தவர்களிலும் பிரபலமான ரோமன் காதோலிக்கர்களிடம் குருக்களின் கூட்டம் பெருத்திருக்கின்றது. இவர் கள் எல்லோரும் குருக்கொள்கையைப் பாராட்டுவதற்கு ஒரு நியாயத் தையும் காணவில்லை. வைணவர்களில் 'ஒருவன் இறந்தான்' என்பதைக் கூட 'ஆசாரியன் திருவடியடைந்தான்' என்று எழுதுகின்றனர். ஆனல் அவர்கள் மதத்திலும் குருவிருப்பதற்குத் தகுந்த நியாயத்தைக் காணேம். நியாயங்களில்லாவிடினும், குருவை வழிபடக் காரணம்யாதெனின் சைவ சித்தாந்தத்தில் பெறப்பட்ட "ஆன்மா உணர்த்த உணர் சிற்றறி வினன்" எனும், கொள்கை உண்மையானதால் மனித சமூகத்திலேயே இந்த உண்மை அவர்களறியாமலே ஊடுருவிச் சென்றிருக்கின்றது.

இன்னெரு சைவக் கொள்கையைப் பார்ப்போம். ஆன்மாவைச் **சார்ந்ததன் வண்ணம்** என்று அச்சைவம் கூறுகின்றது. தேகம் நானென்றி ராதே என்று கூருதமதங்களில்லை, ஏன்? யாது சார்ந்திடினும் யானது

வென்னும் போதம் என்ற சைவ சித்தாந்தக் கொள்கையினுண்மை அவர்களறியாமலே ஊடுருவிச் சென்றிருப்பதால் தேகத்துடனென்றி தேகம் நானென்றிருப்பதைத் தவிர்க்க தேகநானென்றிராதே என்று உபதேசிப்பாராயினர். இவ்வுண்மை கடைப்பிடித்தே நீதிநூற்கனெல்லாம் "சான்றோரினத்திரு" "பெரியாரைப்பேண்" "நல்லிணக்கமல்ல தல்லற்படுத்தும்" "சேரிட மறிந்துசேர்" "நல்லாரோடிணங்கி யிருப்பதுவும் நன்றே தீயாரோடிணங்கி யிருப்பதுவும் தீது" என்று பற்பல நீதி நூற்களும் மதக் கிரந்தங்களும் பகருகின்றன. "மாந்தர்க் கினத்தியல்பதாகு மறிவு" என்று பொதுநூலெனப்படும் திருக்குறள் அறுதியிட்டுரைக்கின்றது. வேதங்களோ,

"ब्रह्मवित्ब्रह्मैव भवति"

பிரமத்தை யறிந்தோன் பிரமமாகின்றான்.

"यद्यदोपासते तत्तथैवभवति"

எவன் எதை உபாசிக்கின்றானோ அவன் அதுவாக ஆகின்றான்.

"असन्नेव स भवति असत्ब्रह्मेति वेदचेत्।
अस्ति ब्रह्मेतिचेत् वेद सन्तमेनं ततोविदुः॥"

'அஸத்தைப் பிரமமென்றால் அசத்தாகின்றான். பிரமத்தை சத்தென்றால் சத்தாகின்றான்' என்பது வேதம். சாது சங்கம் வேண்டும் என்று மாயாவாதிகளும் கூறுகின்றனர். இன்னும் என் மனைவி, என் மைந்தன், என் உறவினர், என் தேசத்தான், என் பாஷை பேசுகிறவன் என்று தன்னை மீறிக்கொண்டு எழும் அபிமானம் எதனால் ஏற்படுகின்றது? இப்போது நடக்கும் பெரிய யுத்தம் யாது காரணமாக? எல்லாவற்றிற்கும் காரணம் "பற்றியவைதாமாய்" என்ற சைவக் கொள்கையுண்மை யாதலாலென்க.

"ஆன்மா தனித்திராதது" எதையாவது பற்றிக்கொண்டுதானிருக்கும் என்பதும் சைவக்கொள்கை. ஆன்மாவை சத்துமசத்தும் பகுத்துணர்சத்து அல்லது சதசத்து என்றும் சைவ சித்தாந்தம் ஆன்மாவைப் பற்றிக் கூறுகின்றது. "பற்றுக பற்றற்றான்பற்றினைப் பற்றுக அப்பற்றுவிடற்கு" என்று பொய்யாமொழி உபதேசிக்கின்றது. பளிங்கு (வெண்சிலை), கண், ஆகாசம், நீர் இவைகளுக்கென ஓர் நிறம், ஆகாரம் (உருவம்) முதலியவை கிடையா. சுத்தநீருக்கு நிறமும், ருசியும்கிடையா.

இவைகள் தனித்திருப்பதும் கிடையா. யாதோடு சார்ந்ததோ அதன் மயமாகவேயிருக்கும். வேதம் ஆன்மாவை "திருணஜளாயுகா" (அட்டையை) யைப்போன்றதென்கின்றது.

மற்றொரு உண்மையாதெனின், சைவத்தில் ஒரு கொள்கை மற்றொரு கொள்கைக்கு ஒத்து நிற்கும். கொள்கைகள் ஒன்றுக்கொன்று முரண் படுவதில்லை. ஒரு கொள்கை மற்றொரு கொள்கையை விளக்குவது போலிருக்கின்றது.

இதனால் சைவக் கொள்கைகள் பொய்யோ மெய்யோவெனப்படும் கதைகளைப் பொருத்தவையல்ல. அவைகள் உண்மைகளின் பிண்டங்கள். எக்காலத்தும் எத்தேயத்தும் காணப்படும் உண்மைகளையே உருவாக் கொண்டவை. கடவுளிலக்கணமும், ஆன்மாவைப் பந்தித்த பாசலக்ஷணங் களும் ஆன்மலக்ஷணங்களுக்குத்தக இயைந்தே நிற்கும்.

ஆன்மா அறிவித்தாலறியும் சித்தாயின் கடவுள் அறிவிக்கும் சித்து. கண் அல்லது கண்ணொளி தானே காணாது. சூரியன், சந்திரன் நக்ஷத்திரங்கள், மின்னொளி, விளக்கொளி, மின்சாரவொளி, மின்மினி யொளி முதலிய ஒளிகாட்டினாலன்றிக்காணாது. "காணும் ஒளிநீ காட்டும் ஒளிநாம்" என்பது ஒழிவிலொடுக்கம். "ஞாயிறு படரினல்லது காண்டல் செல்லாக்கண்போல்" என்று அருணூல் கூறுகின்றது. திவ்வியாகமங்கள்,

"शिवार्क शक्ति दीधित्या समर्थी कृतचिद्दशा।
शिवं शक्यादिभिस्सार्धं पश्यत्यात्मा गतावृतिः॥"

சிவனை அருக்கனாகவும் ஆன்மாவைக் கண்ணாகவும் செப்புகின்றன. பகவத்கீதையும்,

"यथोल्बेनावृतो गर्भः यथादर्शोमलेन च।"

என்கின்றது. கண்ணாடி அழுக்குற்றதுபோல என்றும் ஆன்மாவைக் கூறுகின்றது.

"ஆன்மா உணர்த்த உணருஞ் சிற்றறிவு" என்பதைத் தினந்தோறும் படும் ஜாக்கிராதி யவஸ்தைகளால் அறிகின்றோம். ஆன்மாவை உணர்த்து வதற்காகவே கரணாதிகளின் சேர்க்கையும், இந்திரியாதிகளின் சேர்க் கையும் ஏற்படுகின்றன. "அறிவெனில் வாயில்வேண்டா" என்று

உமாபதியாரின் அமுதவுரை இதைநிறுத்தும். இவ்வனுபவம் ஒரு தேசத் தாற்கல்ல, ஒருவர்க்கல்ல, இருவர்க்கல்ல எல்லாத் தேசத்தார்க்கும். ஆகையால் "உணர்த்த உணரும் உயிர்" என்பது சத்தியம். மேலும் எல்லா தேசத்திலும், எல்லா பாஷைகளிலும், காணப்படும் அளவற்ற கல்விச்சாலைகளும், அளவற்ற நூற்களும், அளவற்ற அறநூற்களும், அளவற்ற உபதேஷ்டாக்களும் காணப்படுவதெல்லாம், ஆன்மா உணர்த்த உணர் சிற்றறிவென்பதைத் தெரிவிக்கின்றன.

இதனால், ஆன்மா தனக்குணர்த்துவதற்கு உணர்த்துவோனாகிய குருவை வேண்டி நிற்கின்றது. "ஆன்மா அறிவாயிற்றே, ஞானக் கிரியா ரூபமே சைதன்ய மாயிற்றே," எனின்,

चैतन्यं दृक्क्रियारूपं ततस्ति आत्मनि सर्वदा ।

என்பது ஆகமம். ஆனால்,

मलरुद्धस्वदृक्क्रियः । मलनिद्रा विमूढात्मा ।

என்றும் ஆன்மாவைப்பற்றி உண்மை நூற்கள் கூறுவதால் ஆன்மா இயற்கையில் மலதூஷிதன், மலத்திலிகப்பட்டு ஆன்மா சூன்யம் போன் றிருந்தது.

शून्यकल्पंस्यात्, दृक्क्रियाव्यंचिके विद्याकले रागः प्रवर्तकः

என்ற மூதுரைகளின்படி வித்தையைக்கொண்டு அறிவை விளக்கியும், கலையைக்கொண்டு எழுப்பியும் ராகத்தைக்கொண்டு ஆசையை வருவித் தும் ஆன்மாவிற்கு நகர்தலையும், நிகழ்ச்சியையும் தந்து பிறகு 'புருஷனாக்கி, பிரகிருதியில்விட்டு, போக போக்கியங்களை அனுபவிக்கச் செய்கின்றான் இறைவன். கருவி கரணாதிகளில் விட்டபிறகும் சார்ந்ததன் வண்ணமாம் ஆத்மா கருவி கரணாதிகளின் மயமாகின்றது. அதையும் எழுப்பவேண்டி யிருக்கின்றது. இதனால் சைவத்தின்படி ஆன்மாவின் சரிதமே "அபுத்தன், புத்தன், புத்யமானன், பிரபுத்தன், ஸுபிரபுத்தன்" எனப் பலவகை எழுச்சிகளாகவே காணப்படுகின்றது. இதில் பிரபுத்தாவஸ்தையிற்றான் சரியை, கிரியா யோகங்களை இயற்றுபவனாகின்றான். இந்தப் பிரபுத்தா வத்தையிற்றான் சற்குருவருகின்றான். இந்தப் பிரபுத்தாவத்தையில் தீவிர தரமான இருவினையொப்பு, மலபரிபாகம், சக்திநிபாதம் வரவே, சாதாரண மாகக் குருவருகின்றான். இதனால் ஆன்மாவை சோத்யன், போத்யன், என்று சைவ சாஸ்திரங்கள் கூறும்.

शोध्योबोध्यो यथान्यायं इति शास्त्रस्य निश्चयः।

"ஆன்மா சுத்திக்கத்தகுந்தவன் போதிக்கத்தகுந்தவன் என்பது சாஸ்திரங்களின் நிச்சயம்" என்று வாயுசம்ஹிதையும்,

नीहारोनादिरेको

என்ற சுலோகத்தில்

शोध्योबोध्यो भवति

என்று சித்தாந்த ஸாராவளியும்,

बोध्यः शोध्योऽकलः पशुः

என்று மிருகேந்திரமும், அஷ்டப்பிரகரணங்களும் கூறுகின்றன. சைவ நூற்களிவ்வாறு கூறுகின்றதொக்கும். ஆனால் மாயாவாத நூற்களு மிவ்வாறு கூறுகின்றதுதான் விந்தையிலும் விந்தை.

ஞானவாசிட்டம், நிர்வாணப் பிரகரணத்தில்:—

हे वसिष्ठमहाभाग ब्रह्मपुत्रमहानसि।
गुरुत्वं शक्तिपातेन तत्क्षणादेवदर्शितम्।
दर्शनात्स्पर्शनाच्छब्दात् कृपयाशिष्यदेहके।
जनयेत् यस्समावेशं शाम्भवं सहिदेशिकः।
शिष्यप्रज्ञैव बोधस्य कारणं गुरुवाक्यतः।
मलंत्रय मपक्वंचेत् कथं बुध्यतिपक्ववत्॥

"ஏ வசிஷ்டரே, பிரமபுத்ரரே நீர் மகானயிருக்கின்றீர்; சத்திநிபாதத்தினல் குருத்துவம் அப்போதே உண்டானது காண்பிக்கப்பட்டது. நோக்காலும் பரிசத்தாலும் வாக்காலும் சீடனது தேகத்தில் கிருபையினல் சமாவேசமெனும் உட்பிரவேசத்தை தேசிகன் உண்டாக்குகின்றான். குருவாக்கியத்தால் சிஷ்யனது பிரஞ்ஞையே போதத்திற்குக் காரணம். மலத்திரயம் பக்குவமல்லாவிடின் பக்குவனைப்போல் எப்படிப் போதம் உண்டாகும் என்பதால் ஆணவம், கன்மம், மாயை எனும் மும்மலங்களின் பரிபாகமும், சத்திநிபாதமும், குருவருளும், திருநோக்கம், பரிசம், வாக்கு எனும் தீக்ஷைகளினல் சீடனது தேகாத்மாக்களில் பிரவேசம் செய்து, ஆன்மாவை விளக்குவதும் கூறப்படுகின்றன. சூதசம்ஹிதையிலும்,

"तस्य शिष्यस्य विप्रेन्द्रा कर्मसाम्येसतिद्विजाः"

என்று ஆரம்பிக்கும் பாகங்களில் இருவினையொப்பு, மலபரிபாகம், சத்குரு தரிசனம், சாம்பவிசக்தியின் நிபாதம், மண்டலாதி தீக்ஷாங்கங்கள் (தஸ்ய சிஷ்யஸ்ய விப்ரேந்திரா: தஸ்மிந்பததி சித்கனே) என்றவைகள் சொல்லப்பட்டன. இதனால் ஸத்குரு எவனுக்கு வருகின்றான்; எந்த சந்தர்ப்பத்தில் வருகின்றான், வந்து என்னசெய்கின்றான், செய்தபிறகு என்ன தன்மையை யடைகின்றான் என்பவை நன்கு கூறப்பட்டன. மேலும் 112+28 ஆக 140 யோகாசாரியர்களின் பிரஸ்தாபம் கேட்கப்பட்டிருக்கின்றது. ஷடத்வதீக்ஷையடைந்த தீக்ஷிதன் தீக்ஷாநந்தரம் இவர்களுக்கு வணக்கந் தெரிவிக்கவேண்டுமென்று வாயுசம்ஹிதையும், சைவபத்ததிகளும் கூறுகின்றன.

மகாகவியாகிய ஸ்ரீ காளிதாஸன் அம்பாஸ்துதி, லகுஸ்துதி, சர்ச்சாஸ்துதி, சகலஜநநீஸ்தவம் என்ற பல தோத்திர பாகங்களில் சரியையாதிகளையும், குருவருவதையும், ஷடத்வசுத்தி செய்வதையுங் கூறியிருக்கின்றார். அருணகிரிநாதரும் "தங்களாணவ மாயை கரும மலங்கள் போய் உபதேச குருபர சம்பிரதாயமோடேயு நெறியது பெறுவேனோ" என்றருளினார்.

நல்லது, குருவருகின்றார்; வந்த குரு என்ன செய்கின்றார்? "ஷடத்வசுத்திர் விதிநகுர்வதீனு கிரியோச்யதே" ஷடத்வசுத்தி செய்தலே, குருவினிடம் கேட்கப்படும் கிரியை என்றும் "குரோரதிகதம் ஞானம்:" ஞானம் என்பது "குருவினுடைய அதீனத்திலுள்ளது" என்றும் கேட்கப்படுகின்றன. ஷடத்வசுத்தி செய்தலாம் கிரியையும், ஞானோபதேசம் செய்வதும்—ஆகிய இரண்டும் "குருவினுடைய" அதீனமாக வுள்ளதாகின்றன. சமயதீக்ஷை செய்து சரியைக்கும், விசேஷ தீக்ஷைசெய்து கிரியைக்கும், யோகத்திற்கும் ஒருவன் அதிகாரியாக்கப்படுகின்றான். எஞ்சிநின்றது ஞானம். நிர்வாண தீக்ஷைசெய்ததுந்தான் ஞானத்திற்கு அதிகாரமேற்படுகின்றது. ஸாக்ஷாத்தாக ஞானத்தை யுபதேசிப்பதில்லை. நிர்வாண தீக்ஷையிற்றான் ஷடத்வ சோதனை ஏற்படுகின்றது. ஆகையால் சரியை, கிரியை, யோகானுஷ்டானத்தின் பிறகு குரு ஞானோபதேசம் செய்கின்றார் எனின், குருமூர்த்தி ஷடத்வ சுத்திசெய்து ஞானோபதேசம் செய்கின்றார் என்பதே பொருள். வாஸ்தவத்தில் குருமூர்த்திகளின் உபதேசம் நிர்வாண தீக்ஷையில் ஷடத்வ சுத்தியின்போதுதான் நிகழ்கின்றது. இதை சைவபத்ததிகளிலும் வாயு சங்கிதையாதி உத்கிரந்தங்

களிலும் நன்கு காணலாம். ஆகையினுற்றன் குருவினதீனாக ஷடத்வ சுத்தி செய்தலும், ஞானேபதேசமும் கூறப்பட்டிருக்கின்றன. சிற்சில மாயாவாதிகள் ஷடத்வ சோதனையைப் பற்றித் தாறுமாருகக் கூறுவது அவர்கள் திருவருளுக்கு விலக்காயினர் என்பதையே தெரிவிக்கின்றது. ஸ்ரீ காளிதாஸர்,

कालाग्निकोटिरुचिमंबषडध्वशुद्धावाप्लावनेषु भवतीममृतौघ वृष्टिम्।
श्यामां घनस्तनतटां सकलीकृतौ च ध्यायन्तरावजगतां गुरवोभवन्ति॥

ஷடத்வ சுத்தி செய்யும் குருவே ஜகத்குரு வெனப்படுகின்ருர். ஷடத்வ சுத்தியும், ஞானேபதேசமும் ஒரே குருதான் செய்யவேண்டும். சமய விசேஷ தீக்ஷைகளை வெவ்வேறு குருக்கள் வெவ்வேறு காலங்களில் செய்யலாம்; ஆனுல் ஷடத்வ சுத்தியையும் அதாவது நிர்வாணதீக்ஷையையும், ஞானேபதேசத்தையும் ஒரே சற்குருதான் செய்வான். இந்த ஷடத்வ சுத்தி என்பது நிர்வாண தீக்ஷாந்தியத்தில் செய்யப்படுவது. ஷடத்வ சுத்தி செய்த உடனே ஆசாரியனுக்கப்பட்டு அவனிடத்தில் எண் குணங்களும் பதிப்பிக்கப்படுகின்றன. எட்டாம் சூத்திரப் பகுதியில் ஸ்ரீமத் அருணந்திசிவம்,

மன்னவன்தன் மகன்வேட ரிடத்தே தங்கி
வளர்ந்து அவனை அறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன்நீ என்றவரிற் பிரித்துப்
பெருமையொடும் தானுக்கிப் பேணு மாபோல்
தன்னியறும் புலவேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறும்தொல் லுயிரை
மன்னும்அருட் குருவாகி வந்தவரின் நீக்கி
மலம்அகற்றித் தானுக்கி மலரடிக்கீழ் வைப்பன்.

... ... சகலர்க்குக் கன்ம வொப்பில்
தரையில்ஆ சான்மூர்த்தி ஆதார மாகித்
தரித்தொழிப்பன் மலம்சதுர்த்தா சத்திநிபா தத்தால்.

என்ற செய்யுட்களுக்குப் பிறகு,

"பலவித மாசான்பாச மோசனந்தான் பண்ணும்
படி நயனத்தருள் பரிசம்வாசகம்"

என்றற்ருெடக்கத்துப் பாடலில் தீக்ஷைகளைக் குறித்தார்.

அழிவிலாக் கிரியையினுல் ஆதச்சத்தி மறைந்தால்
ஆதன்அத்து வாசுத்தி பண்ணிமலம் அகற்றி
ஒழிவிலாச் சிவம்பிரகாசித்தற்கு ஞானம்
உதிப்பித்துப் பக்குவமடைப்பன்.

அரும்பருவம் அடைதலுமே ஆசானுகித்
தோன்றிநுக ராதவகை முற்செய் கன்மத்
தொகைமுற்றத் தத்துவாத் தொடக்கநீவ சோதித்து
வன்றுடற் கன்மம்அநு பவத்தினுல் அறுத்திங்கு
இனிச்செய் கன்மம் மூலமலம் ஞானத்தால்இடிப்பன்.

என்ற செய்யுட்களில் தீக்ஷையும் ஞானமுமே மலமகற்று மெனக் கூறுகின்ருர். சிவஞானபோத எட்டாம் சூத்திரத்தில் எங்கே தீக்ஷையும் உபதேசமும் பெறப்பட்டதெனின், "என" என்றதிலும் "உணர்த்த" என்றதிலும் இவை பெறப்பட்டிருக்கின்றன. "தவத்தினில் தம்முதற்குரு, ஐம்புலவேடரில் வளர்ந்து அயர்ந்தனை, என, உணர்த்த" என்று பிரித்துக் கொள்ளலாம். உணர்த்தியது "ஐம்புல வேடரில் வளர்ந்து அயர்ந்தனை" என்பது மாத்திரந்தான் என்று எண்ணக்கூடாது. உண்மையில் உணர்த்தியது "இத்துடன் நீ இருக்கவேண்டியவனல்லன்; நீ சிவனிலிருக்க வேண்டியவன்" என்பதுதான் உபதேசிக்கப்பட்டது. "நீ சிவனிலிருக்க வேண்டியவன்" என்று பொருள் தரக்கூடிய விஷயத்தைப் "பின்னவனு மென்மகன் நீ" யென்ற பகுதியில் அருணந்திசிவம் வைத்துள்ளார். ஆகையால் சிவனிலிருப்பதும் அவன் உணர்த்திய விஷயமேயாம். "ஐம்புலவேடரில் வளர்ந்து அயர்ந்தனை" என்பதை மாத்திரந்தான் அவன் உணர்த்தியதாகக் கொள்ளாமல் "என்மகன் நீ" என்றும் குரு உணர்த்தியதாகக் கொள்ளவேண்டியது நியாயமாகின்றது. நிர்வாண தீக்ஷையில் அத்துவசோதனைசெய்து உபதேசிப்பது "நமோந்தமாகிய பஞ்சாக்கரமே". இதன் பொருள் "என்மகன் நீ" (என்னைச் சேர்ந்தவன்) என்பதேயாகும். "இது சிவாய" என்பதாகின்றது. யகாரம் ஆன்மாவாதலால் யகாரத்தைச் சிவனுடன் பொருத்தவேண்டியது. நான்காம் வேற்றுமை உருபாக வைத்து "நீ சிவன்பொருட்டிருக்கின்ருய்" என்று பொருள்தர "சிவாய" என்பது வைக்கப்பட்டிருக்கிறது. இதுதான் சற்குருவின் உபதேசம். இப்படி யுபதேசித்ததைக் கடைப்பிடித்தே "விட்டு அந்நியமின்மையின் அரன் கழல் செலும்" என்று (சூத்திரத்தின்படி) சீடன் சிவோஹம் பாவனை செய்து சிவன் கழலை யடைந்தான். இந்தப் பகுதியை விரித்தே

ஒன்பதாம் சூத்திரம் அருளியது. 8-ம் சூத்திரத்தில் குருவந்து உப தேசித்துணர்த்தியதையே ஒன்பதாம் சூத்திரத்தில் சீடன் சாதனஞ்செய்து அடைகின்றான். ஒன்பதாம் சூத்திரம் "என்னும் அஞ்செழுத்தே" என்று அஞ்செழுத்தை எண்ணுமாறு கூறியது. ஸ்ரீ பஞ்சாக்ஷர உபதேசமில்லாமலா ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை மானசமாக ஜபம் செய்வது கூறப்பட்டது? குரு உபதேசிப்பது ஸ்ரீ பஞ்சாக்ஷரமாகையால் எட்டாம் சூத்திரத்தின்படி உபதேசத்தைப் பெற்றே ஒன்பதாம் சூத்திரத்தின்படி சீடன் பஞ்சாக்ஷரத்தைத் தியானிக்கின்றான். ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை உப தேசிப்பானேன்? எவ்வளவோ மந்திரங்கள் இருக்கின்றனவே, அவை களில் வேறு ஏதாவதொன்றை உபதேசிக்கப்படாதோ? வேறு எதையும் உபதேசிக்க முடியாது; வேறு எந்த மந்திரமும் பொருத்தமில்லை; ஸ்ரீ பஞ்சாக்ஷரமேதான் சத்குருவினால் உபதேசிக்கப்படுவது. இதுதான் குருவினாலடையும் ஞானம். இதனை விளக்குவாம்.

ஐம்புல வேடர்களாகிய பாசஜாலமாம் சுட்டுணர் பிரபஞ்சத்தை விட்டொழித்தால், எதை அடைவதென்று எதிர்பார்ப்பது? பிரபஞ்ச மல்லாத வொன்றை. வெயிலிலடிபட்டு வந்தவன் எதிர்பார்ப்பது எதை? நிழலை. தண்ணீர் வேட்கையுடையவன் எதிர்பார்ப்பது எதனை? தண் ணீரை. அதுபோல் ஐம்புலமாகிய பாசஜாலத் துன்பத்தை நீக்கிக் கொள்வோன் எதிர்பார்ப்பது யாதெனின் பாசஜாலத்திற்கு விரோதி யான ஒரு பொருளிலடையும் இன்பத்தை. பாசஜாலத்திற்கு விரோதி யான பொருள் யாது? யுக்திவாதம் வேண்டாம். சாஸ்திரம் கூறுவதைப் பார்ப்போம்; பாசம் என்பதும் பசுத்வம் என்பதும் ஒரு பொருட்கிளவி கள். பசுத்வத்திற்கு நேர்விரோதம் யாதெனின் சிவத்வமே.

எதிர்மறை

| | | | |
|---|---|---|---|
| (1) | பசுஞானம் | × | சிவஞானம் |
| (2) | பசு சாஸ்திரம் | × | சிவசாஸ்திரம் |
| (3) | பசுதர்மம் | × | சிவதர்மம் |
| (4) | பசுத்வம் | × | சிவத்வம் |
| (5) | பசுகரணம் | × | சிவகரணம் |
| (6) | பசுபாவம் | × | சிவபாவம் |

व्याधीनां भेषजंयद्वत्प्रतिपक्षः स्वभावतः ।
तद्वत्संसारदोषाणां प्रतिपक्षः शिवस्मृतः ॥

"வியாதிகளுக்கு மருந்து எப்படி எதிரிடையோ, அப்படியே பிறப்பிறப்பிற்கு எதிரிடை சிவன்" என்றது வாயுசம்மிதை. பசுத்வத்திற்கு வேறொரு பெயர் மலம் என்பது. சிவத்வத்திற்கு மற்றொரு பெயர் நிர்மலத்தன்மை.

मलनिर्मलभेदेन भिन्नोजीवस्तथेश्वरः।
मलंश्चिच्छादकोनैजो विशुद्धिश्च शिवतास्मृता।
अनादिमलसंश्लेषप्रागभावात्स्वभावतः।
अत्यन्त परिशुद्धात्मा अतोयं शिव उच्यते।
अथात्म मलमायाख्य कर्मबन्ध विमुक्तये।
व्यक्तये च शिवत्वस्य शिवात्ज्ञानं प्रवर्तते॥

எனும் பிரயோகங்களால் மலத்திற்கு வைரி சிவன் என்பதை நன்கு காணலாம்.

இதனுல் சத்குருரூபமாய் வந்துணர்த்துவது அல்லது உபதேசிப்பது யாதெனின் "சிவாயநம" என்பதே. ந, ம, என்பதில் பாசநிவர்த்தியையும் சிவ என்பதில் பாசத்திற்கு எதிரிடையான "சிவத்வ ப்ராப்தி" என்பதையுமேயாம். நமவை விட்டு யவ்வை சிவத்துடன் பொருத்தவேண்டியது போதிக்கப்பட்டது. "சிவாய" என்பதே அது. சிவாய என்பதால் சிவனது ஸம்ஸர்க்கம் கேட்கப்படுகின்றது. சற்குரு வருவது தேள் மந்திரம் கூறவல்ல, பூரான் மந்திரம் கூறவல்ல, பாம்பு மந்திரம் கூறவல்ல, பூதமுதல் நாதபரியந்தமான பாசப்பொருள்களின் பேதங்களையோ, மலநிவிருத்திக்காக அவைகளில் தனுவாதிகளைப் பெற்ற உயிர்வர்க்கங்களையோ கூறவல்ல; பின்னெதையெனின், சகல பசுபாசங் கடந்த "சிவ" பதியை யடையும் விதத்தைக் கூறவே குரு வருகின்ருன். வேறு எந்த அவாந்தரபதங்களையும் அடைவிக்கவல்ல. விஞ்ஞானகலர்களுக்கும், பிரளயாகலர்களுக்கும் பிரகாராந்தரத்தில் உபதேசித்தது எதுவோ அதையேதான் சகலர்களுக்கும் யடைவிப்பதே. வாயுசம்மிதை இதை நன்கு கூறுகின்றது. கிரந்த விஸ்தார பயத்தால் வசனங்களை எழுதவில்லை. சிவாயநம வென்பதின் பொருள் ஐம்புல வேடர்களின் வாழ்வை ஆன்மா விட்டு (ந, ம,) அந்நியமின்மையின் அரன்கழலை (சிவ) யடைந்து (ய) செல்வதே. ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைச் சூத்திரமென்றும் மற்ற சகல வைதிக சாஸ்திரங்களையும் பாஷ்யமென்றும் கூறப்படுகின்றது.

सतकोटिमहामन्त्रै रूपमन्त्रै रनेकधा।
मन्त्रैः षडक्षरोभिन्नः सूत्रं वृत्यात्मनायथा॥

ஏழுகோடி மந்திரங்கள், உபமந்திரங்கள் ஆகிய இவைகளுக்கும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்திற்கும் சம்பந்தம் யாதெனின் வார்த்திகத்திற்கும் சூத்திரத்திற்கும் உள்ளதுதான்.

शिवज्ञानानि यावन्ति विद्यास्थानानि यानिच ।
षडक्षरस्य सूत्रस्य तानिभाष्यं समासतः ।

ஸ்ரீமத் ஷடக்ஷரமெனும் ஸூத்திரத்திற்கு வேதசிவாகமங்கள் யாவையும் பாஷியங்களாகும்.

तदल्पाक्षरमर्थाढ्यं वेदसारं विमुक्तिदम् ॥
आज्ञासिद्ध असन्दिग्धं वाक्यमेतत् शिवात्मकम् ॥

அல்பாக்ஷரமாயினும் அர்த்தத்தினால் பூஜிக்கப்படும் (பொருள் செறிவுள்ள) பெருமையையுடையது. வேதஸாரமாயுள்ளது. விசேஷமாக முத்தியைத் தரவல்லது. ஈசனது ஆணையைக் கொண்டது. கொஞ்சமும் சந்தேகத்திற் கிடமில்லாதது. சிவத்தை யகத்திற்கொண்டது.

இதற்கு ஏன் அவ்வளவு கௌரவமெனின், இது எவனுடைய பெயர்? பராத்பரனை, ஏகநாயகனை, சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரஹம் எனும் பஞ்சகிருத்திய கர்த்தனை எவனொருவனுன்டோ அவனைக் குறிக்கும் வாசகமிது.

अस्तिनाथः परित्रातापुंसां संसारसागरात् ।
आदिमध्यान्तनिर्मुक्तः स्वभावविमलः प्रभुः ।
सर्वज्ञःपरिपूर्णश्च शिवोज्ञेयः शिवागमे ।
तस्याऽभिधानं मन्त्रोयं अभिधेयश्चसस्मृतः ।
अभिधानाभिधेयत्वात् मन्त्रस्सिद्धः परश्शिवः ॥

மாந்தர்களை ஜனன மரணத்திலிருந்து எவ்வழியிலும் காப்பாற்றும் நாதன் ஒருவனுளன். அவன் ஆதி, மத்தியம், அந்தமில்லாதவன்; இயல்பிலேயே மலமில்லாதவன்; அப்படிப்பட்ட பெரியோனது அபிதானம் (குறிக்கும் சொல்) இந்த மந்திரம். இந்த மந்திரத்தைச் சொன்னதும் இதைக்கொண்டு அறியப்பட வேண்டிய பொருள் அப்படிப்பட்ட பரம பொருளே. உலகத்தில் சொல்லைக்கொண்டு பொருளை அறிவதும், பொருளுக்கு ஒரு சொல்லையுபயோகிப்பதும் உண்டாகையால் சொல்லுக்கும்

பொருளுக்கும் ஓர் பேதாபேத சம்பந்தம் ஏற்பட்டது. இப்படிச் சொல்லிச்சொல்லிச் சொல்லே பொருளாகின்றதால் மந்திரமே சித்தமான பரசிவன். ஸ்ரீ பஞ்சாக்ஷரம் சாதன மந்தரமல்ல. சித்தமான (பலனுகவே யுள்ள) பரசிவன் என்றேகொண்டு ஸ்ரீ பஞ்சாக்ஷரமே சிவரூபமாகின்றது.

இதுகாறும் ஆசாரியன் உபதேசித்த சிவனைப்பற்றிய உபதேசத்தைக் கூறினும்.

ஞானம் என்று கூறுகின்ருேமே அதுயாது? அதாவது சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவைகளில் ஞானம் என்பது யாது?

ज्ञानं क्रिया च चर्या च योगश्चेति सुरेश्वरि ।
चतुष्पाद्ः समाख्यातः मम धर्मस्सनातनः ॥

ஞானம், கிரியை, சரியை, யோகம் என எனது ஸநாதநதர்மம் நான்கு பாதமாகவுள்ளது. இவைகளை விரிக்கும்போது

पशुपाशपतिज्ञानं ज्ञानमित्याभिधीयते ।
षडध्वसिद्धिर्विधिना गुर्वधीना क्रियोच्यते ॥
ममार्चनादि धर्मस्य चर्याचर्योतिकथ्यते ।
मदुक्तेनैव मार्गेण मय्यवस्थितचेतसः ॥
वृत्यन्तरनिरोधो यो योगइत्यभिधीयते ॥

என்று கூறப்பட்டதால், பசு, பாச, பதி என்பவைகளின் விசாரணு ரூபஞானமே ஞானம் எனப்பட்டது. இவைகளின் சிரவண, மனன, நிதித்யாஸந, ஸாக்ஷாத்காரங்களே ஞானம் எனப்படுகின்றது.

சரியையைத் தாஸமார்க்க மெனவும், கிரியையைப் புத்திரமார்க்க மெனவும், யோகத்தை ஸகமார்க்க மெனவும், ஞானத்தைச் சன்மார்க்க மெனவும் சாஸ்திரவல்லவர்கள் கூறுவார்கள். வழிநூலாசிரியராகிய அருணந்திசிவம் தாஸமார்க்கம், புத்திரமார்க்கம், சகமார்க்கம் என்பவைகளை விளக்கி சன்மார்க்கத்தைக் கூறும்போது,

"சன்மார்க்கம் சகலகலை புராண வேத
சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவும் உணர்ந்து
பன்மார்க்கப் பொருள்பலவும் கீழாக மேலாம்
பதிபசுபாசம் தெரித்துப் பரசிவனைக் காட்டும்

நன்மார்க்க ஞானத்தை நாடி ஞான
    ஞேயமொடு ஞாதிருவும் நாடா வண்ணம்
பின்மார்க்கச் சிவனுடனும் பெற்றி ஞானப்
    பெருமையுடையோர் சிவனைப் பெறுவர் காணே.''

என்றருளிச் செய்தார்.

ஸ்காந்தம் உபதேசகாண்டம் சரியா கிரியா யோக ஞானங்களை எடுத்துக்கூறும்போது பின்வருமாறு அவைகளின் லக்ஷணங்களைக் கூறுகின்றது.

चर्यां तु प्रातरुत्थाय शौचाचमनपूर्वकम्।
स्नात्वा विभूतिरुद्राक्षं धृत्वादेवानृषीनपि॥
सन्तर्प्य पुष्पाण्यारामात् समानीयातिनिर्मले।
अभिषेकजलं तद्वत् अनुलेपनपूर्वकम्॥
आनीय तत्तत्कृत्यानि निर्वृत्य च यथाक्रमम्।
दीपैर्देवालयं सर्वं अलङ्कुर्यात् विचक्षणः॥
आचरेदेवमनिशं चर्यां पापप्रणाशिनीम्।
इयं चर्येतिविख्याता क्रियातुसमन्तरा॥

என்று, வைகறையிலெழுந்து, ஆவசியகத்தை முடித்துக்கொண்டு செளசாசமனம் செய்து, ஸ்நானம், ஸந்தியாவந்தனம், பஸ்ம ருத்ராக்ஷ தாரணம் பண்ணி, தேவ ரிஷி பிதிர் தர்ப்பணம் செய்து, பூந்தோட்டத்திற்குப் போய் மலர்களைக் கொய்துவந்து, அபிஷேக ஜலமும் கொண்டுவந்து, சந்தனாதிகளைச் சேகரிப்பது, தேவாலயங்களில் தீபங்களை யேற்றி வைப்பது முதலியவைகளைப் பிரதிதினமும் செய்தல் சரியை யெனப்படும். அதற்குமேல் கிரியை யியற்றப்படல் வேண்டும்.

पञ्चशुद्धिं विधायाग्रे स्वान्तर्यजनपूर्वकम्।
शिवञ्चपूजयेत्पश्चात् अग्निकार्यं समाचरेत्॥
क्रियामप्येवमखिलं निर्वृत्यत्र यथाक्रमम्।
योगेयुञ्ज्यात्मनः पश्चात् शैवेसकलपापहे॥

"பஞ்சசுத்தியைச் செய்து அந்தர் பூஜைசெய்து வெளியில் சிவ பூஜை செய்து அக்கினி காரியத்தை முடிவிற்செய்து கிரியையை முடிக்க வேண்டும்". இதன்பிறகு யோகமியற்றவேண்டும்.

अष्टाङ्गानिचैतस्यकथितानि महात्मभिः ।
प्रथमस्तुयमःप्रोक्तः नियमस्तदनन्तरः ॥
आसनञ्च ततः पश्चात् प्राणायामोपिकीर्तितः ।
प्रत्याहारोधारणा च ध्यानञ्चैव समाधिना ॥

என்ருரம்பித்து,

यम नियम आसन प्राणायाम प्रत्याहार धारण ध्यान

ஸமாதிகளாம் எட்டு அங்கங்களை யுடைய யோகத்தைக் கூறி,

धारणा शिवपादाब्जयुगले चित्तधारणम् ।
ध्यानं शिवैकविज्ञानं द्विजाहृत्कमले सदा ॥
समाधिश्शङ्करेसम्यक्सत्यानन्दस्वरूपिणि ।
तादात्म्यभावनं स्वस्य विस्मृत्य विषयान्बहून् ॥

தாரணையென்பது சிவனது இணையடி மலர்களில் சித்தத்தைக் கட்டுதல் என்றும், தியானமென்பது ஹிருதய கமலத்தில் சிவனொருவனையே அறிவ தென்றும், ஸமாதி என்பது விஷயங்களை மறந்து ஸத்யாநந்த சொரூப ளுகிய சிவபரம் பொருளுடன் தாதாத்மியம் (ஒன்றுதல்) அடைத லென்றும் கூறியது. பிறகு ஞானத்தைக் கூறும்போது,

योधीत्य चतुरोवेदान् सषडङ्गपदक्रमान् ।
पुराणन्यायमीमांसा धर्मशास्त्रपुरस्सरान् ॥
सर्वागमार्थतत्वज्ञः समयान्तरतत्ववित् ।
पतिं पाशं पशूञ्चैव तत्तल्लक्षणलक्षितान् ॥
ज्ञात्वा ज्ञानेन तेनैव ज्ञाताऽहं ज्ञेयईश्वरः ।
ज्ञानं सस्वात्मनिष्ठं तच्छिवैक विषयं मतम् ॥
ज्ञात्वैतत्त्रितयं विद्वान् तन्निष्ठोनियतेन्द्रियः ।
स जीवन्नेव मुक्तश्च मोक्षकश्शिवसंमतः ॥

ஆறு அங்கங்களுடன் நான்கு வேதங்களையும், புராணங்கள், நியாயம் மீமாம்சை, தர்மசாஸ்திரங்கள் முதலியனவும் உணர்ந்து எல்லா ஆகமங் களின் தத்துவத்தையுமறிந்து, பற்பல சமயங்களையு முணர்ந்து, பதி, பசு, பாசங்களின் லக்ஷணங்களைக் கற்று, ஞாதா (அறிபவன்) நான், ஞேயம் (அறி யப்படுவது) ஈசுவரன், ஞானம் (அறிவு) தன்னுத்மாவில் சிவனொருவனையே

கண்டு அவன் வசாசகமேயிருந்து ஜீவன் முக்தனாயிருப்பானே என்றும், அவனே சிவனுக்குகந்தவனும் மற்றவர்களுக்கு முத்தியைத் தரவல்லவனு மாம் என்றும் அருளியது. இதனால் ஞானம் இனைத்தென அறியலாம்.

ஸ்ரீ ஞானசம்பந்தப்பெருமான் சிவபுரம் எனும் தலத் தேவாரத்தில்,

“கறைமலி தருமள ரொடுமுகை நறுமலர் புகைமிகு வளரொளி
நிறைபுனல் கொடுதனை நினைவொடு நியதமும் வழிபடு மடியவர்
குறைவில பதமணை தரவருள் குணமுடை யிறையுறை வனபதி
சிறைபுன லமர்சிவ புரமது நினைபவர் செயமக டலைவரே.”

என்று சரியை, கிரியைகளும்,

“சினமலி யறுபகை மிகுபொறி சிதைதரு வகைவளி நிறுவிய
மனனுணர் வொடுமலர் மிசையெழு தருபொரு ணியதமு முணர்பவர்
தனதெழி லுருவது கொடுவடை தகுபர னுறைவது நகர்மதில்
கனமரு வியசிவ புரநினை பவர்கலை மகடர நிகழ்வரே”

என்று யோகமும்,

“சுருதிகள் பலநல முதல்கலை துகளறு வகைபயில் வொடுமிகு
வுருவிய லுலகவை புகழ்தர வழியொழு குமெயுறு பொறியொழி
யருதவ முயல்பவர் தனதடி யடைவகை நினையர னுறைபதி
திருவருள் சிவபுர நினைபவர் திகழ்குல னிலனிடை நிகழுமே”

என்று ஞானமும் ஆகிய நான்கின் லக்ஷணங்களை அருளியிருக்கின்றார்.

இதனால் திரிபதார்த்த மெனப்படும் பதி, பசு, பாசங்களின் இலக்கணத்தைத் தெரிந்துகொண்டு சிவனைப் பேணலே ஞானம் எனப் படும். இந்த ஞானம் பரோக்ஷ மென்றும், அபரோக்ஷமென்று மிருவகை யாகும்.

हेतूपदेशगम्यं यत्तत्परोक्षं प्रचक्षते

என்றும்,

अपरोक्षं पुनःश्रेष्ठादनुष्ठानाद्भविष्यति

என்றும், கூறுவதால் கேட்டல், சிந்தித்தல் பரோக்ஷமெனவும்; தெளிதலும் நிஷ்டையும் அபரோக்ஷமெனவும் படும். கேட்டல், சிந்தித்தல் எட்டாம் சூத்திரத்தின் முற்பாகத்திலும், தெளிதல் நிஷ்டை என்பது "அன்னியமின்மையின் அரன்கழல் செலுமே" என்பதிலும் பெறப்பட்டது. ஒன்பதாம் சூத்திரத்தில் தெளிதலும் நிஷ்டையுமே விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

"அன்னியமின்மையின் அரன்கழல் செலுமே"

என்பதைப்பற்றிச் சிறிது கூறி இதை முடிப்பாம். அந்நியமின்மை என்பது அநந்நியமாந்தன்மை. இதை வட நூலில்,

"पृथग्भावविवर्जनम्"

என்றும் "அவிபாகம்" எனவும், "அத்துவிதம்" எனவும் கூறப்படும். இதையே "தாதாத்மியம்" என்று மேலோர் கூறுவர். இதையே "ஸோஹம்பாவனை" என்பர். சிவதாஸோஹம், சிவபுத்ரோஹம், சிவசகாஹம், சிவோஹம் என்பவைகள் நான்குமே சிவானன்னியமேயானாலும்,

तद्यथाप्रिययासंपरिष्वक्तोनान्तरं वेदनवाह्यम् ।
एवं प्राज्ञेनात्मनासंपरिष्वक्तोनान्तरं वेदनवाह्यम् ॥

என்று உபநிஷதமும், "அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள் அகன்றாளகலிடத்தாசாரத்தை, தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன்றாளே" என்று தமிழ் வேதமும் கூறிய பெரியதோர் நிலை. இதன் விரிவே இதனடுத்த ஒன்பது, பத்து, பதினொன்று, பனிரெண்டாம் சூத்திரங்களில் அருளப்பட்டன.

வடமொழிச் சிவஞான போதத்தில்,

स्थित्वा सहेन्द्रियव्यांधैः त्वां नवेत्सीतिवोधितः ।
मुक्त्वैतान्गुरुणानन्योधन्यः प्राप्नोतितत्पदम् ॥

என்று காணப்படுகின்றது. இங்கு "த்வாம் = உன்னை; நவேத்ஸி = அறியாமலிருக்கிறாய்" என்று பொருள்பட அமைந்துளது. இங்கு அறியாமலிருக்கிறாய் என்பது ஆணவமலப் பிடிப்பினால் தனுகரணாதிகளை

யடையுமுன் அறியாமலிருந்ததைத் தெரிவிக்கவில்லை. இந்திரியங்களுடன் கூடியிருப்பதால் அவ்வறியாமை சிறிது நீங்கிற்று. இந்திரியங்களுடன் கூடியிருந்து, அவைகளின் வண்ணமாயிருந்து தனது யதார்த்த சொரூபத்தை மறந்து, இந்திரியங்களுடன் கூடியதால் ஏற்பட்ட பிராந்தி ஞானத்தால் தன்னை மாறுபாடாகக் கண்டதையே கூறியது. இதனுல் தான் திராவிட சிவஞானபோதத்தில் "ஐம்புலவேடரின் வளர்ந்து அயர்ந்தனை" என்று வியக்தமாய் பிராந்தி ஞானத்தைக் கூறியிருக்கின்றது.

अयथाबुद्धिरर्थेषु बहुधाभ्रान्तिरुच्यते ।
यथार्थाकारसंवित्तिर्विद्येतिपरिगीयते ॥

**பொருள்களிடம் மாறுபாடான அறிவைப் பிராந்திஞான** மென்றும், **பொருள்களிடம் யதார்த்த ஞானம் வித்தை** என்றும் வசனம் காணப்படுகின்றது. கண் தானே காண்கின்றது என்பது பிராந்தி ஞானம். ஆன்மா காண்கின்றது என்பதும் பிராந்தி ஞானம். ஒளியினுல் (ஆன்மா கண்) காண்கின்றது என்பது யதார்த்த ஞானம். இதை ஆன்மாவிடம் பார்ப்போமானுல், ஆன்மா இந்திரியாதி கரணங்களால் அறிகின்றது என்பதும், ஆன்மா அறிவாகையால் தானே அறிகின்றது என்பதும் **பிராந்திஞானம்.** இந்திரியாதிகளினுல் அறிகின்றது என்பது **பாசஞானம்.** தானே அறிவாகையால் அறிகின்றது என்பது **பசுஞானம்.** சிவனருள் அறிவிக்க அறிகின்றதென்பது **உண்மைஞானம்.** சிவனுல் வாழ்கின்றோம் எனும் உண்மைஞானம் தலைப்பட்டால் சிவனதருளில் இசைந்து நின்று வாழும். செய்ந்நன்றி கொன்றதாகவும் ஆகமாட்டாது. கண்மூலமாகக் காட்சியின்பத்தை ஒளியினுல் பெற்றதுபோல், ஆன்மா சிவனுல் இன்பத்தை அடையும். ஐம்புலன்களை வேடரென்றுவமித்தது, ஆன்மாவின் யதார்த்த ஞானமாகிய "சிவனுலறிகின்றோம்" என்பதை மறக்கச் செய்து, ஐம்புலன்களால் அறிகின்றோமெனும் துர்ப்புத்தியைத் தருவதால், வேடர்கள் வேறொருவருடைய சொத்தைக் கவர்ந்து விடுவது போல், உண்மைஞானத்தா லின்பம் அடைவதைத் தடுத்துப் பொய் ஞானத்தால் துன்பமடையச் செய்வதால் இந்திரியங்களை வேடராகக் கூறப்பட்டது. சிவனது உபகாரத்தைப் பெற்று வாழ்வதை நினைந்து நினைந்து உருகினுல் சிவனிடமேயன்றி செலுத்தி சிவனிடமே ஒன்றியிருக்கச் செய்யும். எல்லா உபகாரத்தையும் பெற்றது சிவனுல் என்றும், இந்த உபகாரத்தின் லக்ஷியமெல்லாம் சிவனது இன்பத்தைப் பெறவேயாகையால் உபகாரார்த்தமாக ஏற்பட்ட கருவிகளின் பிரயோஜனம் அடைந்த பிறகு அவைகள் தனக்குத் தேவையில்லை யாதலால் சிவானந்த மொன்றையே விழைந்து அதன்க ணீடுபட்டு நிற்பதே **அந்நியமின்மை**

யெனும் நிலை. எல்லாவற்றையும் அவனுக்குத் தத்தம் செய்து அவன் வசமாக நிற்பதே ஆநந்தமடைவதற்கு வழி. இதுதான் அநந்ய பாவனை என்பது. உண்மையை உன்னிப்பார்த்து உண்மையிலுறைத்து நிற்றலே பாவனை. பாவனை பொய்யல்ல. பொய்யாகப் பாவனையைச் செய்யச் சொல்லவுமில்லை. சிவோஹம் பாவனை என்பது,

**शिवायस्वात्मानं दत्तवान्देशिकात्मने**

என்று சிவாநந்ய பாவனையின் வியாக்கியானமும் ஏற்பட்டிருக்கின்றது. இதன் விபரமெல்லாம் ஒன்பதாவது சூத்திரத்தில் பேசப்படும். "ஒன்றியிருந்து நினைமின்கள் உன்றமக்கு ஊனமில்லை" என்றது தமிழ் வேதம். "மன்னவன்றன் குமாரன்" என்று ஆன்மாவைச் சிவகுமாரனைகச் சொன்னது சித் எனும் சாதி உரிமைப் பற்றி.

> "அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட்
> டருளி லழிந்திளைப் பாறி மறைந்திட்
> டருளான வானந்தத் தாரமு தூட்டி
> அருளா லென்னந்தி யகம்புகுந் தானே"

என்ற திருமந்திரச் செய்யுட்படி திரோதாயியா யிருந்து வளர்த்த சிவனருளின் விசேஷத்தை யுத்தேசித்தும், வாகீசி வாகீசர் எனும் சக்தி சிவன்களுக்குப் பிறந்து சிவபுத்திரப்பேற்றிற்கு அருகமாயிருப்பதாலும் என்க. சிவனை "சிசு" வென்றே வாயுசம்மிதையாதிகள் அடிக்கடி கூறுகின்றன.

**शिशोरापादयेद्गुणान्**

"சிசுவினிடம் எண்குணங்களைப் பொருத்த" என்று காணப்படுகின்றது. இப்படியிருந்தும் இவையனைத்தையும் மறந்து, ஐம்புலாதிகளால், அவை தந்த விஷயார்த்தத்தை இன்பமாகக் கருதியபடியே வெகு நாளாய் பழக்கம் ஏற்பட்டதால் வேடர்களினுல் வளர்க்கப்பட்டு வந்தவனுகவே எண்ணி வேடனுகவே தன்னை ஓர் குலமகன் எண்ணிக் கொண்டிருப்பதைப் போலெனக் கூறப்பட்டது. சாங்கிய சூத்திரத்தில்

**राजपुत्रवत्**

என்று ஆன்மாவைக் கூறியிருக்கிறது. சாங்கிய மதத்தில் ஈச்வரன் கிடையாது. அரசன் கிடையாது. அரசனில்லாதபோது அரசன் குமாரனுமில்லை. ஆயினும் "ராஜபுத்திரன்போல்" என்றது அம்மதப்படி பிரகிருதியைத் தாண்டி உதாசீனனுயிருக்கும் புருஷன், பிரகிருதியில் அகப்

பட்டதாக விருக்கும் பாவனையை ஒழிப்பதற்காகக் கூறப்பட்டது. மாயாவாதிகள் சாங்கியக் கொள்கையை யவலம்பித்துப் பொருள்கொள்ளப் பார்க்கின்றார்கள். சைவத்தில் ஈசுவரன் இருக்கின்றான். ஆனால் அவ் ஈசுவரன் என்றும் இறப்பதில்லையாகையால், ஆன்மா என்றைக்கும் ஈசுவரனாவதில்லை. பின்னர் ஈசுவரனுடனிருந்து ஈசுவரனது போகத்தை அடைவான்.

भोगमात्रसाम्यलिङ्गात्

என்ற பிரம சூத்திரப்படிக்கும்,

शिवेनसहमोदते

"சிவனுடனிருந்து இன்பமடைகின்றான்" என்ற ஆகமப்படிக்கும்,

सोऽश्नुते सर्वान्कामान् सहब्रह्मणाविपश्चिता

"பேறறிவாளனாகிய பிரமத்துடன் எல்லா போகங்களையும் அனுபவிக்கின்றான்" என்ற சுருதிப்படிக்கும், ராஜாதி ராஜனும் சிவனதுபோகத்தையே விழைவான் என்பதே "மன்னவன்றன் குமாரன்" என்பதன் உண்மைப் பொருள். கண்ணுக்கும் ஒளியுண்டு. கதிரோனுக்கும் ஒளியுண்டு. கண்ணொளி கதிரொளியுடன் கூடி காட்சியின்பத்தை (கதிரொளியுடன் கலந்து) அனுபவிக்கும். அந்தக்கண், கதிரொளி காட்டுவது போல், மற்றக் கண்களுக்குக் காட்டாது. அதுபோல் ஆன்மா சிவனுடன் கூடி சிவானுபவத்தை அனுபவிக்குமேயன்றி, ஈசனது ஐந்தொழில்களை யியற்று. எனவே மன்னவன்றன் குமாரன் என்றது ஏகதேசவுவமை. இதைவிட்டுச் சிவனே வேடரிடமகப்பட்டு மயங்கிற்றென்பது அவைதிகர்களது கொள்கை. அப்படியாயின் வேடரிலகப்பட்டவனை கைதூக்கி விடுபவன் யாவனோ? ஆகையால் இது துர்வியாக்கியானம். "மலமுத்தனாயிருப்பதால் சிவன்" என்று கூறப்பட்ட சிவனே மலத்தில் அகப்படுவானென்றால், சிவத்வம் அவனிடம் கேட்கப்படமாட்டாது. அவனை விடுவிப்பானும் கிடையாது.

எனத் தாம்தாம் ஆராய்ந்த நுணுக்கங்களையும் மூவரும் ஒருவர் கருத்தினுக் கொருவர் மாறுபடாமலும் ஒருவர் கூறியதை மற்றவர் மொழியாமலும் திறம்படப் பேசினர்.

எட்டாவது சுத்திரக் கட்டுரை சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார் அவர்களால் எழுதப்பட்டது அச்சிடப்பட்டிருக்கிறது.

## ஒன்பதாம் சூத்திரம்

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழலாம்பதி விதிஎண்ணும் அஞ்செழுத்தே

என்னும் ஒன்பதாம் சூத்திரத்தைப் பற்றிய விரிவுரையை செங்கம் நாட்டாண்மைக் கழக உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் **திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள்:—**

நேற்று முற்பகல் முதல் இன்று இந்த நாழிகைவரை நாம் அனைவரும் மெய்கண்டதேவநாயனர் வழங்கியருளிய சிவஞானபோதத்தைப் பற்றிச் சூத்திரம் சூத்திரமாக அறிவுடைப் பெருமக்கள் சொற்பொழிவு செய்யக்கேட்டுப் பெருமகிழ்ச்சி யெய்தி வருகின்றோம். இன்று முழுதும் அப்பொருளே பற்றிய சொற்பொழிவு கேட்கச் சமைந்திருக்கின்றோம். இந்நிலையில், அடியேனும் மேலே கூறிய சிவஞானபோதத்தின் ஒன்பதாம் சூத்திரத்தைப் பொருளாகக்கொண்ட ஒரு சொற்பொழிவு செய்ய உங்கள் முன்னே நிற்கின்றேன்.

நேற்று நிகழ்ந்த சொற்பொழிவுகள் சிவஞானபோதத்தின் பொதுவதிகாரத்தைப் பற்றியன. அவை முதல் ஆறு சூத்திரப் பொருளை நமக்கு உணர்த்தின. அவற்றால், நாம் பதி, பசு, பாசம் என்ற முப்பொருள்களின் உண்மையினையும், அவற்றின் இலக்கணங்களையும் அறிந்தோம். இன்று, நாம் சிவஞானபோதத்தின் மற்றைய அதிகாரமாகிய உண்மையதிகாரத்தில் உள்ள ஆறு சூத்திரங்களையும் பற்றிய சொற்பொழிவுகளைக் கேட்கத்தொடங்கி, அவ்வதிகாரத்திலுள்ள சாதனவியல், பயனியல் என்ற இரண்டனுள் முன்னதான சாதனவியலின் முதலிரண்டு சூத்திரங்களான ஏழு, எட்டாம் சூத்திரங்களைப் பற்றிய இனிய அரிய சொற்பொழிவுகளைக் கேட்டு மகிழ்ந்தோம்.

பொருளுண்மையும் இலக்கணமும் உணர்த்திய ஆசிரியர் மெய்கண்டதேவர் அவ்வுணர்வாலாகும் பயனை உணர்த்தும் கடமையுடையராகவும், அப்பயனைச் சாதித்துக்கொள்ளும் சாதனங்களை எ, அ, கூ சூத்திரங்களால், சாதனவியல் என்னும் இயலை வகுத்து முறையே விளக்கி யருளினர். அவற்றுள், ஏழாம் சூத்திரத்தால் ஆன்மா சத்து

மன்றாய் அசத்துமன்றாய், "இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா" எனச் சதசத்தாம் என்றும், எட்டாம் சூத்திரத்தால் இவ்வான்மா முற் செய் தவத்தால் ஞானம் பெறும் முறைமையினையுடைய தென்றும் கூறியருளினார்.

இவ்வாறு, ஆன்மா ஞானம் பெறும் முறைமையினையுடைய தென்ற ஆசிரியர் ஆன்மா தனக்குத் துணையாகக் கொண்டொழுகும் ஞானம் பாசஞானம், பசுஞானம் என இருவகைப்படும் என்றும், இவ்விரண் டாலும் பதிப்பொருளை யுணர்தலாகாது, அதனை யுணர்தற்கு அப்பதிப் பொருளின் திருவடி ஞானமே வேண்டப்படுவது என்றும் அருளிச் செய்கின்றார். மேலே, எட்டாம் சூத்திரத்து இறுதி யதிகரணத்தில் ஆசிரியர், "ஆன்மா தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தாது முதல் போதத்தை யணையும்" என்று அருளினார்; இந்திரிய ஞானம் பாசஞானமாகும். ஆகவே, பதிப்பொருள் பாசஞானத்தால் உணரப் படாதது என்பது துணியப்பட்டது. இனி, பசுஞானமென்பது, அப் பாசஞானத்தை உடைமையால் எழும் ஞானமாகும். வேதம், ஸ்மிருதி, புராணம், கலை முதலியவற்றின் ஞானமும் பாசஞானமே என ஆசிரியர் ஸ்ரீமத் அருணந்தி சிவனார் விளம்புகின்றார். மேலும், இவரே, இப் பசுபாச ஞானங்கள், மேனோக்கி நாடிப் பதிப்பொருளை உணர்த்துவதை விடுத்துக் கீழ்நாடுகின்றன என்கின்றார். அஃதாவது இவை ஆன்மா வுக்குக் கீழ்ப்படுகின்றன என்பது. "நறுகி ஆன்மா இவை கீழ்நாட லாலே, காதலின் நான் பிரமம் என்னும் ஞானம் கருது பசுஞானம்" என்று விளக்கியருளுகின்றார். எனவே, இவ்விருஞானங்களும் பரம் பொருளை யுணர்தற்குத் துணையாகா என்பது துணியப்பட்டது.

பசு பாச ஞானத்தால், பரம்பொருள் உணரப்படாதென்றதனால், பாரிசேடத்தால், பரஞானத்தால் அப்பரம்பொருளை யுணர்தல் வேண்டும் என்பது எய்துகின்றது. இப்பரஞானமே, பரானது திருவடி ஞான மென்றும், திருவருள் ஞானமென்றும், பதிஞானமென்றும், பரஞான மென்றும் ஆன்றோரால் வழங்கப்படுகின்றது.

இப்பரஞானத்தால் பரம்பொருளை எவ்வாறு காண்பதெனின், அசத்தாயுள்ள காரியப் பிரபஞ்சத்தை அசத்தென்று கண்டு கழிக்க வேண்டும்; கழித்தவழி உளதாய் நிற்பது பரஞான சொரூபம். இத னையே ஆசிரியர் மெய்கண்டதேவநாயனார், "அசத்தாயுள்ள வன்னப் பிரபஞ்சத்தை அசத்தென்று கண்டவழி, உளதாய் நிற்பது ஞான சொரூப மென்று உணரற்பாற்று" என்று விளக்கி யருளினர்.

இவ்வாறு, ஆன்மா, பதிப்பொருளை யுணர்ந்தவழி, இதுகாறும் அது பயின்றுவந்த அஞ்ஞானம் பயிற்சி வாசனையால் வந்து தாக்குமே, அதற்கு வழியொன்று காட்டவேண்டு மென்ற கருணையால் ஆசிரியர் மெய்கண்டதேவர், "இனி, இவ்விடத்து ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க" என்று உரைத்தருளுகின்றார். எனவே, இதுகாறும் கூறிய வாற்றால், பதிப்பொருள், பசு பாச ஞானங்களால் உணரப்படாது என் பதும், அதனைப் பதி ஞானத்தானே காண்டல் வேண்டும் என்பதும், காண்பவர், காரியப் பிரபஞ்சத்தை அசத்தென்று கண்டுகழிக்க வேண்டு மென்பதும், அக்காலத்தே அறுநியே பயின்ற பயிற்சி வாசனையால் அஞ்ஞானம் ஆன்மாவைத் தாக்காது இருத்தற் பொருட்டு திருவைந் தெழுத்தை விதிப்படி தியானித்தல் வேண்டும் என்பதும் பெறப்பட்டன. இவை, ஆசிரியர் மெய்கண்டதேவ நாயனாரால், ஒன்பதாம் சூத்திரத் தால் உணர்த்தப்பட்டிருக்கின்றன.

இச்சூத்திரத்தின்கண் ஊனக்கண் என்பது பசு ஞானம்; பாசம், பாசஞானம். ஞானக்கண் என்பது பதி ஞானம். ஆகவே, "ஊனக் கண் பாசம் உணராப் பதியை" என்றது, பசுபாச ஞானங் களால் உணரப்படாத பரமனை என்ற பொருள் தருவதாயிற்று. "ஞானக்கண்ணினில் சிந்தைநாடி" என்றதனால், அப்பரமனைப் பதிஞானத் தாலே சிந்தைக்கண் நாடியறிக என்பது பொருளாயிற்று. பதி ஞானத் தைக் காண்பதற்கு வழி கூறுவதற்காகவே, "பாசம் உராத்துனைத் தேர்த்து என ஒருவ, பதி தண்ணிழலாம்" என்று அருளுகின்றார். உராத்துனைத் தேர் என்பது பேய்த்தேர்; வெயிற்காலத்தில் வெளி களில் வெப்ப மிகுதியால் காணப்படும் கானல். கானலில் தோன்றும் தோற்றம்போல, இக்காரியப் பிரபஞ்சம் தோன்றுகின்றது; இதனை, கானல் போலக் கழித்தால், பரமனது திருவடி ஞானம், தண்ணிய நிழல்போலத் தோன்றிக் குளிர்ப்பிக்கும். "பாசம் ஒருவத் தண்ணிழ லாம் பதி" என்பது இதனைக் குறிக்கின்றது காணலாம். இச் சூத்திரத் தில் நாடி என்பது நாடுக என்றும், எண்ணும் என்பது எண்ணுமின் என்றும் பொருள் தருகின்றன.

"ஊனக்கண் பாசம் உணராப் பதியை" ஞானக்கண்ணால் காண்க என்பது அமையும்; ஞானக்கண்ணால் எவ்விடத்தே காண்பது? இவ் வினாவிற்கு விடையாக "ஞானக்கண்ணினில் சிந்தை நாடுக" என்று அருளியுள்ளார். இக்கருத்தையே மீட்டும் ஆசிரியர், "காட்டிய

கண்ணே" என்று தொடங்கும் திருவெண்பாவில், "காட்டிய உள்ளந் தனைக்காணா, உள்ளத்தின் கண்ணாய கள்வன்தான் (முதல்வன்); உள்ளத்திற் காண்" என்று வற்புறுத்துகின்றார்.

இனி, பாசத்தைப் பேய்த்தேர் என்று எவ்வாறு ஒருவுவது (நீக்குவது; கழிப்பது)? இதனை விளக்குதற்குத்தான் ஆசிரியர் மெய்கண்டதேவர், இனி, "இனி, அசத்தாயுள்ள வன்னபேதங்களை (பிரபஞ்சத்தை) அசத்தென்று காணை உளதாய் நிற்பது ஞான சொரூபம் என்று உணரற்பாற்று" என்றும், "என்றது, வேற்றியல்பாகிய வன்ன பேதங்களை வேற்றியல்பென்று கண்டு கழிப்பின் உளதாய் நிற்பது படிகசொரூபமாம் துணையான் எனவரும்" என்றும் மொழிந்தருளுகின்றார்.

ஆசிரியர் திருவள்ளுவதேவர், மெய்யுணர்வு பெற்ற வழியும், உயிரைப் பண்டைப் பயிற்சி வாசனை வந்து தாக்குமென்று கொண்டு "அவாவறுத்தல்" என்ற அதிகாரத்தை உரைத்தருளியது போலவே, இங்கே ஆசிரியர் மெய்கண்டதேவரும், "இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்பு தின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாகலின் அது நீக்குதற்கு" இச்சூத்திரத்தில் "விதி எண்ணும் அஞ்செழுத்தே" என்றும், வார்த்திகவுரையில், "ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படியுச்சரிக்க" என்றும் உரைத்தருளுகின்றார்.

பரஞானத்தால் உயிர் பரத்தைத் தரிசித்த வழி, ஆங்கு விளையும் பரபோகத்தை நுகர்ந்து, மேலும் அதனையே பெற விரும்பிநிற்கும் இன்பந்தரும் பொருளைக்கண்டு இன்புறும் ஓர் உயிர் அவ்வின்பமே கருதி அதனைக் காதலித்தல் அதற்கு இயல்பு. அதனால் "பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர்; பதார்த்தங்கள் பாரார்." அவரது காதல் பரத்தையே குறித்து மிகும்; அவரது கண்ணீர் அவ்வின்பமே தேர்ந்து சொரியும். ஆயினும், அவரது ஆன்மா, அனாதியே பயின்ற அஞ்ஞானத்தை நோக்கா வண்ணம் திருவைந்தெழுத்தை எண்ணுதல் வேண்டும்; அஃது அவரைப் பதிஞான நெறிக்கண்ணே செலுத்திப் பரபோகத்தைத் துய்ப்பிக்கும் என்பது விளங்குகின்றது. இக்கருத்து, நம் ஆளுடையபிள்ளையாரால் மிக அழகாக விளக்கப்படுகிறது. "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி, ஓதுவார்தமை நன்னெறிக்குய்ப்பது" என்பது பிள்ளையார் அருளிய திருப்பாசுரமாகும்.

நன்னெறியென்றது, பரஞானத்தால் பந்தைந் நரிக்கும் நன்னெறி யாகும். உய்ப்பது என்றதனால், அஞ்ஞானத்தை நோக்காது பர ஞானத்தையே நோக்குமாறு செய்யுமென்பது இனிது உணரலாம்.

இனி, இத்திருவைந்தெழுத்தை விதிப்படி தியானிக்க வேண்டும் என்ற விடத்து, விதி யாது என்னின், "விதிப்படி உச்சரிக்க என்பது ஆன்மாப் பாசம் ஒருவி ஞானக் கண்ணினில் பதியைச் சிந்தை நாடுக என ஈண்டு விதித்த விதியின்படியே ஓதுக என்றவாறு" என்றே ஆசிரியர் சிவஞான முனிவர் செப்பியருளுகின்றார்.

திருவைந்தெழுத்தை ஓதித் தியானிப்பவர் முதற்கண், அஃது ஆன்மா பரமனுக்கு அடிமை என்பதை யுணர்த்துவதை யுணர்ந்து தாம் அப்பரமனுக்கு அடிமை யென்ற இயல்பினை நன்கு தெளிதல் வேண்டும். திருவைந்தெழுத்தால் பரமன் திருமேனி யமைந்திருப்பதையும் இனிது உணரவேண்டும். மனவாசகம் கடந்த நாயனார், நகாரம் முதல்வன் திருவடியும், மகாரம் திருவயிறும், சிகாரம் திருத்தோள்களும், வகாரம் திருமுகமும், யகாரம் திருமுடியுமாம் என்று காட்டி யருளுதலால், முதல்வன் திருமேனி திருவைந்தெழுத்தால் அமைந்திருக்கும் பரிசினை அறியலாம். மெய்கண்டதேவர், "அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டு" உணர்க என்கின்றார்; அருணந்திசிவனார் இக்கருத்தையே "அஞ்செழுத்தால் ஆன்மாவை அரனுடைய பரிசும், அரனுருவும் அஞ்செழுத்தால் அமைந்தமையும்" அறிந்திடுக என்று விளக்குகின்றார்.

இவ்வண்ணம் முதல்வன் திருமேனியைத் திருவைந்தெழுத்தால் இதயத்தே எழுந்தருளப்பண்ணி, திருவைந்தெழுத்தால் மெய்ம்மை, தவம், பொறை, பொறியடக்கம் முதலிய எண்குணங்களையும் ஞான மலர்களாகக் கருதிக்கொண்டு அருச்சித்தல் வேண்டும். அத்திருவைந் தெழுத்தாலே குண்டலியிலே ஞானவனலை யெழுப்பி ஓமம் செய்தலும், புருவ நடுவாகிய விந்துத்தானத்தே திருவைந்தெழுத்தைத் தியானித் தலும் செய்தல் வேண்டும். இதுவே திருவைந்தெழுத்தை ஓதித் தியானிக்கும் திருப்பணியாம் என்பர்.

> "அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டரனை
> அஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தில்—அஞ்செழுத்தால்
> குண்டலியில் செய்தோமம் கோதண்டம் சானிக்கில்
> அண்டனும் சேடனும் அங்கு"

என்று இதனை நம் மெய்கண்ட தேவர் விளக்கியருளுகின்றார்.

இவ்வாறு செய்த வழி, சந்திர சூரிய கிரகண காலங்களில், ஏனைக் கிரகங்களைப்போல் காணப்படாத இராகு வென்னும் கிரகம் காணப்படுவதுபோல முதல்வன் சிந்தைக்கண் வெளிப்படக் காண்டல் கூடும். விறகில் தீப்போலத் தோன்றும் அவனது ஞான சொரூபத்தைக் காண்டலால், ஆன்மா, கனலைச் சேர்ந்த இரும்பு கனலாய் நிற்றல் போல், "சிவானந்த ஞானவடிவேயாகி" ஆண்டவன் திருவடிக்கீழ் நிற்கும். ஆகவே, அவ்வான்மாவைத் தாக்கற்கு உறும் அஞ்ஞானம் தானும் தாக்கற்குரிய சார்பு பெறாதே கெடும் என்பது பெற்றாம். இதனை, மெய்கண்டதேவர்,

> "இந்துவில் பானுவில் இராகுவைக் கண்டாங்குச்
> சிந்தையில் காணில் சிவன்கண்ணும்—உந்தவே
> காட்டாக்கில் தோன்றிக் கனல்சேர் இரும்பென்ன
> ஆள்தான் ஆம்; ஓது அஞ்செழுத்து"

என்று அருளுகின்றார்.

### சித்தாந்த சைவப் பெருமக்களே!

இதுகாறும் கூறியதனால், முதல்வன் பசு பாச ஞானங்களால் உணரப்படான் என்பதும், அவனை அவன் திருவடி ஞானத்தாலே சிந்தைக்கண்ணே நாடி யுணர்தல் வேண்டும் என்பதும், அத்திருவடி ஞானமும், அசத்தாகிய காரியப் பிரபஞ்சத்தைப் பேய்த்தேரின் பொய்த் தோற்றம் போலும் அசத்து எனக் கண்டுகழித்த வழி உளதாய் விளங்கும் என்பதும், அதனையறிந்து அதற்கு ஆளாகிச் சிவானந்த மாய் ஆன்மா நிற்குமென்பதும், அவ்வாறு நிற்குமிடத்தும், ஆன்மா அநாதியே பயின்ற பயிற்சி வாசனையால் அஞ்ஞானத்தை, வேம்பு தின்ற புழு கரும்பைச் சார்ந்து இன்புற்றபோதும் அவ்வேம்பினை விரும்புமாறு போல, விரும்பி நோக்குமாதலின் அதனை நீக்குதற்குத் திருவைந்தெழுத் தினை விதிப்படி யுச்சரிக்க வேண்டும் என்பதும், விதியாவது, ஆன்மா பாச மொருவி முதல்வனை அவன் திருவடி ஞானத்தாலே சிந்தையிலே நாடுதலாம் என்பதும், உச்சரித்தலாவது மானதமாக வுரைத்துச் சிந்தையில் வைத்துத் தியானித்தல் என்பதும், தியானிப்பார், முதற்கண் முதல்வனுக்குத் தாம் அடிமை யென்பதைத் திருவைந்தெழுத்தால் உணர்தல் வேண்டும் என்பதும், பின்பு அத்திருவைந்தெழுத்தாலே, அவனைச் சிந்தைக்கண்ணே எழுந்தருளுவித்து ஞானமலர் கொண்டு அருச்சித்தலும், குண்டலியில் ஓமித்தலும், புருவ நடுவில் தியானித்

தலும் வேண்டும் என்பதும், அது போதில் முதல்வன் விறகில் தீப்போலத் தோன்றி, கனல் சேர்ந்த இரும்புபோல ஆன்மாச் "சிவானந்த ஞானவடிவேயாகி" ஆளாக்கிச் சிறப்பிப்பன் என்பதும், திருவைந்தெழுத்தாலாம் இச் சிறப்பினையே ஆளுடைய பிள்ளையார் "காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி, ஓதுவார்தமை நன்னெறிக்குய்ப்பது" என்ற அருமைத் திருப்பாசுரத்தே வைத்து நமக்கு உணர்த்தியருளுகின்றூர் என்பதும் பிறவும் உரைக்கப்பட்டன.

என ஏது மேற்கோள் எடுத்துக்காட்டுக்களுடன் விரிவுரை ஆற்றினர்.

இச்சூத்திரம்பற்றி யாழ்ப்பாணம் அச்சுவேலி, சைவ சாஸ்திர பரிபாலன இதழ் ஆசிரியர், சிவஸ்ரீ ச. குமாரசாமிக் குருக்கள் அவர்களின் ஆய் உரை அச்சிடப்பட்டிருந்தது சபையில் வழங்கப்பட்டது.

தலைவர் அவர்கள் ஏழு, எட்டு, ஒன்பதாம் சூத்திரங்களைப் பற்றி நிகழ்ந்த விரிவுரைகளை ஒட்டி 30—8—41 காலையில் பேசிய சார்புரை.

இன்று காலை சிவஞான போதத்தின் இரண்டாம் பகுதியாகிய சிறப்பியல்பு என்ற உண்மை அதிகாரத்தில் 7, 8, 9 சூத்திரங்களைப் பற்றிய விரிவுரைகள் கூறப்பட்டன. இச்சூத்திரங்கள் சாதன இயலைப் பற்றிக் கூறுவன. நேற்றுக் கூறப்பட்ட முதலாறு சூத்திரங்களில் பதி, பசு, பாசம் என்பவைகளின் பொது இயல்பு கூறப்பட்டது. இன்றையதினமோ உயிரானது தன் தலைவனை அடைவதற்கு எவ் விதச் சாதனம் கொள்ளவேண்டும் என்பது கூறப்பட்டது. ஏழாம் சூத்திரத்தில் சாதனத்தின் உண்மை கூறப்பட்டது. எட்டு, ஒன்பது சூத்திரங்களில் அச்சாதனங்கள் பெறும் வழிகளாகிய குரு அருள், ஐந்தெழுத்து இவைகளின் இல்க்கணம் கூறப்படுகின்றது. உயிரானது சாதனத்தால் அன்றி உண்மையை யறியமாட்டாது; உண்மையை அறிவதற்குக் குரு அருள் மிகவும் அவசியமானது. ஐந்தெழுத்து அதற்கடுத்தபடியில் உள்ளது. குரு அருள் எட்டாம் சூத்திரத்தில்

கூறப்பட்டது என்றோம். சாதன இயலில் குரு அருள் கூறும் எட்டாம் சூத்திரமே மிகச் சிறந்ததாகும். திருமுறைகளில் எட்டாம் திருமுறை சிறந்து விளங்குவது. எட்டாம் திருமுறையாவது மணிவாசகனுர் அருளிச்செய்த திருவாசகமும், திருக்கோவையாரும் ஆகும். மணிவாசகனுர் குரு அருளாலே உண்மை நிலே பெற்ருர். ஆகவே சிவஞான போதத்தின் எட்டாம் சூத்திரமாகிய இலக்கணத் திற்குத் திருமுறைகளில் எட்டாம் திருமுறையே இலக்கியம் ஆகும் எனலாம்.

இனி எட்டாம் சூத்திரத்தில் ஞானத்தினே உணரும் முறையினே உணர்த்துதல் சொல்லப்பட்டது. அம்முறையினேக் குரு உணர்த்துவார். ஐம்புலன்களாகிய வேடர்களிடம் சிக்கி இருந்த உயிரை, அதன் உண்மை நிலே தெரிவித்து, மீட்டுத் தன் வழிக்குச் சேர்த்துவது குருவினுடைய திரு அருள் ஆகும். இதனேப் பொழிப்புரையாக விரித் தவர் மெய்கண்டதேவரின் சீடரான அருணந்தி முனிவர். அதனேச் சித்தியார் சுபக்கம் எட்டாம் சூத்திரத்தில்,

> "மன்னவன்தன் மகன் வேடரிடத்தே தங்கி
> வளர்ந்து அவனே அறியாது மயங்கி நிற்பப்
> பின்னவனும் என்மகன் நீ என்று அவரிற் பிரித்துப்
> பெருமையொடும் தானுக்கிப் பேணுமாபோல்"

என்ற அடிகளில் விவரித்து இருப்பதைக் காண்க. இதில் ஒரு கதா ரூபமாக குரு அருள் விளக்கப்பட்டது. அக்கதை என்னவெனில்,

ஒரு அரசகுமாரன் இளவயதிலேயே தவறிப்போய் வேடர் களிடம் சேர்ந்து விடுகிருன். அவர்களுடைய பழக்க வழக்கங்களேக் கொண்டு தன்னேயும் வேடனுகவே பாவித்து விடுகிருன். ஒரு நாள் அவன் தந்தையாகிய மன்னவன் காட்டிற்கு வேட்டைக்குச் சென்ற போது அங்கே வேடர்கள் நடுவில் அரசகுமாரனேக்கண்டு அவனுடைய உருவ இலக்கணங்களே ஆராய்ந்து தன் மகன் என அறிந்து அவனே அழைத்துத் தன் மகன் என நிரூபித்துத் தன் நாட்டிற்கு அழைத்துச் செல்லுகிருன். அதுவரையில் வேடன் என்று நினேத்துக்கொண்டிருந்த அக்குமாரன் அரசனுடைய போதனே வந்தவுடன் தான் அரசகுமாரன் என அறிந்து கொள்ளுகிருன். அது போல, உயிர் ஐம்புலன்களாகிய வேடர்களிடம் சிக்கி உண்மை அறியாமல் இருக்கையில் ஈசனுடைய அருள் குரு அருளாக வரவே தன் உண்மை நிலே அடைந்து குரு விடம் சேரும் என்பதனேச் சித்தியாரில்,

"துன்னிய ஐம்புல வேடர் சுழலில் பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறும் தொல்லுயிரை
மன்னும் அருட் குருவாகி வந்து அவரின் நீக்கி
மலம் அகற்றித் தானுக்கி மலரடிக்கீழ் வைப்பன்"

என்ற அடிகளால் கூறப்பட்டுள்ளது.

இதனை ஒரு சிறு கதையால் விளக்குவாம். ஒரு காட்டிற் கருகில் ஒரு ஆட்டுப்பட்டி இருந்தது. ஒருநாள் காட்டிலிருந்து ஒரு பெண்புலி அப்பட்டியைக் கண்டு அதிலிருந்த ஆடுகளைக் கொன்று தின்ன வந்தது. அப்புலி நிரம்பக் கருவுற்றிருந்தது. ஆட்டின்மீது மிக விரைவுடன் பாய்ந்ததினுல் அதன் கரு விழுந்துவிட அது உயிரும் துறந்தது. ஆனுல் கருவிலிருந்து விழுந்த குட்டி உயிர்துறக்கவில்லை. அச்சிறு ஆட்டுக்குட்டிகளோடே வளர்ந்து வந்தது. அவைகளுடனே பழகி வந்ததினுல் தன்னையும் ஆடெனவே நினைத்துக்கொண்டது. ஒருநாள் மற்ருெரு புலி, ஆடுகளை அடிக்க வந்தது. ஆடுகளின் இடையில் ஒரு புலிக்குட்டி இருப்பதைப் பார்த்து வந்த பெரும்புலி இவ்வற்புதத்தை அறிய வேண்டுமென்று அப்புலிக் குட்டியைப் பிடிக்கச் சென்றது. அதுவோ பயந்து ஓடிற்று. பெரும்புலி அதனைப் பிடித்து, ஒரு குளத்தின் அருகே நிறுத்தி தம்மிருவருக்கும் உள்ள உருவ ஒற்றுமை காட்டிற்று. பிறகு ஒரு ஆட்டுக் குட்டியை அடித்து இரத்தத்தின் உருசியையும் காட்டிற்று. அது முதல் அப்புலிக் குட்டி தான் ஆடல்லவென்றும் தானும் ஒரு புலி என்றும் அறிந்தது. உடனே மற்ற ஆடுகளையும் அடித்துத் தின்றது. அதுவரை ஆடு என்று நினைத்தது இப்போது புலி என்று அறிந்தது. இங்கே புலிக்குட்டி உயிர்; பெரும்புலி குரு; மற்ற ஆடுகள் புலன்கள்; குரு உபதேசமானவுடன் உயிர் உண்மை நிலைஅறியும். இதுதான் எட்டாம் சூத்திரத்தின் கருத்து.

இனி ஒன்பதாம் சூத்திரத்தில் இரண்டாவது சாதனமாகிய ஐந்தெழுத்தின் சிறப்புக் கூறப்பட்டுள்ளது. இவ்விரு சாதனங்களாலும் உயிர் உண்மைநிலையை அறியும்.

என முடிவுரை கூறினர்கள்.

இத்துடன் காலை நிகழ்ச்சிகள் இன்னிசைப் பண்ணெலி முழங்க இனிது முற்றுப் பெற்றன. நடுப்பகல் சாப்பாடு,

இடைவேளைச் சிற்றுண்டி நடந்த பின் 4-மணிக்கு மீண்டும் பேரவை கூடிற்று.

சென்னைத் தமிழ்ப் புலவர், திரு. சோமசுந்தரனார் அருந்தவச் சிறுமி (8-வயதுள்ள) திருமிகு. மீனாட்சியம்மை சிவஞான போத மூல நூலைச் சிற்றுரையுடன் மனப்பாடமாக உரைத்தமை அவையோரை மகிழச் செய்தது.

பத்தாம் சூத்திரத்தைப் பற்றி, கோயம்புத்தூர் விடுதி பெற்ற ஊர்க்காவற்றுறை அதிகாரி (Circle Inspector of Police) திரு. துடிசைகிழார், அ. சிதம்பரனார் அவர்கள்,

## மகாநாட்டின் தலைப்புப் பெயர்

இம்மாகநாட்டின் தலைப்புப்பெயர் மெய்கண்டான் சித்தாந்த மாநாடு என்பதாம். சித்தாந்தம் பொதுவாக துவிதம்—அத்துவிதம் என இரண்டாம். சிறப்பாக அத்துவிதம் மூன்று வகைப்படும்:— (1) கேவல அத்துவிதம். (2) விசிட்ட அத்துவிதம். (3) சுத்த அத்துவிதம்.

இவைகளில் சுத்த அத்துவிதமே மெய்கண்டான் சித்தாந்தமாகும். சைவசித்தாந்தம் என்றாலும், ஆகம சித்தாந்தம் என்றாலும், புனித அத்துவிதம் என்றாலும், சுத்த அத்துவிதம் என்றாலும், மெய்கண்டான் சித்தாந்தம் என்றாலும் பொருள் ஒன்றே ஆகும்.

கேவல அத்துவிதத்திற்கு சங்கர சித்தாந்தம் என்றும், விசிட்ட அத்துவிதத்திற்கு இராமானுஜ சித்தாந்தம் என்றும், சுத்த அத்துவிதத்திற்கு மெய்கண்டான் சித்தாந்தம் என்றும், துவிதத்திற்கு மாத்வ சித்தாந்தம் என்றும் உலகோர் கூறுவர்.

## மெய்கண்டார் வரலாறு

தொண்டை நாட்டிற்கும் சோழநாட்டிற்கும் நடுவே உள்ள நடுநாட்டின் பகுதியாகிய திருமுனைப்பாடி நாட்டிலே திருப்பெண்ணாகடம் என்ற ஊரிலே, பரம்பரைச் சைவவேளாளர் குலத்திலே, பன்னீராயிரம்

கோத்திரங்களில் ஒன்ருகிய **களப்பாளர்** கோத்திரத்திலே, **அச்சுதக் களப் பாளர்** என்ற அருந்தவர்க்குப் பிள்ளையாக **கி. பி. 1225** ல் பிறந்தவர் நம் மெய்கண்டார்.

இவர் திருவெண்காட்டு ஈசர் அருளால் பிறந்தவர் ஆனபடியால் தாய் தந்தையர்கள் **வெண்காட்டுப் பெருமாள்** (இதன் மொழிபெயர்ப்பு வடமொழியில் **சுவேதவனப் பெருமாள்** என்பது) என்னும் பிள்ளைத் திருநாமத்தைச் சூட்டினர்.

வெண்காட்டுப் பெருமாள் முற்பிறவிகளில் பக்குவப்பட்டவர் ஆனபடியால், பிறந்தது முதல் ஞான சமாதியில் இருந்ததால், சாதா ரணக் குழந்தைகள் போல அழுவதும், சிரிப்பதும் இல்லாமல், பேசா மல் மோன நிலையில் இருந்தார். இதனை அறிந்த, கம்பரால் இராமா யணத்தில் பாடப் பெற்ற திருவெண்ணெய்நல்லூர் சடையப்ப முதலியா ருடைய மகனும், வெண்காட்டுப் பெருமாளுடைய நன்மாமனும் ஆகிய **காங்கேய பூபதி** என்பவர் இவரைத் திருவெண்ணெய்நல்லூருக்கு எடுத்துச் சென்று, அவ்வூரில் கோயில் கொண்டிருக்கும் **பொல்லாப் பிள்ளையாரை** "ஞானசமாதியில் இருக்கும் குழந்தை வெண்காட்டுப் பெருமாள் பேச வேண்டுமென" வேண்டிக்கொண்டு, ஆலயத்திலேயே குழந்தையை விட்டு வைத்தார். இம்மாதிரி வழக்கம் தமிழ் நாட்டில் மிக உண்டு. அப்படி இருக்கும்போது, **கி. பி. 1227** ல் நந்தியம்பெருமானுடைய நேர் மாணக் கர்களில் ஒருவராகிய **சனற்குமாரமுனிவருடைய** மாணவர் **முதலாம் மெய் கண்டார்** (சத்தியஞான தரிசினிகள்) உடைய சீடர் **பரஞ்சோதி முனிவர்** தம்முடைய தென்னுட்டு யாத்திரையில் திருவெண்ணெய்நல்லூரில் திருவருளால் தங்கினபோது, பொல்லாப் பிள்ளையார் ஆலயத்தில் இருக் கும் வெண்காட்டுப் பெருமாளுடைய பக்குவத்தை நோக்கி, அவருக்கு முறையே தீக்கைகளைச் செய்து, **மெய்கண்டார்** என்னும் தம்முடைய ஆசாரியாருடைய திருநாமத்தைத் தீக்ஷா நாமமாக இட்டு, தாம் தம் ஆசிரியர் மூலமாகக்கேட்ட "நந்தி உரைத்தருளும் ஞான நூலாகிய" சிவஞானபோதப் பன்னிரண்டு சூத்திரங்களையும் உபதேசம் செய்து சென்ருர்.

அது முதல் **இரண்டாம் மெய்கண்டார்** பேசத்தொடங்கி, தாம் ஆசிரியரிடம் கேட்டுத் தெரிந்துகொண்டதைப் பல மாணவர்களுக்குச் சொல்லத் தொடங்கினுர். எல்லா மாணவர்களும் இவர் மாதிரி பக்குவ

நிலையில் இல்லாததால் சிவாசாரணவர்கள் சூத்திரப் பொருள் விளங்காது தயங்கி இருப்பதை நோக்கி, தாம் ஆசிரியர்பால் கேட்ட பன்னிரண்டு சூத்திரங்களால் அமைந்த நந்தியுரைத்தருளிய ஞான நூலாகிய சிவ ஞான போதத்தைச் சிந்தை செய்து, தாரணியில் உள்ள எல்லோரும் உணரும் வண்ணம் உரையிடையிட்ட செய்யுட்களாக ஏது திருட்டாந் தங்களுடன் 82-வெண்பாக்களைச் செய்து தம் மாணவர்க்கும் அவர்கள் மூலமாக உலகர்க்கும் உபகரித்தார். இப்படி இவர் உரையிடையிட்ட 82-வெண்பாக்களைச் செய்தது கி. பி. 1228 ல் ஆகும்.

சிவஞான போதப் பன்னிரண்டு சூத்திரங்களுக்கு **அதிகரணங்கள்** 39 **ஆகும்**. இவ் வதிகரணங்களைச் செய்து கொடுத்தவர் **பொல்லாப் பிள்ளையார்** என்று ஒரு சாராரும், திருவாவடுதுறையைச் சேர்ந்த **சாமிநாத தேசிகர்** என்று ஆராய்ச்சியாளரும் கூறுகின்றனர்.

## கி. பி. 13-ம் நூற்றாண்டில் தமிழ்நாட்டின் நிலை

சமய ஆசாரியர்களில் முதல்வராகிய மாணிக்கவாசக சுவாமிகள் கி. பி. 3-ம் நூற்றாண்டிலும், ஏனைய மூவரும் கி. பி. 6, 7, 8 ம் நூற்றாண்டுகளிலும் சைவசித்தாந்தக் கொள்கைகளைத் தமிழ் நாட்டில் இசைத்தமிழுடன் பரப்பி வந்தார்கள்.

கி. பி. 9 ம் நூற்றாண்டில் சமயாசாரியர்கள் காலத்துக்குப் பின் சைவசித்தாந்தக் கொள்கைகளைப் பலர் கைநழுவ விட்டுவிட்டார் கள். சமயாசாரியர்கள் பாடிய தேவார திருவாசகங்களையும் பாராயணம் செய்வதைப் பலர் விட்டுவிட்டார்கள்.

ஏனென்றால், கி. பி. 9 ம் நூற்றாண்டில் **சங்கரர்** அவதரித்து **காச்மீரம்** முதல் **கன்னியாகுமரி** வரை **கேவல அத்துவிதக் கொள்கைகளைப்** பரப்பி வந்தார். அக்கொள்கைகள் என்றும் நிலைத்து நிற்க தக்க ஏற்பாடுகளும் செய்து வந்தார். அவைகளில் முக்கியமானவை **காச்மீரம், பூரி, சிருங்கேரி, கும்பகோணம்** முதலிய மடங்களாகும். பெரும்பாலும் சைவர்கள் எல்லாம் கேவல அத்துவிதக் கொள்கைகளை அநுசரிக்கத் தொடங்கினார்கள்.

கி. பி. 10-ம் நூற்றாண்டிலும் தமிழ்நாட்டின் நிலை அப்படியே இருந்தது.

கி. பி. 11-ம் நூற்றாண்டில் **ஸ்ரீபெரும்பூதூரில் இராமானுஜர்** அவதரித்து **விசிட்டாத்துவிதக்** கொள்கைகளைத் தென்னாட்டில் பரப்பி வந்ததுடன், பல மடங்களையும் 74 சிம்மாசனாதிபதிகளையுந் தாபித்துத் தம்முடைய கொள்கைகள் என்றும் நிரந்தரமாக நிலைத்துநிற்கும்படியான ஏற்பாடுகளும் செய்தார்.

கி. பி. 12-ம் நூற்றாண்டில் மேலேகூறிய இருவிதக் (கேவல-விசிட்ட அத்வைத) கொள்கைகளுமே தமிழ்நாட்டில் பெரும்பாலும் பரவி இருந்தன.

கி. பி. 13-ம் நூற்றாண்டில் மேலேகூறிய இருவிதக் கொள்கைகளும் வலுவுபெற்று இருந்தமையால் சைவசித்தாந்தக் கொள்கைகள் அருகி நடைபெற்று வந்தன. அப்படியிருந்த காலத்தில்தான் கி. பி. 1225-ல் நம் மெய்கண்ட சைவாசாரியர்கள் அவதரித்தார்கள்.

அவதரித்துப் பரஞ்சோதியாரின் மாணவராகி, சைவசித்தாந்தக் கொள்கைகளைத் தம்மாணவர் 49 பேருக்கும் சொல்லிக்கொடுத்து, அவர்கள் மூலமாக மெய்கண்டான் சித்தாந்தம் உலகெங்கும் ஒளிவீசும்படி செய்தார். இந்த நிலையைக் குறித்துத்தான் ஒருவர்,

> "அல்லாத பரசமய அலகைத் தேர்விண்டு
> அகல அகல்புனற் பெண்ணை அயல்சூழ் வெண்ணெய்
> பொல்லாத இபமுகத்துப் புத்தேள் தன்பால்
> புனித சிவாகமப் பொருண்மை பொருந்த ஆய்ந்து
> இல்லாத நிலையிதுமற் றென்றும் ஒன்றாய்
> நிற்குநிலை இதுவென மெய்ந்நெறி தேர்ந்து யாரும்
> வெல்லாத சிவஞானபோதம் சொன்ன
> மெய்கண்டான் சரணம் முடிமீது கொள்வாம்"

என்று பரசுவாராயினர்.

சிவஞானபோதம் என்னும் முதல் நூல், (1) பிரமாண இயல், (2) இலக்கண இயல், (3) சாதன இயல், (4) பயன் இயல் என்ற நான்கு இயல்களையும், ஒவ்வொரு இயலுக்குப் பப்பத்து வரிகளைக் கொண்ட மும்மூன்று சூத்திரங்களாகப் பனிரண்டு சூத்திரங்களையும், பொழிப்புடன் 82 வெண்பாக்களையும் கொண்டது. 12 சூத்திரங்களும், 39 சூர்ணிகைகளும், 82 வெண்பாக்களும் சேர்ந்து ஒரு தொகை 133 ஆகின்றது. இத்தொகை திருக்குறள் அதிகாரங்களின் தொகையை ஒத்திருத்தல் குறிப்பிடத்தக்கது.

இனி அடியேனுக்குச் சொற்பொழிவின் பொருட்டு வரையறுக்கப் பட்டது 10-ம் சூத்திரமாகும். அச்சூத்திரம் **பயன் இயலில்** முதலாயது. பாசநீக்கத்தையும் அதன் பயனாகிய சிவப்பேற்றையும் பற்றிக் கூறுவது ஆகும்.

10-ம் சூத்திரத்துக்கு அதிகரணங்கள் 2.

| | |
|---|---|
| முதல் அதிகரணத்துக்கு வெண்பா | 1 |
| இரண்டாம் அதிகரணத்துக்கு வெண்பாக்கள் | 5 |

உயிர்கள் எல்லாம் மலத்தால் கட்டுப்பட்ட அக்காலத்திலேயே, இறைவன் உயிரோடு இரண்டறக் கலந்து நிற்கும் தன்மைபோல, உயிரானது தான் என வேறு காணப்படாதவாறு இறைவனோடு ஒற்றித்து நின்று, இறைவனுடைய ஆணைவழி தவறாது நிற்கவே, ஆணவ மலமும் மாயையும் வலி இழந்து நிற்கும், வல்வினையாகிய ஊழும் இல்லையாய் ஒழியும்-என்பது சூத்திரக்கருத்து.

## முதல் அதிகரணத்தின் விளக்கம்

முதல் அதிகரணத்தில் "**அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனாகி**" என்று கூறப்பட்டுள்ளது. நம் மெய்கண்டார் உயிர் இறைவனோடு ஏகனாகித் தடையின்றி நிற்பதற்கு உபாயம் ஒருவெண்பாவால் கூறுகிறார். அதன் கருத்து வருமாறு:— உயிரானது தான் என்று வேறு காணப்படாதவாறு இறைவனோடு ஒற்றித்து நிற்பதால் "**யான்**" "**எனது**" என்னும் பகுத்து உணரும் உணர்வுக்குக் காரணமாய மலம் நீங்கும். நீங்கவே உயிர் இறைவன் திருவடியை அணையும். அணையவே உயிர் இறைவனோடு ஒற்றித்து நிற்கத் தடைகள் கிடையா.

"யான்" "எனது" என்று பகுத்து உணர்வார்க்கு உயிர் உணர்வு முனைத்துத் தோன்றும். அவ்வாறு இல்லாமல் உயிரானது, தான் என ஒன்று இல்லாமல், தான் இறை உணர்வு மயமாய் நிற்கவே, எல்லாம் இறைவன் செயல் என்னும் தெளிவை அடையும். அடையவே இறைவன் அவ்வுயிரைத் தனது திருவடி வியாபகத்துள் அடக்கித் தானே முழுதுமாய் விளங்குவான்.

"யான் எனது என்னும் செறுக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்"

என்னும் திருக்குறளின் கருத்தும் இதுவே யாகும்.

## இரண்டாம் அதிகரண விளக்கம்

இரண்டாம் அதிகரணத்தில் "இறைபணி நிற்க" என்றும், அப்படி நிற்பதால் "மலமாயை தன்னொடும் வல்வினை இன்றே" என்ற பயனும் கூறப்பட்டுள்ளது. இறைவன் பணித்த பணியில் நின்று அதன் பயனைப் பெறுவது எப்படி என்று நம் மெய்கண்டார் ஐந்துவெண்பாக் களில் விளக்குகிறார்.

இறைவன் பணித்த கட்டளைப்படியே அவனுடைய ஆணைவழி நின்று உயிர் செய்வன எல்லாம் செய்யுமானால் மயக்க உணர்வுக்குக் காரணமாய் மாயா காரியங்களும் வினையும் இறைவனோடு ஒற்றித்து நிற்பதற்குத் தடையாய் வந்து தாக்கமாட்டா. ஆதலின், அவன் அருளாணைவழி தவறாது சலிப்பின்றி நிற்க என்றது காண்க.

## முதல் வெண்பா

இவ்வெண்பாவில் 'நாம்' அற்று, நம்செயல் அற்று நிற்பது எப்படி என்பதை மெய்கண்டார் விளக்குகிறார்:—

(1) இந்திரியங்களாய பொறிகள் மாயாகாரியங்கள் ஆவனவே யன்றி, உயிர்க்காரியங்கள் அல்ல, அதாவது "நாம் அல்ல".

(2) அவ்விந்திரியங்கள் இறைவனால் தொழிற்படுவனவே அன்றி நம்மால் அல்ல.

(3) அவ்விந்திரியங்கள் தொழிற்படுவதற்கு வாயிலாகிய விடயங்களும் மாயாகாரியங்கள் ஆகுமே அல்லாமல் வேறல்ல.

(4) அவ்விடயங்களும் இறைவனாலேயே தொழிற்படுகின்றன

என்று நாம் அறிந்தால், நாமும் இறைவனுடைய உடைமை என்று அறிவோம். நாம் அறிவதும் செய்வதும் இறைவனுடைய அருளினால் என்று உணர்ந்தோமானால் புதுவினை ஏறாது, வல்வினை உடலுடன் அநுபவ வாயிலாகக் கழியும் என்று இறை உணர்வு முனைத்து நிற்பதற்கு உபாயம் கூறுகின்றார்.

## இரண்டாவது வெண்பா

அவ்வாறு இறையுணர்வு முனைத்து நிற்பாரைக் காப்பாற்றுவது இறைவனுடைய கடமை என்றும், அப்படித் தன்னைச் சார்ந்தாரைக் காப்பாற்றுவது சார்புபற்றியல்ல என்பதையும் விளக்குகிறார்.

## மூன்றாவது வெண்பா

அவ்வாறு இறை உணர்வு முனைத்து நிற்பார்க்கு, இறைவன் திருவருள் நோக்கால் பழவினையும், அருளாணைவழி நிற்பதால் புது வினையும், உடல் அநுபவத்தால் ஊழ்வினையும் இல்லாது கழிந்தாலும் ஒருக்கால் பெருங்காயம் இட்ட பானை போல உயிர் உணர்வு முனைத்துத் தோன்றி, வல்வினையும் அதற்கு வாயிலாகிய மாயா காரியங்களும் வந்து மூளும். ஆனாலும், அவைகள் ஒன்றும் செய்யா. வலி இழந்து நிற்கும். இறை உணர்வே முனைத்துத் தோன்றும். அப்போது தன்னைப் பிறழவிடாது நிற்கும் அருட்சத்தை உணர்ந்து நிற்பான் என்று விளக்குகிறார்.

## நாலாவது வெண்பா

அன்னணம் பிறழாது நிற்பது எப்படி எனில், அனல்வாத மந்திரம் கைவந்த ஒருவனை அக்கினி சுடாதது போலவும், வலிய குதிரைகளை நடத்த வல்லான் ஒருவனை, வலிய கொடிய குதிரை கீழே விழுத்தாதது போலவும், ஐந்தெழுத்து மந்திரங் கற்றான் ஒருவன் காமத்தீயால் அவதிப்படுதலும் ஐம்பொறிக் குதிரைகளால் ஆட்டுண்ணப் படுதலும் இல்லையாகும். அருள்வழியே நிற்பன் என்று தெளிவு படுத்துகிறார்.

## ஐந்தாவது வெண்பா

அவ்வண்ணம் ஐம்பொறிகளால் ஆட்டுண்ணது அசைவற்று நிற்பதற்கும், அசத்துப் பொருள்கள் தாக்காது நிற்பதற்கும் உபாயம் கூறுகிறார்:—

தான் "சதசத்து" "சார்ந்ததன் வண்ணம் ஆகும் தன்மை உடையேன்" என்று ஒருவன் உணர்வான் ஆனால், இறைவனுடைய அருள்வழியே நின்று எல்லாவற்றையும் பார்ப்பான். அவ்வண்ணமே செயலும் நிகழ்த்துவான். அப்படிச் செய்தால், பாசமாகிய அசத்து ஒளிமுன் இருள்போல, சத்தாகிய திருவருள்முன் வலி இழந்து இல்லாமல் ஒழியும். ஆதலின் சத்தைச் சார்ந்தவர் அசத்தைச் சாரார் என்றது காண்க.

இதுகாறுங் கூறியவாற்றால், சாதன இயல் கடைசியில் கூறியபடி ஐந்தெழுத்தை விதிப்படி எண்ணுவதாலும், இச்சூத்திரத்தில் கூறியபடி ஏகனாகி நிற்பதாலும் ஆணவமலம் வலி இழந்து நிற்கும். இறைபணி நிற்பதால் மாயாகாரியங்களின் வாதனை இன்றாகும், வல்வினை அநுபவவாயிலாக உடலுடன் கழியும். ஆகவே சிவப்பேறு சித்திக்கும் என்று கூறியுள்ளது காண்க.

"இறைபணி நிற்க" என்பது இறைவன் பணித்த பணியில் நிற்க என்று விரியும்.

இறைபணி என்பது இறைவனுடைய கட்டளைகள். அக்கட்டளைகள் எல்லாம் வேதசிவாகமங்களே. ஆகமங்களை ஒத்துக்கொள்ளாத வேதங்கள் வேதங்களாகா. வேதாகமங்களின் சாரமாயுள்ளது சிவஞான போதம் என்று அறிந்தோம்.

எனவும்,

திருவையாறு அரசர் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர், வித்துவான், **திரு. கு. சோமசுந்தர தேசிகர் அவர்கள்,**

இன்று எனக்குப் பேசுதற்கு வாய்த்த பொருள் பொய்கண்டார் காணுப் புனிதமெனு மத்துவித மெய்கண்டநாதரால் ஆன்மாக்களுய்யும் வண்ணம் அருளிச் செய்யப்பெற்ற சிவஞானபோதத்துள் இறுதியிய லாகிய பயனியலிலுள்ள முதல் சூத்திரமாகும். அது,

"அவனே தானே யாகிய வந்நெறி
ஏக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே"

என்பது.

இதன் கருத்து:— பாசத்தை விடுதலும், சிவத்தை யடைதலும் என்னும் பயனிரண்டனுள் இது பாசத்தை விடுதலெவ்வாறு என்பதை உணர்த்துமுகத்தால் சிவோகம்பாவனையில் உறைத்து நிற்க ஐந் தெழுத்தை விதிப்படி ஓதும்பொழுது, நிற்கும் முறை இதுவெனக் கூறுதலேயாம்.

இதன் பொழிப்புரை:— மேற்சூத்திரத்தில் கூறியவாறு சிவஞானத் தால் காணப்படும் அம்முதல்வன், பெத்தகாலத்தில், உயிரோடு உடனு யிருந்து உயிர் அறியும்வண்ணம் தான் அறிந்தும் அவ்வுயிருக்கு முதல்வனிருக்கின்றா னென்று வேறு காணப்படாமல் உயிர்தானே அறிந்ததாக எண்ணும்படி அவ்வுயிரோடு பிரிவின்றி நின்றவாறுபோல முத்திக்காலத்தில் உயிர் அம்முதல்வனோடு உடனாய் நின்று இன்பத்தை யனுபவித்தாலும் அநுபவிக்கின்ற தான் உண்டென வேறு காணப் படாமல் அம்முதல்வனோடு பிரிவின்றி நின்று அம்முதல்வனேயாய், அவன் அருள்வழியாகிய இறைபணியில் வழுவாது நிற்பின் வாசனை யால் வந்து தாக்கும் ஆணவம் மாயை என்னும் இரண்டனோடு வலிய கன்மமலமும் இல்லையாயொழியும்.

## ஏகனாகி நிற்றல்

சிவோகம்பாவனையில் உறைத்து நிற்க ஐந்தெழுத்தை ஓதல் வேண்டும். அங்ஙனஞ் செய்யில் சிவம் விளங்கும். சிவம் விளங்கவே கருவிகரணங்களாகிய பாசப் பொருள்களொன்றும் விளங்காதொழியு மாயினும் பாசப்பொரு ளல்லாத உயிர்க்குத் தனக்குத் தானும் விளங் காது என்று கூறுவதற்கில்லை. ஆகவே சிவோகம்பாவனை செய்யும் உயிர்க்குத் தான் எனுமறிவும் உடன்விளங்குவதாகும் என்பது பெறப்

படும்; பெறப்படவே எல்லாந் தானென நிற்கும் உயிர்க்குப்போலவே தன்னை வேறாகக்காணும் உயிர்க்கும் உயிருணர்வே முனைத்து நிற்கும். இவ்வுயிர் முனைத்து நிற்குமளவும் சுட்டறிவேயுள்ள உயிர், வியாபகமாயுள்ள சிவத்தை யுணரவியலாது. ஆதலால் சிவோகம்பாவனை முற்றிய உயிர் அவ்வளவோடமையாது அதன்கண் விளங்கிய சிவத்தினைத் தனக்கு வேறாகக் காணாதிருத்தற்கான செயலையுஞ் செய்தல் வேண்டும். அஃது உயிரானது கருவிகரணாதிகளோடு கூடியறியுங்காலமாகிய பெத்தகாலத்தில் அச்சிவம் உயிரோடு உடனாய் நின்று அறியவும், அது உயிரின் வேறாய்க் காணப்படாமல் உயிர் தானே யறிந்ததென்று எண்ணும்படி அவ்வுயிரேயாய் ஒற்றுமைப்பட்டு உயிரின் பின்னாக நின்றவாறுபோல இம்முத்தி நிலையில் அச்சிவத்தோடு உடனாய் நின்று உயிரானது அறியினும் அச்சிவத்தின் வேறாகத் தன்னைக் காணாமல் அச்சிவத்தோடு ஒற்றுமைப்பட்டு நிற்றலேயாம்.

## ஏகனாகி நிற்றலின் பயன்

இவ்வாறு உயிரானது சிவத்தினிடத்து ஏகனாகி நின்றாற்றான், உயிரை யானெனவும் சிவப்பொருளை என தெனவும் பகுத்துக்காணும் மயக்கவுணர்வுக்குக் காரணமான ஆணவமலவாசனை நீங்கி அச்சிவத்தினுடைய திருவடியாகிய சிவாநந்தத்தைப் பெறும். எனவே சிவத்தோடு பிரிவின்றி நிற்கும் உயிர்க்கு அதனறிவு முனைப்பின்றி அதன் கீழடங்கி நிற்கும். நிற்கவே உயிரினறிவு முனைத்து நின்றால் மட்டும் தாக்கக் கூடிய ஆணவமலம் அவ்வுயிரைத் தாக்காது என்பது பெறப்படும்.

## இறைபணி நிற்றல்

மேற்கூறியவாறு ஏகனாகி நிற்கும் உயிர்க்கும் உடம்பு உள்ளதே. இவ்வுடம்போடு கூடிய உயிர் சிவத்தோடு உடனாய்ப் பிரிவின்றி நிற்றல் யாங்ஙனமெனிற் கூறுவாம். உயிர் சிவத்தோடு உடனாய் நிற்றற்கு உடம்பினைவிட்டு நீங்கவேண்டுமென்பதில்லை. பின் உடம்பின் பணியினின்று நீங்கினாற்போதும் ஆகலின், உயிர் உடற்பணியினின்று நீங்குதற்குரிய உபாயம் யாதென்பதே நாம் சிந்திக்கவேண்டுவது.

உயிர் ஒருகாலத்தில் ஒன்றனையே யறியுந் தன்மைவாய்ந்தது. ஒன்றனையறிதலே மற்றொன்றை மறத்தற்கும் உபாயமாம். இதனால் உயிர் ஒருகாலத்துச் சிவபணியில் நிற்பது மற்றொன்றாகிய உடற்பணியினின்று நீங்குதற்குபாயமா மாகலின், உயிர் கருவிகரணாதிகளாகிய

பாசப் பொருள்களின் பணியினின்றும், தன்பணியினின்றும் நீங்குதற்குச் சிவபணியில் நிற்றலொன்றே உபாயம் ஆம் என்பது பெறப்படும். பெறப்படவே சிவம் தொழிற்படுகின்ற பொருளன்றாகலின் அதன் பணியினிற்றல் என்பது எவ்வாறு பொருந்து மெனில்? அது தொழிற்படவில்லை என்றாலும் மற்றெல்லாப் பொருள்களையும் தொழிற்படுத்துவது அச்சிவமேயாகலான், பொருள்கள் யாவும் சிவத்தின் அருள்வழியே தொழிற்படும் என்னும் உண்மையை அநுபவத்தி லுணர்தலே அதன் பணியில் நிற்றலாகுமெனக் கொள்க. இவ்வாறு சிவபணியில் நிற்கும் உயிர் மற்றப் பொருள்களின் பணியிலின்று நீங்குதல் மாத்திரமன்றி அப்பொருள்களைத் தன்பணியில் நிறுத்துதலுங் கூடும். எதுபோலெனின். குற்றவாளிகளைச் காவலாளர் தண்டிப்பது தலைவன் பணியினாலேயே. இவ்வுண்மையை உணர்ந்த குற்றவாளிகள் தலைவன்பணியில் தாம் தவறாது நிற்பின், அக்காவலாளர் பணியினின்று நீங்குவதோடு அவரைத் தன்பணியில் நிறுத்துதலுங் கூடுமன்றோ?

## இறைபணி நிற்றலின் பயன்

சிவத்தோடு ஏகமாகி நிற்கும் உயிரை மேற்கூறியபடி ஆணவ மலந் தாக்காதாயினும் அவ்வுயிர் மாயாகாரியங்களாகிய உடலோடும் கருவிகரணங்களோடுங் கூடியுள்ளதாகலின் அம்மாயையையும், அவ்வுட லிந்திரியங்கள்யாவுந் தத்தந் தொழிலிற் குறைவின்றியிருப்பதால் அதன் அறிவைப் பிராரத்தமாகிய முன்வினையும் ஆகாமியமாகிய மேலை வினையுந் தாக்காவா, எனின் தாக்கா. யாங்ஙனமெனின், சிவத்தோடு ஏகனாய் நிற்றலன்றி இறைபணியிலும் வழுவாது நிற்பதென்பது, பாசப்பொருள்களாகிய கருவி கரணங்களின் தொழில் கள், யாவும் சிவத்தின் தொழிலே என்று உணர்ந்து நிற்பதேயாகலின் கருவி கரணங்களின் வழிநில்லாத உயிரைக் கருவிகரணங்களின் முதற் காரணமாகிய மாயை தாக்காதென்பதும் இங்ஙனம் நிற்கும் உயிர் தன்னொடு கூடியுள்ள கருவிகரணங்களின் தொழில்களைச் சிவத்தின் தொழிலெனவே உணர்வதால் அவற்றில் அவ்வுயிர்க்கு விருப்பு வெறுப்பு நிகழாது, விருப்பு வெறுப்பு இல்லாமல் செய்யப்படுகின்ற தொழில்கள் யாவும் உடலினைத் தாக்குமேயல்லாமல், உயிரினைத் தாக்காவாகலான் உடலூழாய்க் கழியும் பிராரத்தமாகிய முன்வினையும், அதனை யூட்டுதற்கு வரும் முயற்சியாகிய ஆகாமியமும், உடலூழாய்க் கழியவேண்டுமேயன்றி அவ்வுயிரைத் தாக்கா வென்பதும் பெறப்படும்.

ஆகவே சிவத்தோடு பிரிவின்றி நின்று சிவபணியியற்றும் உயிர்களை ஆணவம், மாயை, கன்மம் என்ற மூவகைப் பாசங்களும் தாக்காவாய் நீங்குமென்பது பெறப்பட்டது. இதுவே பாச நீக்கமாம்.

எனவும் தெளிந்த இனிய மொழிகளாலே திறம்பட விளங்க வைத்தனர்.

பதினொராம் சூத்திரத்தைப்பற்றி, காஞ்சிபுரம் திரு. **வச்சிரவேல் முதலியார் B. A., L. T., அவர்கள்** இனிய நடையிலே,

"காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போற்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே."

என்பது பதினொராஞ் சூத்திரம்.

ஆசிரியர் தாமே உரைத்தருளிய கருத்துரை:-

"என்னுதலிற்றோ வெனின், பரமேசுவரனது சீபாதங்களை அணையுமாறுணர்த்துதனுதலிற்று" எனவரும்.

### கருத்துரையின் விளக்கம்

சாதனவியலுள் ஓதியவாறுபற்றிச் சாதித்தோரால் பெறப்படும் பயன் பாசநீக்கம், சிவப்பேறு என இரண்டு. அவை ஆன்மலாபம் எனப்படும். ஆன்மலாபம் இரண்டனுள் பாசநீக்கம் பயனியலின் முதற் சூத்திரமாகிய மேலைச்சூத்திரத்தான் (பத்தாஞ் சூத்திரத்தான்) "மல மாயை தன்னொடு வல்வினையின்றே" என உணர்த்தப்பட்டது. படவே, முடிவாய் எஞ்சிநின்ற சிவப்பேறு கூடுமாறு இதனான் உணர்த்தப்படுகின்றது. சிவப்பேறு கூடுதலையே ஆசிரியர் சூத்திரத்தில் "அரன்கழல் செலும்" என்றதனாலும், கருத்துரையில் "பரமேசுரனது சீபாதங்களை அணையுமாறு" என்றதனாலும் குறித்தருளினர்.

## இங்கு நிகழும் ஓர் ஆசங்கையும் அதனை நீக்குமாறும்

**ஆசங்கை:-** மேலைச்சூத்திரத்தில் ஓதியவாறுபற்றி 'ஏகனாகி இறைபணி நிற்பார்க்கு' மேலுஞ் செய்யக்கடவ தொன்றில்லை; அன்றியும், இருள்நீக்கமும் ஒளிவிளக்கமும் உடனிகழ்ச்சியாமாறு போலப் பசுத்துவ நீக்கமும், சிவத்துவ விளக்கமும் இடையீடின்றி உடனிகழ்வனவா மாகலின், சுவாநுபூதியாகிய சிவப்பேற்றைப் பாசநீக்கத்தோடு ஒருங்கு வைத்தோதுதலே பொருத்தமாமன்றி அதனை வேறுவைத்தோதல் பொருத்தமுடைத்தன்றாம்.

**ஆசங்கை நீக்கம்:-** அங்ஙனம் கூறுதல் என்பது பொருந்தாது; 'ஏகனாகி இறைபணி நிற்றல்' துரியநிலை யெனப்படும் அருணிலையேயாம். அந்நிலைக்கண் மலம்நீங்கியவுடன் சுகப்பிரபை (சுகஒளி) மாத்திரையே, விளங்குவதன்றித் துரியாதீத நிலைக்கண்ணதாகிய சிவத்துவ விளக்கம் எனப்படும் பரமசுகந் தோன்றாது. அது விளங்குதற்கு, 'அவனருளா லல்லது ஒன்றையும் செய்யாமை'யாகிய இறைபணி நிற்றல் மாத்திரம் போதாமையால், அதற்கு வேறும் அங்குச் செய்யவேண்டுவதுண் டென்பது பெறப்படும். அன்றியும் இருணீக்கத்தில் ஒளி விளக்கம் போலப் பசுத்துவ நீக்கத்தில் அருள்விளக்கம் மாத்திரம் உடனிகழு மன்றி ஆநந்த விளக்கமும் உடனிகழாது. அருள் விளக்கம் வேறு, ஆநந்த விளக்கம் வேறு.

## சூத்திரத்தின் பதப்பொருள்

காணும் கண்ணுக்கு — (காட்டக்) காண்பதாகிய கண்ணுக்கு,

(காண) காட்டும் உளம்போல்—(உருவத்தைக்) காணுமாறு காட்டித் (தான் காண்கின்ற) ஆன்மாவைப் போல,

(காணும்) உள்ளத்தை — (அறிவிக்க) அறிவதாகிய அவ்வான்மா விற்கு,

காண கண்டு காட்டலின் — (விடயத்தை) அறியுமாறு அறிவித்துத் தான் அறிந்துவருதலால்,

(அதனை) அயரா அன்பின் — (இவ்வாறு உதவிசெய்துவரும் பெருங் கருணையை) மறவாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பானே,

அரன்கழல் செலும் ஏ — (அங்ஙனம் அன்பு செய்யும் ஆன்மா) அம்முதல்வன் திருவடியாகிய சிவாநந்தாநுபூதியைத் தலைப்படும் என்றபடி.

## உரையைப்பற்றிய சில குறிப்புக்கள்

'காணும்' என உவமைக்கோதிய அடையைப் பொருளினும் (—கண்—உவமை, உள்ளம்—பொருள் அல்லது உவமேயம்) 'கண்டு' என்னும் பொருள் வினையை உவமையானும் (—முதல்வன்—பொருள், உள்ளம்—உவமை) கூட்டியும், 'காண்' என்பதனை ஈரிடத்தும் கூட்டியும், 'கண்டு காட்டல்' என்பதனைக் 'காட்டிக் காண்டல்' என மாறி வைத்தும் உரைத்துக்கொள்ளல் வேண்டும். அயரா அன்பு—அயராமையானுகிய அன்பு; அயராமை—மறவாமை. அதற்குச் செயப்படுபொருள் 'அதனை' என எடுத்துக்கொண் டுரைக்கப்பட்டது. உள்ளம்—ஆன்மா. 'உள்ளத்திற்கு' என்றிருக்கவேண்டுவது 'உள்ளத்தை' என்றிருத்தல் உருபு மயக்கம் எனப்படும்.

## இனிச்சூத்திரத்தின் பொருள் விரித்து விளக்கப்படுகின்றது

1. ஆன்மாவை யின்றியமையாத கண் ஒருருவத்தைக் காணும்போது ஆன்மசிற்சத்தி (ஆன்ம அறிவு) கண்ணொளியெனத் தானென வேறுகாணப்படுமாறின்றி உடனாய்க் கலந்து நின்று கண்ணுக்குக்காட்டிய உருவத்தைக் கண்கண்டதென்றும், கண்ணை அதிட்டித்து நின்ற ஆன்மாக் கண்டதென்றும் பிரித்தறியப்படுமா றின்றி இருவகைக் காட்சியும் ஒன்றனையொன்று விடாமல் ஒருங்கே நிகழும்.

2. அங்ஙனம் நிகழுமாறு போலவே, முதல்வனையின்றி யமையாத ஆன்மா ஒரு விடயத்தை யறியும்போது, அம்முதல்வனது சிற்சத்தி ஆன்ம சிற்சத்தியெனத் தானென வேறுகாணப்படுமா றின்றி உடனாய்க் கலந்து நின்று ஆன்மாவுக்கு அறிவித்த விடயத்தை ஆன்மா அறிந்த தென்றும், ஆன்மா அதிட்டித்து நின்ற முதல்வன் அறிந்தான் என்றும் பிரித்தறியப்படுமாறின்றி இருவகை அறிவும் ஒன்றனையொன்று விடாது ஒருங்கே நிகழும்.

[இதுகாறும் கூறியவை சூத்திரத்தின் முதற்கூறுகிய "காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல், காணவுள்ளத்தைக் கண்டு காட்டலின்" என்பதன் விரிவு.]

3. இங்கு, கண்ணொளியும் ஆன்ம அறிவும் இருவேறு பொருள் களேயாயினும், ஓர் உருவத்தைக் காணுங்கால், அவை அதுவதுவாய் ஒற்றுமைப்பட் டொன்றாய்நிற்குமாறுபோல, ஆன்மசிற்சத்தியும் சிவசிற் சத்தியும் இருவேறு பொருள்களேயாயினும், ஒருவிடயத்தை யறியுங் கால், அவை அதுவதுவாய் ஒற்றுமைப்பட் டொன்றாய்நிற்கும் என்பது அறியற்பாலது. இங்ஙனம் இருபொருள் அதுவதுவாய் ஒற்றுமைப் பட்டு ஒன்றாய் நிற்றற் கேதுவாகிய இயைபு (சம்பந்தம்) உபநிடதங் களில் 'அத்துவிதம்' என்னும் சொல்லால் வழங்கப்படும். அச்சொல் லில் "இரண்டு" என்னும் பொருள் உணர்த்தும் "துவிதம்" என்ப தற்கு முன் உள்ள அகாரத்திற்குப் பல பொருள் உளவேனும் அவற் றுள் பொருத்தமுடையது காமியப்பொருள் என வழங்கும் அன்மைப் பொருளே. ஆகலின், அச்சொல் "இரண்டன்று" என இருபொருள் களின் அநந்நியத்தை அல்லது வேற்றுமைப் படாமையை விளக்கி நிற்கும். 'அத்துவிதம்' என உபநிடதங்களின் வழங்கும் இச்சொல்லின் உண்மை யியல்பை, பிரம மீமாஞ்சை யெனப்படும் வியாச சூத்திரத்திற்குப் பாடியம் வகுக்கப்புகுந்த சங்கராசாரியர் முதலியோரை யுள்ளிட்ட அனை வரும் உணராது மயங்கிநிற்ப சித்தாந்தசைவப் பிரதிட்டாசாரியராகிய நம் மெய்கண்டதேவ நாயனாரே அதனைப் பக்குவான்மாக்களுக்கு விளக்கி யருளுவராயினர். அது பற்றியே நம் தாயுமானசுவாமிகள், எந்நாட் கண்ணியில், குருமரபின் வணக்கத்தில், மெய்கண்ட முதல்வரை "பொய்கண்டார் காணப் புனிதமெனும் அத்துவித—மெய்கண்டநாதன் அருள் மேவுநாள் எந்நாளோ" எனத்தோத்திரித்தருளினர்.

4. முதல்வன் மேற்கூறியவாறு ஆன்மாவோடு அத்துவிதமாய்க் கலந்து நின்று செய்துவரும் உபகாரம், காட்டுமுபகாரம் காணுமுபகாரம் என இருவகைப்படும். அவற்றுள் **காட்டுமுபகாரமாவது** (கண்ணொளி விளங்குதற்கு விளக்கொளி அதனோடு கலந்து நிற்குமாறுபோல) முதல்வன் உணர்வு உயிரிற்கலந்து நின்று அதன் அறிவு இச்சை செயல்களை விளக்கும் உபகாரமாம்; இனிக் **காணுமுபகாரமாவது** (விளக்கொளியால் விளங்கிய கண்ணொளியானது உருவத்தைக் காணு மிடத்து, அவ்விளக்கொளி அக்கண்ணொளியோடுகூட உருவத்தினும் கலந்து நிற்குமாறுபோல) முதல்வன் உணர்வு அங்ஙனங் கலந்து

நிற்றலான் அறிவு இச்சை செயல்களை, விளங்கியபின் அவை விடயத்திற் சென்று பற்றுதற்பொருட்டு, அவ்வுயிரை அதிட்டித்துக்கொண்டு சென்று விடயத்திற் கலந்து நிற்றலேயாம்.

பதினோராந் திருமுறையில் அம்மை திருவந்தாதியில் "அறிவானுந் தானே அறிவிப்பான் தானே" என்றது காட்டுமுபகாரத்தைத் திருவுளம் பற்றி எனவும், அதன்பின், "அறிவா யறிகின்றான் தானே" என்றது காணுமுபகாரத்தைத் திருவுளம்பற்றி யெனவும் உணர்ந்துகொள்ளுதல் வேண்டும்.

இவ்வுபகாரம் இரண்டனுள் காட்டுமுபகாரம் ஐந்தாஞ் சூத்திரத்து "விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்கு—அளந்தறிந் தறியா ஆங்கவை போலத்—தாம் தம் உணர்வின் றமியருள்" என்றதனான் உணர்த்தப்பட்டது. இச்சூத்திரத்தில் காணுமுபகாரத்தையும் உணர்த்தி, மேல் இரண்டாஞ் சூத்திரத்திலும், பின்னர் ஐந்தாஞ் சூத்திரத்திலும் முறையே முதல்வன் தூல ஐந்தொழில் (தூல பஞ்ச கிருத்தியம்) செய்யுமாறும், அதிசூக்கும ஐந்தொழில் செய்யுமாறும் உணர்த்து முகத்தாற் பொதுவகையாற் பெறப்பட்ட அத்துவித நிலையைச் சிறப்பு வகையான் பெறுவித்தல் ஆசிரியர் கருத்தென்க. முன்னர்க் காட்டுமுபகாரம் நிகழ அதன் பின்னர்த்தாய்க் காணுமுபகாரம் நிகழும் என்பதும் ஈண்டே அறிந்துகொள்ளற்குரியது.

5. இனி, இவ்விரண்டுபகாரமும் உயிர்க்குப் பெத்தம், முத்தி இரண்டினும் ஒப்ப நிகழ்வனவாம். ஆயினும், பெத்தகாலத்தில் முதல்வன், ஆன்மாவினால் விடயிக்கப்படும் விடயங்களை, ஆன்மாவாய் நின்று விடயத்தலின் விடயங்களான் வரும் இன்பத் துன்பங்களாகிய பயன் ஆன்மாவுக்கேயாம்; முத்திகாலத்தில் ஆன்மா தானென ஒரு முதல் காணப்படுமாறின்றி முதல்வனேயாய் (அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனாகி) நின்று விடயித்தலின், '* சுத்த அநுபோகம்' எனப்படும் சிவம் நீங்கலாகவுள்ள விடயங்களான் வரும் பயன் ஆன்மாவுக் காதலின்றி, அவை முதல்வனால் ஏன்றுகொள்ளப்படுகின்றன. இம்முறைமை நோக்கியே, உலகில் ஒரு பொருளை ஈவாரும் ஏற்பாரும் சிவார்ப்பணம் எனக் கருதுதல் வேண்டும் எனவும், அங்ஙனங் கருதாக்கால் குற்றம் ஆம் எனவும் கொள்ளப்படுகின்றன.

---

* உண்மை விளக்கம், 50.

6. இங்ஙனம் பெத்தம் முத்தியிரண்டினும் ஆன்மாக்களுக்கு வரும் பயனை முதல்வனே உடனாய் நின்று ஏன்றுகொண்டு அவரவர் செய்யும் செய்திக்குத் தக்க பயன் விளைத்து நிற்பதாகிய பெருங்கருணைப் பேருதவியை 'ஏகனாகி இறைபணி நிற்கும்' ஆன்மா, மறவாது கடைப்பிடித்து நோக்குந்தோறும் நோக்குந்தோறும் அவ்வான்மாவிற்கு முதல்வனிடத்துப் பேரன்பு அடங்காது மீதூரும்; மீதூர அவ்வன்பே தானாக விளங்கித் தோன்றும் சிவானந்தாநுபூதியாகிய பேரானந்தத்தை அநுபவிக்கும். இங்ஙனம் "சுத்த அநுபோகந் துய்க்கும்" நிலையே **துரியாதீத பரமுத்திநிலை**; இதற்கு மேற்பட்டநிலை யில்லை.

இடையறாது முறுகிவளரும் அன்பின் முதிர்ச்சியிலே சிவம் விளங்கும் என்பதனை "அம்மையே யப்பா ஒப்பிலாமணியே **அன்பினில் விளைந்த ஆரமுதே**" என்பதனானும், அன்பும் சிவமும் இரண்டற அபேதமாய் நிற்கும் என்பதனை "மாறிநின்று என்னை ... ..., ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே **என்னுடை அன்பே**" என்பதனானும் உணர்ந்துகொள்ளுதல் வேண்டும்.

[—இங்குக் கூறியது 'அயரா அன்பின் அரன்கழல் செலுமே' என்னுஞ் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றின் விளக்கமாம்—]

### சில முக்கிய குறிப்புக்கள்

1. 'அயரா அன்பின் அரன்கழல் செலுமே' என்றதில் அயராமை (மறவாமை) அறிவின் நிகழ்ச்சி; அன்பு இச்சையின் நிகழ்ச்சி, 'செலும்' என்பதனால் குறிப்பிக்கப்பட்ட அநுபவம் செயலின் நிகழ்ச்சி. அறிவு, இச்சை, செயல் எனினும் ஞானேச்சாகிரியை எனினும் பொருந்தும். சூத்திரத்தின் இரண்டாங் கூற்றாகிய இதனால், ஆன்மாவின் ஞானேச்சா கிரியைகளின் தொழிற்பாடாகிய மேற்கூறிய மூன்று நிகழ்ச்சியும் முறையே காரண காரியங்களாய்ச் (—அயராமையான் அன்பும், அன்பால் இன்ப அநுபவமும் நிகழ்தல்—குறிக்கப்படுகின்றது) சிவம் என்னும் ஒரு பொருள்மேல் நிகழும் என்பது பெறப்படும். படவே, ஏகனாகி இறைபணி நிற்கும் சிவஞானியின் அறிவிச்சை செயல்கள் அந்நிலையில் எதனை விடயிக்கும்? ஒன்றனை விடயிக்குமாறில்லையெனின் அவை ஆண்டுளவெனக் கொள்ளினும் புத்தர் கூறும் ஆலய விஞ்ஞானம் போலச் சூனியமாய் முடியும் என மேலைச் சூத்திரத்து இறுதி அதிகரணம்பற்றி எழும் ஆசங்கையை நீக்கி, அவற்றிற்கு

விடயமாவது இது என்பது உணர்த்தப்பட்ட தென்பதும், அதனை உணர்த்து முகத்தான் சிவப்பேறு கூடுமாறு உணர்த்தப்பட்ட தென் பதும் விளங்கும்.

2. சூத்திரத்தின் முதற்கூற்றினுல் சிவப்பேறு கூடுதற்கு ஏதுக் கூறப்பட்டது. அதனுள் ஆன்மாவுக்கும் முதல்வனுக்கும் உள்ள சம்பந்தம் 'அத்துவிதம்' என்பது பெறப்படுதலின், மேலைச் சூத்திரத்தில் "ஏகனுகி இறைபணி நிற்க" என்ற விடத்து, அங்ஙனம் ஏகனுகி நிற்றற்கு ஏதுவாய்ப் பெறப்படும் சம்பந்தம் யாதோ என அவாய் நிற்றலின் அவ்வவாய்நிலை நிரப்புதற்கு அச்சம்பந்தம் 'அத்துவிதம்' என ஈண்டுக் காட்டி யருளினுர் ஆசிரியர் என்பது உரைப்படும். இன்னும் முதற்கூற்றுன் முதல்வன் பெத்தம் முத்தி யிரண்டினும் ஆன் மாக்களுக்கு வரும் பயனை முதல்வனே உடனுய் நின்று ஏன்றுக் கொள்வன் என்பதும் பெறப்பட்டமையின், பெத்தர்க்கு வரும் பயனை யும் ஏன்றுகொள்ளும் முதல்வன், உடல் பொருளாவி மூன்றும் அவனுடைமை யெனக்கொண்டு உலக பதார்த்தங்களைப் பாராமல் "பரமே பார்த்திருக்கும்" சீவன்முத்த ருடம்புகொண்ட பிராரத்த வினைப்பயன் எவ்வாற்றுனும் அவர்க்கு ஆதலின்றி முதல்வனதேயாம் என்பது கூருமலேயே விளங்கும். விளங்கவே, மேலைச் சூத்திரத்தில் "மலமாயை தன்னெடு வல்வினையின்றே" என்ற விடத்து 'வினை' என்றது ஆகாமிய வினையை எனவே கொள்ளப்பட்டமையின் ஏனைப் பிராரத்த வினைத்தொடர்பு நீங்குமாறு யாங்ஙனம் எனவும் அவாய் நின்றமையின் அதனையும் நிரப்பியவாறுயிற்று.

3. எட்டாஞ் சூத்திரத்தால் ஞானத்திற் சரியை யாகிய கேட்ட லும், ஒன்பதாஞ் சூத்திரத்தால் ஞானத்திற் கிரியை யாகிய சிந்தித் தலும், பத்தாஞ் சூத்திரத்தால் ஞானத்தின் யோகமாகிய தெளிதலும், பதினெராஞ் சூத்திரமாகிய இதனுல் ஞானத்தின் ஞானமாகிய நிட்டை யும் உணர்த்தப்பட்டனவாம்.

4. எட்டாஞ் சூத்திரத்தால் ஆன்ம தரிசனத்தைப் பயக்கும் சிவரூபமும், ஒன்பதாஞ் சூத்திரத்தால் ஆன்ம சுத்தியைப் பயக்கும் சிவதரிசனமும், பத்தாஞ் சூத்திரத்தால் சிவயோகமும், பதினெராஞ் சூத்திரத்தால் சிவபோகமும் கூறப்பட்டனவாம்.

எனக்கூறித் தெளிய விளக்கினுர்.

இதையொட்டி ஞலகண்டபுரம் ஆசிரியர், திரு. அ. வரதநஞ்சைய பிள்ளை அவர்கள், தமது சொல்லாற்றலாலும் திறனாலும்,

காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போற்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே.

இஃது, பரமேசுவரனது சீபாதங்களை யணையுமாறு தெரிவிக்கின்றது.

**வினா:—** ஆன்மாவின் அறிவு, இச்சை செயல்களனைத்தும் தனதாக விளங்காமல் சிவத்தின் திருவருளால் விளங்கும் உண்மையை ஆராய்ச்சியானும் குருமுகமாகவும் உணர்ந்தபின், தான் என நிற்கும் முனைப்பற்று, ஏகனுகி இறைபணி நிற்கின்றதே பாசம் நீங்கிப் பதியைக்கூடும் பெரும்பேறு என்றால், அவ்விடத்து அறிவுக்கு விஷயம் இல்லாமையால் சூன்யம் எனப்பட்டு புத்த சமயம் சொல்லும் ஆலயவிஞ்ஞானம்போல் அறிவும் கெட்டொழிந்ததாகுமல்லவோ ?

**விடை:—** ஆன்மா, தன்முனைப்பு அற்று நிற்கும் வழி அதற்குச் சிவப்பேருகிய பேரின்பம் விஷயமாதலால் சூன்யம் ஆதல் இல்லை.

**வினா:—** இருள் நீங்குவதே ஒளிவிளங்கற்குக் காரணமாய் இவ்விரண்டும் ஒரு கணத்தே உடன் நிகழ்வதுபோல, பசு போதம் (தானென்று முனைப்பு) நீங்கவே சிவத்துவ விளக்கமும் உடன் தோன்றுமாகலால் அதுவே சிவப்பேறு அன்றி வேறில்லை. இதனைப் பத்தாஞ் சூத்திரத்தாலேயே கூறியிருப்ப இப்பதினோராம் சூத்திரத்தும் வேறு கூறுவது எற்றுக்கு ?

**விடை:—** ஏகனுகி இறைபணி நிற்பது அருள்நிலையாகிய துரியநிலை. அங்கு மலங்கள் நீங்கியபின் சுகவொளி தோன்றும். அவ்வளவே, துரியாதீதநிலை அதன் மேற்பட்டது. இங்கேதான் சிவத்துவ விளக்கம் எனப்படும் பரமசுகந் தோன்றுவது. ஆதலால் பதினெ

ராம் சூத்திரம் அவ்வின்ப நிகழ்ச்சி தோன்றும்வகை கூறு கின்றது. இது பற்றியே, ஆசிரியர் பத்தாஞ் சூத்திரம் பாச க்ஷயம் பண்ணுமா றுணர்த்திற்று என்றும், பதினெராம் சூத் திரம் பரமேசுவரனது ஸ்ரீபாதங்களை அணையுமா றுணர்த்திற்று என்றும் விளங்கக் கூறினர்.

**வினா:—** ஆனால் இச்சூத்திரத்தின் பொருள் என்னை?

**விடை:—** காட்டினாற் காணும் தன்மையுடைய கண்ணுக்கு உருவங் களைக் காணும்படி பிரியாமல் கலந்து நின்று காட்டித் தானும் காண்கின்ற உயிரைப்போலவே, அறிவித்தால் அறியும் இயற்கை யுடைய உயிர், விஷயங்களை அறியும்படி சிவபெருமான் அதனோடு பிரிவறக்கலந்து நின்று அறிவித்துத் தானும் அறிந்து வருகின்றான் என்னும் பேருதவியையும், ஒப்புயர்வில்லாக் கருணையையும், யாதுங் கைம்மாறு கருதாத பெருமையையும் நினைக்குந்தோறும் நெஞ்சம் நெக்குருக அளவற்ற அன்பு சுரந்து பொங்கிப் பொழிய அதனானே அம்முதல்வன் திருவடியாகிய சிவானந்தாநுபவத்தைக் கூடும் என்பது இச்சூத்திரப்பொருள்.

**வினா:—** இங்கே ஆன்மாவின் அறிவு, இச்சை, செயல்கள் என்னாகும்?

**விடை:—** தன்னை நமக்குத்தந்து பேரின்ப வாரிதியில் ஆழ்த்துகின்றான் எங்கள் பரமவள்ளல் என்று அவனை என்றும் மறவாமல், வேறொன்றுங் கருதாமல் நிற்பது அறிவின் செயல். அக்கருணா நிதியின்பால் ஆராமை மேற்கொண்டு அன்புபெருக்கல் ஆன்மா வின் இச்சைக்கு விஷயம். அவன் தாள்களை யடைந்து தற்போதம் அறநிற்பது செய்கைக்கு விஷயம். இங்ஙனம் ஆன்மாவிற்கு ஆண்டும் நுகர்ச்சி (அநுபவம்) உண்டு.

**வினா:—** ஆன்மாவிற்குளதாகிய சஞ்சிதவினை குருமூர்த்திசெய்யும் தீக்கை யால் ஒழியும். சிவனடியே சிந்தித்து ஏகனாகி இறைபணி நிற்ற லால் மேலைக்கு விளைவதாகிய ஆகாமியமு முண்டாகாது. ஆயினும் உடலெடுத்துக்கொண்டிருக்கும் பிராரத்தவினையை அநுபவிக் காமல் போகாதே. அது போகும்வழி யாது?

விடை:— ஞானிகளுடம்பில் நிகழும் பிராரத்தமுழுவதும் அவர்களிட மாக நின்று முதல்வனே ஏற்றுக்கொள்கின்றான். அதனால் அவர்களை அவ்வினை தாக்குதல் இல்லை.

வினா:— காணுந்தன்மையுடைய கண்ணிற்குக் காட்டும் ஆன்மா, தானும் உடலையக் காணுகின்றது போல இறைவனும் உயிர்க்கு அறி வாய் நின்று காட்டிவருவதுடன் தானும்விடயங்களை அறிகின்றான் என்பது ஏன்? கண் சடப்பொருள், ஆன்மா அறிவுடைய தன்றோ? மேலும் அறிதலால் வரும் பயனை ஆன்மா அடை கின்றது. முதல்வன் அப்பயனை அடைதல் இல்லையே; இது பொருந்துமாறு எங்ஙனம்?

விடை:— கண்ணொளியோடு விளக்கின் ஒளிகலப்பதுமின்றி உருவங் களுடனும் கலந்தாற்றான் உருவத்தைக் கண் காணுகின்றது. அதுபோல, அறிவித்தாலன்றி அறியமாட்டாத ஆன்மாக்க ளோடும் முதல்வன் கலந்தும், அவ்வான்மாக்கள் அறியும் விடயங்களோடும் சேர்ந்தும் அறிவித்தலால்தான் ஆன்மாக்கள் அறிவனவாகின்றன. இதனால் அறிவு விளங்குவதற்கும் ஆன் மாக்கள் விடயத்திற் சென்று பற்றுதற்கும் முதல்வன் உடன் நின்று உதவுகின்றான். இயற்கையாகவே எல்லாவற்றையும் அறியும் முதல்வன் சிறப்பாக ஆன்ம உபகாரத்தின் பொருட்டு இங்ஙனம் அறிகின்றான்; அறிவிக்கின்றான்.

வினா:— உயிர்களுக்கு அறிவிக்கும் உபகாரங்கருதிச் சிறப்புவகையால் இறைவனும் விடயங்களை அறிகின்றான் எனில் அவ்வுயிர்களைப் போல் இறைவனும் விகாரியாவானல்லனோ?

விடை:— விஷயங்களைப் பெத்தநிலை (பாசத்தோடு கட்டுண்டகாலம்) யில் ஆன்மா பற்றி அறிவதனால் விகாரமுறுகின்றது. அதனுடன் அவ்விஷயங்களின் அநுபவத்திற்காக ஆசையும் கொள்கின்றது. பின், முத்திநிலையில் தற்போதம் நீங்க, அவனே தானே என்னும் பிரிப்பற்று பிரார்த்தவினைக்கீடாக வரும் விடயத்தை உணர்வ தானல் அதுவே சிவபோகமாய் இன்பம் விளைப்பதாகின்றது இவ்வாறு பெத்தம் முத்தி இரண்டிலும் ஆன்மாக்களுக்கு வரும் பயனை முதல்வனே உடன்நின்று ஏற்று அவரவர் வினைக்கீடாக

பயன் விளைத்து நிற்பதனானும் அவன் என்றும் தன் பயன் கருதிப் பற்றுச்செய்யாமையானும் விகாரியாவான் அல்லன். மேலும் எங்கும் நிறைந்தவன் ஆதலின் உயிரினிடத்தும் கலந் துள்ள அவன், அவ்வுயிர்கள் நினைப்பவற்றையும் அறியானோ? அறிவான்; ஆதலின் நிர்விகாரியாகவே உள்ளான்.

## இரண்டாம் அதிகரணம்

இது ஆன்மாவின் இறுதிப்பேறாகிய சிவப்பேற்றை அடையும் வழி கூறுகின்றது.

**வினா:—** பத்தி செய்வது முத்தி கூடும் வரையில்தான்; அந்நிலை கைவந்த பின்னும் பத்தி செய்வது ஏன்?

**விடை:—** அந்த மேல் நிலைமையிலும் அன்பாகிய இச்சை அதிகரிப்பி னன்றிச் சிவபோகம் அநுபவமாகாது. ஆகலின், அது கேள்வி யன்று.

**வினா:—** ஒரு பொருளை அறிந்து அதனிடத்தில் இச்சைகொள்வது கூடும். அவ்விச்சித்த பொருள் உடனே கைகூடாது; ஆதலால் பத்தி செய்வதனாலேயே முதல்வனுடைய சீபாதத்தை அணையும் என்றல் பொருந்தாது.

**விடை:—** அவரவர் வினைக்கேற்பப் பயன்களை வழங்கும் இறைவன் மெய்ஞ்ஞானிகள் விரும்பியவற்றை வழங்கானோ? வழங்குவான், ஆதலின் பொருந்தும்.

**வினா:—** பெத்தம், முத்தி என்னும் இருவகை நிலையினும் ஒருதன்மைத் தாய் அத்துவிதமாக நின்று உயிர்க்கு உபகரிக்கும் பரமேசுரன் முத்தி நிலையில் அறிய நிற்பதுபோல் பெத்த நிலையிலும் அறியப் படாததற்குக் காரணம் என்னை?

**விடை:—** சூரியன் ஒரே தன்மைத்தாய் விளங்கவும் படலம் உடைய கண்ணுக்கு விளங்காமல், படலம் நீங்கி ஒளிபெற்ற கண்ணுக்கு விளங்குவதுபோலவும், பக்குவம் எய்திய தாமரை மலரை முன் கூம்பியிருந்த இயல்பை மாற்றி நன்றாய் விரியச் செய்வது

போலவும், அஞ்ஞானத்தில கட்டுண்ட பெத்தரால் முதல்வன் அறியப்படாதவனாகவும், பசு பாச நீக்கம் பெற்ற ஞானிகளால் அறியப்படுபவனாகவும், அப்பக்குவிகளுக்கு இன்பம் வழங்குபவனாகவும் இருக்கின்றான்.

வினா:— சிவத்தை அடைதற்கும் அடைந்தபின் இன்பநுகர்ச்சிக்கும் பேராதரவாய் நிற்கும் அன்பு ஆன்மாவிடத்தில் மேன்மேலும் வளர்வதற்குக் காரணம் யாது?

விடை:— கண்ணில் உள்ள ஒளியை விளக்குவதற்குப் பிறைச் சந்திரன் அவ்வொளியுடன் தன்னொளியும் பிரிப்பறக்கலந்து நிற்பச் செய்து படிப்படியாகப் பொருளை விளக்குவதுபோல் உயிரைத் தன் திருவடிக்கீழ்ச் சேர்த்து இன்பம் நல்கவேண்டும் என்ற பேரருளால் அவ்வான்மாவினிடத்து அநாதியாய் அத்துவிதமாய் நின்றுள்ள முதல்வன், அவ்வான்மாவின் ஆணவமலத்தைச் சிறிது சிறிதாகக் கழித்து காந்தக்கல் தன் முன்னுள்ள இரும்பைத் தன்னிடத்தில் இழுத்துக்கொள்ளுதல் போலத் தன் திருவடிகளில் சேர்த்துக்கொள்கின்றான். தன் சக்தியில் சத்தி சங்கற்ப மாத்திரையாய் எல்லாம் செய்யவல்ல அவனுக்கு இத்தொழில் என்றும் ஓய்வதில்லை. இத்தொழிலால் மேற்கூறியவாறு விகாரியாவானும் அல்லன்.

வினா:— நன்று. அங்ஙனம் இறைவன் திருவடிக்கண் இன்பப்பேறு நுகர்ந்து கூடும் ஆன்மா எப்படிக் கூடுகின்றது? தன் பண்டைய சிற்றறிவு கெட்டுக் கூடுமோ? கெடாமலேயே கூடுமோ? முன்னைய அறிவு கெட்டுக்கூடுமெனின் ஒன்றின் குணம் கெடவே அக்குணத்தையேற்ற பொருளுங் கூடவே கெட்டொழிதல் வேண்டும்; அங்ஙனம் கேடுற்ற பொருள் சூன்யமாகும். அதனாற் கூடவே முடியாது. கெடாமலே கூடும் என்றாலோ பெத்தநிலையிற் போல முத்திநிலையிலும் அந்த எங்குநிறைந்த வியாபியாகிய முதல்வன் விளங்காமையால் கூடவும் மாட்டாது? மற்று எவ்வாறு கூடும்?

விடை:— ஆன்மாவின் மலம் மாயை கன்மம் என்னும் பாசப்பகுதிகள் கெட்டொழியச் சுத்தமாய்த் தன் சுய ஒளியுடன் கேடின்றி நின்ற ஆன்மா தண்ணீரைச் சேர்ந்த உப்பைப்போல் முதல்வன்

திருவடிப்பேற்றை அடைந்து தற்சுதந்தரமின்றி நின்று கூடும். அம்முதல்வன் திருவடியும் அவ்வான்மாவை விட்டுப்பிரியாமல் வேற்று இயைந்து நிற்கும் என்றறிக. இதனால் முத்தி நிலையில் ஆன்மாவின் செய்கை நிகழ்வதும், அதுவும் முதல்வன் திருவருட் செயலையல்லது அமையாததும் விளங்கும்.

வினா:— முத்திநிலையிற்கூட மும்முதலும் (அதாவது பாசம், பசு, பதி, என்பவைகள்) உண்டு என, (இல்லது என்றுந் தோன்றாது, உள்ளது என்றும் அழியாது என்னும்) சற்காரிய வாதத்தை அடிப்படையாகக்கொண்டு எழுந்த நுங்கள் சித்தாந்தக் கருத்துக்கு முத்திநிலையில் பாசம் கெடும் என்பது எங்ஙனம் பொருந்தும்?

விடை:— சூரியன் முகிற்படலத்துக்குள் மறைந்து தன் ஒளி சுருக்கமாய்ச் சிறிது விளங்க நின்று பின்னர் காற்றினால் அம்முகிற் கூட்டங்கள் விலக்கப்பட்டபோது முழு ஒளியும் விரித்துத் தோற்றி விளங்குவதுபோல, ஆன்மாவும் பெத்த தசையில் ஆணவ மலத்தால் மறைப்புண்டு தன் அறிவு சிறிதே விளங்கி, (அழிந்து போகும்) மாயப்பிரபஞ்ச விடயத்தை நுகர்ந்து அதுவே பொருள் என அமர்ந்திருந்தது. பின்பு முதல்வன் திருவருள் அம்மலத்தின் சத்தியைக் கெடுத்து அடக்கியபோது அவ்வறிவே பூரணமாய் விளங்கப்பெற்றுப் பிரிப்பற்று முதல்வன் திருவடியைக் கூடிப் பேரின்பம் நுகர்ந்து வாழும். ஆகவே, **மலம் கெட்டதென்பது அதனுடைய மறைக்குஞ் சத்தி அடங்கிக் கெழ்ப்பட்டதென்னும் அத்துணையே; அம்மலம் பொன்றக்கெட்டது என்பதன்று.** இதனால் முத்தியில் மும்முதலும் உண்டு என்பதற்கு இழுக்கில்லை. இதுவே ஏனைச் சமயிகள் கூறுவதுபோல் முன் பின் முரணாது எடுத்துக்கொண்ட பொருளைக் கடைசிவரையிலும் ஏதுக்களாலும் மேற்கோள்களாலும் சாதித்து நன்கு நிறுவப் பெற்றதும், மிகமேலானதுமாகிய சைவ சித்தாந்தத்தின் திண்ணிய நுண்ணிய முடிபாம்.

என அழகுறப் பேசினர். அச்சூத்திரத்தின் உட்கருத்தைப் பற்றியே திருவையாறு திரு. **வை. சுந்தரேசவாண்டையார் அவர்கள்,** தாம் ஆராய்ந்து கண்ட முடிபுகளை,

ஒரு நிலையான இன்பம் கிடைத்தாலன்றி ஆன்மா அமைதி அடைவதில்லை. அதற்காகவே சமயம் ஏற்பட்டுள்ளது. சமயம் இன்றேல் மக்களுடைய வாழ்க்கை விலங்கினுடைய வாழ்க்கையை ஒத்ததாகும். எனவே ஒரு நிலையான இன்பத்தை மாந்தர்கள் அடைய வகுக்கப்பட்ட நெறிகள்தான் சமயமாகும்.

அந்நிலையான இன்பந்தான் யாது எனின், இடையறு அன்போடு கடவுளை வழிபட்டு அவனுடைய திருவடிப் பேற்றை அடைதலே.

கடவுளுக்கு நாமம் இல்லை; உருவம் இல்லை. இதை மணிவாசகப் பெருமானார்,

“ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லார்க்கு ஆயிரந்
திருநாமம் பாடி நாம் தெள்ளேணங் கொட்டாமோ”

என்று அருளியது காண்க. பெயர் இல்லாமல் அவனைப்பற்றி நாம் பேச முடியாதல்லவா? ஆகையால் அவன் சிவன் எனப் பேசப்படுகிறான். சிவன் என்பதற்கு மங்களம் என்பது பொருள். அடியார்க்கு மங்களத்தைச் செய்பவன் சிவன். “நன்றுடையானைத் தீயதிலானை” என்பது ஞானசம்பந்த சுவாமிகள் அருள்வாக்கு.

சிவ சம்பந்த முடையது சைவமாகும். கடவுளையும், ஆன்மாவையும், உலகத்தையும் பற்றி சைவசமயம் போதிக்கின்றது. இச்சமயத்தைத் தாயுமானவர்,

“அந்தோ ஈததிசயம்! இச்சமயம்போல் இன்று
அறிஞரெல்லாம் நடுவறிய வணிமா ஆதி
வந்துஆடித் திரிபவர்க்கும் பேசா மோனம்
வைத்திருந்த மாதவர்க்கும் மற்றும் மற்றும்
இந்திராதி போகநலம் பெற்ற பேர்க்கும்
இதுவன்றித் தாயகம் வேறு இல்லை; இல்லை
சந்தான கற்பகம் போல் அருளைக் காட்டத்
தக்கநெறி; இந்நெறியேதான் சன்மார்க்கம்”

என்று மிகமிகப் பாராட்டியுள்ளார். இச்சமய ஒழுக்கம் இன்ன காலத்தில் ஏற்பட்டது என்று சொல்வதற்கு இல்லை. சிவநெறிச் சார்பான நுட்பமான முடிபுகளை யுடையது சைவசித்தாந்தம். சித்தாந்தக் கொள்கைகள் தமிழ்மக்களின் சேமவைப்பாகவுள்ள ஒல்காப்பெருமைத்

தொல்காப்பியத்தில் குறிப்பாகவும், பன்னிரு திருமுறைகளுள் வெளிப்படையாகவும் அறியக் கிடக்கின்றன. அவற்றைப் பிற் காலத்தில் செவ்வையாகத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் கூறும் நூல்கள் மெய்கண்ட நூல்கள் பதினான்குமேயாம். இவை இன்னவை என்பதை "உந்தி களிறு உயர்போதம் சித்தியார்" என்று தொடங்கும் ஒரு பழைய வெண்பாவால் அறியலாம். அவ்வெண்பாவில் மூன்றாவ தாக வைத்துக் கூறப்பெற்ற நூலே **சிவஞானபோதமாகும்.** அவ்வெண் பாவில் **உயர்போதம்** எனப் பாராட்டப் பெற்றிருத்தலால் இந்நூலின் உயர்வு நன்கு விளங்கும். இது சிவநெறிக்கும், ஏனைய நெறிகளுக்கும் உள்ள வேறுபாட்டினை நன்கு எடுத்துக்காட்டி, முன்னையதன் உயர்வை நிலைநாட்டற் பொருட்டு எழுந்த நூல்களுள் தலைசிறந்ததாகும்.

இனி, இந்நூலின் 11-ம் சூத்திரம்பற்றிப் புலவர் பெருமக்கள் இருவர் விரிவாகக் கூறிவிட்டமையால் அடியேன் இச்சூத்திரத்தின் உவமான உவமேயங்களை மாத்திரம் விளக்கும் கருத்துடையேன். அங் ஙனம் விளக்குதற்குச் சூத்திரத்தின் பொருளும், இயைபும் இன்றியமை யாதன ஆகலின் அவைகளையும் ஈண்டுக் கூறுகின்றேன்.

"காணுங் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே"

என்பது பதினொராஞ் சூத்திரம்.

## உவமான விளக்கம்

"காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்"

கண் ஒன்றனைக் காணுங்கால், ஆன்மபோதம், கண்ணொளி யெனத் தானெனப் பிரிக்கமுடியாதபடி, உடன் கலந்து நின்று உருவத் தைக் கண்ணுக்கு காட்டுகிறது. இன்றேல் கண் தானாக ஒன்றனைக் காணல் இயலாது. இவ்வாறு கண்ட உருவத்தைக் கண் கண்ட தென்றும், கண்ணொடு கலந்து நின்ற ஆன்மா கண்டதென்றும் பிரித் தறிதல் இயலாது. கண்ணின் காட்சியும், ஆன்மாவின் காட்சியும் ஒன்றையொன்று விடாமல் இரண்டற்ற நிலையில் ஒருங்கே நிகழ் கின்றன.

உவமேய விளக்கம்

"காண உள்ளத்தைக் கண்டு காட்டல்"

ஆன்மா ஒருவிடயத்தை அறியும்போது முதலில் ஆன்மா தானே அறிந்ததென்றும், இறைவன் அறிவித்தானென்றும் பிரித்தறிய முடியாத படி இறைவனது சிற்சத்தியும் உடன்கலந்து நின்று அறிவிக்கும். ஆன்மா பாசத்துடன் இருக்கும்நிலை, பாசம் நீங்கிநின்றநிலை ஆகியஇரு நிலையிலும் இறைவன் ஆன்மாவுக்கு அறிவித்தலாகிய உதவியைச் செய்கின்றான். எனவே ஆன்மா அவனை இன்றி அமையாததா யிருக்கின்றது. அவ்வுதவியை நோக்குந்தோறும் ஆன்மாவுக்கு அம்முதல்வன் பால் அன்பு பொங்குகிறது. அவ்வன்பின் பயனாகிய பேரின்பத்தை ஆன்மா நுகரப்பெறும்.

மேலைச் சூத்திரத்தில் கூறியபடி பாசம் நீங்கப்பெற்ற ஆன்மா இனிச் செய்யக்கடவது யாது எனத்தோன்றும் ஐயம் இதனால் நீக்கப் பெற்றது.

அயராமையாகிய அறிவின் நிகழ்ச்சியும், அன்பு என்னும் இச்சையின் நிகழ்ச்சியும், அரன் கழலிற் செல்லுதலாகிய செயலின் நிகழ்ச்சியும் முறையே காரண காரியங்களாய் ஒருங்கு நிகழும்.

"நஞ்செய லற்றிந்த நாமற்றபின் நாதன்
தன்செயல் தானேயென்றாற் றீபற
தன்னையே தந்தானென்றுந் தீபற" (திருவுந்தியார்)

"என்செயலா லாவதில்லை யென்றறிந்தால்
எதுந் துயரில்லையே" (பாம்பன் சுவாமிகள்)

என்பனபோன்ற ஆன்றோர் உரைகளானும் உணர்க.

என வெளியிட்டனர்.

பனிரெண்டாம் சூத்திரத்தைப் பற்றித் தேவகோட்டை வயினகரம் பாலகவி, திரு. வே. **இராமநாதன் செட்டியார் அவர்கள்** தமது இனிய மொழிகளால் அரிய கருத்துக்களைக் கேட்போர் உள்ளத்தில் பதியுமாறு,

## பனிரெண்டாஞ் சூத்திரம்

"செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே"

உண்மை அதிகாரத்துச் சாதன வியலின் மூன்று சூத்திரங் களாலும், சத்தாகிய சிவத்தை அறியும் ஆற்றல் சதசத்தாகிய ஆன் மாவுக்கே உண்டென்பதையும், அவ்வான்மாவினது அறிவு அசத்தான் விளங்கி, அசத்தின்பால் உளதாய், அசத்தினை யறிந்து நின்றவாறு போல சத்தான் விளங்கிச் சத்தின்பால் உளதாய்ச் சத்தினை யறிந்து நிற்குமாற்றை உணர்த்து முகத்தால், சாதித்தற்குரிய அதிகாரம் தனக்கே உண்டென அறிந்த ஆன்மாவுக்குச் சாதித்ததனாற் பெறப் படும் பயன் அதற்குச் சிறந்த சாதனமாவது, அது வருமாறு முதலிய வற்றையும், குறையுணர்வாகிய பசுஞான பாசஞானங்களால் அறியப் படாத முதல்வனை அவனது திருவடி ஞானமாகிய பதிஞானத்தால் பாசத்தை யொருவி யறிந்து, அக்காட்சி மாறுபடாது இருத்தற் பொருட்டு, அஞ்செழுத்தை விதிப்படி அறிந்து ஓதுதல் வேண்டுமென் பதையும் கூறினர்.

பயனியலின் முன்னிரண்டு சூத்திரங்களால் அவனருள்வழி யொழுகும் இறைபணியில் வழுவாமல் நிற்பின், ஆணவ, மாயா, கன்ம மலங்கள் இல்லையாய் ஒழியுமென்பதையும், தானாக அறியமாட்டாது அறிவித்தால் அறியும் இயல்புடைய ஆன்மா இறைவனது அத்துவித நிலையை மறவாது பற்றி நிற்கும் அன்பினால் அவனது திருவடியாகிய சிவானந்த போகத்தைப்பெற்று வாழுமென்பதையும் விளக்கி, இப் பன்னிரண்டாம் சூத்திரத்தால் அவ்வாறு திருவடிப்பேறு பெற்ற ஆன் மாவின் தன்மையைக் கூறுகின்றார். எனவே, இது "அணைந்தோர் தன்மை" கூறுவதாகும்.

இச்சூத்திரம் நான்கு அதிகரணங்களையும், ஏழு உதாரண வெண்பாக்களையும், அவற்றிற்கான மேற்கோள், ஏதுக்களையும் கொண்டது. "செம்மலர் நோன்றாள் சேர லொட்டா, அம்மலம் கழீஇ"

எனவும், "அன்பரொடு மரீஇ" எனவும், "மாலற நேயம் மலிந்தவர் வேடமும், ஆலயம் தானும் அரனெனத் தொழுமே" எனவும் மூன்று அதிகரணங்களும், நான்காவதாக "ஒழிபு அதிகரணம்" ஒன்றும் காணப்படுகின்றன.

சூத்திரப்பொருள், "அயரா அன்பின் அரன்கழல் அணைந்த சிவன் முத்தன், முதல்வனது செந்தாமரை மலர்போல் விரிந்து விளங்கி, எவற்றையும் தாங்கும் ஆதாரமாகிய திருவடிகளை, அணையவொட்டாமல் மறைத்தலைச் செய்யும் இயல்புடைய மும்மல அழுக்கை ஞான நீராற் கழுவி, அயரா அன்பினால் அவ்வாறு கழுவி வழுவாது நின்ற மெய்ஞ் ஞானிகளுடனே கலந்து கூடி, மலமயக்கம் பற்றற நீங்குதலால் அன்பிற் சிறந்த அவரது திருவேடத்தையும், சிவாலயத்தையும் சிவனெனவே கண்டு வழிபாடு செய்வன்" என்பதாகும்.

சிவன் முத்தராவார்க்கு, அறிவிச்சை செயல்கள் புறஞ் செல்லினும், வேறிடங்களுக்குச் செல்லாது, இவ்விடங்களிலேயே செல்லுமெனக் கூறப்பெற்றது. அயரா அன்பின் அரன்கழல் அணைந்த பின்னர், அறிவிச்சை செயல்கள் எவ்வாறு புறஞ் செல்லுதல் கூடுமெனின், மலமுற்றும் நீங்கி உண்மை உணர்ந்து நிட்டை கூடினாரிடத்தும், உடம்பு உள்ளவரை பிராரத்தவினை உடலைப்பற்றி நிற்றலால், முற்பழக்கத்தால் அவ்வினை ஒரு சமயம் வந்து தாக்கவும் கூடும். அதன் தாக்குதலால் விருப்பு, வெறுப்புக்கள் உளவாகிக் "கன்ம மலமும்", அதனால் பரத்தையே பார்த்திருக்கும் நிலை மாறிப் பிரபஞ்சப் பொருள்களைக் காணும் "மாயா மலமும்", வந்துசேரும். அப்பொருள்களைச் சுட்டியறியும் விபரீத உணர்வு மேம்பட, மெய்யறிவைக் கீழ்ப்படுத்திப் பிறவிக்கு வித்தாகிற "ஆணவ மலமும்" வந்து முளைக்கும். சேர்ந்த அளவோடமையாது, மேலும் மேலும் முறுகி வளரும் இயல்புடையன வாதலின், அம்மலங்களை நுழையும்பொழுதே பரிகரித்தல் வேண்டும்.

பரிகரிக்குமாறு:- விபரீத உணர்வு ஏகதேச அறிவால் வந்ததென்றும், அது விருப்பு, வெறுப்புக்களால் வந்ததென்றும், அவை பிராரத்த நுகர்ச்சியிற் சென்ற தற்போதத்தால் வந்தனவென்றும் அறிந்து, அத் தற்போதம் முளையாமல் பரிகரித்துச் சிவஞானத்துள் அடங்கிச் சிவாநுபவம் சுவாநுபூதியாகும்படி சிவஞான நிலையில் உறைத்து நிற்றலாம்.

அன்பினால் அவனருள்வழி நின்ற சீவன்முத்தர்களுடன் நட்புச் செய்க எனக்கூறப்பெற்றது. விருப்பு, வெறுப்பற்ற மெய்ஞ்ஞானிகள் சிலரிடத்து உறவும், சிலரிடத்துப் பகையும் கொள்ளுதல் ஏற்குமோ எனின், அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவது ஒருதலையாதலின் அவரது உறவு வெறுக்கற்பாலதேயாம். மும்மலங்களினும் அன்பரல்லாதார் மிகக் கொடியர். அம்மலங்கள், ஆன்மாவின் அறிவு சோர்ந்தவழியன்றி நுழையும் ஆற்றல் இல்லாதன. அல்லாதாரோ, சோர்வுறாத அறிவையும் சோர்வடையச் செய்து, தம்வழி இழுப்பாராதலின் மலங்களைதலினும் இன்றியமையாது கைக்கொள்ளப்படவேண்டுவது, "அல்லாதாரது கூட்டுறவின்மை" என்பது தெளியப்படும். அவ்வல்லாதாரது கூட்டுறவின்மை மட்டும் அமைவதாயிருக்க, அன்பரொடு கூடுதலும் வேண்டுமோ என ஓர் ஐயம் தோன்றலாம். அன்பரொடு கூடிய உறவு, அல்லாதாரோடு உறவாவதற்குத் தடைசெய்வதாதலின், அது வேண்டப்படுவதாயிற்று.

மல அழுக்கைப் போக்கி அன்பரொடு மருவிய சீவன்முத்தர் அடியவரது திருவேடத்தையும், சிவாலயத்தையும் சிவனெனவே கண்டு வழிபடுதல் வேண்டும். சிவபத்தருடன் இணங்கி நிற்பார்க்கு, அவ்விணக்கம் நழுவாதிருத்தற்பொருட்டுத் திருவேட, சிவாலயவழிபாடுகள் வேண்டப்படும். வேடத்தையும், ஆலயத்தையும் கூறவே, அவ்வேடமுடையாரையும், சிவலிங்காதி திருவுருவங்களையும் கூறியவாறாயிற்று.

மெய்ஞ்ஞானிகளுக்குப் பார்க்குமிடம் எங்குமொரு நீக்கமற, அனைத்தும், சிவமெனக் காண்டலே பொருந்துவதாயிருக்க, வழிபாட்டிற்குத் திருவேடத்தையும், சிவாலயத்தையும் மட்டும் கூறப்பெற்றது, சிவன், பாலில் நெய்போல் ஏனைய இடங்களில் மறைந்தும், இவ்விவ்விடங்களில் தயிரில் நெய்போல வெளிப்பட்டும் நிற்பனாதலின் இவை வழிபாட்டிற்குச் சிறந்தனவாயின. பசுவின்பால் உடலெங்கும் உளதாயினும், முலையிலேயே விம்மி வெளிவருதல் போல, முதல்வன் எங்கு முளனாயினும், திருக்கோயிலில் திருமேனியில் வெளிப்பட்டுநின்றருளுவன்.

பாசநீக்கம் அடைவதற்கு முன்னே இறைவனை மறந்திருந்த குற்றம், அறியாமையாற் செய்தது. அவன் செய்து வருகின்ற உபகாரங்களை, அத்துவிதமாயிருந்து உணர்த்த அறிந்து, அதன் பின்பும் அவனை மறத்தல் பெருங்குற்றமாகும்.

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்பது திருக்குறள்.

இதில் "கழீஇ" என்பதனால் அறிவு செல்லுமிடமும், "மரீஇ" என்பதனால் இச்சை செல்லுமிடமும், "தொழும்" என்பதனால் செயல் செல்லுமிடமும் கூறினர்.

என உரைத்தனர்.

பத்து, பதினொன்று, பனிரெண்டாம் சூத்திரங்களைப் பற்றி உத்தரமேரூர் பேட்டை, திரு. **ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை அவர்கள்** தாம் எழுதியுள்ளதை ஒட்டிப் பேசினர். அச்சிடப் பட்டிருந்த அக்கட்டுரைகள் அவையில் வழங்கப்பெற்றன.

பின்பு, சென்னை பல்கலைக்கழகத் தமிழ்த் துறைத் தலைவர் இராவ்சாஹிப், **S. வையாபுரிப் பிள்ளை அவர்கள்** சைவமடங்களைப் பற்றி எழுதியனுப்பியிருந்த ஆங்கிலக் கட்டுரை அச்சிட்டு சபையோர்க்கு வழங்கப்பெற்றது. சென்னை சைவ சித்தாந்த மகாசமாஜ அமைச்சர், திரு. **ம. பாலசுப்பிரமணிய முதலியார் B. A., B. L., அவர்கள்** எழுதி அனுப்பிய "சைவசமய சாரம்" என்னும் கட்டுரையைத் தழுவி, சைவசித்தாந்தக் கருத்துக்களை உளங்கொள தமிழில் உரைத்தனர்.

சென்னை மேரி அரசியார் கல்லூரி பௌதிக சாஸ்திரப் பேராசிரியர், திருவாட்டி, **E. T. இராஜேஸ்வரி அம்மையார் M. A., L. T.,** 'சிவஞானபோதம் பற்றி சில கருத்துக்கள்' என்னும் பொருள்பற்றி எழுதி அனுப்பிய ஆங்கிலக் கட்டுரை அச்சிட்டு வழங்கப்பட்டது. இதன் சுருக்கத்தைத் தலைவர் அவர்கள் செந்தமிழில் அவையோர்க்கு எடுத்து உரைத்தனர். முடிவிலே தலைவர் அவர்கள் மேற்போந்த சொற்பொழிவுகளை ஒட்டிய விரிவுரை ஒன்று திப்பிய முறையிலே மொழிந்து உவகை அடையச் செய்தனர். அது வருமாறு,

இன்று மாலை சிவஞான போதத்தில் உண்மை அதிகாரம் என்ற பகுதியில் பயனியல் கூறும் சூத்திரங்களாகிய பத்து, பதினொன்று, பன்னிரண்டு இவற்றின் விரிவுரைகளைக் கேட்டோம். இன்று காலையில் சாதன இயல் கூறப்பட்டது. உயிர் சாதனம் செய்வதினால் பயனை அடையும் அல்லவா? அப்பயனுடைய இயல்பை இம்மூன்று சூத்திரங் களும் விரித்துரைக்கின்றன. இச்சூத்திரங்களில் பத்தாவது சூத்திரத்தில் பாச நீக்கம் கூறப்பட்டுள்ளது. பதினோராம் சூத்திரத்தில் சிவப்பேறு உணர்த்தப்பட்டது. பனிரெண்டாவது சூத்திரத்தில் சிவப்பேறு அடைந்த உயிரும் வழிபாடு இயற்றுதல் வேண்டும் என்றும் தெரிவிக்கப்பட்டது. இம்மூன்றுமே சாதனத்தினால் உண்டாகக் கூடிய பயன்கள்.

முதலில் கூறிய பாச நீக்கமென்பது உயிரைப் பிணைத்திருக்கும் பண்டைப் பழக்கமாகிய பாசத்தைவிட்டு நீங்குவதாகும். பாசம் என்ற பண்டைப் பழக்கத்தை ஒரு உதாரணத்தால் விளக்கலாம். ஒரு கோழி நிலத்தில் கிடந்த தானிய மணிகளை கால்விரல்களால் கிளறிப் பொறுக்கி எடுத்துத் தின்னும். கிளறுவதன் காரணம் மணிகள் கிடக்கும் நிலத்தில் உள்ள மண்ணைப் பிரித்துத் தானியம் வேறுக்குவதே ஆகும். இந்தப் பழக்கத்தினால் மண்ணில் தானியமணி கிடந்தாலும், அல்லது மண்ணில் லாப் பாறையில் தானியமணி கிடந்தாலும் எப்போதைப்போல கால் விரல்களால் கிளறித்தான் அது மணிகளைப் பொறுக்கும். இது பழக் கத்தினால் ஏற்பட்டது. பழக்கம் கொடிது என்றார் பெரியோர். அப் பழக்கம்தான் இங்கே பாசம் எனப்பட்டது.

மற்றொரு உதாரணம் கூறுவோம். சில செம்படவப் பெண்கள் சந்தைக்கு மீன் விற்கப்போய் மீன் விற்ற பிறகு வெறுங் கூடைகளோடு தங்கள் குப்பத்திற்குத் திரும்பினார்கள். வழியில் இருட்டும் மழையும் வந்துவிட்டது. அருகில் இருந்த ஒரு நந்தவனத்துச் சாலையில் அடைக்கலம் புகுந்தார்கள். அச்சாலையில் வாசனை வீசும் பல மலர்கள் கூடையில் வைக்கப்பட்டிருந்தன. எங்கும் பரிமளம் வீசிக்கொண்டு இருந்தது. மழை நிற்காமல் அடித்துக்கொண்டே இருந்ததினால் செம் படவப் பெண்கள் அங்கேயே இரவைக் கழிக்கவேண்டிவந்தது. அவர் கள் படுத்துக்கொண்டு தூங்க முயன்றதும் தூக்கம் வரவில்லை. "இந்த அனாவசியமான வாசனையால் தூக்கமே வரவில்லை" என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டார்கள். இறுதியில் ஒரு அனுபவம் படைத்த கிழவி மற்றவர்களைப் பார்த்து, "தூக்கம் வருவதற்கு நான் ஒரு யுக்தி சொல்லுகிறேன் கேளுங்கள். இந்தப் பூவாசனை பொல்லாதது.

அதைத் தடுப்பதற்கு நம் மீன் கூடைகளை மூக்கருகில் வைத்துக் கொள்ளு வோம். அப்போது தூக்கம் வரும்" என்றாள். அவள் சொல்படியே அப்பெண்கள் எல்லாம் செய்தார்கள்; சிறிது நேரத்திற்குள் அனைவரும் குறட்டை விட்டுத் தூங்கினார்கள். இக்கதையினால் பாசத்தினுடைய செயலை நன்கு அறியலாம். மீன் நாற்றந்தான் செம்படவர்களுக்குப் பிடித்தது; பூமணம் பிடிக்கவில்லை. மீன் நாற்றமே பாசம்; அது நீங்கினால் ஒழிய பூமணத்தை அறியமுடியாது; இதுதான் பத்தாம் சூத்திரத்தின் கருத்து.

இனி "பாசம் நீங்கினதும் உயிர் அரன் கழலை அடைந்துவிடும்" என்று சொல்லுவதற்கு இல்லை. அரன் கழலை அடைவது சிவப்பேறு ஆகும். அது பதினோராவது சூத்திரத்தில் கூறப்பட்டது. ஒரு குருடன் யாதோ ஒரு அற்புதத்தால் கண்ணைப் பெறுகிறான். பெற்றவுடன் தான் காணும் காட்சிகளின் உண்மை நிலையை அறிய முடியுமா? முடியாது. காட்சிகளைப் பலதடவை பார்த்துப் பார்த்துப் பழகின பிறகுதான் அவற்றின் உண்மை நிலை அவனுக்குத் தோன்றும். கண் திறந்தவுடனே ஆனந்தத்தினால் ஏற்படும் திகைப்புத்தான் அவனுக்குத் தோன்றும். ஆகவே பாசம் நீங்கினது மாத்திரம் போதாது. நீங்கினவுடன் சிவப் பேறு அடைவதற்குப் பல முயற்சிகளும் வேண்டும். இதுதான் பதி னோரும் சூத்திரத்தில் சொல்லப்பட்டது.

நாம் தெருவில் போகும்போது நம் எதிரில் முன் அறிந்த ஒரு நண்பன் வருகிறான். சில சமயங்களில் நம் கண்களைத் திறந்து கொண்டு சென்றாலும் அந்நண்பனைப்பற்றி நம் மனம் அறிவதில்லை; நாம் பரா முகமாய்ப் போகிறோம். அந்நண்பன் நம்மைத் தட்டிச் சுட்டிப் பேசிய பிறகுதான் அவனை இன்னான் என்று அறிகிறோம். இது உலக வழக்கு. கண்தெரிந்தும் நாம் காணவில்லை. இதைப்போலவே பாசம் நீங்கியும் உண்மை நிலையை உயிர் அறிவதில்லை. அவ்வாறு அறிவதற்குச் சிவப் பேறு கூடுதலாகிய நிட்டையின் இயல்பு உணர்தல் வேண்டும்.

ஒரு விறகு வெட்டி நாள்தோறும் காட்டிற்குச்சென்று விறகு வெட்டி அதனைச் சுமந்து கொண்டு ஊருக்கு வந்து விற்றுப் பிழைத்து வருவான். வயிறுநிறைய கஞ்சி கிடைப்பதே அரிது; இவ்வாறு ஒரு வருத்த வாழ்வு வாழ்ந்துகொண்டு இருக்கையில், ஒருநாள் ஒருதுறவி தோன்றினார்; அவர் அவனைப்பார்த்து 'இக்காட்டிற்கு உள்ளே செல்' என்று போதித்தார். அப்படியே அவன் உள்ளே சென்று பார்க்கையில்

ஒரு தேக்கமரம் இருந்தது. அதை வெட்டி விற்று அதிகப்பணம் பெற்றான். துறவி "உள்ளே செல்" என்று சொன்னாரே தவிர "தேக்கு மரம் கிடைக்கும் என்று சொல்லவில்லை. ஆகவே இன்னும் உள்ளே செல்லுவோம்" என்று எண்ணிக் காட்டுக்குள்ளே புகுந்தான். அங்கே ஈட்டி மரம் கிடைத்தது. அதை விற்று இன்னும் அதிகப் பொருள் சம்பாதித்தான். மறுபடியும் உள்ளே செல்ல சந்தன மரம் கிடைத்தது. சம்பாத்தியம் அதிகமாயிற்று. பின்னும் உள்ளே செல்லச் செல்ல இரும்பு, ஈயம், வெள்ளி, பொன், இரத்தினம், வைரம் முதலியவைகள் படிப்படியே கிடைத்தன. மிகுந்த செல்வனாகி வாழ்ந்தான். அவன் சலிக்காமல் உள்ளே சென்று சென்று முயற்சித்ததால் பெரும் பொருள் அடைந்தான். அவ்வாறே உயிரும் உண்மை அறியவேண்டுமென்று ஆராய ஆராய உண்மையாகிய செல்வம் கிடைக்கும். இதனையே வள்ளுவனாரும் "தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக் கற்றனைத் தூறுமறிவு" என்றார். சிவப்பேறு அடைவதற்கு இவ்வித நிட்டை சாதனம் வேண்டியுள்ளது.

இனி, அவ்வாறு சிவநெறி அடைந்தவர்களும் "சிவநெறி அடைந்து விட்டோம். இனி வாளா இருப்போம்" என்பதில் ஒரு முடிவான பயனும் இல்லை. அன்னாரும் "அன்பர்களுடன் கூடிச் சிவ வேடத்தையும் சிவாலயத்தையும் அரன் எனத் தொழவேண்டும்" என்று 12-ம் சூத்திரம் கூறுகிறது. சிவநெறி அடையாதவர்கள் அவ்வாறு செய்ய வேண்டியது தான். அதனை முன்னமே பொது வியலில் கூறப் பட்டுளது. சிவநெறி அடைந்தவர்கள் அவ்வாறு ஏன் செய்யவேண்டு மென்று இச்சூத்திரம் கூறுகின்றது. உலகம் உய்வதற்குச் சிவநெறித் தொழில் இன்றியமையாதது; இது முத்தி அடைந்தவர்க்கும் ஏற்பட்டது தான். இப்பனிரெண்டாம் சூத்திரமே இம்மூன்று சூத்திரங்களிலும் சிறந்தது. இப்பனிரெண்டாம் சூத்திரமாகிய இலக்கணத்திற்குத் திரு முறைகளில் பனிரெண்டாம் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணமே இலக்கியமாகும். அப்புராணத்தில் தொண்டரோடு கூட்டுக் காணுதல், சிவவேடத்தைச் சிவனாக வழிபடுதல், ஆலயம் தொழுதல் முதலியவை கூறப்பட்டுள்ளன. ஆகவே இச்சூத்திரத்திற்கு அதுவே இலக்கியமாகும். இங்கே பன்னிரெண்டு என்ற ஒற்றுமை காண்க.

நாயன்மார்கள் சிவநெறி அடைந்தவர்கள். அவ்வாறு இருந்தும் தொண்டரொடு அவர்கள் கூடினதும், சிவவேடத்தைப் போற்றினதும், ஆலயங்களைத் தொழுததும் செய்தார்கள். தங்கள் வாழ்நாட்களில்

அவ்வாறு செய்து உலகத்திற்கு வழிகாட்டிகளாக இருந்தார்கள். அவ்வாறு செய்தது தங்களுக்காக அல்ல; உலகத்தில் உள்ள மற்ற உயிர்கள் அதனை அறிந்து போற்றி வழிபடுவதற்கே ஆகும். இதில் பயனியல் கருத்து தெளிவாக உரைக்கப்பட்டது.

சிவநெறியில் ஒழுகிவரும் மடாலயங்கள் பனிரெண்டாம் சூத்திரத்தில் கூறியபடி நடக்கவேண்டும். **அவ்வாறே இப்போது நாம் கூடியிருக்கும் இந்த மடாலயத்தார்கள் ஒழுகி வருதலைக் கண்டு உலகம் மகிழவேண்டும்.** இப்போது நடக்கும் இச்சைவ சபையே அதற்கு ஒரு சான்றாகும். இம் மடத்துச் செயல்களில் இதுவரையில் நாம் கண்டது ஆலய பரிபாலனம், ஆலயச் சீர்திருத்தம், ஆலயங்களில் சைவ நூல்களை வைத்தல், ஓதுவார்களை நியமித்தல், தேவாரப்பாடசாலையை நடத்துதல் முதலியன. இன்று காண்பது இப்பெரிய சைவசித்தாந்தக் கூட்டம். **மெய்கண்டார்** அருளிச்செய்த **சிவஞான போதத்தின்** பல பகுதிகளையும் பல அரும்பெரும் புலவர்களைக்கொண்டு ஆராய்ச்சி செய்து பலர்க்குச் சொல்லச் செய்தும் அச்சுவாயிலாக அவைகளை வெளியிட்டும் வருகிறார்கள். இதனை எடுத்துக்காட்டாகக் கொண்டு ஏனைய நிலையங்கள் முயற்சி செய்வார்களாக. இனி இம்மடத்தார் செய்யக்கூடிய செய்கைகள் ஆவன; சித்தாந்த பாடசாலை ஒன்று அமைத்தல், ஆலயப் பணியாளர்கள், அர்ச்சகர்கள் முதலியவர்களுக்கு ஒரு போதனைமுறைப் பாடசாலை அமைத்து நடத்துதல், இலவசமாகவும், அடக்கவிலைப்பதிப்புகளாகவும் ஆலய வரலாறுகள், சமய நூல்கள் இவைகளைப் பதிப்பித்து வழங்குதல், பெரும் நகரங்களாகிய சென்னை முதலிய இடங்களில் பல கிளைமடங்களைத் தாபித்துச் சமயம், ஒழுக்கம் இவைகளைப் போதித்தல் முதலியவையாம். மகாசன்னிதானம் அவர்களும் இவைகளை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிய சைவ உலகமே மகிழ்ச்சி அடையுமல்லவா ?

மாலையில் அநுட்டானுதிகட்குச் சபை இனிது கலைந்து மீண்டும் இரவு 8-மணிக்குத் தொடங்கிற்று. சென்னை, மறைத்திரு. திருப்புகழ்மணி T. M. **கிருஷ்ணசாமி ஐயர்** B. A., B. L., **அவர்கள்** 'சிவகருணை' யென்னும் பொருள்பற்றி இன்னிசைக் கருவிகளுடன் காலட்சேபமும் செய்தார்கள். அதன் சுருக்கம் கீழே வருமாறு.

ஒருநாடு; அந்நாட்டில் கரும்பிலிருந்து தேன் வழிகின்றது. தென்னம்பாளைகள் கள்ளாகிய தேனைத் தெளிக்கின்றன, சோலைகளி லுள்ள பழங்களோ தம்மிடமுள்ள ரசத்தை ஒழுகவிடுகின்றன, தேன்கூடுகளிலிருந்த தேனும் வழிகின்றது, ஆகிய இவையெல்லாம் ஒன்றுசேர்கின்றன. கரைகளையும் உடைத்துக்கொண்டு பெருக்கெடுத் தோடுகின்றது. கடலில் கலக்கின்றது. அங்குள்ள மீன்களெல்லாம் அவற்றையுண்டு களிக்கின்றன. இத்தகைய இயற்கைக்காட்சியைக் கம்பர் காண்கின்றார், கவியமைக்கின்றார்.

ஆலைவாய்க் கரும்பின் தேனும் அரிதலைப் பாளைத் தேனும்
சோலைவாய்க் கனியின் தேனும் தொடையிழி இறாலின் தேனும்
மாலைவாய் உகுத்த தேனும் வரம்பிகந் தோடி வங்க
வேலைவாய் மடுப்ப வுண்டு மீனெலாம் களிக்கு மாதோ!

என்பது அக்கவியாகும்.

இந்த வெள்ளம் எங்கும் நிறைந்த பரசிவத்தை நினைவூட்டு கின்றதாம்.

கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையில் மறைகளாலும் இயம்பரு பொருள் ஈதென்ன
தொல்லையில் ஒன்றேயாகி துறைதொறும் பரந்த சூழ்ச்சி
பல்பெரும் சமயம் சொல்லும் பொருளும்போல் பரந்ததன்றே.

தாதுகு சோலை தோறும் சண்பகக் காடு தோறும்
போதவிழ் பொய்கை தோறும் புதுமணத் தடங்கள் தோறும்
மாதவி வேலிபூக வனந்தோறும் வயல்கள் தோறும்
ஓதிய உடம்பு தோறும் உயிரென உலாயதன்றே. —கம்பர்.

இப்பொழுது விவரிக்கும் விஷயம் மற்றொரு சமுத்திரமும், மீனும், தேனும், நாடும் ஆகும். சிருஷ்டி என்ற நாட்டில், ஜீவராசிகள் என்ற மீன்கள், **சிவகருணை** என்னும் ஆனந்த மழையால் எடுத்த வெள்ளத்தில், உலகங்கள் அனைத்தையும் மூழ்க்கிநின்ற பரம் என்னும் சமுத்திரத்தில் நமது லக்ஷியம் சற்று பாயவேண்டும். பரமெனும் சமுத்திரத்தைச் சிவ வாக்கியர் விவரிப்பார்.

ஆவதும் பரத்துள்ளே அழிவதும் பரத்துள்ளே
போவதும் பரத்துள்ளே வருவதும் பரத்துள்ளே
தேவரும் பரத்துள்ளே திசைகளும் பரத்துள்ளே
யாவரும் பரத்துள்ளே யானுமப் பரத்துள்ளே.

பேதத்துக்குள் ஊன்றி உயிராய் நிற்பது அபேதமாம் அன்பு. அன்பு ஓர் உருவெடுத்தாற்போல் கட்டிப்பட்டு வெவ்வேறாய்க் காணப்பெற்று ரஸங்களை அளிப்பதுவே பேதம். பேதம் என்ற மாயா விநோதத்தில் மயங்கினவர்கள் அறிவை இழந்து தத்துவத்தை மறந்து துன்பக்கடலில் விழ்கின்றனர். சித்சக்தியால் உணர்ந்து அபேத சிவகருணையின் சக்தியாகவும், வெளியீடாகவும் பிரபஞ்சத்தை நோக்கவல்ல பெரியோர்கள் பேதத்தில் அபேதமாம் அன்பையே காண்பாரன்றி வேறொன்றும் காண்கிலர். ஸ்ரீ தாயுமானவர் இதை,

ஊரனந் தம்பெற்ற பேரனந் தஞ்சுற்று
    முறவனந் தம்வினையினு
லுடலனந் தஞ்செயும் வினையனந் தங்கருத்
    தோவனந் தம்பெற்றபேர்
சீரனந்தஞ், சொர்க்க நரகமு மனந்தநற்
    றெய்வமு மனந்தபேதந்,
திகழ்கின்ற சமயமு மனந்தமத னுண்ஞான
    சிற்சத்தி யாலுணர்ந்து
காரணந்தங் கோடி யருளிந்த நெறியன்பர்
    கண்ணாரும் விண்ணாருந் தேக்கவே
கருதரிய வானந்த மழைபொழியு முகிலைநங்
    கடவுளைத், துரியவடிவைப்,
பேரனந் தம்பேசி மறையனந் தஞ்சொலும்
    பெரியமௌ னத்தின்வைப்பைப்,
பேசரு மனந்தபத ஞானவா னந்தமாம்
    பெரிய பொருளைப் பணிகுவாம்.

என்று நன்கு உபதேசித்துள்ளார்.

சிவம் என்றாலே கருணையாகும். கருணை எங்கும் சிவவிலாசமாகும். ஆகையால் சிவத்துடன் ஒன்றாய் நிற்கக் கருதும் அடியார்கள் அன்பும் கருணையும் விட்டு அகலார்கள். இன்சொல் தவறார்கள். அன்பும் இன்பமும் பிறரிடத்தில் காண்பவன் சிவத்தையே காண்பான். அன்பும் இன்பமும் பிறருக்கு ஊட்டுபவன் சிவனே ஆவான்.

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே. —திருமூலர்

இந்தச் சிவகருணை இடைவிடாது பொழிந்துகொண் டிருக்கின்றது. சிவன் எங்கும் நிறைந்திருப்பதால் அவன் ஸ்வரூபமான கருணையும் எங்கும் பொழிந்துகொண் டிருக்கின்றது. தாயுமானவர் மற்றொரு பாட்டில் சிவகருணை பொழியும் தன்மையும் மேன்மையும் வெளிப்படுத்தி யிருக்கின்றார். அதாவது,

* * * *

காரார எண்ணரு மனந்தகோடிகள் நின்று
காலூன்றி மழை பொழிதல்போற்
கால்வீசி மின்னிப் படர்ந்துபர வெளியெலாங்
கம்மி ஆனந்த வெள்ளஞ்
சோராது பொழியவே கருணையின் முழங்கியே
தொண்டரைக் கூவு முகிலே!
சுத்த நிர்க்குணமான பரதெய்வமே! பரஞ்
சோதியே! சுகவாரியே!

கரையிலா கருணைமாகடல் என்று சிவனை வகுத்ததும் நினைவுக்கு வருகின்றது. சிவகருணையை உட்கொள்ளவாரும் என்று உலகத்தோரை ஸ்ரீ தாயுமானவர் கூவியழைத்ததை யார்தான் மறக்கமுடியும்.

காகமுறவு கலந்துண்ணக் கண்டீர் அகண்டாகார சிவ
போகமெனும் பேரின்ப வெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாய்
ஏகவுருவாய்க் கிடக்குதையோ வின்புற்றிட நாம் இனியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேரவாருஞ் சகத்தீரே.

ஒவ்வொரு ஜீவனுக்கும் மனமெனும் ஒருபாத்திரம் ஆண்டவன் கொடுத் திருக்கிறன். ஆணவம் எனும் ஒரு குரங்கு இந்தப் பாத்திரத்தைத் தலை கீழாய்ப் பிடித்துக்கொண்டு சிவகருணை ஜீவனிடம் சேராத வண்ணம் துன்புறுத்துகின்றது. ஆணவத்தை வெருட்டிவிட்டால் மனம் எனும் பாண்டம் சரியாக நிற்க அதன் தாழ்மை எனும் பள்ளத்தைச் சிவ கருணை நிறப்பத்தொடங்கும். அடியார்களுக்குத் தாழ்மையே தவமாகை யால் தாழ்மையும் நீங்காது; சிவகருணையும் அவரைவிட்டு அகலாது. அப்பர் சுவாமிகள் பாடியதும் இதுவே யன்றோ?

"தலையால் தாழும் தவத்தோர்க் கென்றும்
தொலையாச் செல்வர் சோற்றுத் துறையே"

இதுவே சிவகருணை; அமிர்தமுமாகும். இதைத்தவிர அமிர்த மென்பது வேறில்லை. பகையை அழிக்கும் வேற்படையுமாகும். தேவாரங்களில் இதன் உண்மையைப் பார்க்கலாம். தேவாரம் சிவகருணையின் நாதப்ரம்ம ஸ்வரூபம் என்று தெளிதல் வேண்டும். ஸ்ரீ ஞானசம்பந்தர் எனும் குழந்தை திருத்தோணி சிகரம் பார்த்து ஜகத்துக்குத் தாயுந்தகப்பனு மான சிவத்தைக் கூவி அழ, சிவகருணை தாயின் திருமுலைப்பாலாகப் பொற்கிண்ணத்தில் கொடுக்கப்பெற்றார். பராசக்தியின் ஞானப்பால் எவ்விதம் அம்பாள் இடத்தில் பொங்கிற்றோ அதே மாதிரி அதை உட்கொண்ட ஞானசம்பந்தமூர்த்தியிடமும் பொங்கிப்பரவ நேர்ந்தது. அவர் அறிவை விளக்கியது. தமிழுடன் கலந்து இசையாக வெளிவந்து தேவாரம் என்று வழங்கியது. தான்கொண்ட உண்ணாமுலையாள்பாலை தேவாரப் பாடல்கள் என்ற பாத்திரங்களில் நிறைவித்து உலகை அனுக்ரஹம் செய்தனர். அப்பர் சுந்தரர் இரண்டுபேரும் அப்படியே உதவினர். தேவாரத்தில் அமிர்தம் இருக்கின்றதென்றுகாட்ட பல சான்றுகளிருக்க, இச்சமயம் ஒன்றை மட்டும் குறிப்போம். ஞான சம்பந்தர் மருகல் என்னும் க்ஷேத்திரத்திற்குச் சென்றார். ஒரு செட்டிமகன் தான்மணக்கவிருக்கும் பெண்மணியோடு வழிப்போக்காக வந்து இரவில் கோயில் கோபுரவாயலில் தங்கினான். அச்செட்டிமகனை அரவம் தீண்டியது. ஈசனைப்பார்த்து அந்தப்பெண் கதறுகிறாள். அவ் வேளையில் ஞானசம்பந்தர் அங்கே வருகின்றார். நிகழ்ந்ததை அறிகின்றார். ஒரு பதிகம் பாடுகின்றார். அந்தத் தேவார அமிழ்தம் அவனை எழுப்பி விட்டது. அவ்வமிர்தத்தில் கொஞ்சம் சுவைத்துப் பார்ப்போம்.

சடையாய் எனுமால் சரணீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவளுண் மெலிவே.

சித்தா யெனுமால் சிவனே யெனுமால்
முத்தா யெனுமால் முதல்வா வெனுமால்
கொத்தார் குவளை குலவும் மருகல்
எத்தாய் தகுமோ இவளே சறவே.

சிப்பி எடுக்கத் துணிபவன் எப்படி மூழ்கி மூழ்கி எடுத்து வருவானோ அதுபோல் தேவாரம் பாடும்போது அந்தத் தேவாரத்தில் மூழ்கி மூழ்கி

பொருளை ஆய்ந்து அனுபூதியை வெளிப்படுத்திப் பாடவேண்டும். சிவ கருணையின் விலாசம் நேர்ந்தக்கால் அது என்னதான் செய்யாது. திரிபுரமாம் மலங்கள் எரிந்தன. இட்ட நெருப்பு குளிர்ந்தது; அப்பரைக் கட்டிய கல் கடலில் மிதந்தது; விடம் அமிர்த மாயிற்று; கூன் நிமிர்ந்தது ; ஜுரம் அகன்றது; சூலை தவிர்ந்தது; வினைகள் ஒழிந்தன; விதிகுலைந்தது. திருக்கூட்டத்தின் பெருமைதான்யாதெனில் சிவகருணையைத் தேக்கும் அணையாய் இருப்பதே. அதனுல்தான் ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் திருக்கூட்டத்தின் பெருமையைச் சொல்லுங்கால்

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினர்
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
**கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி**
**வீடும் வேண்டா விறலின் விளங்கினர்.**

பூதம் ஐந்தும் நிலையில் கலங்கினும்
மாதோர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார்
ஓதுகாதல் உரைப்பின் நெறிநின்றார்
கோதிலாத குணப்பெருங் குன்றனர்.

என்று ஏத்திப்பாடினர்கள்.

இவர்களே சிவனைத் தெரிந்த ஞானிகள். சிவஸ்வரூபத்தை சிவவாக்கியர் சொல்லுகின்றார். கேளுங்கள்,

பாரடங்க வுள்ளதும் பரந்தவானம் உள்ளதும்
ஓரிடமும் அன்றியே ஒன்றிநின்ற ஒண்சுடர்
யாரிடமும் அன்றியே அகத்துளும் புறத்துளும்
சீரிடங்கள் கண்டவர் **சிவன்தெரிந்த ஞானியே**

ஒன்றும் ஒன்றும் ஒன்றுமே உலகனைத்தும் ஒன்றுமே
அன்றும் இன்றும் ஒன்றுமே அனுதியான தொன்றுமே
கன்னல் நின்ற செம்பொனே களிம்பறுத்து நாட்டினல்
அன்று தெய்வம் உம்முளே அறிந்ததே சிவாயமே.

சித்தத்தை சிவன்பால் சேர்த்தால் சிவகருணை நம்மைவிட்டு அகலாது. உலகெலாம் அளிக்கும் சிவகருணை முன்னொருகால் தேவர்கள் சூரபத் மாதிகளால் வதைக்கப்பட்ட காலத்தில் ஆறுபொறிகளாய் சிவனின்றும் வெளிப்பட்டு ஸ்ரீ சண்முகமாய் அவதரித்துச் சிவகருணையையே சக்தி வேலாகத் தாங்கி உலகத்தைக் காத்து ரக்ஷித்தது. அந்த அறுமுகக்

கடவுள் வேறல்ல ; சிவகருணை வேறல்ல ; திருப்புகழ் போற்றுவதும் அதுவே.

சிவசிவ ஹரஹர தேவா நமோ நமோ
தெரிசனம் பரகதி ஆனாய் நமோ நமோ
திசையினும் இசையினும் வாழ்வே நமோ நமோ செஞ்சொல்சேரும்

திருதரு கல்வி மணாளா நமோ நமோ
திரிபுரம் எரிசெய்த கோவே நமோ நமோ
ஜயஜய ஹரஹர தேவா சுராதிபர் தம்பிரானே

ஸ்ரீ சண்முகநாதன் அறுமுகங்கள் பெற்றும் ஒருமுகமாகவே எங்கும் விளங்குவது தன் உருவமே சிவகருணையாய் இருப்பதுபற்றியன்றோ ?

ஏறுமயிலேறி விளையாடுமுக மொன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுக மொன்றே
கூறுமடியார்கள் வினை தீர்க்குமுக மொன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக மொன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுக மொன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுக மொன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதி யருணைசல மமர்ந்த பெருமாளே.

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல்லா மர னாமமே
சூழ்க வையகமுந் துயர் தீர்கவே.

தலைவர் சிவ. ஸ்ரீ ஈசானசிவாசாரியார் அவர்கள் மகாநாட்டின் முடிப்புரையாக,

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்துப் பிரதம ஞானாசாரியராகிய ஸ்ரீ குருஞானசம்பந்த ஞானதேசிக மகாசந்நிதானமுதல், அவ்வருண்ஞான பீடத்து விளங்கிய ஞானாசாரியர்களெல்லோரும் இக்காலத்து மன்பதைகட்கு வழங்கியதொரு "அருட் பிரசாதமோ" என்று போற்றுதற்குரியவர்களும், இதுகாறும் சைவச் செந்நெறிபற்றியொழுகிவரும் சிவஞானச் செல்வர்களெல்லோரும் செய்து வந்த தவமே திரண்டு ஒரு வடிவெடுத்தாற் போன்றவர்களும், இவ்வருண்ஞான பீடத்து, இருபத்துநான்காவது மகாசந்நிதானமாக இப்போது சிவ

ஞானச்செங்கோல் செலுத்துபவர்களுமாகிய **ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** நம்மீது வைத்தருளிய பெருங் கருணையினலே, கால் நூற்ருண்டுகளாக நம்நாட்டிலே சிவஞான சாத்திரக் கேள்வி அருகி வருதலையும், அந்நூற்கேள்விக்குரிய இலக்கண இலக் கியப் பயிற்சியும், சிவதீக்ஷை முதலிய சமயச் சிறப்பொழுக்கங்களும் குன்றி வருதலை யுமுணர்ந்து, அத்தகைய சிவஞான நூற்கேள்வியானன்றிச் சைவ நன்மக்கள் சான்றவர் ஆய்ந்திடத்தக்க பொருளாகிய பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களின் இலக்கணங்களை உள்ளவாறறிதல் இயலாதென்பதனையும் தமது திருவுள்ளத்துக்கொண்டு அந்த முப் பொருளிலக்கணத்தை முரணறுத்து அருந்துயர்க் குரம்பையின் வைத்து முதலாவதாக (உயிர்) ஆன்மாவை நாடி, பெரும்பெயர்க் கடவுளில் கண்டு மயர்வறுதற்களித்த "சிவஞானபோதம்" என்ற பெரியதொரு ஞானநூலைத் தெள்ளத்தெளிந்த இனிய எளிய தமிழ் வசனரூபமாகப் பலப்பல புலவர் சிகாமணிகளைக்கொண்டு எழுதுவித்து, அவர்களைக் கொண்டு சொற்பொழிவும் செய்வித்து, அவர்கள் அங்ஙனம் சொற் பொழிவு செய்யும் செழும் பொருளை அப்போதும் மற்றெப்போதும் சாவதானமாகச் சிந்தித்தற்கு வாய்ப்பாக, அத்துணைச் சிவஞானபோத சூத்திரக் கட்டுரைகளை அச்சிடுவித்தும் அவ்வப்போது வழங்குவித்தும் நம்மவர்களைவிட கல்வி, செல்வம், நாகரிக முதலியவைகளில் சிறந்தவர்க ளென, நம்மவர்களுட் சிலர் கருதிக்கொண்டிருந்த அத்துணையரெல்லாம் இன்று, அழுக்காறு, அவா, வெகுளியுடையராய் மயங்கித் தம்முட் கலாம் விளைத்தும், இரக்கமின்றி மறச் செயல் புரிந்தும், அதனல், நம் நாட்டில் பொருள்வளங் குறைந்த இந்நாளில், செந்தமிழ்ப் புலவர் தம் சொன்மாரியோ, எங்கள் குருமகாசந்நிதானம் நம்மவர்களுக்கு உண்டி, உறையுள் முதலிய எல்லா நலங்களின் பொருட்டும் வானம் பொழிந்த மழை மாரியோ என வழங்கிய பொன்மாரியோ சிறந்த தெனும்படி பொருளையும் வழங்கி, உய்யக் கொண்டருளிய பெருங் கருணைத் திறத்தை நினைந்து, என்றுங் குன்ருத நன்றியுடையவர்களாய் அவர்கள் நமக்களித்த இந்த (உபாய) சிவஞான நூற்கேள்வியை, சமய, விசேட, நிர்வாண தீக்கைகளைப் பெற்றுக் கேட்குமுறையிற் கேட்டுச் சிந்திக்குமுறையில் சிந்தித்துத் தெளிந்து பயன் பெறுதலே நம்மவர்க் குற்ற கடனும்.

இந்த மகாநாட்டைக் கூட்டுவித்தலினல், நமது குருமகாசந்நி தானம் "செய்யாமற் செய்தவுதவி" "காலத்தாற் செய்தவுதவி" "பயன் தூக்கார் செய்தவுதவி" யென்னும் முத்திற வுதவியும் நமக்கு வழங்கிப்

பேரருள் புரிந்தார்கள் என்பதனை நல்லாறு படைத்த இத்தொல்லுலகம் உள்ளவரை மெய்யன்பர்கள் சிந்தித்து "நிகரறுநற் சிவதரும சிவ ஞானத்தை நிறுத்திடுவோனிலும் உயர்ந்தோன் நிலத்திலில்லை, பகர் பரமசிவயோகி அவனேயாகும்" என்னும் திருவாக்கின்படிப் போற்றி, இது போன்ற அருளுபதேசங்களை என்றும் வழங்கி, எஞ்ஞான்றும் நிலவுகவென அருட்சத்திசமேத சொக்கலிங்கப் பெருமானை வந்தித்து வணங்குவர்.

அநாதி மலமுத்த பரமபதியாகிய சிவபெருமான் அநாதிமல பெத்தர்களாகிய பசுக்கள் என்றும் தடைப்படாத அறிவுருவினனாக விளங்கும் தன்னையும், தடைப்பட்ட அறிவிச்சை செயல்களையுடைய ஆன்மாக்களை(தன்னை)யும், அங்ஙனம் தமது அறிவைத் தடைசெய்து நிற்கும் ஆணவாதி பாசங்களின் இயல்பையும் அறிந்து, பாசத்தை நீக்கிப் பசுக்கள் பதியாகியதம்மை வந்தடைதற் பொருட்டுப் பொதுவியல்பும், சிறப்பியல்புஞ் சிறந்து விளங்குமாறு அப்பெருமானால் அருளிச்செய்யப்பட்ட வேதசிவாகமங்களுள் காமிகமுதல் வாதுளமீறான சைவாகமங்களில் கூறப்படும் சரியை, கிரியை, யோகம், ஞானமெனும் நான்கு பாதங்களுள் வைத்து ஞானபாதத்தோதிய பொருளை ஆராயும் ஆராய்ச்சி இந்நூலின்கண் செய்யப்படுகின்றது. எங்ஙனம் ஆராய்ச்சி செய்யப்படுகின்றதெனின், ஆன்மாக்களின் மலபரிபாக தாரதம்மியத்திற் கேற்பத் தூலாருந்ததி முறைமைத்தாக அவர்களுக்குச் சான்றவர் ஆய்ந்திடத்தக்கவாம் பொருள்களை யுணர்த்துதல் மரபென்க. சுவாயம்புவ முதலிய ஆகமங்களுள் சிவம், பதி, பசு, பாசம், கன்மம், சுத்தமாயை, அசுத்தமாயை என ஏழென்றும், பவுட்கரம் மதங்க முதலிய ஆகமங்களுள் பதி, பசு, பாசம், கன்மம், சுத்தமாயை, அசுத்தமாயை என ஆறென்றும், பராக்கியை முதலியவைகளுள் பதி, பசு, பாசம், கன்மம், மாயை என ஐந்தென்றும், சருவ ஞானோத்தர முதலிய ஆகமங்களுள் சிவம், பதி, பசு, பாசம் என நான்கென்றும், இரௌரவம் மிருகேந்திர முதலிய ஆகமங்களுள் "பதி, பசு, பாசம்" என மூன்றென்றும் கூறுதல்பற்றி, அங்ஙனங் கூறும் ஆகமங்களை நோக்குவோர் அவை ஒன்றோடொன்று முரணுவனபோலக் கருதி மயங்குவர். அவர் அங்ஙனம் மயங்காமைப் பொருட்டு ஞானபாதப் பொருள்களை யெல்லாம் **பொது, உண்மை** என இருவகைப்படுத்து ஆராய்ச்சிசெய்து அவை யெல்லாம் "பதி, பசு, பாசம்" என்ற மூன்றென்றதனுள் அடங்குதலின் முப்பொருளென்றலே எல்லா வாகமங்கட்கும் துணிபென, ஒருதலையான் உணர்த்தவேண்டுதலின், அங்ஙனம் எல்லா வாகமங்களை

யும் அவ்வப்போது கேட்போர் தாரதம்மியத்துக்குத் தக்கவாறு, பொது, உண்மை எனப்பகுத்தோதிய இறைவனலன்றி, அங்ஙனம் கூறும் ஆகமங்கட்குப் பொருளொருமை கூறுதல் ஆகாமையின், ஶ்ரீகண்டமுதல்வர்பால் எல்லா வாகமங்களையும் கேட்டருளிய நந்திபெருமான் ஶ்ரீகண்ட முதல்வரை வணங்கி நின்று வினவியபோது, "அவை யெல்லாம் தூலாருந்ததி முறைமைபற்றிக் கூறப்பட்டனவன்றி மாறுகோளல்ல வென்பது வகுத்துணர்த்தற்பொருட்டு, இரௌரவ வாகமத்துட் பன்னிரு சூத்திரத்தாற் கூறப்பட்டது **சிவஞானபோதம்** என்பதோர் படலம்; இது கேட்டார்க்கு எல்லா வாகமப்பொருள்களும் மாறுகோளின்றி இனிது விளங்கும்" எனக்கூறி, அச்சிவஞான போதத்தை நந்தியம் பெருமானுக்கு அருளிச்செய்தார். அங்ஙனம் நந்தியம்பெருமானிடத்திருந்து சனற்குமார மகாமுனிவரும், அவர்பால் சத்தியஞான தரிசினிகளும், அவரிடத்திருந்து பரஞ்சோதிமுனிவரும், அவர் தமிழ்நாடு செய்த தவத்தானே திருவெண்ணெய்நல்லூரில் அவதரித்தருளி மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையராய் எழுந்தருளியிருந்த மெய்கண்டதேவர்பால் வந்து சிவஞானபோதத்தைக் கொடுத்து, "இதனை ஈண்டுள்ளோர் உணர்ந்து உய்தற்பொருட்டு மொழிபெயர்ப்புச்செய்து பொழிப்பும் உரைக்க" என்று அருளினர். பொழிப்புரைக்குமாறுஞ் சத்தியஞான தரிசினிகள்பால் தாம்கேட்டவாறு வகுத்தருளிச்செய்ய, அவரும் அவ்வாறே மொழிபெயர்த்துப் பொழிப்புரையுஞ் செய்தருளித் தம்முடைய மாணக்கர் அருணந்தி சிவாசாரியருக்கு அளித்தருளினர். இஃது நூல்வந்த வரலாறாகும்.

இதனல், சிவஞானபோதம் என்பது எல்லாவாகமங்களின் பொருள் நிச்சயத்தை உணர்த்தும் நூல் என வுணர்தல் வேண்டும். இதனை "இவ்வாறே சிவஞானபோதத்தில், சைவாகமங்களின் பொருள் நிச்சயத்தை அறிக" என்ற வடமொழிச் சிவஞானபோதம் பனிரண்டாஞ் சூத்திரத்துப் பிற்பகுதியினுலுந் தெளிக; இஃதறியாதார் எல்லா வாகமங்களின் பொருள்களையும் பன்னிரு சூத்திரத்தாற் றெகுத்து விளக்குதற் கெழுந்தது இந்நூலென்றுரைப்பர். அது மிருகேந்திரத்து முதற்கண்ணதாகிய ஒரு சூத்திரத்தானே கூறப்படுதலின் அது பொருந்தாது. இனி, முப்பொருளுண்மை கூறுதற்கெழுந்ததனல் சிவஞான போதமெனப் பெயர் பெற்றதெனின், எல்லா வாகமங்களிலுமுள்ள ஞானபாதங்களும் முப்பொருளை விளக்கலில் அதுவும் சிறந்த பொருளாக மாட்டாது. சிவஞானம் இரண்டு வகைப்படும் என்பதும் ஒன்று பர

ஞானமாகிய திருவருள்ஞானமாம் அநுபூதிஞானம் எனவும், மற்றொன்று
அதனை விளக்கும் அபரஞானமாகிய நாதரூப சிவஞானம் எனவும்
சிவப்பிரகாசம் கூறும். இதனால், ஈண்டுச் சிவஞானம் என்பது ஆகமங்
களுட் கூறப்படும் ஞானபாதப் பொருட் பேருமென்பதும், "போதம்"
என்பது (நிச்சயித்தல்) பொருள் ஒருமை உணர்த்துதலாம் என்பதும்
தெளிந்துணரப்படும். அங்ஙனம் பொருளொருமை கூறுதற்கு முப்
பொருள்களின் இயல்பைப் பொதுவகையானும், சிறப்பு வகையானும்
ஆராய வேண்டுதல் மரபாதலின் அங்ஙனம் ஆராய்ச்சி செய்வதும்
இந்தச் "சிவஞானபோதம்" எனவுணர்க. இனி, மெய்கண்டதேவர்
வாயிலாக நமக்கு வாய்த்த தமிழ்ச் சிவஞானபோதமாவது "மெய்கண்ட
சாத்திரம்" எனவழங்கும். மெய்கண்டார் பொய்ச்சமயங்களின் பொருள்
இது, இதுவென்று கழிப்பித்த காரணத்தானும், மலத்தினீங்கிய மெய்
யறிவின் பயனாக உலகத்தை நிலையில்லாத பொய்ப்பொருள் எனக்
கண்டு கழித்துச் சிவமே மெய்ப்பொருளெனத் தேறிய தமது (அருணந்தி
குரவர்—தமது மாணவர்) அடியாரிடத்து, அவரது தவவொழுக்கங்கண்டு
அன்பு மீதூர அவருள்ளத்தே குடியாகக்கொண்டு, அவரது இச்சா
ஞானக் கிரியா சத்திகளை விளக்கி(காட்டு முபகாரம்)ச் சிவத்தோடு
தாமும் பிரிவறக்கலந்து, தமது அருள் வசப்பட்ட தக்காரைச் சிவத்
தோற்றம் ஒன்றுமே காணுமாறு (காணுமுபகாரம்) காண்டலாலும்
**மெய்கண்டார்** என வழங்கப்பெறுவர். அவர் வழிவந்த சந்தானா
சாரியர்கள் அருளிச்செய்த நூல்களுக்கும், சிவஞானபோதத்து உண்மை
யதிகாரத்தோதப்பட்ட சிறப்பியல்புகளையே எடுத்துவிரிக்கும் பொரு
ளொருமைப்பாடுபற்றியும், மெய்கண்ட நூலாதல் ஒப்புமைநோக்கியும்
திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் முதலிய நூல்களுக்கும் **மெய்
கண்ட சாத்திரம்** என வழங்கப்படும்.

இந்தச் சிவஞானபோதம், "சைவசித்தாந்த சாத்திரம்" எனப்
படும் பதினான்கு சாத்திரங்களுள்ளும் தலைசிறந்து விளங்குவது. இது
வடிவிற் குறுகியது; பொருள் ஆழமுடைமையால் பெரியதிற் பெரியது;
இது, சிறிய கண்ணாடியில் பெரிய மால்வரைப் பொருளெலாஞ் செறிந்
தாங்கு அறிவு நூல்களின் (பொருள்) முடிபெலாம் (பொது, உண்மை
என, இருவகைப்படுத்துத் தன்கண்) அகப்படுத்து (பொது உண்மை
என்னும் இரண்டு இயல்புகளுள், தான் கூறும் சிறப்பியல்புகளுக்கு
முன்னாக ஏனைய நூல்களுட் கூறப்பட்ட பொதுவியல்பனைத்தும்
பொருந்த) அவற்றின் நெறியெலாம் விளக்குவது; உலகப்பொரு
ளாராய்ச்சியில் தலைப்பட்டார்க்கு இஃதொரு கருவூலம், சமயப்பொருள்

காண்பார்க்கு இஃதொரு உலவாக்கிழி; அருந்துயர்க்குரம்பை எனப்படும் இவ்வுடம்பு முதலியவைகளில் வைத்துப் பொதுவியல்புணரப் புகுவார்க் கோர் தாயகம் போல்வது; பெரும்பெயர்க் கடவுளிற் காண்டலாகிய சிறப்பியல்புணரும் அநுபூதிமான்களுக்கும் இஃதொரு சிவஞானக் களஞ்சியம். பிறவிக்கு அஞ்சி விடுபேறு காதலித்துப் பத்திபண்ணும் தொண்டருக்கு இஃதொரு பிறவி வேரறுக்கும் ஞானவாள்; சிவம், சத்தி, திரோதானசத்தி, இச்சா ஞானக் கிரியாசத்தி, சற்காரியவாதம், ஆணவ மலத்துண்மை, அதன் இலக்கணம், கன்மவிலக்கணம், இருவினை யொப்பு, சுத்தமாயை, அசுத்தமாயை இலக்கணம், சிவனுர் இயல்பு, அவர் சிவனுரை யறியமாட்டாத தன்மை, அவர்க்குச் சிவனுரை யறியும் தருதியைப் பிறப்பிக்கும் சமய, விசேட, நிர்வாண தீக்கைகளின் இயல்பு; முத்தி பஞ்சாக்கரத்தின் மாண்பு, பாச நீக்கத்தின் இயல்பு; சிவப்பேருகிய சைவசித்தாந்தமுத்தி எனப்படும் சிவனடிசேர் முத்தியின் இயல்பு; சித்தாந்த சைவ நன்முத்தியினைப் பெற்ற சிவஞானிகளது இயல்பு; சைவசித்தாந்த நெறிதேறி அதீதவாழ்விற் போயண்மினேர்க்கும் ஐந்தெழுத்தும், திருநீறும் கண்டிகையும் (இவைகளே) பொருளெனக் கொண்ட சிவனடியார் வழிபாடும் சிவாலய வழிபாடுமே பொருளென விளக்குதற் கமைந்ததொரு மூலபண்டாரம்; சிவஞானச்செல்வர்க்கு வாய்த்ததொரு ஞானசாரியன்; இன்று நமக்குக் குருவடிவாக விளங்கும் திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுர ஆதீனத்து இருபத்துநான் காவது பட்டத்துச் சிவஞானக் கதிரவனுக விளங்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் நமக்கெல்லாம் வழங்கிய ஞானமிருதமாம் அருட்பிரசாதம் எனப்போற்றி இந்தச் சிவஞான போதப் பொருளுணர்தல் கடனும்.

> காலமுண்டாகவே காதல் செய்துய்மின் கருதரிய
> ஞாலமுண்டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய
> ஆலமுண்டான் எங்கள் பாண்டிப்பிரான் தன்னடியவர்க்காய்
> **மூலபண்டாரம் வழங்குகின்றுன் வந்து முந்துமினே.**

## மெய்கண்ட சிவநாமப் பொருள்

பொய்கண்டகன்ற மெய்கண்டதேவன் (பாயிரம்)

பொய்ந்நெறி "இதுவிது" என்று கண்டு கழிப்பித்த காரணத்தாற் பெற்ற மெய்கண்டதேவன் என்னும் சிறப்புத் திருநாமம் உடையான்.

அறிந்தும் அறிவதே ஆயும் அறியாது
அறிந்ததையும் விட்டடங் கடங்கி—அறிந்தது
எது அறிவும் அன்றாகும் மெய்கண்டான் ஒன்றின் (3 சூ. 6 அதி.)

மெய்யாகிய சித்தாந்த நெறியினை யுணர்ந்தோன்.

அசத்தறியாய் கேள்நீ அறிவறிந்த எல்லாம்
அசத்தாகும் மெய்கண்டா னாயின் (6 சூ. 1 அதி.)

சத்தினியல்பை யறிந்தோன் ஆராய்ந்தானாயின்.

எண்ணிய சத்தான் றசத்தள்ளும் என்றுள்என்
கண்ணி உளதென்றல் மெய்கண்டான் 6 சூ. 2 அதி.)

சத்தினியல்பை யுணர்ந்தோன்.

உணர்ப அசத்தால் ஒன்றுணரா தொன்றை
உணருநீ தானுணரா யாயின்—உணரும்உனின்
தானிரண்டாம் மெய்கண்டான் தன்னால் உணர்தலால்

உயிருக்கு அறிவு விளங்கும் உண்மையறிந்தோன், தன்னறிவு அச்சிவனருளில் அடங்கி அதுவாய் நின்று அதனாலே அதனையறியுமாதலால் ஏனைப்பொருள்களை யறியுமாறுபோல வேறாய்நின் றறிவானல்லன். அத்தனி முதற்பொருளை,

பன்னிறம் காட்டும் படிகம்போல் இந்திரியம்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து—பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான்
(8 சூ. 3 அதி.)

படிகத்திற் காணப்படும் நிறங்களின் தன்மையைப் படிகத்திற்கு வேறென் றறிவதுபோல, ஆன்மாவில் காணப்படும் இந்திரியங்களின் தன்மையைத் தன்னின் வேறெனத் தெளிந்து, அதனாலாகிய அந்தப் பொது வியல்பு பொய்யா யொழியுமாறு தனது சிறப்பியல்பை யுணர்ந்தானாயின்.

1. பொய்ந்நிறஜம் புலன்நிறங்கள் பொய்யென மெய்கண்டான்
(சித்தியார் 289.)

2. சதசத்தா மெய்கண்டான் (சிவ. ஞா. போ. 10-சூ. 2-ம் அதி. 67)

சத்தைச் சார்ந்தவிடத்துச் சத்தாயும் அசத்தைச் சார்ந்தவிடத்து அசத்தாயும் நிற்றல் பற்றிச் சதசத்தெனப்படும் தன்மை தனக்கு உண்டென் றறிந்தவன்.

*பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித*
*மெய்கண்டநாதன்அருள் மேவுநா ளெந்நாளோ?* (தாயுமானவர்.)

## சிவஞானபோத உள்ளுறை

சிவஞான பாவனையினாலே, "ஆணவம், கன்மம், மாயை" என்னும் மும்மல நீக்கத்தைச் செய்யும் சிவதீக்கை பெற்றுச் சரியை, கிரியை, யோகமென்னும் மூன்றுபாதப் பொருள்களை விளக்கும் சோமசம்பு சிவாசாரியார் செய்த கிரியாகாண்டக் கிரமாவளி முதலிய நூல்களைக் கேட்டு, அவ்வாறொழுகி, மனத்தூய்மை பொருந்தி, அதனால், செல்வ நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை முதலியவைகளையும் உணர்ந்து, பிறவிக்கு அஞ்சி, விடுபேற்றில் அவாமிக்குடையார்க்குத் தக்க பொருளாகிய, பதி, பசு, பாசமென்னும் முப்பொருள்களின் உண்மைகளையும், அவைகளின் இலக்கணங்களையும் அறிவித்து அதனால், இன்பமே வடிவான இறைவன் இயல்பையும், பிறப்பிறப்பிற் பட்டுழலும் ஆன்மாக்களின் இயல்பையும், எல்லா அனர்த்தங்கட்கும் காரணமான ஆணவத்தின் வலிமையையும் உணர்ந்தபின், மலநீக்கத்துக்குரிய சாதனைகளை மேற்கொள்ளுதற்கு உரிமையுடையது ஆன்மாவே என்று தெரித்துணர்த்தி, ஞானமே பரமசாதனமென விளக்கி, அந்த ஞானங்கமாவது சரியை, கிரியா, யோகங்களெனப்படும் இறப்பில், தவமாமெனக்காட்டி, அவ்வொழுக்க நெறிக்கண் நிற்றற்குத் தகுதியைப் பிறப்பிப்பது "சிவதீக்கை" எனப்போதித்து, அங்ஙனம் மலநீக்கத்தைச் செய்யும் சிவதீக்கைகளைச் சகல வருக்கத்துக் குருவடிவில் நின்று செய்தருள் செய்பவர் அநாதியே அங்ஙனம் மலத்தொடக்கில்லாத "இறைவனே" எனவும், ஆன்மாவின் அறிவு சத்து, அசத்து என்னும் இரண்டனுள் பாசமாகிய அசத்தால் விளங்கி, அசத்தின்பாலுளதாய் அவ்வசத்தினையறிந்து அதன் வசமாக அப்பாச ரூபமாகவே தன்னையெண்ணித் தன்னியல்பை யறியாது தனது இன்ப நிலையை இழந்து நின்ற தன்மையும், அந்நிலையில் நீங்கிச் சத்தாகிய சிவத்தினால் விளங்கி அதன்கண்ணே நிலைபெற்று நின்று அதனையே அறிந்து நிற்கும் தன்மையுங் காணுமுறையாகிய ஆன்மதரிசனத்தையும், ஆசாரியன் உபதேசித்த பொருளைச் சிந்தித்தலினால் வரும் ஆன்மசுத்தி கூறுமுகத்தால், பாச, பசு ஞானங்களால் இறைவனைக் காணமுடியாதெனவும், சிவஞானமே கண்ணாகக் காண்டல் கூடுமெனவும், முத்தி பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரித்தல் பழைய வாசனை தாக்காதிருத்தற்கு வாயில் எனவும், பெத்தநிலையில் அந்தச்சிவன் உயிரேயாகி ஒற்றுமைப்பட்டு நின்றதுபோல, இச்சாதன நிலையிலும், உயிர் அச்சிவனோடு

ஒற்றுமைப்பட்டு அச்சிவப்பணியில் வழுவாது நிற்கவேண்டுமெனவும், அதனால் மலம், மாயை, கன்மம் நீங்குமெனவும், தன்பணியில் நீத்தலும் இறைபணியில் நிற்றலும் சாதனமெனவும் கண்ணுக்கு ஒருபொருளைக் காட்டித் தானும் அப்பொருளைக் காணும் உயிர்போல, உயிருக்கு ஒரு பொருளைக்காட்டிச் சிவபெருமானும் கலந்துநின்று அறிந்துவரும் அத்துவிதக் கலப்பை மறவாமல் கடைப்பிடித்தல் வேண்டும் எனவும், அங்ஙனம் ஞானநிட்டை கைவரப்பெற்றவருக்கும் அறிவிச்சை செயல்கள் புறத்தே செல்லுமாயின் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவனெனத் தெளியக்கண்டு வழிபடுக எனவும் கூறும்.

என மொழிந்தார்கள்.

பின்னர் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமவர்கள் ஆசியுரை அருளினார்கள். அஃதாவது,

**செம்மைநெறி யறிந்தொழுகும் சீரியநற் செல்வர்களே!**

திருவும், மெய்ப்பொருளும், செல்வமும் உங்கட்கு மேன்மேற் பெருகுக.

இங்கே இவ்விரு தினங்களிலும் நடைபெற்ற மகாநாட்டில் எங்கள் பரமகுரு முதல்வர் ஸ்ரீ மெய்கண்ட சிவனார் விளக்கி யருளிய வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்த உண்மைகளைக் கற்ற அன்பர்கள் உபந்நியாசஞ் செய்ய அவற்றை மனம் ஒன்றி யிருந்து கேட்டு மகிழ்ந்தீர்கள். இதனால் சைவ உண்மைகளைக் கேட்பதில் உங்கட்கு உள்ள ஆர்வத்தை அறிந்து நாமும் மகிழ்கின்றோம்.

**அன்பர்களே!** சிவஞானபோதம் சிவாகம ஞானபாதப் பொருளின் ஆராய்ச்சி நூலாகும். நமது சமய உண்மைகளை அறிதற்கு இத்தகைய நூல்களைக் கற்றலும், கேட்டலும் உடையார் அவ்வளவின் அமைந்துவிடாமல் அந்நூல்களிற் குறித்த பெரும்பயனைப் பெறுதற்குரிய தவமுஞ் செய்யவேண்டும். தவஞ் சரியை கிரியா யோகங்களேயாம். இத்தவத்தினாற்றான் தம்முதல் குருவுமாய் எழுந்தருளி வந்து ஞானத்தை யறிவுறுக்கும். ஆதலின், தவத்தினைச் செய்து குருவருளால் ஞானம் எய்திச் சிவானந்தப் பெருவாழ்வு பெற்று நீங்கள் எல்லீரும் இன்புற்றிருக்க வேண்டுமென நினைந்து ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானைப் பிரார்த்திக்கின்றோம்.

நம: பார்வதீ பதயே ; அரகர மகாதேவா!
நமோ குருஞான சம்பந்த மூர்த்தியே.

ஸ்ரீ குருபாதம்
திருச்சிற்றம்பலம்

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

அச்சிட்ட அவ்வுரையை ஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் படித்தார்கள். அது எல்லாருக்கும் வழங்கப்பட்டது.

மகாநாட்டின் முடிப்புரையைச் சார்ந்து மகாநாட்டுப் பொது அமைச்சர் **ஸ்ரீ மௌன. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்** முகமன் கூறினர்கள்.

திருநெறித் தமிழ்மறைஇசை இனிதொலித்திட ஸ்ரீமெய்கண்டான் சித்தாந்த மகாநாடு திருவருள் துணைகொண்டு இனிது நிறைவேறியது.

உ

குருபாதம்

தருமபுர ஆதீனத்தில்

# ஆவணிமூலத் திருமுறைத் திருநாள்

31—8—1941.

திருமுறைத் திருநாள் — மூன்றும் நாள் (31—8—1941)



தலைவர்:- கோவை வழக்கறிஞர்,
சிவக்கவிமணி, திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் B. A.,

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

# ஆவணிமூலத் திருமுறைத் திருநாள்

இவ்வரிய திருநாள் அமைந்தது ஆவணிமூலமும் சஷ்டி நாளும் கூடியதாம். இவ்வாவணிமூலத்தினுக்கும் இவ்வாதீனத்தின் ஆத்மார்த்த பூஜாமூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்கும் உள்ள தொடர்பை அன்பர்கள் அறிவார்கள்.

முதலிரண்டு நாட்களில் நடந்தமை போலவே தேவாரப் பாடசாலைக் கட்டிடத்திலிருந்து இன்றைய விழாத்தலைவர் கோவை வழக்கறிஞர் சிவக்கவிமணி C. K. சுப்பிரமணிய முதலியார் B. A., அவர்களையும், முன்னாட்டலைவர்களையும் பல்வகை வாச்சியங்கள் முழங்கச் சிறப்பாக மகாநாட்டு மண்டபத்துக்கு அழைத்துவரப்பட்டது.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமும் திருமுறை முழக்கத்தினிடையே அவைமேடைக் கெழுந்தருளினர். திருவிழாத் தலைவரவர்களும் மற்றையோர்களும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் மகாநாட்டு மண்டபத்தில் எழுந்தருளி வந்ததும் தரிசித்து வணங்கினார்கள். முன்னாட்கள் போலவே தலைவரவர்கள் முதலியோரின் நிழற்படமொன்று எடுக்கப்பட்டது.

இத்திருமுறை விழாவினைச் சிறப்பாகப் பெருமிதமாக்கு மாறு அடங்கன்முறை ஐயா என்னும் வேதாரண்யம் மறைத்திரு. க. அருணாசல ஓதுவாமூர்த்திகளும், அவர் தம் நன் மாணவர்களும், திருநெல்வேலி தமிழ் இசைமணி, மறைத்திரு. சுந்தர ஓதுவாமூர்த்திகளும், மறைத்திரு. கந்தசாமி ஓதுவா மூர்த்திகளும் வந்திருந்து தங்கள் தங்கள் அரும்பணி யாற்றியது குறிப்பிடத்தக்கது.

சமய சந்தான குரவர்கட்கு ஆராதனை நடத்தியதும், தமிழ்மறை ஒலிப்பத் தலைவரவர்களும், ஏனையோரும் தத்தம் இருக்கைகளில் அமர்ந்ததும், ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் திருவுள்ளப்படி ஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் தலைவரவர்களுக்கு வரவேற்புரையினைப் படித்தளித்தனர்.

நிலைமண்டில ஆசிரியப்பா

உலகெலாம் வாழ்ந்திட உயிரெலா முணர்ந்திட
அலகில்சீர் அடியர்கள் அருள்பெற் றோங்கிட
கயிலைப் பதிவளர் கண்ணுத லருள்வழி
பயிலைப் படைத்திடும் பழம்பதி பலவதிற்
கமலையு மதுரையுங் கவின்பெறு தருமையும்
அமல னருள்தரு மருட்பெரும் பதியாம்
ஆலவாய்க் கடவுளை அங்கையிற் பெற்றுச்
சாலநல் லாரூர் சற்குரு அருளாற்
குருஞான சம்பந்தக் குருபர னருள்வழி
வருதரு மைப்பதி வாழ்ந்திட வாழ்பவர்
இவ்வழி யிருபத்து நாலா யெழுந்தருட்
செல்வழிச் சண்முக தேசிகப் பெம்மான்
அருள்வழி கண்டிடுந் திருமுறைத் திருநாள்
அருட்டிரு நாளி லவைப்பதி பூண்டிடக்
கோவைநன் னகர்வாழ் குருபுத்ர சிரோன்மணி
நாவைப் படைத்தசீர் நல்லுணர் வுடையோர்
உலகியல் வழக்கறி உத்தம ரேனுங்
கலகஇவ் வழக்கெலாங் கண்ணுதற் காட்டா
சைவநல் வழக்கே தனிப்பெரு வழக்கெனக்
கைவரப் பெற்றுக் கனிந்துள முருகி
அண்ட வாணர்தம் தொண்டர்சீர் பரவுங்
கண்டநற் சேக்கிழார் விண்டமா புராணப்
பொருளெலாம் விளங்கப் போதமும் விளங்க
அருளுரை விரித்துநல் லகப்பொரு ளுரைப்பவர்
திப்பிய சி. கே. சுப்பிர மணியச்
செப்பிய முதலியார் திருவருட் சைவர்
தமையழைத் தனம்யாந் தகுமெனக் கொண்டே
அமைவுற அவைப்பதி அருளொடு பூண்டனர்.

அறுசீர்க் கழிநெடிலடி லாசிரிய விருத்தம்

ஏராருங் கோவைநகர் தனிலோங்குந் திலகமென
இலங்கு கின்ற
பேராருந் திருத்தொண்டை நாட்டுவே ளாண்மரபிற்
பிறந்து பேரூர்ச்
சீராருந் திருப்பட்டிப் பெருமாற்கு வழிவழியாச்
சிறந்த தொண்டு
நேரார வியற்றுகந்த சாமியருள் புத்திரனே!
நியம வேந்தே! 1

அச்சமில்சுப் **பிரமணிய** நாமத்தை விதிமுறையே
யழகாப் பெற்றோய்!
விச்சையிற்செந் தமிழ்வல்லோய்! மெய்த்தொண்டர் புகழ்சரிதம்
விளம்பும் நாவோய்;
அச்சமற அரசரவை யாங்கிலத்தில் வழக்குரைக்கு
மந்தண் மேன்மைப்
பொச்சமில்சத் தியமொழியாய்! சிவபூசைப் பெருந்தகையிற்
பொலிவுற் றோயே! 2

வளமலிந்த தில்லைநகர்ச் சிற்சபையில் நடனமிடும்
ஞான வள்ளற்
குளமலிந்த வன்பினனே! "**உலகமெலா**" மெனத்தொடங்க
வுவப்பி னேடும்
அளவில்புகழ்ச் சேக்கிழாற் கருளியவன் **இராசசபை**
யதனி லன்பர்
விளவரிய தில்லைவா ழந்தணர்கள் பலர்சூழ
மேவுற் றம்மா. 3

திருத்தொண்டர் புராணவுரை செயத்தொடங்கித் திருவருளான்
செப்ப மாக
அருத்தநயம் அன்புநயம் தொண்டுநயம் சைவநயம்
அநாதி சுத்தக்
கருத்தனருள் ஞானநயங் கலந்திலக வன்புருவாய்க்
கனிவின் மிக்குப்
பொருத்தமுறப் பொழிந்தெழுதும் புண்ணியசுப் **பிரமணியப்**
புலவ ரேறே! 4

பெருகுசைவ சித்தாந்தப் பெருநூலுந் திருமுறையும்
　　பேணும் ஞான
உருவினனே! நமதுமடா லயத்தின்று திருமுறையி
　　னுயர்வி யாவுங்
கருமையுடன் நடைபெறும்பே ரவைத்தலைமை வகித்துதிரு
　　முறைசார் பாக
வருமொழிகள் செவியேற்று விரிவுரையாய்ச் சிவமொழிகள்
　　வழங்கு வாயே. 5

தருமைநகர்க் குருமூர்த்தி சந்நிதியிற் சான்றோர்கள்
　　தங்கள் தங்கள்
உரியவுரை நயமொடுரை திருமுறையின் சொன்மழைக
　　ளுள்ளங் கொண்டே
பெரியவுரை பொங்கவுரை பொழிந்திடெனப் பூதலத்தோர்
　　பேசு முன்றன்
அருமைதனை யிச்சபையில் யாவர்களு மினிதுணர
　　வாற்று வாயே 6

கோவைநகர்க் குலமணியே! சுப்பிரமணிய நாமக்
　　குணக்குன் றன்னாய்!
பாவினிய சுவைசிவணத் திருமுறையை விதிப்படியே
　　படிப்போய்! நாங்கள்
நாவினிய மொழிகேட்க நமதுதிரு முறைவிழவின்
　　னாளே யெங்கள்
தேவினிசூ வணிமூலத் திருநாளென் றுனையழைத்தேஞ்
　　செம்மை யாலே. 7

நிலைமண்டில ஆசிரியப்பா

திருமுறைத் திருநாட் சிறப்பொடு விளக்கி
ஒருமுறைக் கிருமுறை மும்முறைக் கிருமுறைப்
பெருமறைப் பொருளெலாம் பேசிட வருக!
வருமருட் பெருக்கெலாம் பேசிட வருக!
குருவருட் பெற்றநற் குமரனே வருக!
திருவருட் செல்வராஞ் செம்மலே வருக!
வருக! நின் வரவே நல்வர வாகுக!!
வருக! நல் லருள்வழி வாழ்க! வாழ்ந் திடவே!!

அச்சிடப்பெற்ற இவ்வரவேற்புரை அவையில் வழங்கப் பெற்றது.

தலைவரவர்கள் முன்னுரையிலே திருமுறைகளின் அருஞ் சிறப்பினையும், அத்திருமுறைநாள் அமைந்துள்ள நாளின் உயர்வையும், திருமுறைகளில் அடங்கியுள்ள அரும்பொருள் களின் மேன்மையையும், வேறு பல புதிய கருத்துக்களையும் கேட்போர் பிணித்துக் கேளாரும் வேட்பக் கீழ்க்காணுமாறு மொழிந்தனர்.

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி;
ஆழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி;
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி;
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

தில்லைவா ழந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி
ஒல்லையவர் புராணகதை யுலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழா ரடிபோற்றி.

மனத்தகத்தான் தலைமேலான் வாக்கி னுள்ளான்
வாயாரத் தன்னடியே பாடுந் தொண்டர்
இனத்தகத்தா னிமையவர்தஞ் சிரத்தின் மேலான்
ஏழண்டத் தப்பாலா னிப்பாற் செம்பொன்
புனத்தகத்தா னறுங்கொன்றைப் போதி னுள்ளான்
பொருப்பிடையா னெருப்பிடையான் காற்றி னுள்ளான்
கனத்தகத்தான் கயிலாயத் துச்சி யுள்ளான்
காளத்தி யானவனென் கண்ணு ளானே.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானங்களின் திருவடிகட்கு எனது வணக்கம் உரித்தாகுக. இந்த மகாசபையில் வீற்றிருக்கும் பெரியோர் சமுக மனைத்தினுக்கும் எனது வணக்கம் உரியது.

சைவத் தெய்வத் திருமுறைப் பெருவிழாக் கொண்டாடும் இப் பெருந் திருக்கூட்டத்தில் தலைமை தாங்கும்படி என்னைப் பணித்த உங்கள் பெருங்கருணைக்கு நான் நன்றி செலுத்துகின்றேன். இந்தப் பெரும்

பணியாற்றுவதற்கு நான் சிறிதும் தகுதியுள்ளேனல்லேன் என்பதனை நான் நன்கறிவேன். நீங்களும் அறிந்திருப்பீர்கள். ஆயினும் உங்கள் பெருமையினால் என் சிறுமையைப் பொறுத்து என்னைத் தகுதியுள்ளவனாக ஆக்கத் திருவுள்ளங் கொண்டீர்கள். அடியேனும் உங்கள் ஆணையை மறுக்க அஞ்சி நீங்கள் இட்ட பணியைச் சிரமேற் றாங்கி அமர்வதாயினேன். "நம்மையுமோர் பொருளாக்கி நாய் சிவிகை ஏற்றுவித்த, அம்மையெனக் கருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே" என்ற திருவாக்கு என் நினைவுக்கு வருகின்றது.

## முன்னுரை

தமிழும், சைவமும், திருமுறைப் பெருமையும் விளங்கி நன்மை தருவதற்குரிய நல்ல காலம் இப்போது தோன்றி வருகின்றதென்று நான் நம்புகின்றேன். சைவப்பணியும், தமிழ்ப்பணியும் தனித்தனிப் பெரியார்கள் செய்து வந்த சேவையினைச் சில காலமாக அங்கங்குக் கூடிவந்த சபைகள் செய்யத் தொடங்கின. ஆனால் அத்திருப்பணிகளைச் செய்தற்குக் கடமையும், உரிமையும், வாய்ப்புங் கொண்டுள்ளவை இத்தகைய ஞானாதீனங்கள் ஆகும். ஞான ஆதீன குருமகா சந்நிதானங்கள் இவ்வாறு ஞான சாத்திர மகாநாடும், திருமுறை மகாநாடும் கூட்டி வைத்தது நமது சைவ நாட்டுச் சரித்திரத்தில் இதுவே முதல் முறையாகும் என்று நம்புகின்றேன். கடவுட்கொள்கை நிரம்பியது நமது நாடு. இதனுள் "மாதவஞ்செய்த தென்றிசை" என்பது நந்தம் தமிழ்நாடு.

இதில் சமய ஞானம் பரப்பி நலஞ் செய்வதற்கமைந்த தாபனங்கள் இரண்டு. அவை திருக்கோயில்களும், மடாலயங்களும். இவை யிரண்டினையும் காத்தற்குரிய தலைவர்கள் கூடி யியங்கச் செய்யும் இந்த மகாநாடு தனிச் சிறப்புடையதாகும். கோயில்கள் எங்கும் திருவிழாக்கள் போட்டி யிட்டுக்கொண்டு இப்போது சமய அறிவு பரப்பும் சொற்பொழிவுகளுக்குரிய நிலைக்களங்களாகத் தொடங்கிவிட்டன. வாண வேடிக்கை, சதிர், பாட்டு, ஆட்டம் முதலிய வறிய அமைப்புக்கள் சிறிது சிறிதாக மறையத் தொடங்கிவிட்டன. நூல் நிலையங்களும் திருக்கோயில்களில் தலைநீட்ட முற்படுவன என்றால் கோயில்கள் ஞானம் பரப்பும் இடங்களாகமாற ஆரம்பித்திருப்பன என்பதில் ஐயமுண்டோ? மடாலயங்கள் வழிவழியாகப் பரமஞானங்களைப் பக்குவ ஆன்மாக்களுக்குப் பாரம்பரியமுறையில் உபதேசம் செய்யும் குருமார்களின் இடங்கள். அவைகள் அம்முறையில் மீளவும் தொடங்கியுள்ள நிலைக்கு இந்த

மகாநாடே சான்றாகும். ஆனால் இவை தொடக்கத்தினையே காட்டு கின்றன. இந்த இருதிறத்தின் காவலர்களும் செய்ய நின்ற பெரும் பணிகள் பல உள. அவற்றிற் சிலவற்றை இந்த உரையின் இறுதியிற் குறிப்பேன்.

## தமிழ்

தமிழ், தனிமொழி; நிரம்பிய இலக்கண வரம்புடைய மொழி; தூயமொழி; பழையமொழி; தெய்வமொழி; தெய்வத்தால் வளர்க்கப் பட்ட மொழி; தெய்வத்தைக்காட்டும் மொழி. "அதனை ஞாலமளந்த மேன்மைத் தெய்வத்தமிழ்" என்று பாராட்டினர் சேக்கிழார் நாயனார். அக்கருத்தைப் பின்பற்றிக் கம்பரும் "நீண்டதமி ழாலுலகை நேமியின ளந்தான்" என்று தமிழ் முனிவராகிய அகத்தியனார் தமிழினால் உலகங் களை யெல்லாம் அளந்து நிலையிட்டனர் எனப்போற்றினர். இவை எல்லாவற்றுக்கும் மேலாய் இறைவனுக்கு ஆளாகும் நெறியில் மக்களைச் செலுத்தவல்ல மொழி என்று அத்தன்மையினையே குறிப்பித்தும் சிறப் பித்தும் அருளினர் திருநாவுக்கரசு நாயனார். அதுவே தமிழின் சிறப் பிலக்கணமாம்.

## சைவம்

இனித் தமிழின் அந்தச் சிறப்பினால் அறியப்படுகின்ற சைவத் திறத்தினைப்பற்றி எண்ணுவோமானால் சிவனுடன் சம்பந்தமாயது சைவம் என்பர். சிவன் அநாதியாயுள்ளவன். காலங்கடந்தவன். ஆதலின் அவரது சம்பந்தமும் அநாதி. அந்த அறிவை வெளிப்படுத்தும் இறை வனது வாய்மொழிகளும் பழங்காலத்தன. திருமூல நாயனார் சரிதம் இதை விளக்கும். அணிமையில் வடஇந்தியாவில் மொகஞ்சொதரோ முதலிய சிந்து நதிக்கரையிற் கண்டுபிடித்த செய்திகளால் சைவமும், சைவ வழிபாடும் 6000-ஆண்டுகளுக்கு முன் அந்தப் பகுதியிற் பரவி யிருந்தது என்றும்; தமிழ்மொழி போன்றது அந்தப் பழங்காலத்து மொழி என்றும் கருதப்படுகின்றன.

"காது பொத்தரைக் கின்னர ருழுவை
கடிக்கும் பன்னகம் பிடிப்பரும் சீயம்
கோதின் மாதவர் குழுவுடன் கேட்பக்
கோல வானிழற் கீழறம் பகர" (தக்கேசி நின்றியூர்-6)

"இயக்கர் கின்னரர் யமனொடு வருணர்
இயக்கு தீவளி ஞாயிறு திங்கள்
மயக்க மில்புலி வானர நாகம்
வசுக்கள் வானவர் தானவ ரெல்லாம்
அயர்ப்பொன் றின்றிநின் றிருவடி யதனை
யர்ச்சித்தார் பெறும் ஆரூர்"

(திருப்புன்கூர் - 6)

என்பன முதலிய ஆளுடைய நம்பிகள் தேவாரங்களுக்குரிய திருவடிவங்கள் அங்குக்காணப்பட்டன. இறைவன் ஒருவன் உண்டு. அவனால் அருள்செய்யப்பெறும் உயிர்களும் உண்டு. அந்த உயிர்களைக் கட்டிய பாசமாகிய நோயும் உள. அந்தநோயைத் தீர்க்க இறைவன் உயிர்களுக்கு உடம்பு, கரணம் முதலியன வற்றையும், உலகபோகங்களையும் தருகின்றான். இறைவனை இன்னின்ன வகையால் உணர்ந்து அடையலாம், அவ்வாறு அடைந்தால் இன்னபயன் என்பன எல்லாம் அவன் வாய்மொழிகளாகிய ஆகமங்கள் பேசும். அவற்றைத் தமிழில் எடுத்துரைப்பன மெய்கண்ட சாத்திரங்கள். அவற்றைப் பற்றி, சென்ற இரண்டு நாட்களும் பல அறிஞர்கள் பேசியுள்ளனவற்றை நீங்கள் கேட்டிருக்கின்றீர்கள். ஆதலின், மேலும் நான் அவற்றை விரிக்க வேண்டா. முன்னே குறித்தபடி உலகத்தையும், உயிர்களையும், அவற்றுக்கு அருள்புரியும் இறைவனையும் அளந்து நிச்சயிக்கும் தமிழ் என்றால் அது இவையே தாம் என்பேன்.

## திருமுறைகளின் பெருமை

இலக்கணவகையாற் கூறப்படும் இறைவன், உயிர், உலகு என்ற மூன்றினையும் பற்றி இலக்கிய வகையால் அனுபவத்திற் காட்டுவன சைவத்திருமுறைகளாவன. அவை திருஞானசம்பந்த நாயனார் அருளிய தேவாரங்கள் முதலாகப் பெரியபுராணம் ஈறாகப் பனிரண்டாகப் பெரியோர்களால் வகுக்கப்பட்டுள்ளன. அவையே திருமுறைகள் எனப்படுவது உயர்ந்தோர் மரபு. தொல்காப்பியம் மரபியலில் விதித்தபடி அப்பொருளுக்கு அதுவே சொல்; அச்சொல்லுக்கு அதுவே பொருள். இவ்வாறல்லாது வேறு எந்த நூல்களைத் திருமுறை என்று சொன்னாலும் அது மரபுக்கும், வழக்குக்கும் வழுவாம் என்று துணிந்து கூறுவேன். இந்தப் பனிரெண்டனையும் அருளிய ஆசிரியன்மார்கள் திருஞான சம்பந்தநாயனார் முதல் சேக்கிழார் நாயனார் வரை இருபத்தெழுவராவர். அவருள்ளே திருவாலவாயுடைய பெருமானும் ஒருவர். அவர் நேரே

பாடியருளியது பதினொராந் திருமுறையின் முதற் பாசுரமாகிய **மதிமலி புரிசை** என்ற திருப்பாட்டு. ஏனைய திருமுறைப் பகுதிகளை அருளியவர்களாகிய இருபத்தறுவரும் தாமாக அவற்றைச் செய்தனரல்லர்; திருவருளில் மூழ்கித் திளைத்து நின்று தம்மை மறந்து இறைவனையே நினைந்து பாடியருளினர். ஆதலின் அத்திருப்பாட்டுக்களே அருட்பாக்கள் எனப்படும். அவை அருளினுற் பாடப்பட்டவையும், அருளைத் தேடித் தரத்தக்கவையுமாம். "எனதுரை தனதுரையாக" என்றருளினர் ஆளுடைய பிள்ளையார். "இம்மையே தருஞ் சோறுங் கூறையும் ஏத்தலா மிடர் கெடலுமாம், அம்மையே சிவலோக மாள்வதற்கு யாதுமையுறவில்லையே" என்று ஆளுடைய நம்பிகள் உறுதியாகக் கூறியருளினர். உலகநிலை யின்பங்கள் எல்லாம் தரவல்லவை இந்தத் திருமுறைகள். இந்தப் பாடல்கள் பாடப்பட்டு ஆயிரக் கணக்கான ஆண்டுகளாயின. அப்போது என்ன பயனை விளைத்தனவோ அந்தப் பயனை இன்றைக்கும் அவ்வவர் பக்குவத்துக்குத் தக்கபடி தந்துகொண்டேயிருக்கின்றன. வேண்டுவோர் வேண்டுவனவற்றை வேண்டியபடி அளிக்கும் கற்பகம் போன்றுள்ளன திருமுறைகள் என்ருல் அது முழுவுண்மையே யாகும்.

## நமது கடமை

தமிழ் இணையற்ற மொழிதான். தமிழிற் பேசப்படும் சைவமும் மிகப் பழயதும் பெரியதும் தான். திருமுறைகளின் பெருமையோ சொல்லவரியது. ஆயின் அவற்ருல் நாம் எவ்வளவு பயனடைகின்ருேம்? எவ்வளவிற்குக் காத்து வளர்க்கின்ருேம் என்று சிறிது சிந்திப்போமானல் அது ஒரு வருத்தமான கதையாய் முடியும். தமிழுக்கு உட்பகையும், புறப்பகையும் மிகுந்து வருகின்றன. ஒண்ட வந்த பிடாரி ஊர்ப்பிடாரியைத் துரத்தியதென்ற பழமொழி இதற்கே தகும். வடமொழியும், ஆங்கிலமும் முதலிய பிறமொழிகளின் உதவியின்றித் தமிழில் கலைஞானங்களை அறிவிக்கமுடியாதென்று சொல்லவும் சிலர் துணிந்துவிட்டார்கள். தமிழ்நாட்டில் எல்லோரும் தமிழ் கற்கவேண்டுமென்று சொல்லவும் அச்சமாயிருக்கின்றது. தமிழ் மகன் தமிழை மறந்தான். அவனை மறக்கும்படிச் செய்த காரணங்களும் பல. சைவத்திறமோ என்ருல் ஆகமமும், திருமுறைகளும், சாத்திரங்களும் படிப்பவர் சிலரே. அனுபவிப்பவர் அதிலும் சிலரே. சைவன் என்ருல் சாதிச்சைவனை மட்டும் இடுகுறியாகக் குறிக்க நேர்ந்துவிட்டது. சமயச் சைவனைக் காண்பதோ அரிது. திருநீறுங் கண்டிகையுமாகிய சிவசாதனங்களை அணிவது அருகி வருகின்றது. திருநீற்றுக்கு இடந்தராத சைவர்

என்போர் வீடுகளும் உள. திருமுறைகளைப் பாராட்டியும், பயின்றும் பழகுபவர் சைவருள் ஆயிரத்து ளொருவராக எண்ணும்படி அருகி வருகின்றது.

## ௬௭௭

தமிழில் பேசுவதும் எழுதுவதும் அதனைப் பயில்வதுமே நமது உரிமையும் கடமையும் என்ற எண்ணம் நம்முள் ஊறவேண்டும். இது பற்றி வடநாட்டில் உள்ள வங்காளியரை நாம் பின்பற்றுதல் நலந் தரும். தமிழும் சைவமும் பிரிக்கக் கூடாதபடி இணைக்கப்பட்டுள்ளன. தமிழை வளருங்கள்; தமிழை வளர்த்தால் சைவம் வளரும்; சைவத் தமிழ் இறைவனுக் காட்படுத்தும் தமிழாம். ஏனைத் தமிழ்கள் பொரு ளன்று "வாயிருந் தமிழே படித்தாளுறு, ஆயிரஞ்சமணும் மழிவாக்கினன்" என்பது அப்பர் சுவாமிகள் திருவாக்கு. "தமிழ் வளர்ப்போம்" என்று சொல்லி உயிர்களை உருவாக்காத முயற்சிகள் செய்வது பயனுடைய தாகாது.

திருமுறைகளை யாவரும் பயிலுதல் வேண்டும்; பயிலச் செய்தலும் வேண்டும். திருமுறைகள் ஏறக்குறைய 18090 திருப்பாட்டுக்கள் கொண்டன. நாள் ஒன்றுக்கு 50 பாட்டுக்கள் படித்து வந்தால் ஒரு ஆண்டில் முடிக்கலாம். தமிழும் சைவமும் ஒருங்கே வளர்ப்பதற்கு இது ஒரு நல்வழி. திருமுறை வளரத் தமிழும் வளரும்; சைவமும் வளரும். எழுதாமறை என்னும் வேதங்களை இமயமலை முதல் குமரி வரை ஒன்று போலவே நினைவிலிருந்தே ஓதுகின்றார்களே! நமது திருமுறைகளையும் நாம் ஏன் அவ்வாறு ஓதிப் பயிலக்கூடாது? ஒவ்வொரு சிறுவனும் 100 திருப்பாட்டுக்களாகப் பாடம் செய்யக்கூடிய வகையில் 40 சிறுவர் களைப் பயிற்றினால் திருத்தொண்டர் புராணத்தை முழுதும் மனப்பாட மாகத் தொடர்ந்து ஒப்புவிக்கச் செய்யலாம். கோயில்கள் திருமடங்கள் எங்கும் தேவாரத் திருமுறைப் பள்ளிக்கூடங்கள் நிறுவவேண்டும். இந்த மகாநாடு போன்ற கூட்டங்கள் மாபெரும் பயன்விளைக்க வல்லன; கோயில்களிலும் மடங்களிலும், பணிசெய்யவருவோரும், உத்தியோகம் பெறுவோரும், முன்னரே பெற்றுள்ளோரும் சைவம் சைவச் சரியையிற் றொடங்கி மக்களைப்பழகி வரச்செய்யப் பயின்றவராக இருக்கும்படி விதி செய்வோமானால் நமது சைவமும் தமிழும் எத்தனை விரைவில் ஓங்கி வளரும் என்பதைச் சிறிது சிந்தித்தால் நன்கு விளங்கும். முகம்மதியர், கிறித்துவர், புத்தர் முதலிய புறச்சமயத்தவர் நிலையங்

களேயும், அவர்கள் தமது சமயங்களே நிலேநாட்டிப் பரப்பும் வழிகளேயும் பார்த்தாவது நாம் சிந்திக்க வேண்டாமா? இங்கு நான் **சைவம் என்பது** சாதிச் சைவமன்று. சமயச் சைவத்தையே பேசுகின்றேன்.

ஆனல் சைவ வுலகத்துக்கு—ஏன்? 'வேந்தனு மோங்குக—எல்லா மரன் நாமமே சூழ்க வையக முந்துயர் தீர்கவே' என்ற அருள் வாக்கின்படி உலகமெல்லாவற்றுக்கும்—நன்மை மிகவுளதாகும் காலம் விரைவில் வருகின்றதனுக்கு இந்த மகாநாடே போதிய சான்ருகும்.

இந்த மகாநாட்டைக் கூட்டியருளத் திருவுள்ளத்தடைத்த திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் 24-வது பட்டம் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக மூர்த்திகளது** நன்முயற்சிகள் யாவும் நற்பயன் தந்து தழைத் தோங்குக! தமிழ் தழைக்க! சைவம் விளங்குக! 'தேசமெலாங்குரவை யிடத் தமிழ் வேதம் விரித்தருளும் கவுணியர் தங்குல தீப'த்தின் தேசுஒளி எங்கும் பரவுக!

என்று மின்பம் பெருகு மியல்பின<br>லொன்று காதலித் துள்ளமு மோங்குக<br>மன்று ளாரடி யாரவர் வான்புகழ்<br>நின்ற தெங்கு நிலவி யுலகெலாம்.

திருச்சிற்றம்பலம்.

முதல் திருமுறையைப்பற்றிச் சென்னே சைவசித்தாந்த மகாசமாஜக் காரியதரிசி, திரு. **ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் B. A. B. L., :—**

-

எனக்கு இங்கே பேசுவதற்குப் பணித்துள்ள பொருள் முதல் திருமுறையாகும். இது திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த தேவாரத் திருமுறைகள் மூன்றனுள் முதலாவதாக விளங்குவது. இதில் 1469 பாடல்கள் உள்ளன. இவை 136 திருப்பதிகங்களாகவும் 8 பண்களாகவும் வகுக்கப் பட்டுள்ளன. இவ்வெட்டுப் பண்களும் அவற்றுக்குள்ள பதிகங்களும் கீழ்வருவனவாகும்:—

நட்டபாடை-22, தக்கராகம்-24, பழந்தக்கராகம்-16, தக்கேசி-13, குறிஞ்சி-28, வியாழக்குறிஞ்சி-25, மேகராகக்குறிஞ்சி-7, யாழ்மூரி-1 ஆக 136

இம்முதற்றிருமுறையுள் **தோடுடைய செவியன், மடையில்வாளை, துணிவளர் திங்கள், அவ்வினைக் கிவ்வினை, வாசிதீரவே, போகமார்த்த பூத்தேர்ந்தாயன, மாதர்மடப்பிடி** என்று முறையே தொடங்கும் எட்டு அற்புதத் திருப்பதிகங்கள் உள்ளன. இவை முறையே ஞானப்பாலுண்ணல்; பொற்றாளம் பெறுதல்; முயலகன் தீர்த்தல்; விஷசுரம் தீர்த்தல்; வாசிதீரக் காசுபெறுதல்; அனல்வாதத்திலிட்ட ஏடு பச்சென்றிருத்தல்; ஆண்பனை பெண்பனையாதல்; யாழ்மூரி பாடுதல்; ஆகிய அற்புதங்கள் நிகழ்ந்தபோது திருவாய்மலர்ந்தருளப் பெற்றவையாகும்.

**தேவாரம்** என்ற பெயர் முதல் ஏழுதிருமுறைகட்கும் வழங்கப் படுகிறது. இப்பெயர் பெரிய புராணத்திலேனும், அதற்கு முற்பட்ட பட்டினத் தடிகள், நம்பியாண்டார் நம்பிகள் முதலியோர் திருவாக்கிலேனும் யானறிந்த வரையில் காணப்படவில்லை. சேக்கிழார் காலத்துக்கு முந்திய கல்வெட்டொன்றில், முதல் இராசாதிராச சோழனது 27-வது ஆட்சியாண்டில் (அதாவது கி. பி. 1066 ல்), திருச்சிராப்பள்ளி ஜில்லா அல்லூரிலுள்ள கோயிலில் திருவடகுடி மஹாதேவர் ஸ்தான மடம் **தேவாரத்துக்குத் திருப்பதியம்** விண்ணப்பஞ் செய்யும் அம்பலத்தாடி திருநாவுக்கரையனுக்கும் இவன் வர்க்கத்தார்க்கும் நிலம்விட்ட குறிப்பொன்று காணப்படுகிறது. **தேவாரம்** என்ற சொல் பலவகையாகப் பிரிக்கப்பெற்றுப் புலவர்களால் பலவகையான பொருள்களையுடையதெனக் கூறப்படுகிறது. இப்பொருள்களுட் சிறந்தது (தே=கடவுள், வாரம்=அன்பு) கடவுளிடத்தில் அன்பைச் செலுத்துவது என்பதை இக்கல்வெட்டு ஆதரிப்பது போலக் காணப்படுகின்றது. **தேவாரத்துக்குத்** திருப்பதியம் விண்ணப்பஞ்செய்தல் என்ற கல்வெட்டின் வாசகம் கூர்ந்து நோக்கற்பாலது. இக்கல்வெட்டு (S. I. I. Vol. 8 No. 675) அரசாங்கத்தாரால் வெளியிடப்பட்டுள்ளது.

சேக்கிழார் காலத்துக்குப் பின்பும் நெடுநாள் "தேவாரம்", என்ற சொல் மிகுதியாக வழங்கப்படவில்லை யென்பது நூற்றுக்கணக்கான கல்வெட்டுக்களில் இச்சொல் வாராமை, இதற்குப் பதிலாகத்

திருப்பதியம், பெரிய திருப்பாட்டு என்ற சொற்களே காணப்படு கின்றமை முதலிய காரணங்களால் அறியப்படும். கும்பகோணம் தாலூகாவிலுள்ள முன்னியூர் அகத்தீசுவரர் கோயிற் கல்வெட் டொன்றில் (S. I. I. Vol. 8 No. 205) மூன்ரும் ராஜராஜ சோழனுடைய 27-வது ஆட்சி யாண்டில் (கி. பி. 1245ல்) சீகாழியில் "**திருமுறைத் தேவாரச் செல்வன் திருமடம்**" என்ற ஒன்று இருந்த செய்தி குறிக்கப் பட்டுள்ளது. நாளடைவில் **தேவாரம்** என்ற சொல் வெகுஜன வழக்கில் கையாளப்பட்டு முதல் ஏழுதிருமுறைகளைக் குறிப்பதற்குப் பயன் பட்டது. சிவப்பிரகாசத்துக்கு உரையெழுதிய மதுரைச் சிவப்பிரகாசர் காலத்தில் இச்சொல் இத்திருமுறை ஏழையும் குறிக்கவே பயன்பட்ட தென்பது அப்பெரியார் எழுதிய உரையில் இது இவ்வாறு வழங்கப் பட்டுள்ளதிலிருந்து நன்கு புலனாகும். இப்பெரியார் காலம் கி. பி. 1475 எனலாம்.

இம்மட்டில் **தேவாரம்** என்ற பெயரின் ஆராய்ச்சியை நிறுத்தி முதற்றிருமுறையுட் கூறப்பட்டுள்ள செம்பொருள்கள் சிலவற்றைக் காணலாம். தேவாரத்துக்கு உரைகாண்பதற்குச் சிறந்த துணையாக வுள்ளது பெரியபுராணம். திருஞானசம்பந்தர் தமது பதிகங்கள் ஓவ் வொன்றிலும் இராவணன் கைலையை எடுக்கமுயன்று நசுக்குண்டு சாமம் ஓதி உய்ந்தது, அரியும் அயனும் தம்முள் தருக்கி அனற்பிழம் பின் அடிமுடிகாணுது தோற்றது, அமணர் புத்தர் அவமொழிகூறி அவநெறி நிற்பது, தேவாரம் அரனடியில் ஆன்மாவைச் சேர்ப்பது ஆகிய செய்திகளை முறையே 8, 9, 10, 11-ம் பாசுரங்களில் வைத்தோது வதின் உட்கருத்தைச் சேக்கிழார் மிகஅழகாக "மண்ணுலகில் வாழ் வார்கள் பிழைத்தாலும் வந்தடையின் கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளும்" "தொழுவார்க்கே அருளுவது சிவபெருமான்" "சமண்கையர் புத்தர்வழி பழியாக்கும் ஏதமே" என்று கூறுகிறார். ஆற்றில் எதிர்சென்ற பதிகத்தின் பொருளை மிகவிரிவாகச் சேக்கிழார் கூறுவது அன்பர்கள் நினைவிலிருக்கும். திருவாலங்காட்டுப் பதிகத்து முதற்பாட்டின் முற்பகுதியிற் கூறப்பட்டுள்ள செய்தி பெரிய புரா ணத்தின் துணைகொண்டல்லது விளங்காது. காரைக்காலம்மையார் தலையாலே நடந்து சென்ற தலத்தைத் தாம் மிதிப்பதற்கஞ்சித் திரு ஞானசம்பந்தர் திருவாலங்காட்டின் எல்லைக்கு வெளியே தங்கினர். அவர் நித்திரையிற் கனவில் ஆலங்காட்டப்பன் தோன்றி "நம்மை அயர்த்தனையோ பாடுதற் கெ"ன்றருள் செய்தான் இவ்வாறு பெரிய புராணத்துட் கூறப்படுவதை அறிந்தாலன்றி இத் தலத்தேவாரத்துட்

காணப்படும் "துஞ்சி வருவாரும் தொழுவிப்பாரும் வழுவிப்போய் நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரும்" என்ற தொடரின் பொருள் விளங்காது.

ஆளுடையபிள்ளையார் அம்மை திருமுலைப்பாலருந்தியவுடன் திருஞானசம்பந்தராகித் தமது தந்தையாருக்குச் சுட்டுணர்வுக் கெட்டாத பரம்பொருளைக் கைவிரலாற் சுட்டிக்காட்டி அடையாளங்களோடு உணர்த்தியது முதல் திருப்பதிகம். தம்பாடல் பரமர்பால் செல்லு முறை பெறுவதற்குத் திருச்செவியை சிறப்பித்துத் **தோடுடைய செவியன்** என்றெடுத்தாரெனச் சேக்கிழார் கூறுவது நமக்குப் பேருவகை தருகின்றது. இப்பாட்டில் ஐந்தொழிலும் கூறப்பட்டிருத்தல் முதலிய நுட்பங்களை அறிஞர் பன்முறை பயின்றிருப்பர். இப்பதிகத்தின் திருக்கடைக்காப்பில் தமது வாக்கைத் திருஞானசம்பந்தர் **திருநெறியதமிழ்** என்பது என்றும் நினைவிலிருத்தற்குரியது. பன்னிரு திருமுறைகளையும் **திருநெறித்தமிழ்** என்று கூறும் வழக்கத்துக்கு இதுவே சிறந்த ஆதாரம். இம்முற்பதிகத்திலேயே தமது மூன்றும் வயதில் சாக்கிரத்தே அதீதத்தைப் புரியும் சாமுசித்தராக விளங்கிய கவுணியர்கோன் "ஏர்பரந்த இனவெள்வளைசோர என துளங்கவர்கள்வன்" என்று அகத்துறையிற் பாடியதைப் பயிலுந்தோறும் நாம் பரவசமாவது திண்ணம்.

நேற்றும் முன் தினமும் சிவஞான போதத்துச் சூத்திரங்கள் பன்னிரண்டின் நுட்பங்களையெல்லாம் கண்டோம். இவையனைத்தையும் தேவாரத்துட் காணலாம். தேவாரத்துக்கும் சிவஞான போதத்துக்கும் உள்ள தொடர்பை ஒரு பழம் பாடல் மிக அழகாகக் கூறுகின்றது. அது கீழ் வருமாறு:—

> வேதம்பசு அதன்பால் மெய்யாகமம் நால்வர்
> ஓதுந்தமிழ் அதனின் உள்ளுறுநெய்—போதமிகு
> நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டான்
> செய்ததமிழ் நூலின் திறம்

வேதசிவாகமங்களின் உட்கருத்தை வெண்ணெய்போற் கடைந்தெடுப்பது தேவாரம். அவ்வெண்ணெயின் சிவமணத்தை நன்குணர்த்துவது சிவஞானபோதம். தேவாரப்பாடல் ஒவ்வொன்றிலும் சிவஞானபோத சூத்திர அதிகரணப் பொருள்கள் சிலவற்றைக் காணலாம். முதற் றிருமுறையிலுள்ள **திருஏழுகூற்றிருக்கை** என்ற திருப்பதிகம் சிவஞான

போத சாரம் என்று கூறத்தக்கது. "நாளும் இன்னிசையாற் றமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்" என்று நம்பியாரூரர் வாயாரப் புகழ்ந்தார். இங்கு **தமிழ்** என்ற சொல் தமிழ் மொழியை மட்டுமன்றி இனிமை, ஞானம் முதலியவற்றையு முணர்த்துமென்று ஆன்றோர் கூறுவர். ஒவ்வொரு பாட்டிலும் ஆழ்ந்த சமயக் கருத்துக்களைவைத்து இசைப்போர்வையிட்டு, மருத்துவன் கசப்பின்மேல் வெல்லம்வைத்து மாத்திரையாக்கித் தருவதுபோலவே நமது சமயகுரவர் தந்துள்ளார்.

> ஈறாய்முதல் ஒன்றாய் இருபெண்ஆண் குணமூன்றாய்
> மாறாமறை நான்காய் வருபூதம் அவைஐந்தாய்
> ஆறார்சுவை ஏழோசையொ டெட்டுத் திசைதானாய்
> வேறாய்உடன் ஆனான்இடம் வீழிம் மிழலையே

இப்பாட்டு முதற்றிருமுறையில் நட்டபாடைப் பண்ணிலுள்ள திருவீழிமிழலைப் பதிகத்து இரண்டாவது பாசுரமாகும்.

கடவுள் சொரூப தடத்தலக்கணங்கள், உலகெலாமாகி வேறாய் உடனாய் நிற்கும் நிலை, ஒன்றாய்ப் பலவாய் அந்தமாய் ஆதியாய் நிற்றல், அத்துவைதச் சொல்லின் பொருள், வியாபக வியாப்பியம் முதலிய பலநுண்பொருள்கள் இப்பாசுரத்துட் புதைந்து கிடக்கின்றன. பேரறிஞர்கள் இப்பாட்டொன்றிலேயே பலசூத்திரப் பொருள்களையும், பல அதிகரண நுட்பங்களையும் வைத்துப் பொருள் கூறுதல் இயலும்.

இயற்கை வனப்பையும் வளங்களையும் மிக அழகாக வருணிப்பதில் திருஞானசம்பந்தர் பேராற்றல் வாய்ந்தவர். ஆங்கிலத்திலுள்ள வோர்ட்ஸ் வொர்த் (Wordsworth) முதலிய கவிகளின் இயற்கைப் பாடல்களைவிட இவர் பாடல்கள் மிகுந்த சுவையுள்ளன. சமணர்கள் புலன்களை அடக்கும்வழி யென்றெண்ணி இயற்கை வனப்பையும் வளங்களையும் நுகர்தலாகாதென்ற கொள்கையுடையவர்கள். இக்கொள்கை சைவர்களுக் குடன்பாடன்று. ஐம்புலன்களையும், அவை செல்லும் வழியில் விடாது, மடைமாற்றிக் கடவுள் திருவருள்நெறியிற் செலுத்தி இயற்கையின் வனப்பைத் திருவருள் விலாசமாகக்கண்டு நுகர்வதே சைவஒழுக்கம். இக்கருத்தை உட்கொண்டே திருஞானசம்பந்தர் ஒவ்வொருதலத்தின் பேரழகையும் தாம்கண்டபடியே வருணிக்கின்றார். முதல் திருமுறையில் மேகராகக் குறிஞ்சிப் பண்ணிலமைந்துள்ள எழுத்

தோவியங்களின் சிறப்புதான் என்னே! "செறியிதழ்த் தாமரைத் தவிசில் திகழ்ந்தோங்கும் இலைக் குடைக்கீழ்ச் செய்யார் செங்கெல் வெறிகதிர்ச் சாமரையிரட்ட இளஅன்னம் வீற்றிருக்கும் மிழலை" அளிக்கும் காட்சியை ஒருமுறை பயின்றோர் எவ்வாறு மறக்கமுடியும்? அங்கம் பூம்பாவையின் பேரழகைத் திருஞானசம்பந்தர் கண்டதை, "கண்ணுறுதற் கருணை வெள்ளம் ஆயிரமுகத்தாற் கண்டார்" என்று சேக்கிழார் கூறுகிறார். இவ்வாறே கருணைவெள்ளமாக இயற்கையைக் காணவேண்டுமென்பது அவரது திருவுள்ளக்கிடை.

தேவாரத்தின் பெருமைகளைக் கூறுவதற்கு எனக்களித்த பத்து நிமிஷங்கள் போதா. பத்து வருஷங்களும் பல ஆயுள்களும் போதாவெனலும் உண்மையேயாகும். சமயக் கருத்துக்களை இன்னிசையில் வைத்து நமது மனத்தை இயற்கை வழியில் ஈர்த்துக் கடவுள் திருவடியில் நம்மை ஈடுபடுத்துவதே தேவாரத்தின் தன்மை. நையாத மனத்தவரை நைவித்தற்குத் தேவாரம் ஒரு சிறந்த கருவி. நமது ஆணவத்தைப் போக்கி வினையை யறுத்து நமக்கு நல்வாழ்வைத் தருவது தேவாரத்தின் பயன். தேவாரத்தை ஓதுவதால் விளையும் நன்மைகளைத் திருஞானசம்பந்தர் ஒவ்வொரு பதிகத்தின் இறுதியிலும் தவிராமற் கூறுகிறார். முதற்றிருமுறையுட் காணப்படுவனவற்றுள் சில கீழ்வருவனவாகும். "மனமகிழ்வோடு பயில்வர் எழில்மலர்மகள் கலைமகள் சயமகள் இனமலி புகழ் மகளிசைதர இருநிலனிடை யினிதமர்வரே" "பயில வல்லார்கள் விண்ணவர் விமானங்கொடுவர ஏறி வியனுலகாண்டு வீற்றிருப்பவர்தாமே" "தமிழ்மாலை செவிக்கினிதாக வல்லார்க்கு எளிதாம் பிறவாவகைவீடே" என்பனபோன்ற திருவாக்குக்களை நோக்குக

இத்தகைய பெருமைகளை யெல்லாம் நன்குணர்ந்தவன் முதல் இராஜராஜசோழன். சிற்சில தேவாரப்பாடல்களைக் கேட்குந்தோறும் காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கும் பழக்கம் அவனுக்குண்டு. "காந்தளூர்ச்சாலை கலமறுத்தருளிக் கடலடையாதிலங்கை கொண்ட மன்னன்" என்று கல்வெட்டுக்களும், "சிங்களநாடு பொடிபடுத்த குலமன்னிய புகழ்க் கோகனநாதன்" என்று நம்பியாண்டார் நம்பிகளும் புகழ்ந்து கூறும் வீரமுடைய இம்மன்னன் சிறந்த சிவபக்தனுமாகவு மிருந்தமை தமிழ் நாடு செய்த தவப்பயனேயாகும். இத்தவமே உருக்கொண்டு இம்மன்னனைத் தோற்றுவித்து இவன்மூலம் தேவாரத் திருமுறைகளைக் காணுமாறு செய்து நமக்களித்ததென்னலாம். இம்மன்னவன் பொல்லாப்

பிள்ளையார் திருவருட்டுணையும் நம்பியாண்டார்நம்பிகள் பெருந்துணையுங் கொண்டு திருமுறைகளை வெளிப்படுத்தியிராவிட்டால் இன்று "நீ றெங்கே, மாமறை நூல்தானெங்கே, எந்தைபிரான் ஐந்தெழுத்தெங்கே?" என்ற கேள்விகட்கு இல்லையென்ற விடையே கூறவேண்டியிருக்கும்.

தேவாரத்தின் பெருமையை யறிந்த இம்மன்னன் தான் எடுப்பித்த **தஞ்சை இராசராசேச்சரத்தில் நாற்பத்தெட்டு ஓதுவா மூர்த்திகளைத்** திருப் பதிகம் விண்ணப்பிக்க ஏற்பாடுசெய்தான். இச்செய்தியைக் கல்லெழுத் திலும் அக்கோயிற் சுவரில் பதித்துவைத்தான். இம்முறையைப் பின் பற்றி இவனுடைய மகன் கங்கைகொண்டசோழனும் பிறரும் பலதலங் களில் திருப்பதிகம் ஓதுவதற்கு ஏற்பாடுகள் செய்தனர். நாடெங்கும் தேவாரம் பரவிற்று. இக்காலத்தில் ஒவ்வொரு சிவாலயத்திலும் பூஜா காலங்களில் தேவாரம் ஓதப்படுதற்குரிய ஏற்பாடுகளைச் செய்விக்கச் சென்னை இந்துசமய அறநிலையப் பாதுகாப்புக் கழகத்தினர் முயன்று வருகின்றனர். அவர்கள் முயற்சி வெற்றிபெறுக. நாமெல்லோரும் நாடோறும் திருமுறை ஓதி இம்மையில் எல்லா நன்மைகளையும் பெற்று இறுதியிற் பிறப்பறுத்து இறைவன் திருவடி முத்தி எய்துவோமாக.

எனத் தம்கருத்துக்களை வெளியிட்டனர். இரண்டாந் திருமுறை யைப்பற்றிச் சிதம்பரம் ஆசிரியர் திரு. **வேங்கடாசலம் பிள்ளை அவர்கள்,**

### திருமுறையோதும் முறைமையாவது

சைவசமயாசாரியர் அருளிச்செய்த திருமுறைகளை முறையே ஓதத்தொடங்கினல், முதலில் 'திருச்சிற்றம்பலம்' என்று சொல்லிக் கொண்டு "தோடுடைய செவியன்" என்னும் தலைப்பையுடைய முதற் றிருமுறை முதற்பதிகம் பதினொரு செய்யுளும் ஓதி முடித்த பின்னர் இறுதியில் 'திருச்சிற்றம்பலம்' என்று சொல்லி முடிக்கவேண்டியது. அப்பால் இரண்டாது திருமுறையைத் 'திருச்சிற்றம்பலம்' என்று சொல்லியபின் ஓதத்தொடங்கவேண்டும். இங்ஙனம் ஒவ்வொரு திரு முறைக்கும் உள்ள முதற் பதிகத்தையே ஓதத்தொடங்கி, அப்பதிகத் துள்ள பாட்டுத் தொகையவ்வளவும் ஓதிமுடித்தபின்னர், 'திருச்சிற் றம்பலம்' என்று சொல்லி நிறுத்தவேண்டும். இக்கருத்தை நமது சைவசமயப் பிரதம ஆசாரியர் ஸ்ரீ திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தாம் அருளிச்செய்திருக்கிற தேவாரப்பதிகங்கள் தோறும் பெரும்பான் மையும் இறுதிச்செய்யுளில் "பகவனுரைப் பரவுசொன்மாலை பத்தும்

வல்லார்", "தக்கபாடல்கள் பத்தும் வல்லார்", "ஒலிகொள் சம்பந்தன் ஒண்தமிழ் பத்தும் வல்லார்கள்", "விண்பொழிற் கொழுமலம்மேவிய பத்திவை, பண்கொளப் பாடவல்லார்", "முன்னடைந்தான் சம்பந்தன் மொழிபத்தும் இவைவல்லார்" என இவ்வாறாகவே திருவாய்மலர்ந்தருளிய வைகளின் கருத்தை நோக்கும்போது, அப்பதிகத்தடங்கிய பாடல்கள் முழுவதும் பாராயணஞ் செய்வது நியதியென்பது தெரிகின்றது. நிற்க பதிகத்தில் முதல் இடை கடையுள்ள செய்யுள்களை மட்டும் எடுத்துக்கொண்டு ஏனைய பாடல்களை விட்டுவிடுவது பெரும்பாலும் வழக்கமாக இருக்கிறது. அங்ஙனம் தவறாக ஓதிவருதல் சைவசமயாசாரியர்களின் கருத்துக்கு விரோதமல்லவா? அவர்கள் கருத்துப்படியே ஓதிவருதலிலும் கூடியவரை சுத்தமான கண்டத்தோடும், எழுத்துக் குற்றம், சொற்குற்றம், பொருட்குற்றம், இசைக்குற்றம், தானக்குற்றமில்லாமலும், பக்தியோடும் ஓதிவரவேண்டுமென்று நம்முடைய திருஞானசம்பந்தப்பெருமானே தாமருளிய பதிகங்களுள் திருவைகா என்னுந் தலத்துக்கு அருளிச்செய்த "கோழைமிடறாக கவிகோளு மிலவாக இசை கூடும் வகையால்" என்பது கவனிக்கத் தக்கதாகும். இப்பதிகம் 3-ந் திருமுறையில் உள்ளதாகும். எடுத்துக்கொண்ட இரண்டாந் திருமுறையின் சம்பந்தத்தைப்பற்றி இனிக் கவனம் செலுத்துவதில் முதற்றிருமுறையின் தலைப்புப்பதம் "தோடு" என்பதும், இரண்டாந் திருமுறையின் தலைப்புப்பதம் "செந்நெலங்கழனி" என்பதில் 'செம்மை' என்பதும் ஆகும். இவ்விரண்டு பதிகங்களும் சீகாழிப் பதிகங்கள். தமக்கு உபதேச மூர்த்தியாகிய திருத்தோணியப்பரைத் துதித்த பதிகங்களாம். முதற்றிருமுறையின் சுற்றுப்பதிகம் நமது ஆதீன சம்பந்தமான 'தருமபுரம்' என்னும் தலத்துக்கு அருளிய 'யாழ்மூரிப் பதிகமாகும். இரண்டாந் திருமுறைக்கோ தலைப்பதிகம் "செந்நெலங்கழனி" என்று தொடங்கிய பதிகமாகும். இத்திருமுறையின் சுற்றுப்பதிகமும் 'திருப்புகலி' என்னும் சீகாழித்தலப்பதிகமாகும். இப்பாடல்கள் பெற்ற சீகாழி, தருமபுரம் என்ற இரண்டும் நமது ஆதீனத்தலங்களாகும். சீகாழிக்குரிய பன்னிரண்டு பெயர்களுள் 'பூந்தராய்' என்பதும் ஒன்று. இப்பெயர்ப் பதிகமே 2-ந் திருமுறைத் தலைப்பதிகமாகும். தேவாரப் பதிகங்கள் முற்றும் ஏழு திருமுறைகளாகத் திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி வகுத்தபோதே மந்திரங்கள் ஏழுகோடியாதலின் அங்ஙனமே வகுக்கப்பட்டதென்பது சரிதம். ஏழுதிருமுறைகளின் தொடக்கச் செய்யுட் பதங்கள் ஏழும் ஏழுமந்திரமென்று அருளியதாகும். ஆகவே தோடு, செம்மை, அடல் இந்த மூன்று பதங்களையும் மூன்று மந்திரமாகத் தலைப்பிற்கொண்ட மூன்று பதிகமும் திருஞானசம்பந்தமூர்த்திகளின் வாக்குக்களாகும். இந்தளம், சீகாமரம், காந்தாரம், பியந்தைக் காந்

தாரம், நட்டராகம், செவ்வழி இந்த ஆறு பண்களின் இன்னிசை கொண்டமைக்கப்பட்ட பதிகங்கள் 122. இந்த நூற்றிருபத்திரண்டு பதிகமும் இரண்டாந் திருமுறைக்கேற்றதாகும்.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தாம் அருள்பெற்ற மூன்றாவது வயது தொடங்கிப் பாடியருளிவரும் தேவாரப்பதிகங்கள் தோறும் பெரும்பான்மையும், எட்டாவது செய்யுளில் இராவணனைப் பற்றியும், ஒன்பதாவது செய்யுளில் திருமால், பிரமன் அடிமுடிதேடிய சரிதத்தைப் பற்றியும், பத்தாவது செய்யுளில் சமணர், புத்தர்களின் பொய்யுரையைப் பற்றியும் திருவாய்மலர்ந்தருளிப் பதினோராவது செய்யுளில் பதிகம் பத்தும் வல்லார் பெறும்பேறும் கூறித் தமது திருநாமமும் சாத்துவது நெறியாக வைத்திருப்பது சிவநேசர்கள் நன்கறிந்து வைத்திருக்க வேண்டியது.

## இரண்டாந் திருமுறை முதற்பதிகம் வினவுரையாகும்

அதாவது, பூந்தராய் என்னும் சீகாழிப்பதியில் எழுந்தருளியிருக்கும் பிரமபுரீசுரரைப் பார்த்து வினவுகிற முறையில், சிவந்த சடாமகுடத்தின்கண் ஒன்றுக்கொன்று விரோத பான்மையுள்ள மூன்றாம் பிறை, பாம்பு இவ்விரண்டையும் ஒருசேர வைத்திருப்பது என்ன வியப்பு? என்றும், ஏறிச்செல்வதற்கு இரதம், யானை, குதிரையாதியிருக்க, இடபத்திலேறிக் கொண்டுவருதல் யாது விசேடம்? என்றும், ஒரே திருமேனியில் இடப்பாகத்தைப் பார்வதியம்மைக்கு உவந்தளித்து வலப்பக்கம் பாதியோடு தேவரீர் இருப்பது என்ன கருத்து? என்றும், கடைக்கண் சிவந்த மாத்திரமே மன்மதன் பொடியானது யாங்ஙனம்? என்றும், (இங்கே கடைக்கண் என்பதற்கு நெற்றிக்கண் என்றுகொள்க.) தேவரீர் கங்கைப் பெருவெள்ளத்தை ஒருசிறிய சடையிற் பொருத்தி வைத்திருப்பது யாது வியப்பு? என்றும் இவை முதலாகவுள்ள மிகப் பெருந்தன்மையுள்ள அரிய காரியங்கள் நமது முழுமுதற் கடவுளுக்கே ஏற்ற எளிய செயல்கள் என்று அருளியது அன்பர்கள் கவனத்துக்கு உரிமையே. இச்சரிதங்களெல்லாம் அறிவில்லாத ஏழையடியார்களை இரட்சிப்பதற்கு உரிய அடையாளங்களாகும். இப்பதிகத்தின் தலைப்பிற் கூறியருளிய 'செம்மை' என்னும் பதம் மங்கலப்பொருள் உணர்த்தும். முதற்றிருமுறையின் முதற்பதம் 'தோடு' என்பது ஆகும். மூன்றாந் திருமுறையின் முதற்பதம் ஆடல் என்னும் சொல்லைப் பகுதியாக் கொண்ட 'ஆடினாய்' என்னும் பதமாம். ஆகவே இம்மூன்று திருமுறைகளின் முப்பதங்களையும் பொருள்வகையில் கவனிக்கும்போது தோடணிந்த

திருச்செவியுடைய இடப்பாகத்தம்மையோடு மங்கலமாகவே பஞ்ச கௌவியங்களால் அபிஷேகஞ் செய்துகொள்ளும் மூர்த்தியே என்று அன்பு நிறைவில் துதிப்பதாகும். இங்ஙனமே ஏனைத் திருமுறைகளின் தலைப்பிற்கொண்ட பதசாரங்களும் ஆய்ந்து உணர்ந்து கொள்க.

இனி இவ்வளவு அளவுகடந்த சிறப்பினைக் கொண்ட தேவார முதலிய திருமுறைகளை ஓதுதற்கும், ஓதுவிப்பதற்கும் உரியவர் யாவ ரெனின்? பரம்பரைச் சைவகுலத்திற் பிறந்தவராய், ஒழுக்கம் நிறைந்த வர்களாய், சமய விசேட முதலிய தீட்சைகள் பெற்றவர்களாய், கல்வி யறிவு, சமயவுணர்ச்சி, ஆசாரம், பெரியோர் கூட்டுறவு, ஈசுரபக்தி களிற் சிறந்தவர்களாய், குருபக்தி அடியார்பக்தி மிகவுடையவர்களாய்' விபூதி உருத்திராட்ச தாரணம் உள்ளவர்களாய், பெரியபுராணம், திருவிளையாடற் புராணம் முதலியவற்றிற் பயிற்சி யுள்ளவர்களாய், சாந்தகுண சீலராய், சைவசமய குரவர்களிடத்தும், சைவசந்தான குர வர்களிடத்தும் அன்பு செலுத்துபவர்களாய், சிவநேசச் செல்வர்களா யிருத்தல் வேண்டும். சைவசமய தீட்சை பெறாதவர்கள் படிப்பதும், படிப்பிப்பதும் தவறேயாகும். நமது சைவசமய மடத்துக்கு மஹா சந்நிதானமாக வுள்ளவர்கள் தேவாரப் பாடசாலையைத் தொடங்கும் போதே இவைகளை யெல்லாம் ஆராய்ந்து நடாத்துவது சைவசமய அபிவிருத்தி யாவதற்கு அடையாளங்களாகும். சைவத் திருமுறைகளைக் கற்பிக்கும் ஆசிரியரும் சமயவிசேட தீட்சை பெற்றே தீரவேண்டும். பயில்கிற மாணவர்களுக்கும் சமய தீட்சையாவது செய்து வைத்தல் வேண்டும். இம்மட்டோடுமன்றி ஆசிரியரும் செந்தமிழுணர்ச்சி, இலக் கணப்பயிற்சி போதியவளவு பெற்றிருப்பது அவசியம். இவை யெல்லா வற்றையும் ஒருங்கே கவனித்து நடத்தவேண்டுவது சைவமடாலயங் களுக்கே ஏற்றதாகும். சைவத் திருமுறை நெறிதவறினால் சமயகுரவர், சந்தான ஆசாரியர் அருள்பெறுவது அரிதாகும் என்பதைச் சைவ சமயிகள் ஒவ்வொருவரும் உணர்தல் வேண்டும். இந்த ஒழுங்கு தவறியவர்கள் ஓதுவதைக் கேட்பது தவறேயாகும்.

"வேடநெறி நில்லார் வேடம்பூண் டென்பயன்
வேடநெறி நிற்போர் வேடம் மெய்வேடமே
வேடநெறி நில்லார் தம்மை விறல்வேந்தன்
வேடநெறி செய்தால் வீடது வாகுமே." (திருமந்திரம்)

திருச்சிற்றம்பலம்.

எனவும்,

பவானித் தமிழ் ஆசிரியர், திருவாளர். **K. குமரசாமிப் பிள்ளை அவர்கள்,**

திருமுறை என்ற பெயர்க் காரணத்தைப் பற்றியும் அது வகுக்கப்பெற்ற முறைமையைப் பற்றியும் சிறிது கூறுவல்.

திருமுறை என்பது பலவகை நல்லொழுங்குகளைப் பற்றிக் கூறுவது. அவற்றினும் முதன்மையாகச் சிவ வழிபாட்டைக் கூறும் ஒழுங்குடைய நூல் என்று பொருள் கூறலாம்.

முறை என்பது ஒழுங்குடையது என்றால், வேறுமுறைகளைக் கூறும்போது, "கந்தபுராணத் திருமுறை", "திருவிளையாடற் றிருமுறை" எனத் தொடர் மொழியாலே கூறப்பெறுவனவாம். ஆகவே, ஈசன் என்னும் பெயர் சிவபெருமானுக்கே உரித்தாதல்போலத் திருமுறை என்பது சைவத்திருமுறை பன்னிரண்டற்கே உரிமையான பெயராகும்.

இச் சைவத்திருமுறைகள் பன்னிரண்டாகப் பிரிக்கப் பெற்றமைக்குக் காரணம் யாதென ஆராய்வாம். மந்திரங்கள் ஏழு வரம்பினையுடையனவும், பதினொன்றும் ஆதலால், தேவாரத்திருமுறைகள் ஏழாகவும் திருவாசகமும், திருக்கோவையாரும், திருப்பல்லாண்டும் ஒன்பாதந் திருமுறையாகவும், திருமந்திரம் பத்தாந்திருமுறையாகவும், சிவபிரான் திருமுகப்பாசுரம் முதலான நாற்பது பிரபந்தங்கள் கூடியவை பதினொன்றாந் திருமுறையாகவும் வகுத்து, திருத்தொண்டர் புராணத்தைப் பன்னிரண்டாந் திருமுறையாகவும் வகுக்கப்பெற்றன என உமாபதி சிவனார் கூறியருளுவர்.

இவ்வாறு வகுத்ததன் உட்கருத்து, பக்குவமுடைய ஆன்மாக்கட்கு அருள்தரும் பொருட்டு எம்மிறைவன் குருவடிவந் தாங்கிவந்து கிரியாவதி ஞானவதி என்னும் இருவகையான தீக்கைகளைப் புரிந்து அத்துவசுத்தி செய்யுங்கால் நிவிர்த்தி கலை முதலான ஐங்கலைகளிலும் பதினொரு மந்திரங்களும் நிற்குமுறை காட்டிச் சங்காரக் கிரமத்தில் வைத்து மலமகற்றிச் சிவம் விளங்குமாறு செய்வன். அவற்றுள்,

1. நிவிர்த்தி கலையில் மந்திரங்கள் 2ம்
2. பிரதிஷ்டாகலையில் ,, 2ம்
3. வித்யாகலையில் ,, 2ம்
4. சாந்திகலையில் ,, 2ம்
5. சாந்தியாதீதகலையில் ,, 3ம்

ஆக பதினொரு மந்திரங்களும் வியாத்தியாக நிற்குமெனச் சிவஞான சித்தியார் 8ம் சூத்திரத்து 7, 8, 9 திருவிருத்தங்களிலும் ஸ்ரீமத் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் விளக்கியருளுவர்.

அன்றியும், மகுடாகமம் முதலிய சில ஆகமங்களிலும் சாந்தி யாதீதகலையில் **நேத்திர** மந்திரமொன்றும் கூடி வியாத்தியாய் நிற்கு மெனவும் சிவாகமங்களை யுணர்ந்தோர் கூறுவர். ஆகையால், பெரிய புராணம் நேத்திரமந்திரம் போன்றது. இப்பன்னிரண்டாந் திருமுறை யாகிய பெரியபுராணக் கண்கொண்டே மற்றைய திருமுறைகளின் மெய்ப்பொருளைக் காணவேண்டுமென்பதும் தெற்றென விளங்குகின்றது.

ஆகையால் நம்மவர்க்கு வாய்த்த இப்பன்னிரண்டு திருமுறைகளும் நாம் உய்யும்பொருட்டுச் சிவபெருமான் நமக்குப் பெருங்கருணையால் அளித்த கருவூலம் என்பதற்குத் தடையாதும் இல்லையாம்.

## இரண்டாந் திருமுறை

அத்தகைய நம் சைவத்திருமுறைகளுள் எனக்குப் பேசவாய்த்தது இரண்டாந்திருமுறையேயாகும் இதனுட் காணப்படும் திருப்பதிகங்கள்,

1. இந்தளம். 2. சீகாமரம். 3. காந்தாரம்.
4. பியந்தைக்காந்தாரம். 5. நட்டராகம். 6. செவ்வழி.

என்னும் பண்களில் அமைந்தன. அப்பதிகங்களின் பொருள் முழுதும் கூறுவதற்கு நாயேனுக்கு அறிவாற்றலுங், கால அளவையும் போதா வென்பது யான் கூறவேண்டுவதில்லை.

> "நீநாளும் நன்னெஞ்சே நினைகண்டாய் யாரறிவார்
> சாநாளும் வாழ்நாளுஞ் சாய்க்காட்டெம் பெருமாற்கே
> பூநாளுந் தலைசுமப்பப் புகழ்நாமஞ் செவிகேட்ப
> நாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே"

என்ற பாசுரத்தை எடுத்துக்கொள்ளுகிறேன்,

பெரியோர்களே! அருட்பிழம்பாகிய திருஞானசம்பந்தப் பெருமானார் நம்மீது வைத்த பெருங்கருணையால், தம் மனத்தைப் பார்த்துக் கூறுவார்போன்று மொழிந்தருளுகின்றார் இப்பாசுரத்தை. இதனை, "நல் நெஞ்சே! சாம் நாளும் வாழ்நாளும் யார் அறிவார்? சாய்க்காட்டு எம் பெருமாற்கே பூ நாளும் தலைசுமப்ப, புகழ்நாமம் செவிகேட்ப, நா நாளும் நவின்றேத்த நல்வினை பெறலாம் நீ நினைகண்டாய்" என

உரைநடை செய்து கொள்ளல் வேண்டும். இப்பாசுரத்துள் அடங்கிய சாரமாவது பொதுவாக ஆன்மகோடிகளாகிய நம்மவர்தம் மனமோ பெரும்பாலும் உலகில் மலிந்த தீய காரியங்களிலே சென்று சென்று பழகி அவற்றையே பற்றி நல்வழியிலே திரும்பாது, "கொடிறும் பேதையுங் கொண்டது விடா" என்றபடி நடப்பதாதலினால், மூர்க்கப் பிள்ளையைத் திருத்தும் தந்தை இனிய மொழிகூறி அழைத்துத் திருத்து தல் போல, 'நன்னெஞ்சே' என விளித்து, "உலகமோ நிலையாமையை யுடையது; சாகும் நாள் இதுவென்றும், இவ்வுலகில் வாழும் நாட்கள் இவ்வளவென்றும் யாவராலும் உணர்வது அரிதேயாகும். ஆகையால் திருப்பூங்கூடையில் நிரம்ப ஆய்ந்து நறுமல ரெடுத்துத் தலையாலே சுமந்து சுமந்து கொண்டுவந்து இறைவனை வழிபட்டும், யாவராலும் புகழ்ந்து பேசப்பெறும் அவர்தம் திருப்பெயர்களைப் பெரியார் சொல்லச் செவியாரக் கேட்டும், திருவைந்தெழுத்தாகிய மகாமந்திரத்தை ஒவ்வொரு நாளும் எந்த நேரத்திலும் உருகி உருகிச் சொல்லித் துதித்தும் வரு வாயே யாகில், நீ சிவபிரான் திருவருளுக்குரிமையாகும் நல்வினையைப் பெறலாகும். இவற்றை மறவாமல் எப்போதும் நின்நினைவில் வைத்துக் கொள்வாயாக" என்பதாம்.

'பூ நாளும் தலை சுமப்ப' என்றதனால், "பரந்து பல் ஆய் மலரிட்டு முட்டாதிறைஞ்சி" என்ற மணிவாசகத்தின்படி, பல விடங்களிற் பரவிச் சென்று ஆய்ந்தெடுத்த நறுமண மலர்களை அன்போடு தலையிற் சுமந்து கொண்டுவந்து நிரம்பச் சாத்தி வழிபடல் வேண்டும் என்பது பெறப்படுகின்றது. ஆர்வமின்றி ஏதோ கிடைத்தது போதும் என எண்ணிக்கொண்டு வழிபடுவது சிறந்ததன்று என்பதும் பெற்றும். சுவாமிகள் மற்றோரிடத்தில்,

> "யோசனை போய்ப் பூக்கொணர்ந்தங்
> கொருநாளும் ஒழியாமே
> பூசனை செய் தினிதிருந்தாள்
> புள்ளிருக்கு வேளூரே"

என்றருளுவதும் காண்க.

எனவும் தமது ஆராய்ச்சி நுணுக்கங்களைத் தெளிய மொழிந் தார்கள். தலைவரவர்கள் இவ்விரண்டு திருமுறைகளைப் பற்றி யும் உணர்ச்சி ததும்பப் பேசினார். காலை நிகழ்ச்சிகள் தேவார இன்னிசை முழக்கத்துடன் முடிவுற்றன.

பகல் 11-மணிக்குமேல் ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்கு சிறப்பான வழிபாடு தொடங்கியது. பூசைக்கட்டு அன்று அழகாக அலங்கரிக்கப் பெற்றிருந்தது. எங்கும் தொங்கல்கள். சன்னிதி முன்பாக நறுமணப் பூம்பந்தல். பெருமானுக்கு எல்லா வகையான திருமுழுக்குகளும், பலவகை நிவேதனங்களும் இடப்பட்டுப் பேரணி செய்து தமிழ்மறை ஒலி ஒருபுறம் முழங்க பல்லியங்கள் ஆர்ப்ப அன்பர்கள் யாவரும் பரவசமடையப் பூசைசெய்யப்பட்டது.

திருநீற்றின் ஒளிவிளங்க அக்குமணிக் கலன்களின் பேரொளி சால சைவத் திருக்கோலங்கொண்டு குழுமியிருந்த சிவனடியார் திருக்கூட்டத்தின் கவின்பெறு காட்சி கன்மனத்தவர்களையும் கரைந்துருகச் செய்தது என்பது கண்டோர் கூற்று. திருமுறை இன்னிசை ஒலிப்ப மாலை 4-மணிக்கு மீண்டும் திருமுறைப் பேரவை குழுமிற்று.

மூன்றாந்திருமுறையின் பெருமையைக் காஞ்சிபுரம் திரு. **க. வச்சிரவேல் முதலியார் B. A L. T. அவர்கள்,**

திருமுறைகளாவன, எல்லா மக்களும் ஓதி உணர்ந்து முத்தி பெற்றுய்தற்பொருட்டுச் சிவன் முத்தர் வாயிலாக, அவ்வக்காலங்களில் வெளிப்பட்ட சிவவாக்குகளாம். சிவன்முத்தராவார், சிவப்பிரகாசத்தினாலே பசுகரணங்களெல்லாம் சிவகரணமாக நிகழப்பெற்று, எல்லாக் கருவிகளோடுங் கூடியிருக்கும் சாக்கிராவத்தையிலே நிருமல துரியாதீதத்தைப் பொருந்தினோர்களாய், உலகத்திலுள்ள எல்லா உயிர்களையும் ஈடேற்றும்பொருட்டு முதல்வன் திருவருளால் சஞ்சரிக்கும் இயல்புடையோராய் உள்ள சிவானுபூதிச் செல்வர்கள். அவர்கள் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், ஆலாலசுந்தரர், மாணிக்கவாசகர் முதலாயினோர் ஆவர். இத்திருநெறித் தலைவர்கள் வாயிலாக வெளிப்பட்ட அருள்வாக்குக்கள், பின்னர் நம்பியாண்டார்நம்பிகளாலும், அநபாய சோழ அரசர் பெருமானும் தில்லையிற் கூட்டப்பெற்றப் பேரவையினாலும், ஆண்டவன் அருள்வழி நின்று புறஇருள் நீக்கும் ஞாயிறு பன்னிருவகைப்பட்டாற் போல, பன்னிரு திருமுறைகளாக வகுக்கப் பட்டன.

இத்திருமுறைகள், உயிர்களின் அறிவில் நீங்காது தங்கியுள்ள திருவருளாகிய சிவஞானத்தின் அபரதடத்த வடிமாய்ச் சிவப்பேற்றை விழையும் நல்லோர் பலரானும் சிவன் அருள்மெய்யினை உணர்வதற்குப் பரமப்பிரமாணங்களாகக் கொள்ளப்படுவனவாய், ஞாலமளந்த மேன்மைத் தெய்வச் செந்தமிழ்ப்பயனாய் உள்ளவை. இவற்றை ஓதியுணருங்கால், வேதாந்தமெனப்படும் உபநிடதங்களின் பொருளையுணர்தற்குப் பிரமமீமாஞ்சை எனப்படும் வியாசசூத்திரம் உதவுமாறுபோல, இங்கு உதவும் சைவசித்தாந்த சாத்திரக்கண்கொண்டு, தன்முனைப்பின்றித் திருவருளொளியால் சிவாநுபவ உண்மைகளை யுணர்ந்து உய்தல் ஒன்றே கருத்தாக ஓதியுணர்தல் வேண்டும். எனினும் கல்வியறிவொழுக்க ஞானங்கள் நிரம்பிய ஒருவன்பால் அழகும் எழுச்சியும் மிக்கஉருவும் காணப்பட்டாற்போல, இலக்கியச்சுவை இசைவளம் முதலியனவும் இத்திருமுறைகள்பால் சிறந்து அமைந்திருத்தலின் அவைபற்றியும் பயிலுதற்குரியனவாம்.

இத்திருமுறைகள் பன்னிரண்டனுள் முதல்மூன்று திருமுறைகளும் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவாய்மலர்ந்தருளிய தேவாரமாகும். அம்மூன்றனுள் மூன்றாந் திருமுறைக்கண் காந்தாரபஞ்சமம் முதல் அந்தாளிக்குறிஞ்சிவரை பத்துவகைப் பண்களையுடையனவாய் நூற்றிருபத்தைந்து திருப்பதிகங்கள் உள்ளன. இத்திருப்பதிகங்களுள் "இடரினும் தளரினும்" எனத் தொடங்கும் திருவாவடுதுறை திருப்பதிகத்தில் ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் வரும் "இதுவோ எமை ஆளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல், அதுவோ உனது இன்னருள் ஆவடுதுறையரனே" என்னும் பகுதிக்குப் பொதுவாக நமக்குத் தோன்றக் கூடிய பொருளையும், அதற்குச் சேக்கிழார் சுவாமிகள் அருளிச்செய்துள்ள குறிப்பையும், ஈ என்ற சொல்லின் இயல்பையும் கடைப்பிடித்து நோக்கும்போது புலனாகும் பொருளையும் ஒத்துப் பார்த்தலே இப்பொழுது மேற்கொள்ளப்படுகிறது.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தம் தந்தையாருக்குச் சிவவேள்வியின் பொருட்டுப் பொன் தருவதாக வாக்களித்திருந்தமையின், நாயனார் திருவாவடுதுறையில் எழுந்தருளி யிருக்கும்பொழுது அவர்தம் தந்தையாரும் அங்கு வந்து, வேள்வி செய்தற்குரிய பருவம் வந்துவிட்டமையின், நாயனார் தமக்கு முன்பளித்த வாக்குறுதியை நினைவூட்ட, நாயனாரும் "அந்தமில் பொருளாவன ஆவடுதுறையுள் எந்தையார் அடித்தலங்கள் அன்றோ" எனத் திருக்கோயிலினுட் சென்று, இறைவனை மேற்குறித்த திருப்பதிகத்தினால் போற்றியருளினார்.

அதில், "இதுவோ எமையாளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல் அதுவோ உனது இன்னருள் ஆவடுதுறை யரனே" என்ற பகுதிக்குப் பொதுவாகத் தோன்றக்கூடிய பொருள் "ஆவடுதுறையுள் எழுந் தருளும் அரனே! நீ எமக்கு ஈவதாகிய பொருள் ஒன்று இல்லை எனில், அஃது உன் இனிய அருளுக்குத் தக்கதோ? எம்மை ஆளுமாறும் இது தானோ?" என்பதாகும். இங்ஙனம், "நீ எமக்கு ஈவதில்லையானால்" எனப் பொருள்கொள்வது இயல்பேயாயினும், அது திருஞானசம்பந்தப் பெருமானுடைய ஓங்குநிலைத் திருவுள்ளப்பாங்கிற்கும், பெருந்தகைமைக்கும் ஏற்றதன்றென்பதை நம்மனோர்பால் வைத்த பேரிரக்கத்தினால் நமக்கு அறிவுறுத்தி, அங்கு நாயனார் தம் திருவுள்ளக்கிடை யாதெனக் குறிப் பிப்பாராய் ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகள் செய்த உபகாரம் என்னே! சேக்கிழார் பெருமான் அப்பகுதியைக் குறிப்பான் விளக்குங் கருத்தினராய்,

"சென்று தேவர்தம்பிரான் மகிழ் கோயில்முன் பெய்தி
நின்று போற்றுவார் நீள்நிதி வேண்டினார்க் கீவ
தொன்று மற்றிலேன் உன்னடி அல்லதொன் றறியேன்
என்று பேரருள் வினவிய செந்தமிழ் எடுத்தார்"

என அருளிச்செய்கின்றனர். இதனுள் "நீள்நிதி வேண்டினார்க்கு ஈவதொன்று மற்றிலேன்" என்றதனை உற்று நோக்கும்போது, சேக்கிழார் பெருமான் "ஈவதொன் றெமக்கில்லையேல்" என்ற தேவாரப் பகுதிக்குத் திருவுளம்பற்றிய அரும்பொருள் "(எம்மை இரந்தவர் களுக்கு) ஈவதொன்று எமக்கு(க்கூட) இல்லையாயின்" என்பதே என விளங்கும். இங்ஙனம் பொருள்கொள்வது எவ்வளவு சிறந்ததாக வுள்ளது! 'இல்லென நம்மை இரந்தார்க்கு நாமும் இல்லையெனப் பகர்தல் ஏதம்' என்பதும், எஞ்ஞான்றும் யாவர்பாலும் நாம் யாதொன்றையும் நம்பொருட்டு இரத்தல் கூடாதென்பதும், அமங்கலமத்தனையுந் தன்னை யடைந்தார்க்கு அறவே இல்லை யாக்குதலினால் 'அரன்' எனப்படும் முதல்வனுக்கு ஆட்பட்டார் யாவர்க்கும் தம்மை யிரந்தார்க்கு இல்லை யென்னாது ஈயும் வள்ளன்மை இயல்பாக எய்தற்பாலது; அதுவே அவன் பேரருளின் இயல்பாவது என்பதும் இங்ஙனங்கொண்ட பொரு ளால் விளங்குகின்றன அல்லவா?

न मोक्षं यान्ति पुरुषाः स्वसामर्थ्यात् कदाचन ।
मुक्त्व प्रसादं देवस्य शिवस्याशिव हारिणः ॥

"அவசிவத்தை (அமங்கலத்தை) அரிக்கின்ற தேவனாகிய சிவபிரானுடைய பிரசாதத்தை விட்டுத் தம் சாமர்த்தியத்தினால் எப்போதும் புருஷர்கள் உயிர்கள் முத்தியை அடைகிறார்கள் இல்லை" என்பது ஸ்ரீமத் பௌஷ்கரம்.

இனி, இங்ஙனஞ் சேக்கிழார் பெருமான் அருளிச்செய்த குறிப்பைக் கடைப்பிடித்து இத்தேவாரப்பகுதிக்கு நாம் கொள்ளும் விழுமிய பொருளைப் பண்டைத்தமிழ் நல்லிசைப் புலவர்களின் வாய்மொழிகளோடும், ஆசிரியர் தொல்காப்பியனார் உயர்ந்தோர்க்கு ஈ, தா என்ற சொற்கள் இரப்புரையாதலை விலக்கிக் 'கொடு' என்ற சொல்லையே அவர்தம் இரப்புரையாக்கி அதனை அமைக்குங் கருத்தோடும் ஒத்துப் பார்த்தல் கழிபேருவகையைத் தருவதொன்றாகும்.

"கொடுத்தல் உயர்ந்தன்று; கொள்ளேனென்றல் அதனினு முயர்ந்தன்று." "இரத்தல் இழிந்தன்று; ஈயேன் என்றல் அதனினு மிழிந்தன்று" என்பவை பண்டை நல்லிசைப் புலவரொருவரின் கொள்கை. உயர்ந்தன்று—உயர்ந்தது. இழிந்தன்று—இழிந்தது.

ஆசிரியர் தொல்காப்பியனார் சொல்லதிகாரம் கிளவியாக்கத்தில் 'செலவு, வரவு, தரவு, கொடை' என்னும் நான்கு தொழிற்கண்ணும் வரும் அந்நான்கு சொற்களும் பகுதிமாத்திரையானே இடத்தைக் குறிக்கும் என வரையறுத்தார். அதனால் 'தா' என்ற சொல்லின் பிரயோகம் 'எனக்குத் தந்தான்', 'நினக்குத் தந்தான்' எனத் தரப்படும் பொருளை ஏற்பான் தானும், முன்னின்றானுமாகவே வரும். 'அவனுக்குத் தந்தான்' என அப்பொருளை ஏற்பான் படர்க்கையின் உள்ளானாக வாராது; அங்ஙனமே 'அவனுக்குக் கொடுத்தான்', (அவனுக்குக்)கொடு எனக் கொடைச்சொல் கொடைப்பொருளை ஏற்பான் படர்க்கையானாகவே வரும். எனக்குக்கொடு, உனக்குக்கொடு என வாராது. இனி, 'கொடு' எனத் தனித்து ஏவல் வாய்பாட்டாற் கூறும்போதும் "அவனுக்குக்கொடு" எனவே பொருள்படும்; எனக்குக்கொடு, அல்லது உனக்குக்கொடு எனப் பொருள்படாது. இங்ஙனமாகவும், எச்சவியலுள்,

> "ஈ,தா,கொடு எனக் கிளக்கும் மூன்றும்
> இரவின் கிளவி ஆகிடன் உடைய"

எனவும்,

> "கொடு என்கிளவி உயர்ந்தோன் கூற்றே"

எனவும் உரைத்தனர்.

இங்கு உயர்ந்தோன் ஒன்றை ஒருவனிடமிருந்து பெறவிரும்பும் போது மேற்கூறியவாற்றான், வரையறையின்றி மூன்றிடத்தும் வரும் ஈ என்ற சொல்லான் "ஈ" என்றாவது, தன்மைக்கும் முன்னிலைக்கும் உரிய தா என்ற சொல்லான் 'தா' என்றாவது இரக்காமல், 'கொடு' என்ற சொல்லான் இரந்தால், அது "அவனுக்குக் கொடு" எனவே பொருள்படுமாகலின் தான் கருதிய பொருளைத் தாராது. அன்றி "எனக்குக் கொடு" எனச் சொல்லின் கொடைப்பொருள் ஏற்பான் படர்க்கையினாதல் வேண்டுமேயன்றித் தானாதல் கூடாமையின் இலக்கண வழுவாம். பின்னர், 'கொடு' என்ற சொல்லை உயர்ந்தோன் இரப்புரையாக வைத்தது எங்ஙனம் பொருந்தும் எனின், உயர்ந்தோன், "ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்கு இரவின் இளிவந்தது இல்" ஆகலின், தன்னை ஏற்போனாகச் சொல்லாது பிறர்க்குக்கொடு எனப் பொருள் படும்படி, படர்க்கை வாய்பாட்டாற் சொல்லும்போது அவன் தன்னைப் பிறன்போலக் குறித்தானாகலின் அவ்வழக்கு அமையும் என்பார், மேலும்,

"கொடு என்கிளவி படர்க்கை யாயினும்
தன்னைப் பிறன்போற் கூறுங் குறிப்பிற்
றன்னிடத் தியலும் என்மனார் புலவர்"

என வழுவும் அமைத்தார்.

---

இவற்றையும், இங்கெடுத்துக் கொண்ட தேவாரப் பகுதியின் பொருள் விளக்கம் செய்கின்ற திருத்தொண்டர் பெரியபுராணச் செய்யுளையும் ஒத்துப்பார்க்கும்போது மக்கள் ஒழுகலாற்றைப் பற்றிய சில நுண்ணிய குறிப்புகள் தமிழிலக்கியம், இலக்கணம், திருமுறை யென்ற இவற்றில் எல்லாம் ஒருபடித்தாகவும், திட்பமாகவும் வற்புறுத்தப்பட்டு வருகின்றன என்பது விளங்கும். விளங்கவே இங்குக்காட்டிய நூல்களை இயற்றினோரனைவரும் சிவன் முத்தர்களாய் அல்லது சிவன் முத்தர்தம் ஆணையைக் கடைப்பிடித்து உலகத்திற்கு அறம், பொருள், இன்பம், வீடென்னும் நாற்பொருளின் இயல்பையும் விளக்கும் நல்லிசைப் புலவர்களாயிருந்து நம் தண்டமிழ் மொழியினை உயர் தனிச் செம்மொழியென மிளிரச்செய்தனர். ஆகவே, அன்னோர் கால்வழிவந்த நாமும் அவர்தம் அருநெறி கடைப்பிடித்து நன்மை எய்துவோமாக!

எனப்புகன்று உவகைக் கடலுள் ஆழ்த்தினர். நான்காந் திருமுறையைப்பற்றி நாகப்பட்டினம், வித்துவான் திரு. வை. மு. சண்முக தேசிகர் அவர்கள்,

## நான்காந் திருமுறை

**திருமுறை என்பதன் பொருள்.**

திருமுறை என்னும் சொற்றொடரைத் திரு+முறை என்று பிரிக்கலாம். திரு=செல்வம், முறை=நூல்; திரு—என்பதற்குக் கண்டாரால் விரும்பப்படுந் தன்மை, நோக்கம், செல்வம், அழகு, இலக்குமி என்னும் பல பொருள்கள் கூறுவர். மணிவாசகப் பெருமான் கடவுளைச் செல்வமென்றே கூறுகின்ருர் "செம்மையேயாய சிவபத மளித்த செல்வமே" (திருவாசகம்) ஆதலின் திருமுறை என்பதற்குக் கடவுளின் திருவுருவம், நிறம், தன்மை, இருக்குமிடம், வழிபடும்முறை, வழிபட்டார் வரலாறு, பயன் முதலியனவற்றை முறைப்படுத்திக் கூறும் நூல் எனப் பொருள் கொள்ளலாம் என்று அடியேன் எண்ணுகின்றேன்.

**தோற்றம்.**

இராஜராஜ சோழன் திருநாரையூர் நம்பியாண்டார்நம்பி என்னும் அந்தணச் சிறுவரை வழிபட்டு "மூவர் தமிழும், தொண்டர் செய்தியும் பூதலத்தில் விளங்க அருள்செய்தல் வேண்டும்" என்று வேண்ட, அவர் பொல்லாப்பிள்ளையாரைப் பிரார்த்திக்க அப்பிரான் தமது கரத்தால் அடையாளமாகக் காட்டியருள உடனே யாவரும் ஆலயத்துட் சென்று அறையைத் திறந்து எடுத்து மகிழ்ந்தனர். பின் கடவுளின் ஆணைப்படி நல்லிசையாழ்ப்பாணர் மரபில் வந்த ஓர் பெண்ணை அழைத்துவந்து பண்வகுத்ததாகவும் திருமுறை கண்ட புராணம் கூறும். திருமுறைகள் பன்னிரண்டு.

**திருமுறைப் பெருமை.**

கண்ணுதற்பிரான் ஏழாந்திருமுறை பாடியருளிய சுந்தரருக்குப் "பித்தா" என்றும், பன்னிரண்டாந் திருமுறை பாடியருளிய சேக்கிழாருக்கு "உலகெலாம்" என்றும் அடியெடுத்துக் கொடுத்துள்ளமையாலும், எட்டாந் திருமுறையாகிய திருவாசகத்தைத் தானே பிரதிசெய்து கொண்டமையாலும், பதினொராந் திருமுறையில் தாமே திருமுகப் பாசுரம் எழுதித் தந்துள்ளமையாலும் இதன் பெருமை அங்கைநெல்லிக்கனி போல் விளங்குவதாகும்.

இன்னும், ஔவையார் "தேவர் குறளும் ... உணர்" என்றும், திருவாசகத்திற்குப் பெருமை கூறவந்த சிவப்பிரகாச சுவாமிகள் "திருவாசகம் இங்கு ஒருகால் ஓதில் ... மற்றையோரிலரே" என்றும், திருக்குறளுக்குப் பெருமை கூறவந்த, இலக்கணக்கொத்து எழுதிய ஆசிரியர் "பல்காற் பழகினும் தெரியா வுளவேல், தொல்காப்பியம், திருவள்ளுவர், கோவையார் மூன்றினும் முழங்கும்" என்றும் கூறியுள்ளமையாலும் உணரலாகும்.

**நூல்விபரம்.**

இத்திருமுறை அப்பர் சுவாமிகளால் திருப்பதிகம், திருநேரிசை, திருவிருத்தம் என்னும் மூன்று பகுதியாக இயற்றப் பெற்றது. இதன்கண், திருப்பதிகம் 21, திருநேரிசை 58, திருவிருத்தம் 34, ஆக 113 திருப்பதிகங்களும், 1077 பாடல்களும் உள்ளன.

**ஆசிரியரின் வேறுபெயர்கள்**

இந்நூலாசிரியர்க்கு, அப்பர், நாவுக்கரசர், வாக்கின்வேந்து, தாண்டகவேந்து, ஆளுடையஅரசு என்னும் பலபெயர்கள் காரணங்களோடு வழங்கப்பெறுகின்றன.

**வரலாறு.**

இவர் நம்நாட்டில் திருவாமூரில் சைவவேளாளர் குலத்துட் டோன்றி அறிவுதரும் நூல்களை ஐயந்திரிபறக் கற்றறிந்து, அதன்படி அறநெறி நின்று மறநெறி நீக்கி மாண்பொடு மிருந்தனர். பின்னர் சமண்சமயம் புக்கு, அச்சமயத் தலைவராய்த் தருமசேனர் என்னும் பெயர்பெற்று விளங்கியபோது, திருவருளால் தமக்கு நேர்ந்த கொடிய சூலைநோயைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டுத் தமது தமக்கையாராகிய திலகவதியாரை நாடிச்சென்று சைவத்துக்கு மீண்டு, திருவதிகை விரட்டானத்திற்கு வந்து, இறைவனருள் பெற்றுத் திருப்பதிகம் பாடிச் சமணர்கள் விளைத்த நீற்றறையிடுதல் முதலிய பல பேரிடர்களைத் திருவருளாற்றலினால் வெற்றிகொண்டு, ஆளுடைய பிள்ளையாருடன் சிறந்த நண்பு கொண்டிருந்து, பல அற்புதங்களைச் செய்து, திருக்கயிலைக் காட்சியைத் திருவையாற்றிற் கண்டு களித்துத் திருப்புகலூரிற் சிவபெருமான் ஆட்கொள்ளத் திருவடிநீழலை அடைந்தார்.

இவர் காலம் 7-ம் நூற்றுண்டின் தொடக்கம் என்றும், கி. பி. 550 முதல் 650 வரையுள்ள காலமே அப்பர் சம்பந்தருடைய காலம் என்றும் ஆராய்ச்சியாளர்கள் சிற்சில காரணங்காட்டி வரையறை செய்கின்றனர். இவர் இயற்றிய திருப்பதிகம் 49,000 என்பதைத் திருமுறைகண்டபுராணம் 15-வது செய்யுளால் உணரலாகும்.

**காலம்.**

நான்காந் திருமுறையில் உள்ள திருப்பதிகம் யாவும், (1) தத்துவப் பொருள்களை இனிதாய செம்மை சான்ற சொற்களால் விளக்கும் நயம் சிறந்தது. (2) மும்மூர்த்திகட்கும் அதீதமான சிவபரம் பொருளையே பகரும் பான்மை யுடையது (3) சமண புத்த மதங்களைக் கண்டிப்பது. (4) இராவணன் மனம் திரும்பி இறைவனருள் பெற்ற வரலாற்றைக் கூறுவது. (5) பிரம விஷ்ணுக்கள் கடவுளர் அல்ல என்பதை எடுத்துக்கூறி சைவசித்தாந்தத்தை நிலைநாட்டுவது. (6) உலகத்துக்கு இறைவன் ஒரு முழுமுதற்கடவுள் உண்டென்றும், அன்பு செலுத்தி அவனது திருவருளை எந்நாட்டவரும், எம்மதத்தவரும் பெறலாம் என்றும் கூறுகின்றது. (7) உலகத்தார் கூறும் பல பழமொழிகளையும், (8) உவமை, (9) உருவகம், (10) வர்ணனை முதலிய அணிகளையும் கொண்டு விளங்குகின்றது.

**பதிகங்களில் கூறியுள்ள பொருள்கள்**

1. தத்துவப் பொருளை விளக்கும் நயம் சிறந்தது **என்பதற்கு** மேற்கோள்:—

"ஒருமுழ முள்ளகுட்ட மொன்பது துறையுடைத்தாய்
அரைமுழம் அதனகலம் அதனில்வாழ் முதலை யைந்து
பெருமுழை வாய்தல்பற்றிக் கிடந்துநான் பிதற்றுகின்றேன்
குருமுகில் தவழுமாடக் கச்சியே கம்பனீரே."

(திருஏகம்பம் திருநேரிசை. செ 2.)

2. மும்மூர்த்திகட்கும் அதீதமான சிவபரம் பொருளையே பகரும் பான்மை யுடையது:—

"பார்த்திருந் தடியனேன் நான் பரவுவன் பாடி யாடி
மூர்த்தியே என்பன் உன்னை மூவரில் முதல்வனென்பன்
ஏத்துவா ரிடர்கள் தீர்ப்பாய் தில்லைச் சிற்றம்பலத்துக்
கூத்தா உன் கூத்துக்காண்பான் கூடநான் வந்தவாறே."

(கோயில் திருநேரிசை. செய் 6.)

3. சமண புத்த மதங்களைக் கண்டிப்பது:—

"குண்டரே சமணர் புத்தர் குறியறியாது நின்று
கண்டதே கருதுவார்கள் கருத்தென்று தொழிமினீர்கள்
விண்டவர் புரங்க ளெய்து விண்ணவர்க் கருள்கள்செய்த
தொண்டர்கள் துணையிலானைத் துருத்தியான் கண்டவாறே."

(திருத்துருத்தித் திருநேரிசை. செய் 9.)

4. இராவணன் மனந்திரும்பி இறைவனருள் பெற்றது.

"எடுத்தனன் எழிற்கயிலை இலங்கையர் மன்னன்றன்னை
அடுத்தொரு விரலாலூன்ற அலறிப்போய் அவனும் வீழ்ந்து
விடுத்தனன் கைநரம்பால் வேதகீதங்கள் பாடக்
கொடுத்தனர் கொற்றவாளன் குறுக்கை வீரட்டனாரே."

(திருக்குறுக்கை வீரட்டம்—திருநேரிசை. செய் 10.)

5. பிரம விஷ்ணுக்கள் கடவுளர் அல்லர் என்பது.

"மாயனாய் மாலனாகி மலரவனாகி மண்ணாய்த்
தேயமாய்த் திசையெட்டாகித் தீர்த்தமாய்த் திரிதர்கின்ற
காயமாய்க் காயத்துள்ளார் காஞ்சிமாநகர்தன் னுள்ளால்
யெமென் றோளிபாக னிலங்குமேற் றளியனாரே."

(திருகாஞ்சித் திருமேற்றளி—திருநேரிசை, செய் 6.)

"நூறுகோடி பிரமர்கள் நொந்தினார்
ஆறுகோடி நாராயண ரங்ஙனே
ஏறுகங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறிலாதவன் ஈச னொருவனே."

(ஆதிபுராணத் திருக்குறுந்தொகை, செய் 3.)

6. அன்பினால் கடவுளின் திருவருளை அடையலாம் சாதிமத பேதமின்றி என்பதற்கு:—

"காப்பதோர் வில்லும் அம்புங் கையதோர் இறைச்சிப்பாரம்
தோற்பெருஞ் செருப்புத் தொட்டுத் தூயவாய்க் கலசமாட்டித்
தீப்பெருங் கண்கள் செய்யகுருதிநீ ரொழுகத் தன்கண்
கோப்பதும் பற்றிக் கொண்டார் குறுக்கை வீரட்டனாரே."

(திருக்குறுக்கை வீரட்டம் திருநேரிசை, செய் 7.)

"ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில்
அவர்கண்டீர் யாம்வணங்குங் கடவுளாரே." (திருத்தாண்டகம்.)

7. பழமொழிகள் பல அமைந்துள்ளதற்கு:—

1. "கனியிருக்கக் காய் கவர்ந்த கள்வனேன்"
2. "முயல்விட்டுக் காக்கைபின் போனவாறே"
3. "அறமிருக்க மறம்விலைக்குக் கொண்டவாறே"
4. "பனிநீராற் பாவைசெயப் பாவித்தேன்"
5. "இருட்டறையில் மலடுகறந் தெய்த்தவாறே"
6. "விளக்கிருக்க மின்மினித் தீக் காய்ந்தவாறே"
7. "பாழூரிற் பயிக்கம்புக் கெய்த்தவாறே"
8. "தவமிருக்க அவஞ்செய்து தருக்கினேன்"
9. "கரும்பிருக்க இரும்புகடித் தெய்த்தவாறே"

(திருவாரூர் பழமொழி—பண்—காந்தாரம்.)

8. உவமைகள்:—

"பாம்பின் வாய்த் தேரைபோல"

(திருஒற்றியூர்த் திருநேரிசை. செய் 1.)

"மத்தார் தயிர்போல்"

(திருச்சத்திமுற்றம் திருவிருத்தம். செய் 3.)

"பாலிற்றிகழும் பைங்கனியை"

(பொது பாவநாசத் திருப்பதிகம். செய் 5.)

9. உருவகம்:—

"மனமெனுந் தோணிபற்றி மதியெனுங் கோலை யூன்றிச்
சினமெனுஞ் சரக்கை யேற்றிச் செறிகட லோடும்போது
மதனெனும் பாறைதாக்கி மறியும்போ தறியவொண்ணா
துனையுனும் உணர்வை நல்காய் ஒற்றியூ ருடையகோவே."

(திருவொற்றியூர் திருநேரிசை. செய் 2.)

"உயிர்நிலை யுடம்பே காலா உள்ளமே தாழியாகத்
துயரமே யேற்றமாகத் துன்பக்கோ லதனைப் பற்றிப்
பயிர்தனைச் சுழியவிட்டுப் பாழ்க்கு நீரிறைத்து மிக்க
அயர்வினு லேவர்க் காற்றே னாரூர் மூலட்ட னீரே."

(திருஆரூர் திருநேரிசை. செய் 7.)

10. வருணனை:—

"பைங்கால் தவளை பறைகொட்டப் பாசிலை நீர்ப்படுகர்
அங்காற் குவளைமே லாவி யுயிர்ப்ப அருகுலவும்
செங்காற் குருகிவை சேருஞ் செறிகெடி லக்கரைத்தே
வெங்காற் குருசிலை வீரன் அருள்வைத்த வீரட்டமே."

(திருவதிகை திருவிருத்தம். செய் 2.)

திருமுறைகள் 12-ம் சிவஞான போதத்தின் 12 சூத்திரங்கட்கும் இலக்கியமாகத் திகழ்கின்றன என்று ஆன்றோர் பலர் கூறுவார்கள். இதற்கு ஆதாரமாக நான்காஞ் சூத்திரத்திலும் நான்காந் திருமுறையிலும் வந்துள்ள சில ஒப்புமையான இடங்களைக் கீழ்க்காண்போம்.

**சிவஞான போதக் கருத்து.**

"அந்தக்கரணம் அவற்றினென் றன்றவை
சந்தித்த தான்மா சகசமலத் துணராது
அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே"

என்பது சிவஞான போதம் நான்காஞ் சூத்திரம்.

இச்சூத்திரத்தின் இரண்டாம் கூறுகிய "சகசமலத் துணராது அவைசந்தித்தது" என்பதை எடுத்துக்கொள்வோம். சகசமலம் என்பது மூலமலம். ஆன்மா அறிவுடைய பொருளா யிருந்தும் அநாதியே "செம்பிற் களிம்பு போல்" ஆணவ மலமாகிய மூலமலத்துள் கட்டுண்டு நிற்கின்றது. "நெருப்பைத் தன்னுள் மறைத்துத் தானகவே நிற்கும் விறகுபோல" ஆன்மாக்களின் அறிவை மறைத்துத் தன் வண்ணமாக்கி நிற்கும். இம்மலத்தின் தொடர்பால் ஆன்மா தன்னியல்பினுற் பொருள்களை உணரும் சக்தியின்றி இருக்கும். ஆனல் இம்மலம் அறிவை மறைக்குமேயன்றி அறிவைக் கெடுத்துவிடாது. முதல்வன் ஞானத்தை மறைக்காமல் ஆன்மாக்களின் ஞானத்தை மட்டும்தான் மறைக்கும். ஆணவத்தில் மறைப்புண்டு கிடக்கும் ஆன்மா மற்றொன்

றின் உபகாரத்தினுல் பொருள்களை அறியும். சகச மலத்தின் தன்மை இவ்வளவுதான். இக்கருத்தையே அப்பர் சுவாமிகள் புறச்சமயத்தினின்றும் போந்து அதிகை வீரட்டானேசுவரரை விளித்து, "சைவசமயமே மெய்ச்சமயம் என்று திடமாகக் கொண்டிருந்த என் ஆன்ம அறிவை சகச மலம் (ஆணவமலம்) மறைத்தமையால் அடியேன் ஒன்றையும் உணர இயலாமல் புறச்சமயம் புக்குப் பல தீமைகளைச் செய்தேன். (மறைப்புண்ட ஆன்மா மற்ருென்றின் உபகாரத்தால் பொருள்களை அறிவது போல்) மறைப்புண்டு கிடந்த ஆன்ம அறிவு அடியேனுடைய தமக்கையாரின் உபகாரத்தால் மறைப்பு நீங்கப் பெற்றுப் பொருளாகிய தேவரீரை உணர்ந்து துதிக்கும் தன்மையைப் பெற்றேன். ஆதலால் என் பிழை பொறுத்து என்னை ஆட்கொள்ளவேண்டும்" என்று திருவதிகை வீரட்டானப் பண்ணில் "கொடுமை பல செய்தனன் நான் அறியேன்" என்றும், திருச்சத்தி முற்றம் திருவிருத்தத்தில், "தெருவிற் புகுந்தேன் திகைத்தடியேன் திகைப் பொழிவி" என்றும் மிக அழகாகக் கூறிப் போந்திருக்கின்றனர். நான்காந் திருமுறையை நன்கு ஊன்றி நோக்கினுல் இதுபோன்ற சிவஞானபோதக் கருத்துக்கள் பல பல இடங்களில் அமைந்துள்ளமையை அறியலாம். "மனத்தினுர் திகைத்து நாளும் மாண்பலா நெறிகள்மேலா களைப்பரால் என்செய்கேன்"—கோயில் திருநேரிசை, "மாயத்தை அறியமாட்டேன் மையல்கொள் மனத்தனுகி" —திருக்கடவூர் நேரிசை.

அப்பர் சுவாமிகள், "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவன்அடி சேராதார்" என்று கூறிய வள்ளுவர் வாக்கின்படி தான் கடவுளிடம் வேருென்றையும் விரும்பாமல் திருவடியை என் முடிமேல் சூட்டவேண்டும் என்று வேண்டினர். வேண்டுவார் வேண்டுவதையே ஈயும் பராபரன் அவ்வாறே சூட்டியருளினர் என்பது பின்வரும் பாடல்களான் உணரலாகும்.

**சிவப்பேறு.**

"கோவாய் முடுகி யடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்
பூவார் அடிச்சுவடு என்மேற் பொறித்துவை"

(திருச்சத்திமுற்றம் திருவிருத்தம். செய் 1.)

"நன்மைபெரு கருள்நெறியே வந்தணைந்து நல்லூரில்
மன்னுதிருத் தொண்டனுர் வணங்கிமகிழ்ந்து எழும்பொழுதில்
உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்ருேம் என்றவர்தஞ்
**சென்னிமிசைப் பாதமலர் சூட்டினுன்** சிவபெருமான்."

பெரிய-நாவுக்கரசு-புராணம். செய் 195.)

"சிந்திப்பரியன" "மன்னுமலைமகள்" என்ற தலைப்புக்களையுடைய இருபதிகங்களில் பாடல்கள்தோறும் ஈசன் திருவடியைச் சிறப்பித்துக் கூறியுள்ளார்.

மாதவச் சிவ ஞானயோகி கள் வாக்கு

மக்கள் முப்பற்றையும் அகற்றித் திரிகரணங்களாலும் கடவுளை பக்தியோடு தொழுதும், விபூதி, உருத்திராக்கம் தரித்தும், பஞ்சாட்சரத்தை உச்சரித்தும், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு முறைகளை அநுசரித்தும், சிவபூசை, சிவார்ச்சனை, மாகேசுவரபூசை முதலியவற்றை அன்போடு செய்தும் தேவார திருவாசகங்களையும், சிவபுராணங்களையும் பாராயணஞ் செய்தும் வருவார்களாயின் உறுதியாகச் சிவனடி நீழலைப் பெறுவார்கள் என்பதற்கு நமது நாவுக்கரசரே சிறந்த ஓர் எடுத்துக்காட்டாக இலங்குகின்றார் என்று மாதவச் சிவ ஞான யோகிகள் தம் திருவாக்கால்,

"இடையறாப் பேரன்பும் மழைவாரும் இணைவிழியும்
உழவா ரத்தின்
படையறாத் திருக்கரமும் சிவபெருமான் திருவடிக்கே
பதித்த நெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப் பெருந்தகைதன்
ஞானப் பாடல்
தொடையறாச் செவ்வாயும் திருவேடப் பொலிவழகும்
துதித்து வாழ்வாம்."

என்று மிக அழகாகக் கூறியிருக்கின்றார்கள்.

திருமுறை ஓதற் பயன் முடிபு.

ஐந்தாம் திருமுறையும், ஆறாந் திருமுறையும் அப்பர் சுவாமிகள் தான் இயற்றி யிருக்கின்றனர். "சைவப் பெருநெறிக்கே அணியன நாவுக்கரையர் பிரான்ற னருந்தமிழ்" ஆகையால் அவற்றையும் படித்து, அவர் கூறியும் செய்தும் காட்டியவாறு நாமும் ஒழுகி, "சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம், பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம், உவமையிலாக் கலைஞானம், உணர்வரிய மெய்ஞ் ஞானம் முதலான ஞானங்களைப் பெற்று உய்வோமாக

"வாய்த்தது நந்தமக் கீதோர் பிறவி மதித்திடுமின்
பார்த்தற்குப் பாசுபத மருள்செய்தவன் பத்தருள்ளீர்
கோத்தன்று முப்புரந் தீவளைத்தான் தில்லையம்பலத்துக்
கூத்தனுக் காட்பட்டிருப்பதன்றோ நந்தங் கூழைமையே."

திருச்சிற்றம்பலம்.

என மிக அழுத்தமாக, சித்தாந்தக் கருத்துக்கள் தெளிவுற நன்றுபேசி மகிழ்வித்தார்கள்.

ஐந்தாம் திருமுறைப் பெருமையைப்பற்றி யாழ்ப்பாணத்து சுன்னாகம், குரு. **சி. மாணிக்கத்தியாகராஜ பண்டிதர் அவர்கள்** நாடகச்சுவை மிளிர அவையோர் உடன் களிப்ப எடுத்து மொழிந்தனர்.

ஆறாந் திருமுறைப் பெருமையைப் பற்றிச் சென்னை, திருவாளர். **ரா. ஷண்முகசுந்தரம் செட்டியார் அவர்கள்,**

சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் ஆறாந் திருமுறையாய் விளங்குவது திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய திருத்தாண்டகங்களாகும். இவை ஆக்கிய காரணத்தால் அடிகளைத் **தாண்டகச் சதுரர்** என்று அழைக்கப்பெறுவதுண்டு. முதன்முதலில் திருமுறை என்பது யாதென விளக்கி மேற்செல்வாம். திருமுறை என்பதனைத் தெய்வத் தன்மையுள்ள நூல்கள் எனப் பொருளுணர்த்துகின்றனர். திருமுறைகள் தெய்வத் தன்மையுள்ள நூல்களென எவரும் மறுக்கவொண்ணாதது தான். ஆயினும் அத்தொடரின் உட்பொருளைக் காண்பதே சால அழகாகும். நூல்களின் பெயர்கள் ஆக்கியோன் பெயராலும், நூல் நுதலிய பொருளின் பெயராலும் அமைக்கப்படுவது வழக்கு. தொல்காப்பியம் எனும் இலக்கண நூலினுக்கு ஆக்கியோன் பெயரால் பெயர் வைக்கப் பட்டது. மணிமேகலையின் சரிதங் கூறவந்த நூலினுக்கு மணிமேகலை என்ற பெயர் தரப்பட்டது. இங்ஙனமே நூற்பெயர்கள் எழுந்தன. நூலின் உட்பொருள் கொண்டே திருமுறை என்ற பெயரும் வழங்கலாயிற்று. இத்தொடர் திரு, முறை என்ற இருமொழிகளால் ஆக்கப் பட்டது. திரு என்பது சிவத்தைக் குறிக்கும். 'சிவமே பெறுந்திரு வெய்திற்றிலேன்' என்றார் மணிவாசகனாரும். 'திருவே' என்று அப்பரும்

ஆரூர்ப்பெருமானை யழைத்தனர். முறை யென்பது நெறி என்று விளக்கப் பட்டது. 'முறை செய்து காப்பாற்று மன்னவன் மக்கட்கு, இறை யென்று வைக்கப்படும்' எனுந் திருக்குறளில் முறை யென்பதற்கு அறநூலும் நீதிநூலுஞ் சொல்லும் நெறி என்று பரிமேலழகர் விசேடவுரை குறித் தனர். எனவே திருமுறை என்பது சிவத்தை யடையும் நெறி என்று பொருள்படும். சைவத் திருமுறைகள் யாவும் சிவபெருமானை யடையும் வழிகளைக் காட்டுமியல்பின.

இவற்றுள் ஒன்றாய் விளங்கும் ஆறாந் திருமுறையாகிய அப்பர் திருத்தாண்டகங்களும் சிவத்தைச்சேரும் நெறிதனைக் காண்பிப்பன. தாண்டகம் என்பது யாதென முதலில் ஆராய்வாம். இருபத்தேழெழுத்து முதலாக எழுத்துக்களைப் பெற்றுவரும் அடியான் வருவன தாண்டகம் எனப்படும். ஆரியத்தில் வரும் ஒருவகைச் செய்யுளான தண்டகம் என்பதனோடு சம்பந்தமுடைமையான் தாண்டகம் என்னலுமாம். அள வியற்றாண்டகம், அளவழித்தாண்டகம், சந்தத்தாண்டகம், தாண்டகச் சந்தம், சமசந்தத்தாண்டகம் எனப் பலவகைகளுண்டு. இதன் விரிவை யாப்பருங்கலக்காரிகை, யாப்பருங்கலவிருத்தி ஆகிய நூல்களுள் கண்டு கொள்க. இங்ஙனங் கூறிய பலவகை யாப்பமைதியோடு கூடிய தொண் ணூற்றொன்பது திருத்தாண்டகத் திருப்பதிகங்களுள்ளன. அவற்றுள் சில, பெரிய திருத்தாண்டகம், புக்கதிருத்தாண்டகம், போற்றித்திருத் தாண்டகம், திருவடித் திருத்தாண்டகம், பலவகைத் திருத்தாண்டகம், நின்றதிருத்தாண்டகம், அடைவுதிருத்தாண்டகம், ஏழைத்திருத்தாண்ட கம், மறுமாற்றுத்திருத்தாண்டகம், க்ஷேத்திரக்கோவை திருத்தாண்டகம், தனித்திருத்தாண்டகம், அடையாளத்திருத்தாண்டகம், காப்புத்திருத் தாண்டகம், வினாவிடைத்திருத்தாண்டகம் எனும் பெயர்கள் புனைந்தன. இவை ஒவ்வோர் காரணம்பற்றி இப்பெயர்களுடன் விளங்குகின்றன. காரணங்கள் விரிப்பின் பெருகும். தாண்டகங்கள் யாவும் தற்காலத்து இசைவாணர்கள் கமாஸ், ஹரிகுலகாம்போதி எனும் இராகங்களி லமைத்துப் பாடுகின்றனர். கேட்போரைக் காதலாகிக் கசிந்துருகும்படி செய்யவல்லன.

இனிச் சிவத்தை யடையும் வழி எங்ஙனம் கற்பிக்கப்படுவது என்றாராய்வாம். இதனை யறிவிக்கும் திருத்தாண்டகங்கள் பலவுள. பின்வரும் திருத்தாண்டகத்தைக் கருதுவாம்.

"உயிரா வணமிருக் துற்று நோக்கி
உள்ளக் கிழியி னுருவெழுதி
உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தா
லுணரப் படுவாரோ டொட்டிவாழ்தி
அயிரா வணமேறா தானே றேறி
யமரர்நா டாளாதே யாரூராண்ட
அயிராவணமே யென் னம்மானே நின்
னருட்கண்ணா னோக்காதா ரல்லாதாரே."

என்பது அப்பமூர்த்திகள் திருவாரூரில் அருளிச்செய்த திருத்தாண்டகம். முன்னிரண்டடியில் சிவபெருமானை யடையுநெறி கற்பிக்கப்படுகின்றது. உயிர்கள் உலகிற்காணப்படும் பல பொருள்களையும் கண்டுகண்டு தத்தம் மனத்தே அவைகளி னுருவத்தைப் பதிவு செய்துகொள்வ தியல்பு. ஆசை மீதூர அலைந்தலைந்து பெருமூச்சுவிட்டு ஓடித்தளர்வது கண்கூடு. இது துன்பந் தரத்தக்கதாகின்றது. துன்பமின்றி இன்பந் தரத்தக்கதாயுள்ள பொருளையே மனத்தகத் தெழுதிவிடின் இன்பமாம். இன்பந் தரத்தக்க பொருள் கடவுளேயாகும். இக்கருத்தையே,

"சுரிகுழன் மடவா ரிளமுலைப் பணைப்புந்
துகிலிறை சோர்வது நகையும்
வரிவிழித் தொழிலுஞ் சேயிதழ்த் துடிப்பு
மனத்திடை யெழுதிவைத் தழிவேன்
தெரிதமிழ்க் கயிலைச் சிவபிரான் வடிவுஞ்
செய்கையுந் தன்னடி யார்க்குப்
பரிவுகூ ரருளு மனத்தகத் தெழுதாப்
பாவியேற் கினிப்புக லென்னே."

எனச் சிவஞான சுவாமிகள் அருளினர். இறைவனது திருவுருவத்தை மனத்திடை யெழுதிக்கொள்ளுதல் இன்றியமையாதது. இறைவன் ஓருருவமு மில்லாதவன்; அவனது திருவுருவம் எங்ஙனங் கூடுமெனின், அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்தின்கண் அவர் நினைத்த வடிவுடன் நிற்பது இறைவனது இயல்பு. 'ஆரொருவ ருள்குவா ருள்ளத்துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற வருளுந்தோன்றும்' எனக் குறிக்கப்படும் இறைவனது நிலை அறியத்தக்கது. அவ்வுருவத்தினையே ஒவ்வோருயிரும் தூயவிடத்தமர்ந்து உற்றுநோக்குதல் வேண்டும். அவ்வாறு நோக்கு மிடத்து பெருமூச்சுவிடுஞ் செயல் இருப்பதாயின், மனம் ஒருமுகப்படுத

வின்றி சலித்துக்கொண்டே நிற்கும். அதனை மாற்றுவான் மூச்சடக்குதல் வேண்டும். மூச்சடக்குதலைப் பிராணயாமம் என்பர். ஆயாமம் என்பது தடுத்தல். மூச்சினையடக்குதலே அதன் பொருளாம். மூச்சினையடக்கி இறைவனது திருவுருவத்தை யுற்றுநோக்கிப் பலகால் பயில்வதாயின் மனமாகிய படத்தின்கண்ணே அவ்வுருவம் அமையும். சற்று நினைத்த மாத்திரத்தே சலனமின்றி முழுவுருவம் அமைகின்றவரை அப்பயிற்சியைக் கைவிடலாகாது. அதுவரை மிக்க வருந்தவேண்டிவரும். அப்பமூர்த்திகளும் 'வெம்மை நமன்தமர் மிக்குவிரவி இழுப்பதன்முன், இம்மை யுன்று ளென்ற னெஞ்சத் தெழுநிவை' எனப் பெரிதும் வேண்டியிரங்கினார்கள். இறைவனது திருவுருவத்தின்கண் நிலைத்த அன்போடு நிற்கும் ஒருவன் தனதாவியையும், உடலையும், உடைமைப் பொருளையும் இறைவனதாகவே கொள்ளும் மனப்பாங்குடையவனாவான். அந்நிலையையே 'உயிர் ஆவணஞ் செய்திட்டு' என்றார். இங்கு ஆவணம் என்பது உரிமைப்பத்திரம். இது மானசிகமாகச் செய்யப்பெற்றது. இக்கருத்தை வலியுறுத்திப் பிறிதோரிடத்தில் அப்பமூர்த்திகள் 'ஆவணத் தாலென்றன்னை யாட்கொண்டான் காண்' எனக் குறித்தமை யறிக. திருஞானசம்பந்தரும் 'ஆவணங் கொண்டெமை யாள்வ ராயினும், கோவணங் கொள்கையர் கொள்ளிக்காடரே' எனப்பாராட்டியது இம்முறைமை பற்றியேயாம். மணிவாசகனாரும் 'ஒப்பாக வொப்புவித்த வுள்ளத்தா ருள்ளிருக்கும், அப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்கா ணம்மானாய்' என வருளியது இக்கருத்தையே விளக்குகின்றது. உடல்' பொருள், ஆவி யாவும் இறைவன் வசமாக்குதலை, 'உன்கைத் தந்தால்' என்றார். அவ்வாறு ஒப்புவித்த கடனால் இறைவன் தான் உணர்த்த உணரும் உயிர்களோடு கலந்து நின்று வாழுந் தன்மையன் என்பார் 'உணரப்படுவாரோ டொட்டி வாழ்தி' என்றார். இங்கு ஒட்டி என்பது ஒற்றுமை யெனப் பொருள்படும். இவ்வொற்றுமை உயிர்கள் இறைவனைப் பற்றிநிற்கும் இயல்பினால் நிகழ்வது. சிவனடியார்கள் 'ஒட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்' என்று போற்றப்பட்டுள்ளனர். 'ஒட்டி யாட்கொண்டுபோய்' எனச் சுந்தரர் அருளியதுங் காண்க. பற்றி நிற்கும் பத்தருள்ளத்தே பரமன் வீற்றிருந்தருளுவன் எனத் 'தொழுதகங் குழைய மேவித் தோட்டிமை யுடைய தொண்டர், அழுதகம் புகுந்து நின்று ரவரவர் போலு மாரூர்' என்றருளினர். தோட்டிமையென்பது ஒற்றுமை. இவ்வொற்றுமை பல திறத்தனவென சிவஞானமுனிவர் சிவஞானபோதம் பத்தாஞ் சூத்திரம் முதலதிகரணத்தில் கூறியன யாவும் சிந்திக்கத்தக்கன. கடவுள் தன்னோடு கலந்து நிற்கும் அன்பர்கள் உள்ளத்தே வாழுமியல்பினன். எனவே சிவத்தையடையுங்நெறி இத்திருத்தாண்டகத்தே செம்மையாக உயிர்களுணர்ந்து

உய்யும்படிக் கற்பிக்கப்பட்டது. இதுபோன்றே பற்பல விடங்களில் இத் திருமுறையின்கண்ணே சிவபெருமானை யறிந்து வழிபடுமுறை உணர்த்தப்பட்டுள்ளது. தம் கடன் உயிர்கள்தம்மைத் தாங்குதல் என நின்ற இறைவனிடத்து நம் கடன் பணிசெய்து கிடப்பதே என்றொழுகி யுய்வோமாக.

என நுணுகிக் கண்ட அரும்பெரும் மணிகளை விளக்கினார்கள்.

ஏழாந் திருமுறைப் பெருமையைப்பற்றித் திருவாரூர் தமிழாசிரியர், வித்துவான், திரு. ச. **தண்டபாணி தேசிகர் அவர்கள்,**

மக்கள் மனத்தை இறை இன்பத்தில் என்றும் ஆழச் செய்வன தேவாரத் திருமுறைகளேயன்றி வேறு எவற்றானும் முடியாது. அதிலும் சிறப்பாக ஏழாந் திருமுறையின் தெய்வத்தன்மையை, தமிழின்மேல் வைத்துப் பரஞ்சோதியார் "தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும்" என்பது முதலாகப் பல நிகழ்ச்சிகளை எடுத்துப் பகர்கின்றார். இத்திரு முறை நமக்கு நம்பியாரூரருடைய வரலாற்றை அறிவிக்கும் அகச்சான்று களாக அழகுசெய்கின்றன. நட்பின் சிறப்பை நன்கு அறிவிக்கின்றன. புராண வரலாறுகளைப் பொருந்த விளக்குகின்றன. இயற்கை எழிலை எடுத்துக் கூறுகின்றன. சாத்திரக் கருத்துக்களைச் சாற்றுகின்றன. துறைதழுவிய பாசுரங்களை உடையன. நகைச்சுவை ததும்பும் பகுதி களும் பிற நூற்கருத்துக்களோடு ஒத்த பகுதிகள் பலவும் விளங்கு கின்றன.

### அகச்சான்றுடன் கூடிய சரித்திர வரலாறுகள்

நம்பியாரூரர் தன்னை அடிக்கடி 'நாவலாரூரன்', 'சடையனவன் சிறுவன் இசைஞானி காதலன்' எனக் கூறிக்கொள்ளுவதால் திருநாவ லூரிலே சடையனாருக்கும் இசைஞானியாருக்கும் செல்வப் புதல்வராக அவதரித்தவர் என்பது அறியப்படும். பின்னர் தாம் நரசிங்க முனை யரையன் என்ற மன்னரால் ஆதரிக்கப்பெற்றமையை நேர்முகமாக நாமறிய எடுத்தியம்பாவிட்டாலும் ஊரின்மேல் வைத்து "நரசிங்கமுனை யரையன் ஆதரித்து ஈசனுக்கு ஆட்செய்யும் ஊர்" என்று கூறுவதால் நரசிங்கமுனையரையரிடம் தமக்கிருக்கும் பேரன்பைக் காட்டிக்கொள்ளு கின்றார். அன்றியும் இறைவன் தடுத்தாட்கொள்ளுகின்ற காலத்துக் காட்டிய ஓலையின் வாசகத்தை "மூத்தவை தந்தைதம் மனைக்குந் தம்

பிரானுர்" என்றும், "ஏழேழ் படிகால் எம்மை ஆட்கொண்ட" என்றும் பலப்பல பகுதிகளிலும் அறிவிக்கின்ற அழகு இன்புறற்பாலது. அன்றியும் தடுத்தாட்கொள்ளவந்த அந்தணரை 'வாயாடி மாமறை ஓதி ஞர் வேதியனுகிவந்து' என்றுகூறி அருள்வதால் வந்த மறையவர் தம்மை முழுவதும் விளக்கப் பெறுகின்றனர். எங்ஙனமெனில், வாய் அடங்கி இருக்கவேண்டிய மறையவர் வாயாடியாக இருக்கின்ருர். மறைகளை ஓதியவர் என்பது அதன் கருத்து. மாமறை ஓதி என்பதற்கு மறைகளால் ஓதப்பெற்றவர் என்ற பொருள் ஈம்மனத் தெழும்போது இறைவன் தன்மையும் உடன்தோன்றும். இங்ஙனம் தடுத்தாட்கொள்ளப்பெற்ற அருமைப்பாட்டையும் தான் அவரை வைததையே முதலாகக்கொண்டு பாடும் இயல்பையும் "பித்தா பிறை சூடி" என்ற பதிகம் விளக்கி நிற்கும். அவற்றுள் இறைவனை அத்தனுக, அன்னையாக, அடிகளாக, அண்ணனுக, ஆப்தனுக, அழகனுகக் கருதி இன்புறுகின்ற காட்சி மிகச் சிறந்ததாகும். இங்ஙனம் முதற்கண் பித்தா என்று பெருமானை அழைத்தவர் ஞான நட்பின் மீதூர்ச்சியினுல் "பித்தரை ஒத்தொரு பெற்றியர்" என உவமை கொடுத்தார். பின்னர் பழமண்ணிப் படிக்கரைத் தேவாரத்து, "பித்தரென்று கருதேன் மின் படிக்கரையுள் பற்றரைப் பற்றிநின்று பழிபாவங்கள் தீர்மின்களே." என்று உலகத்தவர் மேல்வைத்து உரைக்கின்ருர். பித்தர் என்ற நிலைக்கும் பித்தரை ஒத்தவர் என்ற நிலைக்கும், பித்தரென்று கருதாதிர்கள் என்று எதிர்மறுத்துரைத்த நிலைக்கும் உள்ள உளநிலை வேறுபாடு ஊன்றி நோக்குவார்க்கு உணர்ச்சியமுதம் ஊட்டுவதாகும். இவ்வாறே நம்பியாரூரருடைய ஒவ்வொரு நிகழ்ச்சிகளும் அகச்சான் ருேடு அழகுசெய்வன. ஆதலின் அதனைவிடுத்து நட்பின்திறத்தை ஒரு சிறிது நோக்குவோம்.

நட்பென்பது ஒருவர்நலத்தை இருவர் பகிர்ந்து நுகர்வதும், ஒருவர் துன்பத்தில் மற்ருெருவர் பங்குகொள்வதுமாக விளங்குவது. சுந்தரர் பெருமான் கோடிக்கரைக்குச் செல்லுகின்ருர். அங்கேதன் தோழராகிய தம்பிரான் தனியாக அம்மையோடு விற்றிருத்தல் மிகவும் கவலை விளை வித்தது. "கடிதாய்க் கடற்காற்று வந்துஎற்றக் கரைமேல் குடிதான் அயலேஇருந்தால் குற்றமாமோ" என்று கூறுகிருர். "வேடித்தொண்டர் சாலவும் தீயர்" "பொந்தில் ஆந்தைகள் கூகை குழறும்" ஆகையால் இமவான் மகளோடு இங்கு எழுந்தருளியிருப்பது தகாது என்று கனிந்து கனிந்து கரைகின்ருர். இறைவனே திருமுருகன்பூண்டிக்கு இவர் எழுந்தருளியகாலத்து சேரமானிடம்பெற்ற பொருள்களைத் திருடர்களைக்

கொண்டு பறிப்பிக்கின்றுன். அப்பொழுது தன்கடமையில் தம்பிரான் தவறிவிட்டதாகத் தோழர் எண்ணி "எல்லேக்காப்பதொன் றில்லேயாகில் எத்துக்கு இங்கிருந்தீர்" என்றும், "பூண்டிமாநகர்வாய் இட்ட பிச்சை கொண்டு உண்பதாகில் நீர் எத்துக்கு இங்கிருந்தீர்" என்றும் மேலும் மேலும் சினந்து கூறுதல் காண்க. இக்காட்சி நட்புரிமையின் நலத்தை மிக விளக்குவது.

நட்பாளனே அறத்தாலும் பொருளாலும் தளராமல் தாங்குவதே உண்மை நட்பாளன்கடமை. இதனேயே நமது நாயனுர் 'நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின் கொட்பின்றி ஒல்லும்வாய் ஊன்றும்நிலே' என்பார். அங்ஙனமே புகலூர் மேவிய புண்ணியனும் முதுகுன்ற மமர்ந்த பழமலேநாதரும், தியாகேசப் பெருமானும் பொன்னும், நெல்லும் தந்து போற்றினர்.

உண்மை நட்பாளனேக்கண்ட இடத்து உளமகிழ்ந்து, வரவேற்று, உபசரித்தலன்றே உண்மைநட்பு. அங்ஙனமாகவும் சுந்தரர் பெருமான் ஆறைமேற்றளி என்னும் தலத்தை வணங்கி திருஇன்னம்பர்வந்து தங்குகின்றுர்கள். இறைவன் எந்தமுறையிலும் அன்பு காட்டவில்லே. அதனேக் கண்ட ஆரூரர் "அங்கமோதியோர் ஆறைமேற்றளி நின்றும் போந்து வந்து இன்னம்பர்த் தங்கினேமையும் இன்னது என்றிலர் ஈசனுர்; எழு நெஞ்சமே.........புறம்பயந் தொழப்போதுமே" எனச் சினந்து கூறுகின்றுர். வேற்றூர்க்குச் செல்ல விழைகின்றுர்.

மற்றும் திருநாகைக்காரோணத் தேவாரத்து இன்பப் பொருள் எல்லாம் கேட்டுக் கொடுக்காவிட்டால் 'அடியொடுக்க லொட்டேன்' என்ற உரிமை உணர நம்மாலெல்லாம் ஊன்றி இன்புறத்தக்கன.

இங்ஙனம் இணேந்தும், பிணங்கியும் நட்புக்கொண்ட நாவலாரூரர் விரும்பி நட்ட விடைஏறும் பெருமான் நம்மைக் கோபியார் என்று எண்ணுகிறுர்கள். உண்மை நட்பிற்கு அழகு சிறுதவறு செய்யினும் அதனேப் பொறுத்தலே என்பதைப் புந்தியிற் போற்றுகின்றுர். 'நட்பிற் குறுப்புக் கெழுதகைமை, மற்றதற்கு உப்பாதல் சான்றேர் கடன்' என்ற நீதி மனத்துள் எழுகின்றது. ஆதலால் 'நாம் சங்கிலியாரை மணக்க மகிழடியிற் சபதம் செய்தாலும் ஆரூருக்குப் போகலாம்; அன்புடை நட்பாளராகிய ஆண்டவன் பழமை கருதி குற்றம் பாராட்டமாட்டான்',

என்று எண்ணி பிரியத் தலைப்பட்டார். பெருமான் 'தகுதி என ஒன்று நன்றே பகுதியார் பாற்பட்டு ஒழுகப்பெறின்' என்பதைத் திருவுளத்துக் கொண்டு, பகைவன், அயலான், நட்பினன் ஆகிய மூவரிடத்தும் ஒப்ப நடுநிலைமை தவறுதிருத்தல் இறைமைக்கு இலக்கணமாதலின் சபதம் தவறியவர்களுக்குக் கொடுக்கும் தண்டனையை ஏற்பித்தார். அதனை ஏற்று ஆரூரர் கண்ணிழந்து வருங்கால் திருவெண்பாக்கத்தில் நட்புரிமையால் நாதனை வேண்டுகின்றார். நடுவு நிலைமையால் இறைவன் காட்சி நல்காது 'உளோம் போகீர்' என்று உரைக்கின்றார். அப்போது சுந்தரர் பெருமான் தான் நட்பின் பழமை நோக்கியே சபதம் தவறினேன் என்பதையும், இறைவன் நடுநிலைமை ஒன்றையே நோக்கி கண்மறைப்பித்தார் என்பதையும் "பிழை உளன பொறுத்திடுவர் என்றடியேன் பிழைத்தக்கால் பழியதனைப் பாராதேபடலம் என்கண் மறைப்பித்தாய்" எனவும், "பொன்நவிலும் கொன்றையினாய் போய்மகிழ்க்கீழ் இருவென்று சொன்ன எனைக்காணுமே சூளறவு மகிழ்க்கீழே என்னவல்ல பெருமானே இங்கிருந்தாயோ என்ன ஒன்னலரைக் கண்டாற்போல் உளோம் போகீர் என்றானே" எனவும் குறிப்பித்துச் சொல்லுகின்றார். இதில் பழியதனைப்பாராதே என்பது பழமைநோக்கிப் பாங்கன் செய்த தவற்றைப் பொறுக்காத பழி எனப் பொருள்படுதல் காண்க. பின்செய்யுளில்' 'யான் நட்புரிமையால் உனது நடுநிலைக்கும் பங்கம்வராதபடி முன்னைச் சரிக்கையாக மகிழ்க்கீழ் இருவென்று வேண்டிக்கொண்டிருக்கவும் அடியேனைப் பார்க்காமல் சங்கிலியாரிடம் சென்று மகிழடியிற் சபதம் செய்விக்க ஏவியதும் அன்றி இன்றைக்கு அடியேன் அழைக்க நட்பாளனாகிய என்னை பகைவனைக் கண்டாற்போல் பதில் விடுத்தானே' என்று கவலுதல் பழமைப் பண்பைக் கழறுவதாகும். இவ்வாறே "பிள்ளை தரச்சொல்லு" என்று ஆணை இடுவதும் 'இவரலாது இலையோ பிரானார்' என எள்ளி உரைப்பதுவும், திருப்பைஞ்ஞீலித் தேவாரத்துப் பகர்வதுவும் பிறவும் நட்புரிமையை நன்கு விளக்குவனவாம்.

முத்தி தனைஅளிக்கும் மோன நிலைசேர்க்கும்
பத்தி மிகப்பெருக்கும் பண்ணிய—சித்தியெலாம்
கூட்டுவிக்கும் சீர்சூழ் குவலயத்தே நன்னெறியில்
காட்டுவிக்கும் நல்லோர்தம் நட்பு.

என்னும் ஆன்றோர் அமுத மொழிக்கு அமைந்த இலக்கியமாவது இவர்கள்தம் நட்பேயாகும்.

## அன்பர் வரலாறுகள்

இத்திருமுறையின்கண் 63-அடியார்களின் அரும்பணிகளும் தொகையாகக் குறிக்கப்பெறினும், சிலர் வரலாறுகள் ஆங்காங்கு தனியே எடுத்தும் விதந்தும் கூறப்படுகின்றன. "அகத்தடிமை செய்யும்" என்னும் திருப்பாடலில் புகழ்த்துணைநாயனார் பஞ்சம் தீரும்வரை படிக் காசு பெற்ற வரலாறு உணர்த்தப்பெறுகின்றது. "நாளும் இன்னிசை யால் தமிழ்பரப்பும் ஞானசம்பந்தனுக்கு, உலகவர் முன் தாளம் ஈந்து அவன் பாடலுக்கிரங்கும் தன்மையாளன்", "காழிதன்னுள் உயர் ஞானசம்பந்தர்க் கன்று ஞானமருள் புரிந்தான்" முதலியன ஞான சம்பந்தப் பெருமானது வரலாறுகளை வகுப்பன. "இணைகொள் ஏழெழு நூறு இரும்பனுவல் ஈன்றவன் திருநாவினுக்கரையன்" என்பது திரு நாவுக்கரசர் அருளிச்செய்த பாடற்றொகையைப் பகர்வதாகும். "நேச முடை அடியார்கள் வருந்தாமை அருந்த நிறை மறையோர் உறை வீழிமிழலைதனில் நித்தல் காசு அருளிச்செய்தீர்" என்றது அப்பரும் சம்பந்தரும் திருவீழிமிழலையில் படிக்காசு பெற்றதை விளக்குகின்றன. "தாதை தாளற எறிந்த சண்டிக்கு உன் சடைமிசை மலர் அருள்செயக் கண்டு", "அடித்தண்டி தாமென வைத்துகந்தார்" என்ற பகுதி கள் சண்டேசுரர் வரலாற்றையும் அவர் அடைந்த பேற்றையும் பேசுவன. "திருவும் வண்மையும் திண்டிறல் அரசும் சிலந்தியார் செய்த செய்பணிகண்டு மருவுகோச் செங்கணன் தனக்களித்த வார்த்தை", "தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி சித்திரப்பந்தர் சிக்கென இயற்றச் சுருண்ட செஞ்சடையாய் அது தன்னை சோழனாக்கிய தொடர்ச்சி கண்டு" "கோச்செங்கணன் செய் கோயில் நாடிய நன்னிலத்துப் பெருங்கோயில்" என்பனவற்றால் கோச்செங்கட்சோழ நாயனாரது முற் பிறப்பு வரலாறும் சோழனாகிச் செய்த திருப்பணிச் சிறப்பும் கூறப் பெறுகின்றன. இவ்வாறே கண்ணப்பர், ஏயர்கோன்கலிக்காமர், கோட் புலி, திருநாளைப்போவார், கணம்புல்லர் முதலிய நாயனாரது சரித்திரக் குறிப்புகள் பலஇடங்களிலும் இலங்குகின்றன.

புராண வரலாறுகளில் முப்புரம் எரித்த வரலாறு, பெரும் பாலும் இறைவன் வில் வளைத்து அம்பு எய்தியே துளைத்ததாகவும், அசுரர் மூவர் பிழைத்ததாகவும், அவர்களுக்கு வாயிற் காவலராம் பேறு அளித்ததாகவும் பல இடத்தும் பேசுகின்றது. அருச்சுனர்க்குப் பாசுபதம் அளிக்குங்கால் வேடனாகி விளையாட்டுச் சண்டைகள் விளைத்ததுவும், இராவணனை விரல் ஊன்றி அடர்த்ததுவும் குறிக்கப்பெறுகின்றன. தலவரலாறுகளாக, திருவானைக்காவில் சோழன் காவிரியில் மூழ்கும்

போது முத்துமாலை கழுவ அது இறைவனுக்காகுக என்றெண்ணினானென்றும், அது திருமஞ்சனக் குடத்தின்வழியாகச் சென்று இறைவன் திருக்கழுத்தில் விளங்கிற்றென்றும் விளக்கப்பெற்றுள்ளது. திருவீழிமிழலையில் திருமால் ஆயிரந் தாமரைகொண்டு அருச்சித்துச் சக்கரம் பெற்ற வரலாறு குறிக்கப்பெறுகின்றது. பரசுராமன் முன்னூற்றறுபது வேலி நிலத்தை முன்னூறு வேதியர்க்கும், இறைவனுக்குமாகக் கொடுத்து நின்றியூரை மட்டும் இறைவனுக்குக் கொடுத்துப் பாததரிசனம் பெற்றான் என்றும் குறிக்கப்பெறுகின்றது. "சொல்லரும் புகழான் தொண்டைமான் களிற்றைச் சூழ்கொடி முல்லையாற் கட்டிட்டு எல்லையில் இன்பம் அவன் பெற வெளிப்பட்டு அருளிய இறைவன்" என்ற பகுதியால், கருணைக்கடலாகிய கண்ணார்த் தொண்டைமான் என்பவன் புழற்கோட்டத்தில் அரசாண்ட. சிற்றரசர்களாகிய குறும்பர்களை அடக்கப் படையெடுத்துச் சென்றான்; காட்டின் வழியாகச் செல்லும் போது ஒரு முல்லைக்கொடி அரசன் ஏறிய பட்டத்துயானையைத் தடுத்தது; அரசன் சினந்து தனது உடைவாளால் அக்கொடியை வெட்ட, அது அடியிலிருந்த சிவலிங்கப்பெருமான்மீது விழுந்தது; இரத்தம் பெருகிற்று; அரசன் அஞ்சிப் பிரார்த்தித்தான். இறைவன் வெளிப்போந்து அருள் செய்தனர் என்ற வடதிருமுல்லைவாயில் செய்தியை வலியுறுக்கின்றது.

இவ்வாறே முற்கூறிய ஒவ்வொரு பகுப்பும் தனித்து ஆய்ந்து இன்புறக்கூடியதாகப் பேரின்பம் பயப்பது. ஒருவாறு சிலவற்றைத்திருவருள்துணைகொண்டு இப்போது சிந்திக்கநேர்ந்தது. பின்னர் ஏழாந் திருமுறையும் இயற்கைஎழிலும், ஏழாந்திருமுறையும் சாத்திரக்கருத்துக்களும் முதலியபல பகுதிகளாகப் பார்த்துப்பார்த்து மொழிக்கு மொழி தித்திப்பாந் தன்மைகண்டு இன்புறுதற்குரியது என்பதோடு முடித்துக் கொள்ளலாம்.

என அருமையாக விளக்கிப்பேசினார்கள்.

எட்டாந் திருமுறையைச் சிறப்பாகக் கூறுமுகத்தான் சென்னை, கல்வித்துறைத் துணைத் தலைவர் (Assistant Director of Public Instruction.) **திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள்**, B. A., L. T.,

சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் எட்டாவதாகிய திருவாசகம் தனிச்சிறப்புக்கள் சில உடையது. இதனைத் தில்லைச் சிற்றம்பலவரே தமது திருக்கரத்தால் எழுதியருளினர். இதன் ஆசிரியருக்குச் சிவாலயங்களில் மார்கழியில் தனிவிழா நடத்தப்படுகிறது.

திருவாசகமாகிய தெய்வத் திருநூல் ஒருகாலத்தில் வாழ்ந்திருந்த ஒருபக்தர் தமது குறையை இறைவனிடம் முறையிட்டு முத்திபெற்ற வரலாற்றை அவரளவிற் பொருந்தி அடங்கி நிற்குமுறையில் இயன்ற தொன்றன்று. அது முத்தி விருப்புடையார் அனைவரும் தமதான்மப் பிரயாணத்தில் தாண்டிச்செல்லும் கட்டங்களையும், அநுபவங்களையும், இறுதியில் அடையும் நிலையையும் இனிது விளக்கி யுபகரிக்கும் அநுபவப் பொது நூலாய் இலங்குவது. இந்நூலில் புராண வரலாற்றுக் குறிப்புகள் கனிந்த பழத்தின் மேல் தோல்போல ஆங்காங்கு அமைந்து காணப்படினும், அவை சுட்டும் தத்துவப் பொருள்களை நோக்குமிடத்து, இது சைவசமயிகட்கு மட்டுமன்றிப் பிறசமயத்துள்ளார்க்கும் மிகவும் நலம் பயத்தற்குரிய தொன்றென்பது புலனாகும். பண்டைக் கிறித்துவ சமய அநுபூதிமான்களிற் சிலர் எழுதியுள்ள சிறந்த அநுபவ வாசகங்கள் சிலவற்றிலும் மணிவாசகனர் திருவாக்கிலும் வியக்கத் தக்க ஒற்றுமை காணப்படுகின்றது. திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த டாக்டர் G. U. போப் என்னும் ஆங்கிலப் பெரியார் இந்நூலின் தன்னந் தனிப் பெருமையை மனமாரப்போற்றி எழுதியுள்ளார்.

உயிரானது உலோக உலகம், தாவர உலகம், விலங்குலகம் இவற்றில் உழன்று, அறிவனுபவம் படிமுறையில் வளரப்பெற்று, மானுட யாக்கையில் புகுதலும், அதன்பின்னர்ப் பல்வேறு இன்னல்களினூடே கொண்டு செலுத்தப்பட்டுத் தெய்வமென்பதோர் சித்தம் உண்டாகப் பெறுதலும், அத்தெய்வத்தைக் காட்டவல்ல குருநாதனைக் காண வேட்கை கொள்ளுதலும், இறைவனே ஆசாரியனாகப் பின்பு எழுந்தருளுதலும், அவன் உபதேசமருள நிட்டை கூடுதலும், நிட்டை கூடிய பின்னரும் வாசனமலத் தாக்குதலினுல் நிட்டை சிதைவுறுதலும், அதுகாலை இறைவன் துணைவேண்டிச் சாதகன் கதறுதலும், அம்முறையீட்டிற் கிரங்கி உரைமாண்ட உத்தமன் சாதகன் உணர அவன் உளத்துள் வந்து நடி புகுதலும், அதன் பயனுல் உலக வாசனைகளனைத்தும் இரையிலாப் பறவைகள் போல இரிந்தோடி விடுதலும், இத்தகைய பிரபஞ்சப்

போரில் நிலைத்த ஞானவெற்றி கிடைத்தலும், அந்தமிலா ஆனந்தம் பெருக்கெடுத்தலும், இம்முத்தான்மா தான்பெற்ற இன்பம் இவ்வையகம் பெறவேண்டுமென்று விழைந்து உலகோர்க்கு உபதேசம் உரிமையுடன் செய்யத் தலைப்படுதலும், இன்னன பிறவும் இவ்வனுபவ நூலின் எழில் மிகு தமிழ்ப் பாசுரங்களில் காணப்படும். எனவே நம் திருவாசகமானது முமுட்சுக்கள் அனைவர்க்கும் பத்தி நெறியும் முத்தி நெறியும் இனிது புலப்படுத்த வல்ல அநுபவப் பொதுப் பெருநூலாகும். இம்மாண்பினைத் தத்துவ சாத்திரப் பேரறிஞரென உலகம் போற்றும் **ஸர். S. இராதாகிருஷ்ணன்** தமது இந்திய தத்துவ சாத்திரத்தில் (* Indian Philosophy) பின்வரும் வாக்கியத்தில் குறித்துள்ளார். "Tiruvasagam depicts in beautiful hymns the progress of the soul from the bondage and ignorance and passion into the liberty of light and love, its first awakening, its joy and exaltation, waywardness and despondency struggle, and unrest, the peace and joy of union"

இத்துணை அருமை பெருமை வாய்ந்த திருவாசகத்தைச் சிறப்பு வகையில் தமிழ் மக்களனைவரும், கட்டாயமாகச் சைவரெல்லோரும் கூடியவரையில் சொல்லின் பொருளுணர்ந்து ஓதி யுருகி உயர்வடையும் உரிமையும் கடமையும் உடையவராவர்.

இக்கால உலகவாழ்வில் பொருளற்ற வெறுவாசகம் நிறைந்துள்ளது. துன்பம் பெருகியுள்ளது. ஆகவே, உலகர் செவியிலும் திருவாசகத்தில் சில வாசகம் நுழையப் பெறுமாயின் எவ்வளவோ நன்மையுண்டாகும். இப்பெரு நூலைத் தமிழ் வழங்கும் நாட்டுக்கப்பாலுள்ள பிறநாட்டு இந்திய சகோதரர்கட்காக அவரவர் பாஷைகளில் மொழி பெயர்த்துத் தருவதும், வெளிநாடுகளில் இதைப்பற்றி நன்முறையிற் பிரசாரம் செய்ய ஏற்பாடு செய்வதும் சைவத்தலைவர்கள் மேற்கொள்ளத் தக்க மாண்புறு சிவதருமங்களாகும்.

என இனிது கூறினர்.

ஒன்பதாம் திருமுறையைப் பற்றி, சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர் இராவ்சாஹிப் திரு. S. **வையாபுரிப் பிள்ளை அவர்கள்,** B. A., B. L.,

---

* இரண்டாவது பாகம்—பக்கம் 729.

எட்டாந் திருமுறையாகிய திருவாசகத்தைக் குறித்து இதுகாறும் பிரசங்கம் நிகழ்ந்தது. திருவாசகம் அற்புதமான தெய்வத் தமிழ்நூல்; பக்திப் பெருவெள்ளத்தில் மிதந்து வந்த பழுத்த செழுங்கனி. "பக்தி வலையிற் படுவோன்" ஆகிய இறைவனது திருவருள் முற்றும் விளங்கும் முழுமுதல் நூல். இந்தநூலின் பெருமையானது உங்களனைவரையும் வசீகரித்துவிட்டது. இதன்கண்ணே லயித்து நிற்கின்ற உங்கள் மனத்தை மீட்பது அசாத்தியமாகும்.

ஆனால், ஒன்பதாந் திருமுறையாகிய திருவிசைப்பாவுக்கு இரண்டு சிறப்பியல்புகள் உள்ளன. முதலாவது ஒன்பது அடியார்கள் பாடிய பக்திப் பனுவல்களைத் திரட்டி அமைத்தது இத்திருமுறை. மாணிக்கவாசக சுவாமிகள், சுந்தரர், அப்பர், சம்பந்தர் என்ற சைவசமயாசாரியர்கள் நால்வரும் தனித்தனியே இயற்றியருளியவை எட்டுத் திருமுறைகளாகப் பகுக்கப்பட்டன. பல அடியார்கள் இயற்றியவை ஒரு திருமுறையாக அமைந்துள்ளது என்பது ஒன்பதாந் திருமுறைபற்றி நாம் மனங் கொள்ள வேண்டியதொரு விஷயமாகும். மாணிக்கவாசக சுவாமிகள் சரிதத்திலே பழவடியார்களுடைய கூட்டத்தில் அவர் சேர அவாவித் துடிதுடித்துக் கொண்டிருந்தாரெனக் கேள்வியுறுகின்றோம். திருவாச கத்திலே பழவடியார்களின் கூட்டத்தைக் குறித்துப் பல இடங்களில் சுவாமிகள் பாடுகின்றார்கள். ஆகவே, அடியார்கள் கூட்டமென்பதற்குத் தனிப் பெருமை யுண்டு. அக்கூட்டத்தினரிற் சிலர் இயற்றிய ஒன்பதாந் திருமுறை சைவ நன்மக்களாகிய நம்மனைவராலும் போற்றப்படுதற் குரிய பெருமை வாய்ந்துள்ளது.

இந்த அடியார்களுள்ளே ஒருவர் அரசராவார். இது இரண்டாவ தாக நான் கூறவெண்ணிய பெருமையாகும். அடியார்களாகிய அரசர்கள் பலருளர். ஒருங்கே அடியாரும் கவிஞருமாகிய அரசர் மிகச் சிலரே யுள்ளார்கள். அரசியல் விவகாரங்களிலே மனம் அலைப்புண்டு உழலும் அரசர்களுக்குச் சாந்தி கிடைப்பது அருமை. சாந்தி கிடைப்பினும் அச் சாந்தியைப் பயன்படுத்தி இறைவன்பால் தன்னெஞ்சை நிறுவுவது மிக அருமை; சாந்திபெற்று இறைவன்பால் பத்திமை பூணினும் கல்வியறிவிற் சிறந்து, கவித்வ சக்திபெற்று, பக்திரஸந்தளும்பும் இனிய கவிகளை இயற்றுதல் எல்லாவற்றிலும் அருமை. அரியவற்றுள் அரிய இச் செயலைச் செய்தவர் திருவிசைப்பாவைப் பாடியோருள் ஒருவராகிய கண்டராதித்ததேவர் என்னும் அரசர்பிரான். மாணிக்கவாசக சுவாமி கள் மந்திரியாயிருந்து அப்பதவியைத் துறந்து உண்மை வாழ்வு வாழ்ந்த

அருட்செல்வராவர். கண்டராதித்ததேவர் அரச பதவியை ஒரு பாரமென்றெண்ணுது அதனையுந்தாங்கி, தமது பக்திப் பெருவாழ்விற்கும் இடையூறின்றி வாழ்ந்த அருட்செல்வராவர். இவ்வரசரேயன்றி கருவூர்த்தேவர் முதலிய சித்தரும், பிறரும் இத்திருமுறையைக் கண்டவர்களாவார்கள். இதனானும் இத்திருமுறையின் பெருமை விளங்கும்.

இவ்விரண்டுவகைப் பெருமையும் நூற்குப் புறம்பாக வுள்ளன. நூலினகத்தே அதன் உண்மையான பெருமை காணப்படுகின்றது. செய்யுட்கள் அனைத்தும் இசையோடு பாடுதற்கமைந்தன. இதுபற்றியே திருவிசைப்பா என இத்திருமுறை பெயர்பெற்றது. அன்றியும், இச் செய்யுட்களில் கவிதாரஸமும், பக்திரஸமும் நிரம்பியுள்ளன. உதாரணமாக,

"கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியைக் கரையிலாக் கருணைமாகடலை
மற்றவ ரறியா மாணிக்க மலையை மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றவெஞ் சிவனைத் திருவீழி மிழலைவீற் றிருந்த
கொற்றவன் றன்னைக் கண்டுகண் டுள்ளங் குளிரவென் கண்குளிர்ந் தனவே"

என்ற ஒரு செய்யுளை யெடுத்துக்கொள்வோம். இறைவன் செம்மேனி யெம்பிரானல்லவா? ஆகவே, பழுத்துச் செக்கச்சிவந்து ரஸந்தளும்பி யிருக்கும் ஒரு கனியைப்போலுள்ளான். பச்சைக் குழந்தை வாய்ச் சுவை யொன்றுதான் அறியவல்லது. அது நல்ல சங்கீதத்தை அனுபவிக்க முடியுமா? நல்ல படத்தைப் பார்த்து அனுபவிக்க முடியுமா? நறுமணத்தை நுகர்ந்து இன்புற முடியுமா? முடியவே முடியாது. மக்கள் வாழ்வில் பிறப்புமுதல் இறப்புவரை தொடர்ந்து நிற்பது வாய்ச்சுவை யொன்றுதான். இச்சுவையோடு கூடிய பொருள்தான் ஆன்மாவின் கோயிலாகிய சரீரத்தை வளர்ப்பது. இக்காரணங்கள் பற்றிப்போலும் திருவள்ளுவரும் "சுவை யொளி யூறோசை நாற்றம்" என முதற்கண் சுவையை வைத்துள்ளார்.

வாய்ச்சுவைக் குரிய பொருள்களிற் சிறந்தது சிவந்த இனிய கனியல்லவா? ஆகவே, இறைவனைக் கனியென்பதில் எத்துணைக் கவி நயம் உள்ளதென்பதைச் சிந்தித்துப் பாருங்கள். இக்கனிதான், பூமியிலே, அழுக்கு மண்ணிலே வளர்ந்த மரத்தின் கனியா? அன்று; விண்ணுலகத்திலேயுள்ள கற்பக விருக்ஷத்தின் கனிபோன்றது. எனவே, விண்ணருள வந்ததொரு மெல்லமுத மனையது. விரும்பிய அனைத்தையும் கொடுக்கக்கூடிய தெய்வத் தருவின் நறுங்கனிபோன்றது. இக்கனி

தான் தோல் முதலியன சீவி உண்ணவேண்டுவதா? அன்று; இருக்கின்றபடியே விழுங்கத்தக்கது. ஒருமுறை விழுங்கி அமையக் கூடியதா? அன்று; விழுங்குதல் என்பதற்கு மாணிக்கவாசகர் கூறும் பொருளை நுனித்துக் காணுங்கள். "பருகியும் ஆரேன்; விழுங்கியு மொல்லகில்லேன்" என்பது சுவாமிகள் திருவாக்கு. எத்தனை முறை விழுங்கியும் விழுங்கித் தீர்ந்தபாடில்லை. விழுங்கியவண்ணமாக யிருக்கும்படிச் செய்வது இத் தெய்வச் செழுங்கனி. நினைக்குந்தோறும் இனிக்கும் திருநாமத்தை யுடையவனை, நச்சுவார்க்கினியனை, சுவைத்து விழுங்கி யமையாத இனிய செழுங்கனிக்கு ஒப்புக்கூறுதல் எவ்வளவு நயமுடையது பாருங்கள். யாவரும் சுவைத்து நுகரும் சாதாரணக் கனியா? அன்று; கற்றவர்கள் மாத்திரம் சுவைத் தின்புறக்கூடிய கனியாகும் இந்தச் சிவமணங்கமழும் தெய்வநறுங்கனி. எவ்வளவு நயமாக இப்பகுதி யமைந்துள்ளது பாருங்கள். இங்ஙனமே இச்செய்யுளின் ஒவ்வொரு பகுதியும் அமைந்துள்ளது. இத்தகைய செய்யுட்கள் பல கொண்ட இத்திருமுறையை நாம் அறிந்து போற்ற வேண்டுவது சைவர்களாகிய நமக்குரிய பெருங்கடமைகளுள் ஒன்றாகும்.

என விதந்து ஓதினர்.

பத்தாந் திருமுறையைப்பற்றி, சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை ஆராய்ச்சியாளர் திரு. **மு. அருணாசலம் பிள்ளை அவர்கள் M. A.,**

பத்தாவது சைவத்திருமுறையாக இருப்பது **திருமந்திரம்**. திருமந்திர மென்ற இந்தப் பெயரொன்றே இதன் சிறப்பையும் உயர்வையும் விளக்கவல்லது. இது ஒரு மந்திர நூல். இதில் அடங்கிய பாடல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு மந்திரம். ஆகவே, இந்நூலைப் பயிலவும், பயின்று நன்குணர்ந்து அனுபவித்து இன்புறவும், அவ்வனுபவத்தையும் இன்பத்தையும் பிறருக்கு எடுத்துப் பேசவும் தகுதியுடையோர், இந்தத் தருமை யாதீனம் போன்றதொரு சைவ ஆதீன பரம்பரையில் வந்த, உபதேசக் கிரமப்படி இந்நூலை உபதேசிக்கப்பெற்ற பெரியோராவார். நம்போன்றாரும், திருமுறைகளினிடத்து வைத்த அன்பு காரணமாகவும், அவற்றை ஓதியுணர்ந்து சிவபெருமானுடைய திருவருளுக்குப் பாத்திரராகவேண்டுமென்ற ஆசை காரணமாகவும் இத்தகைய மந்திர நூலையும் பயிலத் தகுதியுடையவராகின்றோம்.

சமீப காலம் வரையில், திருமந்திரம் ஒரு யோகநூல் என்று மட்டும் சைவர்கள் கருதியமையால், அதைப் பயில்வோர் அரியரா யிருந்தனர். அன்றியும். அக்காலத்தே சித்தாந்த சாத்திர உணர்ச்சியும் சைவமக்களுக்குக் குறைவாகவே யிருந்தது. இக்காலத்து, சித்தாந்த நூல்களைப் பயிலவேண்டுமென்ற ஆவல் சைவர்களுக்கு நிரம்ப உண்டாகி யிருக்கிறது. மெய்கண்ட சாத்திரங்கள் தோன்றுவதற்கு நெடுங்காலத் துக்கு முன்னமே எழுந்த ஒப்பற்ற தனிப்பெரும் சாத்திர நூல் திரு மந்திரம். இதை மக்கள் பயில முற்படுவது, பெரிதும் விரும்பத்தக்க தொன்றாகும்.

திருமந்திரத்தை இந்தத் தமிழ் நாடும் சைவமக்களும் உய்யுமாறு அருளிச்செய்த பெரியார் திருமூலர். அறுபத்துமூன்று நாயன்மார் களுள் இவரும் ஒருவர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இவரைக் குறிப் பிடும்போது, "நம்பிரான் திருமூலன்" என்று குறிப்பிடுகின்றார். திரு மூலருடைய சரித்திரத்தினால் இரண்டொரு அரிய உண்மைகள் வெளி யாகின்றன.

திருமூலரது திருநாமத்திலே அழகிய குறிப்பொன்று புலப்படு கிறது. சிவபெருமானுடைய பெருங்கருணையாகிய ஒப்பற்ற தனிப்பெருந் திருவை ஆன்மகோடிகளுக்குக் கூட்டுவைப்பதற்கு, இவர் செய்த திரு மந்திரம் மூலமாக விளங்கும் என்ற அருமைக் காரணத்தாலேயே இவருக்குத் திருமூலர் என்ற பெயர் அமைந்ததெனக் கொள்ளக்கிடக் கின்றது. திருக்கைலாயத்திலிருந்த சிவயோகியாராகிய இப்பெரு மானது சரித்திரம் நிகழும் தலமாக இருக்கப்போவது திருஆவடுதுறை. இத்தலத்தே, காவிரியின் கரைக்குத் திருமூலர் வந்துசேர்ந்தார் என்று கூறவந்த சேக்கிழார், காவிரிக்கரையின் சிறப்பை வெகு அழகாகக் கற்பித்துக் கூறுகின்றார். சிவபெருமானுடைய திருமிடற்றில் தங்கிய விடத்தை அப்பெருமானுக்கு அளித்ததாகிய கடலிலே தன் நீரைக் கொண்டுபோய் நிரப்புதல் தகாது என்று கருதிய காவிரி, தன் நீரினால் சோழநாடு வளம் நிறையும்படிச் செய்ததெனப் புனைந்து,

"அடல் விடையின் மேல்வருவார் அமுது செய அஞ்சாதே
விடம் அளித்த தெனக்கருதி மேதினிக்கு வளம் நிறைத்தே
கடல் வயிறு நிறையாத காவிரியின் கரை அணைந்தார்."

என்று கூறுகிறார். சிவபெருமான், ஆகமங்களின் சாரமனைத்தையும் இந்தப் பூவுலகத்திலே திருமூலர் திருவாக்கினால் தமிழ்மொழியில் வகுக்கவேண்டும் என்று தம் திருவுள்ளத்திலேகொண்டு, அவர் வைத்துச் சென்ற உடலைக் கரப்பித்தார் என்று சேக்கிழார் சொல்லுகிறார். பிறகு திருமூலர் அரசமரத்தின் கீழே தங்கிச் சிவயோகத்திலமர்ந்து, ஆண்டுக் கொன்றாக மூவாயிரம் திருமந்திரங்களையும் மூவாயிரம் ஆண்டுகளில் அருளிச்செய்து, இறுதியில் திருக்கைலையை அடைந்தார் என்பது அவருடைய சரித்திரம். திருமந்திரப் பாடல்கள் ஒவ்வொன்றிலும் அமைந்துள்ள பொருளின் ஆழத்தையும் சமய நுட்பத்தையும் அனுபவ முதிர்ச்சியையும் நாம் சிந்தித்துப் பார்க்கும்போது, ஆண்டுக்கொரு பாடல் செய்தார் என்ற வரலாற்றில் பொதிந்துள்ள பொருள் விசேடம் புலப்படுகிறது; ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு ஆண்டு சென்றது என்ற வரலாறு மிகப் பொருத்தமானதே என்றெண்ணத் தோன்றுகிறது.

திருமந்திரம் ஒரு சைவத் திருமுறையாதலால், இத்திருமுறையைச் சைவராகிய நாம் போற்றிப் பாராட்டவேண்டும் என்று சொன்ன மாத்திரத்திலே, திருமந்திரப் பாடல்களைப் பயின்று, இறைவன் சன்னிதியிலே இவற்றைத் தோத்திரமாகச் சொல்லிப் பாடினால் போதும் என்ற கருத்து பலருக்கு உண்டாகிறது. இது சரியன்று. இப்பெருநூலை, தோத்திரப் பாடலாகக்கொண்டு பாடிவருவது விரும்பத்தக்கதேயாயினும், அதனோடு அமைந்துவிடுதல் போதாது. இறைவனுடைய பேரருளை வேண்டிநின்ற ஒரு ஆன்மா, ஒரு ஆயுளில் மட்டுமல்ல, மூவாயிரம் ஆண்டுகளில் பெறக்கூடிய ஆன்ம அனுபவம், தெய்வ அனுபவம், இவற்றினடியாகப் பிறந்த பேரானந்தப் பெருக்கு இவ்வளவையுந் தன்னுள்ளே கொண்டது திருமந்திரம். ஆகவே இந்நூலைப் பயில்வதென்றால், இத்துணை அனுபவத்தையும் ஆனந்தத்தையும் இதனுள் காண முயலவேண்டும். அவ்வாறு முயன்றால்தான் இந்நூலால் விளையும் பெரும் பயன் முழுதும் நாம் பெற்றவர்களாவோம்.

இந்த நிலையிலே, ஒரு விஷயத்தை நாம் தெளிவாக உணர்ந்துகொள்ளவேண்டியிருக்கிறது. சைவசமயத்திலே பல சிவஞானிகளும் சிவானுபூதிச் செல்வர்களும் தோன்றி அருட்பாடல்களைப் பாடியிருக்கிறார்கள். இப்பாடல்களை நாம் பார்க்கும்போது, எந்தக் கண்கொண்டு பார்ப்பது என்பதுபற்றிக் கருத்து வேற்றுமைகள் இருக்கின்றன. திருவருள் என்ற ஞானக்கண் நமக்கு இருக்குமானால், இந்த வேற்றுமைக்கு

இடமே இல்லை. அது இல்லாமையினால், சமயக்கண் கொண்டே சமய நூல்களை நோக்கவேண்டும் என்பது பலருடைய கருத்தாயிருக்கிறது. உண்மையாகப் பார்க்கப்போனால், சமய திருஷ்டிக்கும் இலக்கிய திருஷ்டிக்கும் வேற்றுமையே இல்லை. கண்ணிரண்டும் ஒன்றையே காண்கின்ற தன்மைபோல, சமயக்கண் இலக்கியக்கண் என்னும் இரு கண்களைக் கொண்டே சமய இலக்கியங்களை அனுபவிக்க முடியும். சமய நூல்களைச் சமயக்கண் கொண்டே நோக்கவேண்டும் என்ற கூற்று முற்றிலும் பொருந்துவதன்று. அவற்றை இலக்கியக்கண் கொண்டே காணவேண்டும் என்பாரது கூற்று முற்றிலும் பிழையன்று.

உயர்ந்த கவியொருவர், தம்முள்ளத்துதித்த ஆனந்த உணர்ச்சி மிகுதியினால் ஒரு உண்மையை வெளியிடுகிறார். பக்தரொருவர் தம்முள்ளத்திலே யெழுந்த இறையுணர்ச்சியை அவ்வண்ணமே செய்யுளாக வெளியிடுகிறார். இருவருடைய அனுபவமும் ஒன்றே; இறைவன் சத்து, சித்து, ஆனந்த வடிவினனாதலால், இவ்விருவருடைய கூற்றாகவும் வெளிப்படுவது அவனுடைய வடிவமேயாகும். ஒன்றுக்கொன்று ஏற்றத்தாழ்வு கற்பிப்பது பொருந்தாது.

ஆகவே, திருமந்திரத்தை எந்தக் கண்கொண்டு காணவேண்டுமென்றால், இரண்டு கண்களாலுமே காணவேண்டும்; ஒரு கண்ணை மூடிக்கொண்டு, ஒருகண்ணால் மட்டும் பார்த்தல் சரியன்று. திருமந்திரம் ஒப்பற்றதொரு சைவசமய சாத்திரம்; அதுவே, ஒப்பற்றதொரு தமிழ் இலக்கியம்.

இலக்கிய நோக்கோடு காணும்போது, திருமந்திரத்தை எப்படி அனுபவிக்க முடிகிறதென்பதை விளக்க ஒரு திருப்பாடலைப் பார்ப்போம். இந்நூல் ஒன்பது தந்திரங்களாகப் பாகுபாடு செய்யப்பட்டிருக்கின்றது. முதல் தந்திரத்தில் திருமூலர் உலக இயல்பையும் பல்வகை அறங்களையும் கூறுகிறார். யாக்கை நிலையாமை என்பது இத்தந்திரத்தில் ஒரு அதிகாரம். இவ்வதிகாரத்திலுள்ள ஒரு பாடல் யாக்கை நிலையற்றது என்ற உண்மையை நமக்கு நேரே நிரூபித்துக் காட்டுவதுபோல மிகத் தெளிவாய் உரைக்கிறது;

"அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்
இடப்பக்க மேயிறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே"

ஒரு நாயகனும் நாயகியும் வாழ்ந்து வருங்காலத்து ஒருநாள் நிகழ்ந்ததை இப்பாடல் சொல்லி முடித்துவிடுகிறது. சமையல் செய்து வைத்தாள் நாயகி. இருவருமாக உண்டார்கள். பிறகு பள்ளியறையி னுட் புகுந்தார்கள். நாயகன் இடது பக்கத்திலே சிறிது வலிக்கிறது என்ருன். ஒருவேளை இதயத்துடிப்பு ஏற்பட்டிருக்கலாம், அமைதியாகச் சற்றுநேரம் படுத்திருக்கலாம் என்று படுத்தாராம், என்ன ஆனுர்? "கிடந்தொழிந்தாரே" என்று முடித்தார் திருமூலர். இனி மீண்டும் எழுந்திருப்பதற்கு வகையில்லாதபடி கிடந்து ஒழிந்தார் "இறந்தே விட்டார்' என்ருர். இவ்வளவு காரியத்தையும் மிக எளிதாகத் திருமூலர் முடித்துக் காட்டுகிருர். நீரில் எழுத்தாகும் யாக்கை. நீர்மேல் எழுதிய எழுத்து அதை எழுதும் நேரம்கூட நிலைநிற்காததுபோல, நிலையற்றது யாக்கை என்றெல்லாம் நீதி நூல்களிற் படிக்கிறேம். இந்த உண்மையை ஒரே விநாடியில் நம் கண்முன் நேரில் காட்டுகிறது மேலே கண்ட பாடல். இதயத் துடிப்பு, இதய ஓட்டம் தடைப்படுதல் முதலியவற்றை இக்காலத்தே அடிக்கடி நாம் உலகத்தில் காண்கிறேம். முற்காலத்தி லேயே திருமூலரும் இவற்றைக் கண்டுவிட்டார். 'இடப்பக்கமே இறை நொந்தது' என்று ஒரு அற்ப நோவைத்தான் குறிப்பிடுகிருர். ஆனல், இதன் விளைவென்ன? 'கிடந்தொழிந்தாரே' அவருடைய ஆயுள் முடிந்தேவிட்டது. 'ஒழிந்தார்' என்ற பிரயோகத்தில் ஒரு இகழ்ச்சிக் குறிப்பும் இருக்கிறது. வாழ்க்கை எவ்வளவு நிலையற்றது; அதில் மயங்குவது எவ்வளவு பேதமை; என்பனபோன்ற பல கருத்துக்கள் இந்த ஒரு சொல்லிலிருந்து வெளிப்படுவன.

இவ்விதமாக, இலக்கியக்கண்கொண்டு பார்ப்போர்க்குத், திரு மந்திரப் பாடல் ஒவ்வொன்றும் அரிய பெரிய உண்மைகளையும் உணர்ச்சி யையும் வெளியிடுகின்ற சிறந்த ஒரு இலக்கியப் பூங்காவாகக் காட்சி யளிக்கும். சமயக்கண் கொண்டு, இந்நூல் வெளியிடும் சமய உண்மை களை அறிய முற்படுவாருக்கு, இதிலுள்ள பேருண்மைகளை ஒரு ஆயுட் காலத்தில் அறிந்து அளவிட முடியாதென்றே தோன்றும். இதை விளக்க ஒரு பாடலை மட்டும் சிறிது பார்க்கலாம்.

இறைவன் சச்சிதானந்த சொரூபி என்பது சைவர்களுடைய கருத்து. அவன் நித்தியமானவன். அறிவுமயமானவன். ஆனந்தமயமான வன். இதையே "உண்மை யறிவானந்த வுரு" என்ருர் பரஞ்சோதி

முனிவர். சிவபோகசாரத்துள்ளும் ஸ்ரீமத் குருஞானசம்பந்த சுவாமிகள் "சச்சிதானந்த வெள்ளம்" என்றுர். உண்மை, அறிவு, ஆனந்தம் என்ற மூன்றினும் இறுதியாயிருப்பது ஆனந்தம். மக்களுக்கு ஆனந்தம் விளையக் காரணமாயிருப்பது அன்பு. இறைவனிடத்துச் செலுத்தப்படும் அன்பு பக்தி எனப்படும். பக்தியினலே ஆனந்தப்பேறு சித்திப்பதை அடியார்களுடைய சரித்திரங்களிலிருந்து நாம் உணர்கிறோம். இறையன்பு ஒன்றினல் மட்டுமேயன்றி, எவ்விதமாக அன்பு செலுத்தினலும் ஆனந்தம் விளையாது. இதுவே சைவத்தின் கோட்பாடுகளுள் தலைசிறந்ததொன்று. இதை ஔவைக்குத் திருமூலர் சரிதத்தாலும் உணர்கிறோம். மேய்ப்போன் இறந்தமையால் வருந்திய ஆக்களின்மீது கொண்ட அன்புகாரணமாக வன்றே திருமூலர் மூலனுடைய உடலிலே பிரவேசித்து இவ்வுலகத்துத் தோன்றினர்? இவ்வன்பு காரணமாக வன்றே திருமந்திரமாகிய பெருமந்திரம் நமக்குக் கிடைத்தது.

இனி, இறைவனே அன்புமயமானவன், அன்பே சிவம், சிவமோ அன்பு என்பது இதனினும் கடந்த மேல்நிலை.

"ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே என்னுடை அன்பே!"

என்பது திருவாசகம். சிவபெருமானை அன்பு வடிவினனைக் கண்டு, உலகத்தாரைக்கூவி, அவர்களும் இறைவனை அன்பு வடிவினனைக் காணவேண்டுமென்று அறிவுறுத்துகின்றார் திருமூலர்.

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே"

என்பது அவருடைய உபதேசம். "அன்பினுள் ளோர்க்கே அமரும் அரும் பொருள்" என்று பிறிதோரிடத்திற் கூறுகிறார். திருமூலர் போதிக்கும் சைவநெறி, அன்புநெறி என்ற ஒரு உயர்ந்த நெறியாகும். திருமந்திரம் ஒரு யோக சாத்திரம் என மேலே கூறப்பட்டது. இதைக் கடந்து மேலே இந்நூலால் யாது பெறப்படுகிறது என்று ஆராயின், **அன்பே சிவம்** என்ற உயர்ந்த தத்துவமே பெறப்படும். சித்தாந்த சாத்திரங்களுள் ஒன்றாகிய திருக்களிற்றுப்படியாரும் இக்கருத்தை வலியுறுத்தி, "அன்பே! என் அன்பே! என்று அன்பால் அழுதரற்றி" என்று போதிக்கின்றது.

ஆகவே, பத்தாவது சைவத் திருமுறையாகிய திருமந்திரத்தை இலக்கியம், சைவம் என்ற இருகண்களாலும் காண்போருக்கு, அது ஒரு அரிய இலக்கியமாகவும், உலகுக்கெலாம் அன்பு நெறியாகிய சைவ நெறியைப் போதிக்கும் ஒரு அரிய சமய சாத்திரமாகவும் விளங்கும்.

என்று அரிய பொருள்களை நுணுகி விரித்துக் கூறினர்.

பதினொராந் திருமுறையைப் பற்றிச் சென்னை திருவாளர். **T. K. சிதம்பரநாத முதலியார் அவர்கள் B. A., B. L.,**

தமிழராகிய நம்மிடத்தில் எத்தனையோ அரிய விஷயங்கள் இருக்கின்றன. அவைகளெல்லாம் ஆயிரக்கணக்கான வருஷங்களாகப் பண்பட்டு வந்த நாகரிகத்தின் விளைவு; உலகத்தில் எங்கும் கிடையாதன என்று சொன்னால் மிகையல்ல. ஆனால் அவைகள் எப்படியோ புறக்கணிக்கப்பட்டு நம்மவரால் மதிக்கப்படாமல் இருக்கின்றன.

இந்த நிலையில் நல்லகாலம் பிறந்து ஒரு புரட்சி ஏற்பட்டிருக்கிறது. நம்முடைய ஆஸ்தி என்று சொல்லக்கூடிய பண்பாட்டுகளுக்குப் புத்துயிர் உண்டாகி இருக்கிறது.

உதாரணமாக முப்பது வருஷத்துக்கு முன்பு, இந்த ஆதீனத்திலிருந்து இப்போது கூட்டியுள்ள இம் மகாநாட்டைக் கூட்டியிருந்தால் பிரமுகர்கள் எல்லாரும் ஆங்கில பாஷையிலேயே பேசியிருப்பார்கள். இன்றோ ஆங்கிலத்தில் பேச நாணுவார்கள். தமிழிலே தான் பேசுவார்கள். இது தமிழுக்கு ஏற்பட்ட மதிப்பு. இனி இது ஒரு புரட்சிதான்.

சென்ற முப்பது நாற்பது வருஷங்களாக, தமிழர்களாகக் கூடிக் கேட்கும் சங்கீதக் கச்சேரிகளில் எப்படியோ நமக்கு விளங்காத பாஷைகளில் பாடகர்கள் பாடிவந்திருக்கின்றார்கள். அது காரணமாக பாடல்களில் ஏதேனும் பாவமிருந்தால் அதைப் பாடுகிறவரும் உணருவதில்லை; கேட்பவர்களும் கவனிப்பதில்லை. ஆகவே, நம்முடைய சங்கீதக் கச்சேரிகளில் பாடுகிற சங்கீதத்தில் உயிர் அற்றுப் போய்விட்டது. சங்கீதம் கேட்பதனால் உணர்ச்சி பாவம், பக்தி பாவம் ஒன்றும் உண்டாவதில்லை. மனதிலும் பதிவதில்லை. இதையெல்லாம் உணர்ந்து செட்டிநாட்டு அரசர், சர். அண்ணாமலை செட்டியார் அவர்கள், 'தமிழர்கள்

கூடிய சபைகளில் தமிழ்ப்பாடல்களே பாடவேண்டும்' என்று கருதி அதற்காகப் பதினாயிரம் ரூபாய் வினியோகத்துக்காகவே ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். நம்முடைய ஆதீனங்களும் இதற்கு வேண்டிய உதவியும் ஊக்கமும் கொடுப்பார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. இதெல்லாம் காரணமாக வெகு சீக்கிரத்தில் தமிழ் நாடெங்கும் தமிழிசையே ஒலிக்கும் என்பதை உறுதிகட்டிச் சொல்லலாம். இது ஒரு நல்ல புரட்சி அல்லவா? இனி, ஒரே ஒரு விஷயம்.

தமிழும் சைவ சமயமும் சமீபத்தில் பண்பட்டு வந்த விஷயங்களல்ல. பதினாயிரம் இருபதினாயிரம் என்று சொல்லக்கூடிய வருஷங்களுக்கு முன்பு ஒரு சமய உணர்ச்சியும் ஒரு பண்பாடும் இமயமலையிலிருந்து கன்னியாகுமரி வரையும் பரந்து இருந்தது. தற்காலத்து ஆராய்ச்சியாளர்கள் அந்த நாகரிகமும் பண்பாடும் மற்ற இடங்களில் மறைந்து கிடந்தாலும், தமிழ் நாட்டில் இன்னும் துலாம்பரமாய்க் கிடக்கின்றன என்று சொல்லுகிறார்கள். அதற்குச் சான்று என் கையிலுள்ள புஸ்தகத்திலேயே இருக்கிறது. இந்த ஆதீனத்திலிருந்து வெளியிட்டிருக்கிற **நால்வர் சரிதை** என்னும் புஸ்தகத்தில் வெளியட்டையில் ஒரு குறிப்பு.

"கைலாய பரம்பரைத் தருமபுர ஆதினம்" என்று கண்டிருக்கிறது. இந்த பரம்பரை பற்றிய குறிப்பானது நம்மை இமயமலைக்கே கொண்டு போய் விடுகிறது. அதோடு இருபதினாயிரம் வருஷத்துக்கு முன்னும் கொண்டுபோய் விடுகிறது.

நம்மிடத்திலுள்ள சாமான்ய ஆசாரங்களும், அனுஷ்டானங்களும், வழிபாடுகளும் மிகப் பழைய பண்பாட்டையே சுட்டிக் காட்டுகின்றன. அப்படியேதான் நம்முடைய சமய சம்பந்தமான பாடல்களும் பாடல்களுக்குரிய நம்முடைய இசைகளும் சுட்டிக் காட்டுகின்றன. உதாரணமாக ஒரு செய்யுளை எடுத்துக் கொள்வோம். காரைக்காலம்மையார் ஏதோ ஆயிரம் அல்லது ஆயிரத்தைநூறு வருஷத்துக்கு முன்பிருந்த பெரியார். அவர் சைவத்திலும், தமிழ் இலக்கியத்திலும் திளைத்த அரிய கவிஞர். அவர் பேசுவதைக் கொஞ்சம் கேட்போம்.

சில வருஷங்களுக்கு முன்பு கிறிஸ்தவ நண்பர் ஒருவர் பைபிள் புஸ்தகத்திலுள்ள, "கடவுள் உன் இதயத்திலிருக்கிறார்" என்ற வாக்கியத்தை மிகவும் அனுபவித்துப் பாராட்டிப் பேசிக்கொண்டிருந்தார்.

"இதுபோலத் தமிழில் வாக்கியம் உண்டா?" என்று கேட்டார். அதற்கு, "இந்த உண்மையை நம்முடையவர்கள் நன்ருகச் சொல்லி இருக்கிருர்கள்; உண்மையில் திளைத்து ஆனந்தித்து ஆவேசத்துடனேயே அபூர்வமான கவிரூபமாக வெளியிட்டிருக்கிருர் காரைக்காலம்மையார்" என்று சொன்னேன்.

சிவபெருமான் ஞானமயமாய் உள்ளவன். சகல வஸ்துக்களுக் குள்ளும் புகுந்து ஊடாடும் ஞானம் அவனுக்கே உரியது. மேலும், எங்கும் நிறைந்த ஆனந்தமயமாயுள்ளவன் அவன். அவனுக்கோர் ஆசை உண்டாய் ஆணவத்துக்குள் புகுந்து ஆணவத்தின் சுகதுக்கங்களை அனுபவிக்கத் தலைப்பட்டான். இந்த எளிமை தத்துவத்தை நாம் பாராட்டி முடியாது. அதை நினைக்க நினைக்க ஒரே வியப்பில் நம்முடைய மனம் நின்றுவிடுகிறது. நம்முன்னேர்கள் இதைப்பாராட்டி விஷத்தையே உட்கொண்டான் என்று சொல்லி இருக்கிருர்கள், பாடி இருக்கிருர்கள். 'திருநீலகண்டன்' என்று இறைவனைக் குறிக்கும் போதெல்லாம் மேலே சொன்ன எளிமை தத்துவத்தையே அனுபவித்துச் சொன்னதாகும்.

இத்தகைய இறைவனை ரொம்பரொம்ப வழிபாடு செய்து, தேவர்கள் தங்களிடத்திலேயே வைத்துக் கொண்டதாகச் சொல்லலாம். அப்படியே சொல்லட்டும். அதைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. அன்றி, தேவேந்திரனே தன்னுடைய ஸ்தானத்தில் இறைவனை வைத்துக் கொண்டிருக்கிருன் என்றும் சொல்லட்டும். கவலை இல்லை. காரைக்கா லம்மையார் என்ன சொன்னுர் என்பதைக் கேட்போம்.

"வானத்தான் என்பாரும் என்க; மற்று உம்பர்கோன்
தானத்தான் என்பாரும் தாம்என்க;—ஞானத்தான்
முன்நஞ்சத் தால்இருண்ட மொய்யொளிசேர் கண்டத்தான்
என்நெஞ்சத் தான்என்பன் யான்."

—அற்புதத்திருவந்தாதி.

காரைக்கால் அம்மையார் பாடலுக்குத் திருவந்தாதி என்று சொன்னுல் போதாதுதான். அற்புதத்திருவந்தாதி என்றே பெயரிட்டார்கள் முன் னேர்கள். அவர்கள் எத்தகைய ரஸிகர்கள் பாருங்கள்!

மகாசந்நிதானம் கூட்டிவைத்த இந்தச் சைவ மகாநாடு மறை பட்டிருந்த பழைய பொன்னையும் மணியையும் மேலே கொண்டுவந்து அனுபவிக்க வாய்த்த இடமாயிற்று. இதுவும் ஒரு புரட்சிதானே.

"பணகணி பூண்டவனைப் பக்தர்களை ஆண்டவனை
அனவரத தாண்டவனை ஆண்டவனை வாழ்த்துவமே,"

எனத் தமது இனிய மொழிகளால் உரைத்தனர்.

பனிரெண்டாந் திருமுறைப் பெருமையைப் பற்றித் தேவகோட்டை தனவணிகர் பாலகவி வயிநாகரம் **வே. இராம நாதன் செட்டியார் அவர்கள்** தாமெழுதியனுப்பி அச்சிட்டுள்ள "திருமுறைப் பெருமை" என்னும் கட்டுரையைச் சார்ந்தும், லால்குடித் தமிழாசிரியர் திரு. **அ. மு. சரவண முதலியார் அவர்கள்** சிவஞானபோதத்தின் பன்னிரண்டாம் சூத்திரத் திற்கும் இப் பன்னிரண்டாம் திருமுறைக்கும் அமைந்துள்ள இயைபுகளை விளக்கியும் மகிழ்வித்தார்கள்.

சென்னை திரு. **சோமசுந்தரனார் அவர்கள்** "தெய்வச் சேக்கிழார் திருமுறைமாட்சி" என்பதுபற்றி,

தெய்வத் திருவருள் கைவந்து கிடைக்கப்பெற்ற சைவத்திருவாளர் போற்றப்பெறும் சிவஞானப் பொருள்வளமும், தவஞானத் தனித்தமிழ்ப் பெருவளமும், சிவசாதன மணமுங் கமழும் பெற்றிவாய்ந்து பத்திச் சுவைத் தேறல் பெருக்கெடுத்தாற்றும் பேறலரும் திருவருட்காவிய மெனத் திகழ்வது தெய்வச் சேக்கிழார் பெருமான் தெருள்வளம் தெரிப் பான் திருவாய் மலர்ந்த **திருத்தொண்டர் புராணம்** என்னும் திரு முறையாகும். இத்திருவருட்டிருமுறை தில்லைத் திருச்சிற்றம்பலமாய் சிதாகாச பரவெளியினூடெழுந்த சிவபெருமானது **உலகெலாம்** எனும் அருளுரைதவொலியின் அற்புத சின்மய சிவானந்த அமுதமடை திறந்தொழுகுறும் அழகு முதிர்ந்த ஒப்புயர்விலாச் செப்பருஞ் செந் தமிழ்த் தெய்வப்பாக்களெனப் பொலிந்துலவுவதாம். திருநெறித் தலைவ ராய திருஞானசம்பந்தப் பெருமானுதியோர் அருளிய அருட்பாக்களாந் திருமுறைகளோடு ஒரு திருமுறையென ஒருங்குவைத்துப் போற்றப் பெறுவதே நந்தெய்வப் புலவாணர் தீஞ்சுவை பொதிந்த தெய்வ மணக்கும் திருமுறையின் மாட்சியைத் தெரிக்குமென்ப. இவ்வுண்மையை,

"தகர ஒற்றொடு அகரம் புணர்த்தே
தகரா லயவியல் தன்சி றொடுசிவை
பீஜமா முகரம் பீடுற அமைதா

ஆக்கிய கிளவி அழகுறுந் தமிழின்
தெய்வ மநுவைத் தெரிக்கு மென்ப
பிரணவ முறையுறும் பிறழ்விலா மந்திர
முறைபெற நிறுத்திய முறையாற் றிருமுறை
யென்னப் பெரியா ரிசைத்திடு மாற்றான்
உமாபதி சிவமா முயர்மொழிப் புலவர்"

என நல்லிசைப் புலவர் எடுத்துக்காட்டாகக் கூறுப.

"மந்திரங்க ளெழுகோடி யாதலினால் மன்னுமவர்
இந்தவகை திருமுறைக ளேழாக வெடுத்தமைத்துப்
பந்தமுறு மந்திரங்கள் பதினொன்று மாதலினால்
அந்தமுறை நான்கினொடு முறைபதினொன் றாக்கினார்"

எனத் திருமுறைகண்ட புராணமும் அதனையே வலியுறுத்துமெனில் மிகையாகா. திருவெனுமொழி பெருஞ் சொல்லரும் புலவர் திருவாக்கினிலங்கி பரவையெனப் பரந்திலகும் பைந்தமிழ்நூல்கள் பலவற்றுள் காணத்துலங்கு மருமொழியாயினும், அழகு முதலிய பலபொருள்படநிலவுவதேனும் சமய வழக்காற்றிற்கு இயைய ஓதப்பெறும் மங்கல மொழிக்க ணொன்றென ஆங்காங்கு அமைத்துரைப்பர். அஃதொழிந்த தனிநிலைக்கண்ணும் தொடர்நிலைக்கண்ணும் சமய வாற்றலுக்கேற்பப் பொருள்தந் துதவுமாறும் பிரயோகிப்பர் பிறிதொருசாரார். மொழி பொருள் கழிநலம் பயத்தற் பொருட்டும் திருக்கோவையார், திருவாசகம் என்ற மெய்ந்நூல்கட்கு நல்லுரை கண்ட பேராசிரியர் முதலிய தொல்லிசைப் புலவர் "கண்டாரால் விரும்பப்படுந் தன்மை நோக்கம்" எனவும் சேனாவரையர், நச்சினார்க்கினியர் முதலியோர் பிறவாற்றானும் பொருள் கூறுப. ஆசிரியர் தம் ஆற்றல் சமயவாற்றலென மேலைக் கிளந்த வாற்றான் பெறப்படும். சிற்றிடைப் பொற்றொடி மகளிரை அவர் தம் வனப்பை மிகைபடப் புனைந்து கூறற்கண், காமச்சுவை மாத்திரையே பயக்கும் களவிய லிலக்கண மெனற்பாலதொருதலையாயினும், திருவெனு மொழி இவ்வியற்கண் அழகெனத் தெரிவிக்கும் அப்பொருளையே திருமுறையெனுந் திருநெறித் தமிழ் மறைக்கும் பொருள் விடுத்து நிற்றல் அறிஞருரையாமோ.

விடாதுளத்தமைக்க விழுமிய பொருளை மதிசுடர் கொளுத்த வியக்கப் பொருள் பயப்ப உமாபதி சிவனார் உட்கிடையுணர்ந்து விரித்து விளக்கு முறையே தோலா நாவின் மேலோர் தம் தெள்ளிய திருமுறையைத் திருவாய் மலர்ந்த அருண்மொழித்தேவருரை யென்ப.

"செப்ப லுற்ற பொருளின் சிறப்பினுல்
அப்பொ ருட்குரை யாவருங் கொள்வரால்
இப்பொ ருட்கென் னுரைசிறி தாயினும்
மெய்ப்பொ ருட்குரியார் கொள்வர் மேன்மையால்"

என அருண் மொழியாளர் கூறியவாற்ருனும், 'எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு', என வள்ளுவனுர் கூறிய குறட்பாவானும் போந்த மெய்ப்பொருள் விளக்கம் உளங்கொண்டு உய்த்துணரற்பாலதாம். எனவே பொருள் அல்லவற்றைப் பொருளெனக்கோடல் பக்குவமிலார் கூற்ரும். நுண்மாணுழை புலனுடையரே நுனித்துணர்ந்து திட்பநுட்பஞ் செறிந்த பொருள் விளக்கும் புண்ணியமிக்காரெனல் போதரும். அருள்விளக்க மில்லார் பொருள்விளக்கம் யாங்ஙனம் பெறுவர். இனிக் கூறுதும். செப்பலுற்ற பொருளின் சிறப்புரைப்ப தென்னையெனின், அழகு என்னுமொழியின் முதல் அக்கரம் எவ்வெழுத்தினுக்கும் ஆதியாயிருத்தல் போன்று, மகரம் இறைவன் வடிவமாயும் தமிழ் மொழிக்கண் சிறப்பெழுத்தாயிருந்து நிகழ்கின்றது.கு என்னுமோரெழுத் தொருமொழி உலகம் எனப் பொருள் தரலான் உலகம் என்பது உயர்ந்தோர் மேற்ருயிருத்தலான் அத்தகைய பெரு வனப்பமையப் பெற்ற மந்திர முறையைப் பெற்று நிலவும் பெற்றியுடையது திருமுறையென விரித்துரைத்தலே 'பொருளின் சிறப்பினுல் மெய்ப்பொருட்குரியார் கொள்வர் மேன்மையால்' என்பது போதரும்.

சூக்கும இயலை ஆராயப்புகின், உடலுயிர்க்கண் அருக்கன் அறிவொளிபோற் பிறிவரும் அத்துவிதமாகுஞ் சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்தத்தின் அழகை அந்தர்ப்பாவமாய் தன்னிடத் தொளிரப் பெற்றதென விரித்துரைத்தலும் அழகுடைத்தாம். இப் பெருமையைத் திருமுறைகண்ட புராணத்தானும் திருத்தொண்டர் புராண வரலாற்ருனும் உணர்க. சதாசிவமூர்த்திபால் நின்று வேதங்கள் நான்கையும், காமிக முதலிய இருபத்தெட்டு ஆகமங்களையும் தோற்றுவித்தாற் போல, சிவபரஞ்சுடரே அவ்வாளுடையபிள்ளையார் முதலியோர்பாலும் சேக்கிழார்பாலும் அதிட்டித்து நின்று தோற்றுவித்தாற்போல, இத்திருமுறை முதல்வனுல் இயற்றியருளப்பட்டதேயாமென்க. அல்லதூஉம் பேய் வாய்ப்பட்டான் வாய்மொழி யெல்லாம் பேய்மொழியாமன்றி அவன் சொற்களாகாதவாறு போல சிவபிரானுல் அதிட்டிக்கப்பட்ட நாயன்மார் வாய்ச்சொற்களெனப்பெறும் இத்திருமுறை கண்ணுதற் பெருமான் சொற்களேயாமன்றி இவர்தம் மொழி ஆகாமை தெற்றெனத் தெளியப்படும். இதனை, "என துரை தன

துரையாக நீறணிந்தேறுகந் தேறிய நிமலன்" எனக் காழிப் பெருமான் திருவாய்மலர்ந்தவாற்றான் உணர்க.

திருச்சிற்றம்பலக்கோவையாருண்மையிலே "அந்தத் திருவாக்கைப் பதிவாக்கியமென்றே கொள்வதல்லது பசுவாக்கியமென்று நினைத்தாலும் சனனமரணத்துக்கே வித்தாம். இவ்வுலகத்திலே பதிவாக்கியமேதெனில், அநாதிமல முத்தராயுள்ள சதாசிவமூர்த்தியுடைய திருவாக்காகிய ஆகம வேதங்களன்றி, ஞானகுருமூர்த்தங்களாயுள்ள சந்தானசாரிய சமயா சாரியருடைய திருவாக்குக்களுமாம்" என விளக்குமாற்றானும் சேக்கிழார் வாக்கும் சிவவாக்கேயாமென்பது தெளியப்பெறும்.

திருமுறைகள், முதலினும் முடிவினும் ஓங்காரத்தையுடைய ஆரிய வேதம்போல ஓங்காரவாச்சியராய சிவபிரானே பரம்பொருள் என்பதனை யுணர்த்துமென்பது, ஓம் என்னும் பிரணவத்தின் முதலெழுத் தாகிய ஓங்காரத்தை, காயத்திரி மந்திரங்களின் ஆதிக்கண் நிற்கு மாட்சி வாய்ந்த தகரமெய்யோடு சேர்த்துத் "தோடுடைய செவியன்" என முதற்றிருமுறையின் முதலினும் ஈற்றெழுத்தாகிய மகரத்தை "நின்ற தெங்கு நிலவி யுலகெலாம்" எனப் பன்னிரெண்டாந் திருமுறையின் ஈற்றினும் புணர்ந்து நிலவுதலானும்,

"தேவர்கோ வறியாத தேவதேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோ னென்னையும்வந் தாண்டு கொண்டான்
யாமார்க்குங் குடியல்லோம் யாது மஞ்சோம்
மேவினோம் அவனடியா ரடியா ரோடும்
மேன்மேலுங் குடைந்தாடி யாடுவோமே"

என்பது முதலிய சுருதிகளானுந் துணியப்படும். மேலும்,

"தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்"

என்னும் ஔவையார் திருவாக்கானும் வேதமுந் திருமுறைகளும் ஒரு பொருளையே நுதலியன வென்பது தெற்றென விளங்குமென்க. இவ் வுண்மையை ஆராய்ச்சியில்லாரும், அறியப்போதிய புண்ணியமில்லாரு மால்கொண்டு மருளுரைப்பர். ஆரிய வேதத்தில் பதி பசு பாசங்களின்

இலக்கணங்கள் கூறப்பட்டிருத்தல்போல, இத்திருமுறைக்கண்ணும் பதி பசு பாசங்களின் இலக்கணங்கள் கூறப்பட்டிருத்தலான், அவையும் முப்பொருளையும் உணர்தற்குக் கருவியாயுளது எனும் பொருளைத்தரும் வேதம் என்னும் பதத்தானே விவரிக்கப்படுமென்றற்கியாதோ ஐயம். இதனாலன்றே,

"... ... திருத் தோணிமிசை மேவினார்கள்
தங்கள் திரு முன்புதாழ்ந் தெழுந்துநின்று தமிழ்வேதம் பாடினார்"

என அருண்மொழித்தேவர் அருளியதூஉ மென்க. எனவே சீர்காழிச் செல்வர் அருளியவாற்றான் நந்தம் பெரிய புராணப் பேராசிரியரும் பேசரும் பெற்றிவாய்ந்த தெய்வமணங்கமழும் பாக்களுள் அவ்வாறே தெற்றென விளக்கியும் வருத்தும் ஏனைய விடங்களிற் குறிப்பாற் றெருகுத்தும் முப்பொருளியல்பு செப்பமுற விளக்கியவாறு காண்க. ஆதலின் உலகெலாம் எனத் திருவருள் கூர்ந்த சிவபரஞ் சுடர்க்கு, மந்திரந் தூலசரீரமும், ஆன்மா சூக்கும சரீரமும், சத்தி அதிசூக்கும சரீரமுமா மெனச் சிவாகமங்கள் முழங்கலால் அம்மந்திர சொரூபமாய மறைகளின் கண் திருமுறைகளின்கண் அம்பலத்தாடும் அருள்வள்ளல் சாலச்சிறந்த சாநித்தியமுற்றிருப்பரென்க. இவ்வுண்மை,

"சொல்லினும் சொல்லின் முடிவினும் வேதச் சுருதியினும்
அல்லினும் மாசற்ற ஆகாயந்தன்னினும் ஆய்ந்து விட்டோ
ரில்லினு மன்பரிடத்தினு மீசன் இருப்பதல்லால் ... ...."

என்னுஞ் செய்யுளான் விளங்கு மென்க.

இனி, திருமுறை சிவமந்திரமுறையே இயற்றப்பெற்ற மாட்சி, கண்ணுதற் பரமன் திருவருள் புரிந்த உலகெலாமெனும் முற்கூறப் பெற்ற அருணைதவொலியாற் பெறப்படும் நுண்ணிய பொருளை விரித் துரைப்பாம். இத்தெய்வப்பா வாழ்த்து, வணக்கம், பொருளியல்புரைத் தல் எனப்படும் முப்பகுதியின் பாலதாம்.

ஸ்ரீ பஞ்சாக்கரத் திருஉருவினால் எடுத்தருளப்பெற்ற திருவாக் கும் உலகெலாம் என்னும் ஐந்தெழுத்தாலாய பெருவாக்காம். அகரப் பிரணவத்தையே ஆதியாகக்கொண்டு நிலவுவதாய் அம்பலம் என்னும் மொழியும் ஐந்தெழுத்தானாய மந்திர சொரூபப் பொருளுற விளக்கி நிற்பதாம். அவ்வருணைத வொலியைப் பெற்றுத் திருவருட் காவியத்தைக்

கல்லுமுருகக் காண்போர் கனிந்துருக அருளிய அண்ணலார் திருநாமமும் சேக்கிழான் என்னும் ஐந்தெழுத்தே. எனவே சிதாகாசப் பரவெளியாய் நிற்கும் இறைவனும், அப்பரவெளியினூடெழுந்த இறைவனது அருள்வாக்காம். உலகெலாம் என்னும் அருணாதவொலியும், அது கொண்டு இவ்வருட் காவியத்தை இன்புற இயற்றி முடித்த ஆசிரியப் பெருந்தகையாம் திருவுருவமும் எல்லாப் பஞ்சாக்கரத் திருமேனி யென்பது பெறப்படுதலின் இத்திருவருட் காவிய முழுவதும் அருளொளி அன்பொளிதிகழும் அம்பலத்தாடியின் திருவருட்டிருமேனியே என்பது துணியப்படும். இச்செய்யுள் உலகு என்னும் மங்கல மொழியைக் கொண்டு நிலவுகின்றது. இவ்வுலகென்னு மங்கல மொழியே கடைச் சங்கத்துத் தலைமைப் புலவராய நக்கீரதேவரும் "உலகமுவப்ப" எனத் திருமுருகாற்றுப்படையாந் தெய்வநூலின் முதற்கண் அமைத்திருக்கின்றார். நாநலங்கனிந்த சீத்தலைச் சாத்தனாரும் மணிமேகலை யெனும் அணி பெருங் காவியத்துள் "உலகந் திரியா ஓங்குயர் விழுச்சீர்" என முதற்கண் மங்கலமாக அமைத்துக்கொண்டமை தெரியப்படுகின்றது. அல்லதூஉம் சமயநூன் முறைக்கண் உகரம் என்பது சிவசத்தியின் உயிர் அக்கரங்களுள் முதற்கண் நிலவுமருமை அந்நூல்வாயிலானும் முதற்பெருங் கடவுள் குருவருள் வலத்தானே இது தோன்றிக்கிடக்குமென்பதுமுணர்க; அன்றியும் உகரம் முத்தொழிற்கண் இடைக்கட்பட்டுத் திதித்தொழிலை உணர்த்துமாறும் உணர்ந்து அடக்கிக்கொள்க. அழகிய திருச்சிற்றம்பலமுடையான் "ஆதிசத்தியொடு சேரின் எப்பொருளும் வல்லதாம்" எனும் பிரமாணத்திற்கேற்பச் சிவசத்தியொடு கூடியே அருண்மொழி வள்ளலாரை அதிட்டித்து நின்று இவ்வருட் காவியத்தை அருளினன் என்னும் சைவசித்தாந்த நுண்பொருளும் இதனாற் போந்தவாறு காண்க. எனவே அகர முதலியவற்றில் உணர்த்தப்பெறும் தோற்றமாதிய பொருள்களெல்லாம் இதன்கண் அடங்கநிற்றல் உணர்ந்தடக்கிக் கொள்க.

> "சிந்தை மகிழச் **சிவபுராணந்** தன்னை
> முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பனியான்"

எனத் திருமுறை வகுத்த திருவாளரே சிவபுராணம் என ஓதியிருத்தலான் திருத்தொண்டர் புராணம் எனுஞ் சொற்றொடர்க்கண் விளங்கும் புராணம் என்பதும் திருமுறை என்னும் பொருளையே உடையதாம்.

திருத்தொண்டர் புராணம் எனும் சிறப்புப்பெயர் வாய்ந்த பெரிய புராணம் எனற்பாலது, பெரியர்புராணம் எனப்பெறும் என்பர் ஒரு சாரார். உண்மை யாதோவெனின் பெருமையை அறிவுறுக்கும் புராணம்

என்பதாம். யாவர் பெருமை எனும் அவாய் நிலைக்கண் திருத்தொண்டர் பெருமையே யென்பது போதரும். தெய்வச்சேக்கிழார் தெய்வச் செய்யுளெலாம் ஆதியினின்றும் அந்தம்வரை அருண்மயமேயாதலின் ஏனைய நல்லிசைப் புலவர் இயற்றமிழ் வளத்திற்கு மேற்பட்டதாமாக. 'வான்மிக பகவனும் ... ... பொதியமலைக் குறுமுனிவனும் ஒப்பல்ல' என்ற உமாபதி சிவனார் மெய்ம்மொழி சால வியக்கற்பாலதாம். இப்பேரழகினற்புதம்,

"வண்ணங்கள் வரைதர வந்த மேன்மையால்
எண்ணில்பே ரறங்களும் வளர்க்கு மீகையால்
அண்ணல்பா கத்தைஆ ளுடைய நாயகி
உண்ணெகிழ் கருணையி னொழுக்கம் போன்றது."

"வம்பு லாமலர் நீரால் வழிபட்டுச்
செம்பொன் வார்கரை எண்ணில் சிவாலயத்
தெம்பி ரானை யிறைஞ்சலின் ஈர்ம்பொன்னி
உம்பர் நாயகர்க்கு அன்பரும் ஒக்குமால்."

"தோற்றும் மன்னுயிர் கட்கெலாந் தூய்மையே
சாற்று மின்பமுந் தண்மையுந் தந்துபோய்
ஆற்ற வண்டமெ லாம்பரந் தண்ணல்வெண்
ணீற்றின் பேரொளி போன்றது நீணிலா."

என்று இன்னோரன்ன செய்யுட்களின் உட்பொருளால் அறியக் கிடப்பதாம்.

"ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றுந்
திருந்துசாத்து விகமே யாக
இந்துவாழ் சடையான் ஆடும்ஆனந்த
வெல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்"

என்ற அற்புதச் செய்யுளுக்குத் திவ்வியம் பழுத்த சைவசித்தாந்தச் செல்வராய குமரகுருபரரே அனுபவப்பயன் உரைப்ப அறியாது இடர்ப்பாடுற்றனர் என்றால் சேக்கிழார்பெருமான் திருவாக்கின் ஞானனுபவ உண்மைகளை நன்கெடுத்துரைக்க வல்லார் யாவர் ?

இனி அருண்மொழித்தேவராம் சேக்கிழார்பெருமான், திருமுறை யாசிரியர்தம் செம்மொழியும் பொருளுமே கொண்டு தம் அருள் நூலை இயற்றியுள்ளாரென்பது, அறிவுடையோரனைவரும் நன்கறிந்த தொன்றும். நம் காரைக்காலம்மையார்,

"பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்—நிறந்திகழு
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
எஞ்ஞான்று தீர்ப்ப திடர்"

எனத் திருவாய் மலர்ந்த செய்யுளின் சொல்லும் பொருளுமே,

"வணிகர்பெருங் குலம்விளங்க வந்துபிறந் தருளியபின்
... ... ... ... ... ... மொழி பயின்றார்"

"வண்டல்பயில் வனவெல்லாம் வளர்மதியம் புனைந்தசடை
அண்டர்பிரான் திருவார்த்தை யணையவரு வனபயின்று"

என இரண்டு செய்யுட்கண்ணும் பயின்றுவருதல் காணலாம்.

இறைவனால் எடுத்தருளப்பெற்ற உலகெலாம் என்னும் மெய்ம் மொழியினை "உலகெலாம்" என முதற்கண்ணும், "சோதிமுத்தின் சிவிகை சூழ்வந்து ... ... அஞ்செழுத்தோதிஏறினார் உய்ய உலகெலாம்" என இடைக்கண்ணும், "என்றும் இன்பம் பெருகும் ... ... உலகெலாம்" என இறுதிக்கண்ணும் வைத்துப்போற்றி இருக்கின்றனர். இச்சிற்றுரையை விரிவஞ்சி இதோடு சுருக்கி முடித்தாம்.

என மொழிந்தனர்.

பின்பு "அப்பரடிகளின் அருட்டிறம்" என்னும் செம் பொருள்பற்றி திரிசிரபுரம், திரு. R. **பஞ்சநதம்பிள்ளை அவர்கள்,**

இறைவனுடைய அருட்செல்வம் பெற்ற ஆன்றோர்கள் அவ்வப் போது அருளிய அன்பு கனிந்த அமுத மொழிகளே தேவார முதலிய பன்னிரு திருமுறைகளாகும். இவைகள் படிப்போரை முறை (நல்வழி)ப் படுத்துவன வாதலால் திருமுறை எனப் பெயர் பெற்றன. மக்களாய்ப் பிறந்தார் அனைவரும் இத்திருமுறைகளை ஓதி வாழ்க்கையில் நலம் பெற வேண்டும். திருமுறைகளை இன்றியமையாது பயிலவேண்டியதைப் பற்றி இவ்வாதீன ஸ்தாபகரான ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் சிவபோக சாரத்தில்,

"ஆசையறாய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணாய்
நேசமுட னைந்தெழுத்தை நினையாய்—சீசீ
சினமே தவிராய் திருமுறைக ளோதாய்
மனமே! உனக்கென்ன வாய்."

என்று கூறியுள்ளார். இதனது ஆங்கில மொழிபெயர்ப்பு,

"Thou dost not cut off thy desires
Thou dost not severe the bonds
Thou dost not adore Siva in desirable worship
Thou dost not meditate with love
The holy letters five Fien thee!
Thou dost not leave anger
Thou dost not chant the Thirumurais
O mind why then this arrogant prate?"

என்பதாம்.

பெரியோர்கள் தாம்பெற்ற இன்பத்தைப் பிறரும் அடையவேண்டிப் பலவாறு முயல்வர். 'சொற்றுறுதிக்கு அப்பர்' எனப் புகழ்ந்து சொல்லப் பட்ட திருநாவுக்கரசு சுவாமிகள் மக்கள்மீது வைத்த அருள் காரண மாக அவர்களுடைய நலங்குறித்து எவ்வளவு பாடுபட்டுள்ளார் என் பதை அவர் இயற்றிய பாசுரங்களிலிருந்து அறியலாம்.

மனிதரில் தலையான மனிதரின் தன்மையை விளக்கும் வகையில் அப்பர் சுவாமிகள் திருப்பூவனூர்ப் பதிகத்தில் 'அன்பு கனிந்த மனத் தொடு கண்களின் வழியே நீர்பெருகிவர இறைவனைப் போற்றுவார் தலையாய மக்கள்' எனச் சுட்டுகின்றார்.

"அனுசயப் பட்டது இது என்னாதே
கனிமனத்தொடு கண்களும் நீர்மல்கிப்
புனிதனைப் பூவனூரனைப் போற்றுவார்
மனிதரில் தலையான மனிதரே."

மேலும் மானுடப் பிறவியின் மேன்மையைப்பற்றிச் சிவஞானசித்தியார் என்னும் நூலில் 'மானுடப் பிறவிதானும் வகுத்து மனவாக்காயம், ஆனிடத்தைந்து மாடும் அரன்பணிக்காக வன்றோ' என்று சொல்லப் பட்டிருக்கிறது. இதனால் மானுடப்பிறவி அரன்பணிக்காக அமைந்த தென்றும், அப்பிறவியில் செல்வன் கழலேத்தும் செல்வத்தைப் பெற்ற வரே சிறந்தோர் என்பதும், பிறசெல்வங்களைப் பெற்றாலும் இத்தன்மை யில்லாதோர் தாழ்ந்தோரே என்பதும் புலனாகின்றன.

இங்ஙனம் பொதுவாக மனிதரைக் குறித்துச் சொல்லிய பெருந் தகையார், தாம் காணும் பல்வேறு கூட்டத்தினரைப் பார்த்து அவர்களைத் தலையாய மனிதராக்க முயல்கின்றார். அவர் சந்தித்த மனிதர்கள் எத்தகையோர் என்பதை அவர் ஆங்காங்கு அழைக்கும் முறைகளிலிருந்து அறியலாம். சில உதாரணங்களைப் பார்ப்போம்.

'மாலதாகி மயங்கும் மனிதர்காள்!' என்று ஓரிடத்தில் அழைக்கின்றார். இதில் உலகப்பொருள்களிடத்தில் ஆசைகொண்டு மயங்கித் திரியும் மனிதர்களைக்கண்டு அழைத்து உபதேசிக்க விழைகின்றார். சிலர் இங்குமங்கும் ஓடிச்செல்கின்றனர். அவர்களைக்கண்டு 'இருந்து சொல்வன் கேண்மின்கள் ஏழைகாள்!' என்கின்றார். 'அறிவில்லாதவர்களே! உண்மைகளைக் கூறுவேன் இருந்து கேளுங்கள்' என்பது பொருளாம். வேறொரு கூட்டத்தார் செவியிருந்தும் கேட்கவேண்டியவற்றைக் கேட்டுந் திறனில்லாமல் திரிகின்றனர். அவர்களைப்பார்த்துத் 'துளையிலாச் செவித்தொண்டர்காள்!' என்று கூப்பிடுகின்றார். இங்குத் துளை என்பது காதின் வெளித்துளை அன்று. அறிஞர் சொல்லும் நூற்பொருள்களைக் கேட்டலிறை லுண்டாகும் நுண்மைத்துளை. இதைக் குறித்தே திருவள்ளுவரும் 'கேட்பினும் கேளாத்தகையவே கேள்வியால் தோட்கப்படாத செவி' என்று அழகாக் கூறியுள்ளார். அப்பர் சுவாமிகளும் திருவங்கமாலையில் செவிக்கு அறிவுறுத்தும் பொழுது 'செவிகாள்! கேண்மின்களோ, சிவனெம்மிறை செம்பவள எரிபோல் மேனிப்பிரான் திறம், எப்போதும் செவிகாள் கேண்மின்களோ' என்று பாடியுள்ளார். மற்றும் சிலர் நாவிருந்தும் இறைவனுடைய நலந்தரு நாமத்தை வழுத்தாமல் ஊமையராய் ஓடியாடி வருந்தி உழல்கின்றனர். அவர்களைப்பார்த்து, 'ஓடி எய்தும் பயனிலை ஊமர்காள்!' என்று கூப்பிடுகின்றார். 'வாயே! வாழ்த்து கண்டாய், மதயானை யுரிபோர்த்துப் பேய்வாழ் காட்டகத்தாடும் பிரான்தன்னை, வாயே வாழ்த்து கண்டாய்' என்று அடிகள் அருளியிருப்பதும் இதைக் குறித்தே. சிலர் தூரத்திலே நின்றுகொண்டு வேடிக்கை பார்க்கின்றனர். அவர்களை நெருங்கி வந்து கேட்கும்படி 'வந்து கேண்மின் மயல்தீர் மனிதர்காள்!' என்று விளிக்கின்றார். சிலர் அடியார்களாகச் சேர்ந்து தம்மைச் சூழ்ந்துகொண்டிருக்கின்றனர். அவர்களைப்பார்த்து 'நாடி நந்தமராயின தொண்டர்காள்!' என்று அன்புடன் அழைக்கின்றார்.

இவ்வாறாக நமது அடிகள் ஆங்காங்குள்ள கூட்டத்தினரை அழைத்து, அவர்களை நல்வழிப்படுத்தவேண்டிப் பற்பல உபதேசங்களைச் சொல்லியுள்ளார். அவைகளிற் சில வருமாறு.

"துன்ப மின்றித் துயரின்றி யென்றும்நீர்
இன்பம் வேண்டி லிராப்பக லேத்துமின்
என்பொன் ஈச னிறைவனென் றுள்குவார்க்
கன்ப னாயிடும் ஆனைக்கா வண்ணலே."

"இருந்து சொல்லுவன் கேண்மின்கள் ஏழைகாள்
அருந்த வந்தரும் அஞ்செழுத் தோதினால்
பொருந்து நோய்பிணி போகத் துரப்பதோர்
மருந்து மாகுவர் மன்னுமாற் பேறரே."

"மால தாகி மயங்கும் மனிதர்காள்
காலம் வந்து கடைமுடி யாமுனம்
கோல வார்பொழிற் கோளிலி மேவிய
நீல கண்டனை நின்று நினைமினே."

"நாடி நந்தம ராயின தொண்டர்காள்
ஆடுமின் அழுமின் தொழுமின் அடி
பாடுமின் பரமன் பயிலும் இடம்
கூடுமின் குரங்காடு துறையையே."

"மனிதர் காளிங்கே வம்மொன்று சொல்லுகேன்
கனிதந்தாற் கனி யுண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈசன் எனுங்கனி
இனிது சாலவு மேசற் றவர்கட்கே."

அடிகள் அருளிய கனியைச் சேந்தனார் தம் திருவிசைப்பாவில் 'கற்றவர் விழுங்குங் கற்பகக்கனியை' என்றும், பட்டினத்தடிகள் தமது திருவிடை மருதூர் மும்மணிக்கோவையில், 'அறுசுவை யதனிலும் உறுசுவை யுடைத்தாய்க், காணினுங் கேட்பினும் கருதினும் களிதரும், சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி' என்றும் பாராட்டியுள்ளார்கள்.

உலகில் உள்ள உயிர்கள் யாவும் துன்பம் நீங்கி இன்பம் ஓங்க விரும்புவது இயல்பே. ஆதலின் மக்களாய்ப் பிறந்தார் அனைவரும் சமயப் பெரியோர்கள் அருளிய திருமுறைகளை முறையுடன் ஓதி இறைவனைத் துதித்துத் துன்பம் நீங்கி இன்பம் எய்துவாராக. திருமுறைவிழா சிறப்புடன் நடைபெறத் திருவருள் புரிந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானத்தின் அருளொளி யாண்டும் பரவுக.

எனக் கவின்படப் பேசினர்.

திருத்தொண்டர் திருவந்தாதித் தலைவராகிய ஸ்ரீ நம்பியாண்டார் நம்பியாரைப்பற்றி, திருநாரையூர் **ஸ்ரீ முத்துக்குமரப் பிள்ளை அவர்கள்,**

இம்மகாநாட்டின் திருமுறைத் திருநாளாகிய இன்று, யானும் சில சொற்கள் பேசும்படியாகத் தலைவர்அவர்கள் எனக்கு அநுமதி தந்தது எங்கள் ஸ்ரீ பொல்லாப் பிள்ளையாருடைய கருணையாற் கிடைத்த பாக்கியம் என்றே எண்ணுகிறேன். எனக்கு அவர்கள்தந்த ஆணை "நம்பியாண்டார் நம்பி" என்னும் விஷயம். திருமுறைத் திருநாளாகிய இன்று நம்பியாண்டார்நம்பி விஷயமாகப் பேசுவது திருமுறையுட் சேர்ந்ததாக இருத்தல் வேண்டும். அது பதினோராந் திருமுறையிற்றான் தொடர்பு உடையது.

நம்பியாண்டார் நம்பிகள் திருநாரையூரில் அவதரித்த சிவப்பிராமணர் என்பதும், அவர் ஸ்ரீ பொல்லாப்பிள்ளையாருடைய திருவருளால் திருமுறைகளை வெளிப்படுத்தி அவற்றைப் பதினொரு திருமுறைகளாக வகுத்தருளிப் பதினோராவது திருமுறையிலே தாம் பாடிய பத்துப் பிரபந்தங்களைச் சேர்த்து வகுத்தருளிச் செய்தார் என்பதும், பிறவும், இங்குள்ள அறிஞரெல்லாம் அறிந்ததொன்றாகலின் அதனை விரித் துரைக்கவேண்டா.

ஸ்ரீ நம்பியாண்டார் நம்பிகள் அருளிச்செய்த பிரபந்தங்கள் பத்தனுள் முதற்கண் உள்ளது திருவிரட்டைமணிமாலை. அது தமது உபாசனாமூர்த்தியும், அருட்குருமுதல்வரும் ஆகிய, திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் மீது செய்தருளியது. தோத்திர ரூபமாய் உள்ளது. அத்தோத்திரமாலையின் இரண்டொரு செய்யுள் இங்கு உங்கள் முன் சொல்லி என்னுடைய சொற்பொழிவைக் குறித்த காலத்துக்குள் முடித்துக்கொள்ள நினைக்கிறேன்.

"என்னை நினைந்தடிமை கொண்டென் னிடர்கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான் — புன்னை
விரசுமகிழ் சோலைவிய னாரையூர் முக்கண்
அரசுமகி ழத்தி முகத்தான்"

இத்திருவெண்பா திருவிரட்டைமணிமாலையின் முதற்கண் உள்ளது.

தன்னை நினைய வொட்டாமல் உயிரின் அறிவு முழுவதையும் மறைத்துத் துன்பப் பெருங்கடலுள் அழுந்தும்படி செய்து இடர் செய்கின்ற ஆணவமலத்திறுள் அகப்பட்டுக் கிடக்கின்ற என்னுடைய நிலைமையைத் திருவுளம்பற்றி அம்மலத்திறுசெய்திய இடர்கெடுமாறு செய்து தன்னை நினையும்படி அருள் தருகின்றான் முன்னை வினை மெலிய் சோலை வியன் காரையூர் முக்கண் அரசாங்கிழ் அத்திமுகத்தான் என, இறைவன் உயிர்க்குத் துன்பம் நீக்கி இன்பம் அருளுதலாகிய உபகாரத்தை உணர்த்துதல் இத்திருவெண்பாவின் கருத்து.

இனி இத்தலத்திற்குரிய தேவாரத் திருப்பதிகங்களுள் திருத்தாண்டகத்துள் "அறுமுகனோ டானைமுகற் கப்பன் றன்னை" என்ற பகுதியை ஒரு புராண சரிதத்தில் வைத்து ஆசிரியர் நமக்கு உபதேசிக்கின்ற செய்யுள்,

"கொம்பனைய வள்ளி கொழுநன் குறுகாமே
வம்பனைய மாங்கனியை காரையூர்—நம்பனையே
தன்னவலஞ் செய்துகொளுந் தாழ்தடக்கை யாயென்னேய்
பின்னவலஞ் செய்வதெனோ பேசு"

என்பதாம். இத்திருவெண்பாவால் இறைவன் உலகமே உருவகமாக நிற்கின்ற தன்மையைச் சிவகுமாரர்களின் திருவிளையாடலின் வைத்து ஆசிரியர் நமக்கு உபதேசித்தருளுகின்ற அழகு மிகவும் பாராட்டத் தக்கது. திருப்பாடல்களின் பொருள்களைத் தெள்ளத் தெளித்துக் கொள்ளக்கூடிய வகையில் விரித்துரைக்கவல்ல பேரறிஞரெல்லாம் ஒருங்கு குழுமி இருக்கின்ற இச்சபையில் அடியேனும் ஏதோ சொல்ல முன்வந்தது ஏழு பெருங்கடலும் ஒன்றுகூடி அலைவீசி நிற்பப் பசுவின் குளம்பிட்ட சிறுகுழியின் நீரும், அக்கடற் பெருவெள்ளங்களின் முன்பு தானும் அலைவீச எண்ணுவதுபோலும். ஆதலின் இரண்டொரு தோத்திரம் சொல்லி என்னுடைய சொற்பொழிவை முடித்துக் கொள்கின்றேன்.

"பொன்னி வடகரை சேர்நாரை யூரிற் புழைக்கைமுக
மன்ன னறுபத்து மூவர் பதிகே மரபுசெயல்
பன்னவத் தொண்டத் தொகைவகை பல்குமந் தாதிதனைச்
சொன்ன மறைக்குல நம்பிபொற் பாதத் துணைதுணையே."

"கருமுறை விண்டடி யவருபு மாறருள் கவுணியர் குலதிபர்
தருமிறை நாவுக் கரசா ரூரர் தாஞ்சே மித்திடுமத்
திருமுறை கண்ட புராண முரைக்கச் சித்தர முகனற்றுள்
ஒருமுறை இருமுறை மும்முறை வாழ்த்தி யுவந்தன் பொடுபணிவாம்."

எனத் தொடர்புகள் விளங்க எடுத்து மொழிந்தனர்.

திருமுறைகளின் பெருமைகளைப் பற்றிச் சிறப்பித்து அண்ணமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர் திரு. **கா. சுப்பிரமணிய பிள்ளை M. A., M. L., அவர்கள்,**

இத்தகைய மகாநாடு சைவாதீனத்தில் முதன்முதல் நடப்பது இப்பொழுதுதான். தமிழும் சைவமும் தழைத்தோங்குவதற்கு இது அடிப்படையாய் நின்று தமிழ்நாடும் பிறநாடுகளும் பெரும்பயனெய்துதற்கு இடந்தருதல் வேண்டும். இதிற்கலந்துகொள்ளும் விருப்பத்துடன் இங்கு வந்த என்னை மகாநாட்டு அமைச்சர் அவர்கள் பன்னிரு திருமுறையைப் பற்றிப் பேசும்படி ஏவியதை மறுத்தற்கஞ்சி அதனைப்பற்றிச் சுருக்கமாகப் பேச இணங்கினேன். ஒவ்வொரு திருமுறையின் பெருமையும் தனித்தனி பலரால் சிறப்பாகப் பேசப்பட்டது. திருஞானசம்பந்தர் திருமுறைகள் இயற்கைப் பொருள்களின் அழகை நன்குரைப்பனவாய்ப் பெருமிதஞ் சிறந்த சொல்நடையில் அமைந்துள்ளன. திருநாவுக்கரசர் திருமுறைகள் சீர்திருத்தக் கருத்துக்களைச் சிறப்பாக எடுத்தோதுவனவாய் இறைவன் பெருமைகளை மனமுருகக் கூறும் தாண்டகம் முதலிய இனிய திருப்பாடல்களை யுடையன. சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுறை நகைச்சுவை மிகுத்து உலகப்பயன்களை இறைவன்பாற் பெறுமுறையினைக்காட்டி மேலுலகப் பொருள்களுக்கு அகச்சான்று தருவது. திருவாசகமாகிய எட்டாந் திருமுறை இறைவனோடிரண்டறக் கலந்து நுகரும் பேரின்பத்தை இம்மையிலே பெற்று அதனை முற்றிலும் பெறக் கருதுவார் இப்பிறவி விரைவில் ஒழியவேண்டுமென்று விருப்பங்கொள்ளு தலை மணிவாசகப்பெருமானின் அனுபவத்தால் இனிது விளக்குவது. ஒன்பதாவது திருமுறை தமிழர்க்குரிய சிவநெறியின் மாண்பினை விளக்குவதோடு சிறந்த உவமை நயங்களை யுடையது. பத்தாந் திருமுறையாகிய திருமந்திரம் மறைந்த பண்டைத் தமிழாகமங்களின் தனிச்சிறப்பிற்கு எடுத்துக்காட்டாக இலங்குவது. பதினொராந் திருமுறை தேவார காலத்திற்கு முன்னும் பின்னும் அருட்பாடல்களியற்றவல்ல திருவருட்பேறுடையவர்கள் இருந்தனரென்பதைக் காட்டுவதாகும். பன்னிரண்டாந் திருமுறையாகிய பெரிய புராணத்தின் பெருமை அளவிடற்கரியது. அது பயன் கருதாத பேரன்பர்களின் வரலாறு கூறுவதாய் இறைவன் அடியெடுத்துக் கொடுக்கப்பெற்றுத் தமிழ்ப்புராண நூல்களில் முதல் நூலாய் மிளிர்வது. அது எல்லா நாட்டிலும் எல்லாக் காலத்திலுமுள்ள கடவுளடியார்களை உளப்படுத்தி நிற்பது.

திருமுறைகளின் பெருமையைக் கூறப்புகின் விரியும். திருஞானசம்பந்தர் பெற்ற திருப்பெருகு சிவஞானம் முதலிய நால்வகை ஞானமும் அவர் திருப்பதிகங்களில் எட்டு, ஒன்பது, பத்து, பதினொன்று

என்று முறைமைகளில் நின்ற திருப்பாடல்களில் மக்களுக்குப் பயனளிப் பனவாய்த் திகழ்கின்றன. திருப்பதிகங்கள் சமயாசாரியர்களின் ஒப் புயர்வற்ற பேரின்ப நுகர்ச்சியிற் பிறந்த பெருஞானக் களஞ்சியங்களா யிருப்பன. அவையே வேதமென்னும் பெயரிற்குச் சிறப்பாக உரியன வாகும். ஏனெனில் வேதமென்ற சொல் அறிவைத் தருவதென்று பொருள்படும். காண்டல், கருதல், உரை யென்னும் மூன்று அளவை களினாலும் பெறப்படும் அறிவுகளில் காண்டலாகிய அனுபவத்தினால் எய்தப்பெறும் அறிவே சிறந்த அறிவாகும். எல்லாம்வல்ல முழுமுதற் கடவுளைத் தங்கள் உயிரின்கண் நேரேயுணர்ந்து அப்பொருளை நுகர்ந்து அப்பொருளைப்பற்றிக் கூறவல்ல சைவத்தலைவர்களின் அருள்மொழியே சிறந்த அறிவைப் பயக்கும் வேதமாதல் காண்க. மெய்யன்பர்களின் அன்பில் இறைவன் அகப்படுதலின் அவர்களே அவனைப்பற்றிக் கூற வல்லவர்கள். பிறர் அவர்பாற் கேட்டவற்றையே கூறவல்லவர்கள். "பத்தி வலையிற் படுவோன் காண்க", "பத்தர்தம் பத்தியின்பாற் படி னல்லது முத்தினை யார்சொல்ல முந்துகின்றாரே", "சொல்லலாவ கேட்பவே" என்னும் அருள்வாக்குகளின் பொருளை உய்த்துணர்க. எப்போதும் ஞான நிட்டையிலிருக்குந் திருஞானசம்பந்தர், திருநாவுக் கரச ரென்னும் இருவரும் உலகில் தம் உணர்வு சென்ற காலை திருப் பதிகத்தின் திறத்தினையே போற்றியும் அடியார் பெருமையைப் பேசியும் நட்பின் பயன்கொண்டார்களென்று பெரியபுராணம் இயம்புகின்றது. அதுவே பன்னிரண்டாஞ் சூத்திரக் கருத்தினை யுணர்த்தும். அதனைத் தெரிக்கும் பெரியபுராணப் பாட்டு வருமாறு.

> "திருப்பதிகச் செந்தமிழின் திறம்போற்றி மகிழ்வுற்றுப்
> பொருப்பரையன் மடப்பாவை யிடப்பாகர் பொற்றாளில்
> விருப்புடைய திருத்தொண்டர் பெருமையினை விரித்துரைத்தங்
> கொருப்படு சிந்தையினார்கள் உடனுறைவின் பயன்பெற்றார்."

திருஞானசம்பந்தர் அனல்வாது நடத்தக் கருதியகாலை வடமொழியில் வேதத்தில் நின்றவது, ஆகமத்தில் நின்றவது ஒருவாக்கினை யெடுத்தெழு தாமல் தேவாரத்திற் கயிறு சாத்திவந்த திருப்பதிகத்தை எடுத்தெழுதி நெருப்பிலிட்டமை திருமுறையின் மாண்பினை நன்கு விளக்குவதாகும். அவர் பாண்டியனுக் குபதேசித்தருளிய திருமுகப்பாசுரம் சிவஞான போதம் போலப் பன்னிரண்டு பாக்களையுடையது. அவற்றின் கருத்து விரிப்பிற் பெருகும்.

திருஞானசம்பந்தரும், அப்பரும் சீகாழியில் ஒருவரையொருவர் கண்டு அளவளாவி இறைவன்கோயிலைச் சேர்ந்ததைக்கூறும் பெரிய புராணத் திருப்பாட்டு பல நயங்களையுடைமையால் அதன் பொருளை ஒரு சிறிது விளக்கி அதனுடன் என் சிற்றுரையை முடிக்கின்றேன். அப்பாட்டு வருமாறு.

"அருட்பெருகு தனிக்கடலும் உலகுக்கெல்லாம்
அன்புசெறி கடலுமாம் எனவு மோங்கும்
பொருட்சமய முதற்சைவ நெறிதான்பெற்ற
புண்ணியக்கண் ணிரண்டெனவும் புவன முய்ய
இருட்கடுவுண் டவரருளு முலகமெல்லா
மீன்றாடன் றிருவருளு மெனவுங் கூடித்
தெருட்கலை ஞானக்கன்று மரசுஞ்சென்று
செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தா ரன்றே."

இதனுட்கூறிய அடைமொழிகள் இருவர்க்கும் பொருந்துவனவாகும். முறைநிரல் நிரையாகப் பொருள்கொள்ளுமிடத்து, அருட்பெருகு தனிக்கடலென்பது திருஞானசம்பந்தரைக் குறிக்கும். இறைவன் அம்மையப்பராய் எழுந்தருளிவரப்பெற்று மூன்று வயதிலேயே ஞானப் பால் அளிக்கப்பெற்ற பெருமை திருஞானசம்பந்தர் ஒருவருக்கே உரிய தாகும். ஆதலால் அவர் இறைவன் திருவருள் பெருகுகின்ற தனிக் கடலாவர். உலகினர் யாவரிடத்தும் தாய்போன்ற அன்புடையராய் அவர்கள்பொருட்டு இறைவனிடம் பரிந்து பேசும் மனப்பான்மை அப்பர்பெருமானுக் குண்டென்பது அவர் திருமுறைகளிற் புலனாகலின் ஆசிரியர் சேக்கிழார் அவரை அன்புசெறிகடலென்றார். **சம்பந்தப்பெரு மானை அருட்கடல் எ**லன்றும், **அப்பர்பெருமானை அன்புக்கடல்** எலன்றும் பெரியபுராண ஆசிரியர் கூறியதற்கு, மற்றுமோர் காரணமுமுண்டு. "அருளென்னும் அன்பின் குழவி"யென்றார் திருவள்ளுவர். அன்பினை அருளுக்குத் தாயாகவுங் கூறலாம், தந்தையாகவுங் கூறலாம். சம்பந்தர் திருநாவுக்கரசரை அப்பரென்றும், அப்பர் ஓரிடத்தில் சம்பந்தரைப் பிள்ளாயென்றும் விளித்தமையால் அப்பரை அன்பென்றும் ஆளுடைய பிள்ளையாரை அருளென்றும் உருவகித்துக் கூறியது திருக்குறட் கருத் திற்குப் பொருத்தமாவது காண்க.

சம்பந்தரும், அப்பரும், முதற்சைவநெறியைப் புறச்சமய இருளி னின்றும் பாதுகாத்து வளர்க்கவந்தவராதலின் அதற்கு அவ்விருவரும் புண்ணியக்கண் எனப்பட்டனர். சைவநெறிகள் பலவாக இருந்தமையின்

சித்தாந்த சைவத்தை முதற்சைவநெறி யென்றார். சித்தாந்த மென்ற சொல் முடிவையுணர்த்தும். முதலென்றசொல் முதன்மையை யுணர்த்தும். சைவநெறிகளுள் தலைசிறந்ததை முதல் நெறியென்றல் முற்கால வழக்கு. சித்தாந்தமென்றல் பிற்காலவழக்கு. சைவசித்தாந்தமென்னுஞ் சொற்றொடர் திருமந்திரத்துள் வழங்கினும் நூல்களிற் பெருவழக்காகப் பயின்றமை பிற்காலத்திலென்றுணர்க.

இருட்கடுவுண்டவர் அருளும் என்ற சொற்றொடர் திருஞான சம்பந்தரைக் குறிக்கும். புறச்சமயமாகிய நஞ்சின் வலியை யடக்கிச் சைவநெறியை நிலைநாட்டிச் சமய வேந்தனெனப் பெயர்பெற்ற பெருமை அவருக்கே யுரியதாதல் காண்க. இன்னல்கள் வந்தகாலை திருவருளினாற் பாதுகாக்கப் பெற்ற அப்பர் உலகமெல்லாம் ஈன்றாளின் திருவருளிற்கு ஒப்பாயினர். அவர் கடலினின்று கரையேறிகாலை இறைவனைப் பாடிய திருப்பாட்டு 'ஈன்றாளுமாய்' எனத் தொடங்குதல் காண்க.

இனி எதிர் நிரல் நிரையாகப் பொருள் கொள்ளுமிடத்து எவ் வுயிர்க்குங் கருணைகாட்டுந் துறவற அருள்நெறியில் நின்ற தனிப்பெருஞ் சிறப்பினர் அப்பராதலின் அவர் அருட்பெருந் தனிக்கடலாவர். 'ஞால நின்புகழே மிகவேண்டு'மெனவும், 'வையகந் துயர்தீர்க' வெனவும் கூறிய சம்பந்தப்பெருமான் எவ்வுயிரையும் உய்விக்கும் பேரன்புடையராதலின் அவரை அன்புசெறி கடலென்றார். உலகுக்கெல்லாம் அன்பென்பதே அருளென்பாருமுளர். கண்களிரண்டையும் இருவருக்குமே உவமை கூறினார் ஆசிரியர். திருவதிகையில் சூலைநோயும் புறச்சமய நோயும் நீங்கப்பெற்றுச் சிவலிங்கப்பெருமான் திருமுன்னர் திருவருள்பெற்ற அப்பமூர்த்தியை இருட்கடுவுண்டவருக்கு ஒப்பாகவும், அம்மை திருமுலைப் பால் உண்ட பிள்ளையாரை ஈன்றவளின் திருவருளுக் கொப்பாகவும் கூறுதல் பொருத்தமே.

இனி, இருபெருந் தகையார்க்கும் ஈருவமைகளை மட்டுங் கூறாது மூன்று இணையுவமைகளைக் கூறியது எக்காரணத்தினாலெனிற் கூறுதும். அத்திருப்பாட்டில் இருவரும் கூடிச்சென்று சேர்ந்தாரென இயம்பப் பட்டிருத்தலின், எவ்வாறு கூடினர், எவ்வாறு சென்றனர், எவ்வாறு சேர்ந்தனரென்பதை விளக்குமுகத்தால் இருவரும் அருட்கடலும் அன்புக்கடலும் போலக்கூடி இருகண் போலச் சென்று இருவகை அருள்போலச் சேர்ந்தனர் என்பாராயினர் ஆசிரியர் சேக்கிழார். அடி யார் கூட்டத்தோடு இருபேரன்பரும் கலந்தமைக்கு இருகடலுங்

கூடினமை உவமையாயிற்று. கண்ணொளி பொருள்களைச் சென்று பற்றுதல் இருபெருந்தகையாரும் இறைவனை நாடிச் சென்றமைக்கு உவமையாயிற்று. திருத்தோணியில் அம்மையப்பராய் வீற்றிருக்கும் பெருமானை அம்மையினருளும் அப்பனருளும் போன்ற பெரியார் சேர்ந்தனரென்பதும் பொருத்தமே.

என ஆழ்ந்த கருத்துக்களைத் தெளிவுபெற விளக்கினார்.

பத்தாம் திருமுறையிலுள்ள மருத்துவநூல் நுட்பங்களைச் சென்னை, சித்த மருத்துவ நிபுணர் திருவாளர். S. G. **சுந்தரம் பிள்ளை அவர்கள்,**

உலகில் பற்பல சமயங்கள் இருந்தும் **சைவசமயமே சமயம்** என வற்புறுத்தியும், குறிப்பிட்டும் சொல்லியதற்கிணங்க சைவ அபிவிருத்தியையும் சிவபக்தியையும் பொதுமக்களிடையே உண்டுபண்ணக்கருதித் தருமபுர ஆதீனத்தாரால் இன்றுதினம் நடைபெறும் ஸ்ரீ மெய்கண்டான் மகாநாட்டில் தலைவர் அவர்கள் பத்தாந் திருமுறையாகிய திருமந்திரத்தைப் பேசும்படியாக எனக்கு ஆணைதந்துள்ளார்கள். இத்திருமந்திரமானது திருமூலரால், அவர் "போதிமரத்தடியில்" மூவாயிரவருடங்கள் இருந்து மூவாயிரம் செய்யுட்களாகச் செய்யப்பட்டுள்ளது. ஆகவே மூலர் உபதேசித்த மூலமந்திரம் எனக் கருதப்படும். இத்திருமந்திரமே, சைவத் திருமுறைகளில் அரும்பெரும் திருமுறையாக நமது சிவநேயச் செல்வர்களாலும், இலக்கண முறையிலும் பொருள் தெரிவது கடினமெனத் தமிழில் சிறந்த பண்டிதர்களாலும் கருதப்பட்டுவருவது உங்களுக்குத் தெரிந்ததே. இத்திருமந்திரத்தை, இன்று கூட்டத்தின் காலவரம்பை அனுசரித்து நான்கு நிமிடங்களிலே பேசி விளங்கவைக்கும்படி நமது தலைவர் எனக்குக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

பல பழைய சமயங்களுக்கு மூலமந்திரமாகிய "ஓம்" என்ற ஓர் மந்திரமொழி பண்டைக்காலத்தில் முதல் முதலாக தமிழர்களால் தமிழ்மொழியில் உண்டுபண்ணப்பட்டுச் சைவசமயாசாரியர்களால் சிவ பக்தர்களுக்கு உபதேசிக்கப்பட்டு அவ்வழக்கம் நாளதுவரை தொடர்ந்து வந்துகொண்டிருக்கிறது. இதன் விபரம் சைவ ஆதீனங்கள் சம்பந்தப்பட்ட சைவமக்கள் எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. இம்மந்திர உபதேசகாலத்தில் சமயாசாரியர்கள் பக்தனுக்கு உபதேசிக்குங்கால், மௌனமாயிருந்து கைசாடையாக "சின்முத்திரையை" உருவப்படுத்திக் காண்பிப்பதே முதல் மந்திரோபதேச முறையான குறிப்பைக் காண்

பித்து எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற நான்குநிமிஷ நேரத்தில் நான்கில் ஒரு பங்காகிய ஒரு நிமிஷத்திலே நான் என்னுடைய உபன்யாசத்தை முடித்துவிடலாம் என்று நினைக்கின்றேன். ஆனால் நீங்கள் மூவரால் செய்யப்பட்ட மூலமந்திர விளக்கத்தைக் கொஞ்சம் விபரமாகத் தெரிந்து கொள்ள விரும்பி அவ்விருப்பத்திற்குத் தலைவர் அவர்களும் இணங்கி என்னைப் பேசும்படி இடம்கொடுத்ததால் விரிவாய் விளக்கிக்காட்ட விரும்புகிறேன். தற்கால உலகில் பல மொழிகள் வழங்கப்பட்டுவரினும் அவைகளில் தமிழ்மொழி ஒன்றே மிகப் பழமையானதும் நிறைமொழி எனவும் நான் எனது ஆராய்ச்சியால் தெரிந்துள்ளேன். தவிர நாகரிக முறையில் பல பழங்கலைகளையும் விளக்கிக்காட்டக்கூடிய முறையில் எழுத்தமைப்பும் சொற்களமைப்பும் கொண்டுள்ள நிறைமொழியெனவும் இயல் இசை நாடகம் எனப்பட்ட முப்பகுதிகளை கொண்ட முத்தமிழ் எனவும் கூறப்படும் தமிழ்மொழியின் சிறப்பு வேறெம்மொழியிலும் இல்லவே இல்லை எனத் தமிழ் மக்களாகிய நாம் உறுதிகொள்ளலாம். ஆகவே ஓர் சொற்பொழிவை குறுக்கியும், பெருக்கியும் பேசிப் பூராக் கருத்தையும் விளக்கிக் காட்டக்கூடிய தமிழின் பெருமையை இந்த மூலமந்திரமாகிய ஓம் என்னும் மந்திரமொழியின் வாயிலாக உங்களுக்கு விரித்துரைக்க விரும்புகிறேன்.

மூலமந்திரம் எனப்படும் இந்த ஓம் என்ற ஓர் கூட்டெழுத்தானது அகார, உகார, மகாரமென மூன்று பகுதிகளால் சேர்க்கப்பட்டுள்ள தொன்றாகும். இம்மூன்றுபகுதியான எழுத்துக்கள் முறையே உலகத்தோற்றத்தையும், நடத்தையையும், ஒடுக்கத்தையும் தெரிவிக்கக்கூடிய தத்துவத்தோடு கூடியுள்ளது. இது அன்னியில் "ஓம்" என்ற ஓர் மொழி சிவம், சத்தி இரண்டின் சேர்க்கை எனவும் குறித்து விளக்கும். இந்த சிவம் சக்தி என்ற இரண்டையே பூத உலகில் "விந்துநாதம்" எனக் குறிப்பிட்டு பொருளை விளக்கும் அந்த விந்து நாத சேர்க்கையே "ஓம்" என தற்கால சமயவாதிகள் எல்லோருக்கும் தெரிந்ததே அதோடு விந்து என்பது ஒளி எனவும் நாதம் என்பது ஒலி எனவும் பெரும்பாலரால் கருதப்பட்டு அம்மட்டோடு நின்றுவிட்டார்கள். என் சொந்த ஆராய்ச்சியில் சித்தர் நூல்களை கற்றுணர்ந்தும் சித்தர் நூல்களின் உண்மையை பல கலைகளுக்கும் ஒப்பிட்டுப் பார்த்தும் செய்துள்ளேன். சித்தர்கள் தாங்கள் உலகில் சித்திமுத்தியடைந்து அதன் பயனை உலகமக்கள் உய்யும்பொருட்டு சர்வ கலை ஞானங்களையும் விளக்கித் தெளிவுறும்படி நூல்களியற்றியிருக்கிறார்கள். தமிழ் மக்களில் பலர் அச்சித்தர் நூற்களை வைத்திய சம்பந்தமானது

மட்டும் என்று கருதிப் புறக்கணிப்பது தமிழ்மொழிக்கே ஓர் பெரும் குறையென்னலாம். இது முன் நான்கூறிய ஓங்கார உபதேச முறையில் சமய குருவினிடம் தமிழ் மக்கள் உபதேசம்பெற்று உண்மையைத் தெரிந்துகொள்ள சந்தர்ப்பங்கள் கிடைக்காத நிலைமையில் தமிழறிஞர்கள் சித்த நூல்களைக் கற்றுணர்ந்து, பொருளைத் தெரிந்து, உண்மையை அறிந்துக்கொள்ளவேண்டிய அவசியத்தை அவரவர்கள் முயற்சியால் அடைந்துகொள்ளலாம் என்பது எனது கருத்தும் அனுபவமும் ஆகும். ஆதலால் சித்தர் நூலின்படி நான் தெரிந்துகொண்ட ஓங்கார விளக்கத்தை உங்களுக்குச் சிறிது எடுத்துக்கூற விரும்புகிறேன்.

"ஓம்" என்ற மந்திரமொழி "ஓங்காரம்" என்ற பதத்தின் முதல் எழுத்தும் கடையெழுத்தும் சேர்ந்துள்ள ஓர் சொல்லாகும். ஆதலால் "ஓம்" என்ற குறுகிய சொல் ஓங்காரம் என்ற விரிந்த சொல்லின் தத்துவத்தையும் பொருளையுமே கொண்டதாகும்.

சித்தர் நூல்களின்படி விந்து நாதமாகிய இருபொருட்கள் முறையே ஒளிப்பொருள் என்றும், ஒலிபொருள் என்றும் கருதப்பட்டு வருகின்றன. தவிர அவ்விரு பொருள்களின் வடிவங்கள் முறையே புள்ளியும், பிறையும் போன்றதென அவ்விருவடிவங்களையும் ஒன்று சேர்த்து ஓங்கார அமைப்பிலே குறித்துக் காண்பிக்கப்பட்டிருக்கிறது அன்றியும் இந்த நாத விந்து பொருள்களுக்குத் தமிழ்மொழி ஒன்றிலே தான் இயற்கைப் பெயர்கள் இருந்துகொண்டுவருகிறதேஒழிய வேறு சுமார் இருபது மொழிகளை ஆராய்ந்து பார்த்தும் அம்மொழிகளில் இயற்கைப் பெயர்கள் இல்லை. மற்றபடி தமிழ் சிலேடைப் பெயர்களைக் கவனித்தால் விந்துக்கு 84-ம், நாதத்துக்கு 96-பெயர்களும் இருக்கின்றன. இம்மாதிரி சிலேடைப் பெயர்கள் நாதப் பொருளுக்குச் சுமார் பதினைந்துக்குள்ளாகவே யிருக்கிறது. விந்துவுக்குப் பெயரே அநேக மொழிகளிலில்லை. மேலும் சித்தர் நூற்படி இவ்விந்து நாதமாகிய பிரணவப் பொருள் சிவ சக்தி அம்சம் கொண்டதெனவும் அச்சிவசக்தி அருளால் தோற்றுவிக்கப்பட்ட கணபதி சுப்பிரமணியர் என்ற தெய்வ அம்சம் கொண்டுள்ள ஓங்கார பொருளாகும். இதையே பல பிரிவுகளாக விளக்கிக் காட்டியிருக்கிற முறையில் "ரவி மதியென்றும், அண்ட பிண்டம், தலை கால், கார சாரம், நீறு உத்திராக்கம், இலைச்சாறு பழச்சாறு, சங்கநிதி பதுமநிதி எனப் பலவிதமாய் விரித்துரைத்துப்

பொருள் விளக்கம் சொல்லப்பட்டிருக்கிறது. அவ் ஓங்காரப் பொரு ளுக்கு ஓங்கார சப்தமும் உண்டு. அப்பொருளே உலகில் ஆதியும் அந்தமுமாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதுவன்னியில் அதையே சித்தப்பொருளெனவும், கடவுளின் அருட்பொருளெனவும், அப்பொரு ளின் உதவியால் மனிதர்களுக்கு இயற்கையில் உண்டான இறப்பைத் தவிர்க்கவும், சித்தி முத்தியை யடையவும் உதவிகாரணமாயிருக்கும் எனவும் சொல்லப்பட்டிருக்கிறது. தவிர அப்பொருளே மெய்ப்பொரு ளெனவும் கூறப்பட்டு அதைத் தரிசிப்பதும் உபயோகிப்பதும் மனி தனுடைய கடமை யெனச் சொல்லி, அவ்விதம் அப்பொருளைப் பாரப் பதினல் சகல கலைஞானங்கள் உண்டாகும் என்றும், அதன் உபயோகத் தால் சித்திமுத்திகள் கிடைக்குமென்றும் சித்தர்களால் மிகத்தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. இதையே திருமுறைப்படி கவனிக்கையில் "வேதத்தில் உள்ளது நீறு" என்ற வாக்கின்படி தேவாரப் பொருளாகிய நாதப் பொருளையும், மணிவாசகமென்ற திருவாசகப்படி மணியாகிய விந்துப் பொருளையும் திருமந்திர முறைப்படி நாம் பக்குவப்படுத்திக் காயகற்ப முறையில் உபயோகித்துச் சைவசமய முறைப்படி சித்திமுத்தியை யடைய ஏது உண்டு. இப்மாதிரியான ஓங்கார விளக்கத்தைப் பற்றிச் தமிழ்ச் சித்தர் நூலில் சொல்லப்பட்டிருக்கிறதுபோல வேறு எந்த மொழியிலும் சொல்லப்படவில்லை என்பது எனது துணிபு.

நமது பழைய தமிழர்களால் ஏற்படுத்தப்பட்ட இந்த மூலமந்திர மாகிய ஓம் என்பதை ஆரியர்களும், புத்தர்களும், அராபியர்களும் கிரேக்கர்களும், கிறிஸ்தவர்களும் ஓம் எனவும், சற்று வித்தியாசத்தோடும் கொண்டு அவரவர்கள் மதாச்சாரிகள் மூலமாக உபதேசம் பெற்று வருகிற வழக்கம் உண்டு. ஆனால் அதன் உண்மையைத் தெரியவும் பொருளை நிச்சயப்படுத்தவும் தமிழ்ச் சித்தர் நூல்களே சிறந்தவை என்னலாம். தவிர பழம் தமிழரின் நாகரீகத்தைக் கவனிக்கையில் ஓங்கார உண்மையைத் தெரியப் பல சாதனங்கள் ஏற்படுத்தப்பட்டிருப்பது நம் முடைய தமிழ் நாட்டுக்கே உரிய சிறப்பாகும். அதன் விபரம் மடாலயம் என்று சொல்லப்பட்டிருக்கிற ஓர் சேர்க்கை வார்த்தையினல் தெரிய வரும். இந்த மடாலயத்தின் தத்துவத்தைக் கவனிக்கில் மடத்திலுள்ள சமய ஆசாரியார் பக்தர்களுக்கு உபதேசமுறையில் வாக்கால் எடுத் துரைத்தும், தெரிந்துகொள்ளக்கூடாத பக்தர்களை ஆலயத்துக்குக் கூட்டிச் சென்று தொட்டுக்காட்டும் வித்தை என்ற முறைப்படி தெளிவுபடுத்தியும் இருக்கிறார்கள். இதை அனுசரித்து இந்தத் தருமபுர ஆதீனத்தில் முற் காலத்தில் நடந்த சம்பவத்தை நான் உங்களுக்கு ஞாபக மூட்டுகிறேன்

அதாவது தென்தேசத்திலிருந்து தமிழ்த் தத்துவ ஞானியாகிய ஸ்ரீமத் குமரகுருபர சுவாமிகள் இங்கு வந்து மகாசந்நிதானத்தைத் தரிசித்த போது குமரகுருபர சுவாமிகளின் பக்குவத்தைத்தெரிந்து அவரிடம் திருத்தொண்டர் புராணத்தில் உள்ள ஒரு செய்யுளை வாசித்துப் பொருள் சொல்லும்படிக் கேட்க அவர் திகைத்து நின்றார். அதுசமயம் அவருக்கு முதலில் உபதேசித்துப் பிறகு ஆலயத்திற்கு அழைத்துச்சென்று மெய்ப் பொருளைக் காட்டிவித்தார் எனவும், அதன்பின் அவருக்குக் காயசித்தி முறையை செய்துவைத்து அவரை வடநாட்டுக்குப் போகும்படி செய்து மகமதியர்களால் சைவசமயத்துக்குட்பட்ட குறைகளை நீக்கிச் சைவசமய உண்மையை வெளிப்படுத்துமாறு கட்டளையிட்டார்கள் எனவும், அவ் விதமே சுவாமிகளும் வடநாடு சென்று, பல சித்து விளையாடல்களைச் செய்து சைவசமயத்துக்கு விரோதிகளைத் தன்வசப்படுத்திச் சைவ சமய உண்மையைத் தெரிவித்து, காசியில் சைவ மடாலயம் கட்டுவித்து, சைவ சமயத்துக்குச் சிறப்பு உண்டாக்கினார்கள் எனவும் கூறுகின்ற ஓர் பெருமை இந்தத் தருமபுர ஆதீனத்துக்கே உரியது.

இத்தகைய சிறப்புவாய்ந்த இத்தருமபுர ஆதீனம் சமய வளர்ச் சிக்குத் தாங்களே வேலைசெய்துகொண்டிருந்ததோடு தற்கால நிலைமைக் குத் தக்கபடி இதுவரையிலும் செய்யாத ஓர் முறையில் பொதுஜனங் களைக் கூட்டி ஓர் மகாநாடு நடத்த முன்வந்ததானது, தமிழுக்கும் சைவ சமயத்துக்கும் நற்காலம் பிறந்ததென்றே நான் நினைக்கிறேன். அத் தோடு இப்பொழுது நடக்கிற இம் மகாநாட்டோடு நின்றுவிடாமல் வருஷம்தோறும் இம்மாதிரி நடத்திவைக்க நம்முடைய சைவ ஆதீனங்கள் முன்வரவேண்டுமென விரும்புகிறேன். இம்மெய்கண்டான் மகாநாட்டை மெய்ப்பொருள் கண்ட கருத்தாவைப் பெறப்பெற்ற இந்தத் தருமபுர ஆதீனம் இம்மெய்கண்டான் திருவிழாவை நடத்துவதற்குத் தனிச் சிறப்பும் கடமையும் உடையதாகும்.

> "நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்
> வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
> ஊன்பற்றி நின்ற உணர்உறு மந்திரம்
> தான்பற்றப் பற்றத் தலைப்படும் தானே."

இவ்வாறு மருத்துவ அருங்கருத்துக்களோடு இயைத்துத் தெளிவு படுத்திக் கூறியது அவையோரை விம்மிதப்படுத்தியது.

தலைவரவர்கள் அன்று நிகழ்ந்த சொற்பொழிவுகளின் பின்னுரையாக அவற்றின் அருமைகளை எடுத்து விதந்து சுருக்கமாக மொழிந்து அவையோர்களைப் பரவச மடையச் செய்தனர்.

பின்னர், கீழ்க்காணுமாறு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் ஆசியுரை கூறப்பெற்றது.

**அன்பர்களே!**

கரிய கண்டனைச் சிரபுரத் துளெம்
அரசை நாடொறும் பரவி உய்ம்மினே.

இங்கே நடைபெற்ற ஸ்ரீ மெய்கண்டான் சித்தாந்த மகாநாட்டிற்கு வந்திருந்து அறிஞர்கள் கூறிய சிவஞான மொழிகளை விரும்பிக்கேட்டு மகிழ்ந்தும், திருநெறித் தமிழ்த் திருமுறைத் திருவிழாப் பொலிவைக் கண்ணாரக்கண்டும் புனிதர்களாகிச் சிவப் பணிகளில் உள்ளம் பற்றினீர்கள். மேலும் இவ்வாறே இயன்றவாறு அருணெறித் தொண்டுகளில் கலந்து சைவஞானச் செல்வர்களாய்ச் சிவவேடத்தையும் சிவாலயத்தையும் சிவாசாரியர்களையும் வழிபாடுசெய்து, என்றும் இன்பம் பெருகும் இயல்பினால் ஒன்று காதலித்து, உள்ளமும் ஓங்கி வாழ்வீர்களாக. இந்த நல்ல தொண்டினை நாம் செய்யும்படித் திருவருள் புரிந்த எம் பரமேசனை எல்லோரும் வாழ்த்தி வணங்குவோம்.

திருச்சிற்றம்பலம்

வம்மின் அடியீர் நாண்மலர் இட்டுத் தொழுதுய்ய
உம்மன்பினொ டெம்மன்புசெய் தீசன் உறைகோயில்
மும்மென்றிசை முரல்வண்டுகள் கெண்டித் திசையெங்கும்
விம்மும் பொழில் சூழ்தண்வயல் வீழிம் மிழலையே.

திருச்சிற்றம்பலம்.

அச்சிட்ட இவ்வுரை அவையோர்க்கும் வழங்கப்பட்டது.

பொது அமைச்சர் ஸ்ரீ மௌன. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் மகாநாட்டிற் குழுமியிருந்து சிறப்பித்த பெருமக்களுக்கு நன்றிகூறி, ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் திருவுளப்

பாங்கின்படி மகாநாடு சிறப்புற நிகழ்ந்தமைக்கு ஆதிகுருமூர்த்தி களின் குருவருளையும், ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் திரு வருளையும் எண்ணி வழுத்தினார்கள். அவர்களது உரையின் சுருக்கமாவது,

**சிவநேசச் செல்வர்களே !**

அடியேன் மகாநாட்டுத் திறப்புவிழா அன்று வழிமொழிதலில் கூறியவாறே சென்ற காலத்துச் சமய சந்தான குரவரின் பழுதிலாத் திறனும், இனி எதிர்காலக் குரவர்களின் சிறப்பும் ஒருங்கே வடிவெடுத்து விளங்கும் அந்த சிவரகசியப் பேற்றை அடியார்கள் எல்லாம் சுவானு பூதியில் கண்களிக்கத் திருவுளம் பற்றிய பெருங்கருணையினாலே சபா நாயகமாய் தில்லை மூவாயிரவருள் ஒருவராக ஸ்ரீ நடராஜமூர்த்தி எழுந் தருளி யிருந்ததுபோல் மகாநாட்டின் நான்கு நாளும் மகாசன்னிதானம் நம்மிடையே கொலுவீற்றிருந்து காட்சி யளித்தமையை என்றும் மறவா ஒரு திருக்கோலமாகக் கொண்டு முதலாக வந்தித்து வாழ்த்தி வணங்கு வோமாக.

"ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே", எனவும், "நினது செய் யாமையும் எனது செயலின்மையும்" எனவும், "அவனே தானேயாய் இருவினையில் போக்குவரவுபுரிய ஆணையின் நீக்கமின்றி நிற்கும்" எனவும் ஆன்றோர் அருள்வாக்கிற்கு இலக்கியமாய்ச் சூரியன்முன் தாமரை போல் மகாசன்னிதானத்தின் சன்னிதி மாத்திரையே அனுப்புவித்த திரு முகத்தைச் சிரமேற்கொண்டு நேசித்துப் பூசித்து இங்கு வந்திருந்தும், அவரவர் பணியை இறைபணியாகக் கருதித் தலைமைபூண்டு சிறப்புற நடத்தியும், சொற்பொழிவுகள் ஆற்றி மகிழ்வித்தும், அவைகளைக் கேட்டு இன்புற்றும் உள்ள எல்லா அடியார்களுக்கும் அடியேன் மனமுவந்த நன்றி உரித்தாகுக.

மகாசன்னிதானத்தின் திருவுளப் பாங்கின்படி இம்மகாநாட்டில் "எல்லாம்" இனிதே நிறைவேறி இன்பம் பயக்குமாறு துணைபுரிந்து, தன்னலத்தினும் பிறர் நலமே பொருட்டாக பக்தி சிரத்தை வினயத் துடன் பலரும் புகழ்ந்து போற்ற அருமைத்தொண்டு ஆற்றிய, ஒவ் வொரு திருப்பணியாளருக்கும் அடியேன் உழுவலன்பார்ந்த நன்றி யுரியதாகுக. உவப்பக்கூடி உள்ளப்பிரிதல் புலவர்தொழில் என இத்துணைச் சிறப்புடைய நல்விழாவை இனி என்று காண்போம் என்று

இரங்கும் அடியார்கள் "எல்லாம்" மீண்டும் மீண்டும் இப்பேரானந்தம்
மேன்மேற் பெருகப்பெற அருளுமாறு மகாசந்நிதானத்தின் திருக்
கருணையையும், காழி ஞானப்பிரகாச ஆதிஞானசம்பந்தர் குருவருளையும்,
ஸ்ரீ அங்கயற்கண்ணி பெரியநாயகி அம்மை பாகத்துறையும் அப்பன்
ஆலவாய் அண்ணல் ஆலமர்கடவுள் ஆதிபகவன் தூயா றதலிற் சைவனும்
சொக்கலிங்கப் பெருமான் திருவருளையும் வேண்டி நிற்கும் அடியே
னுடைய பிரார்த்தனையாவது,

"பெருமானே கூடிப் பிரிந்தாலு மங்கைக்
கொருவா தருள்வரமொன் றுண்டே—திருமால்
விடையாய் பகலி விமலா மவுன
விடையாய் பிரியா விடை."

"அறிவைத் திருப்பிநின் பாதாரவிந்த மடையவல்ல
செறியைக் கொடுத்து நிறுத்திலையே நின்மலா விளிவென்
பொறியைத் தவிர்த்துநின் றுணர்ந்த சாகர பூரணத்தைப்
பிறிவற் றிருக்கவைப் பாயெனை யாண்டருள் பிஞ்ஞகனே."

திருச்சிற்றம்பலம்.

என்பதாம். திருமுறைத் திருமகாநாடும் திருநெறித் தமிழ்மறை
இன்னிசையோடும் நல்லிசை முழக்கத்தோடும் இரவு மணி 10-க்கு
இனிது நிறைவெய்தியது.

அதன் பின்னரே பேரன்பர்கள் தங்கள் நித்ய நியமங்களை
முடித்துக்கொள்ளவும் இரவு உணவு அருந்தவும் நேர்ந்தன.

## திருமுறைத் திருவுலாக் காட்சி

சைவசமய பரமாசாரிய மூர்த்திகள் நால்வரின் அழகிய
திருவுருவப் படத்தையும், ஆதீனத்திருமுறை ஏட்டுச்சுவடிகளையும்
வெள்ளி இரதத்தில் மிகுந்த சிறப்புக்களுடன் எழுந்தருளுவித்துக்
கண்பெற்ற பயன்பெற, கவின்செய்யப் பெற்றிருந்தது. இத
னிடையில் திருவருட் குறிப்பினை உணர்த்துவான்போல
வானத்தே கருமுகில்கள் எங்கும் கூடி, சில்லென்று தண்ணிய
சிறு மலர்மழைகளைத் தூவின. எனவே அவ்வேளையில் வெளியே
முகில்கள் தண்மழைதூவ மகாநாட்டு மண்டபத்தின்கண்ணே



ஊர்வலத்தில் எழுந்தருளியான சமய சாத்திர ஏட்டுச்சுவடிகள்.



திருமுறை ஊர்வலம் (31—8—1941)

முன்னர்க் குறிப்பிட்ட தமிழிசைக் கார்முகில் மறை இசை மழை பொழிந்தன. இது சிவநேசப் பேரன்பர்களின் உள்ளங்களாகிய மடைகளிற்றேங்கி கண்களாகிய மதகுகளின் வழியாய் ஆறுகளாகப் பாய்ந்தன. (மறை இசை கேட்ட அன்பர்கள் உள்ளமுருகி பேரானந்தக் கண்ணீர் சொரிந்தனர்.)

இவ்விசையரங்கு விடியற்காலம் 4-மணிக்கு நிறைவுற்றது. உடனே வெடிகள் வாயிலாக திருவுலாக் காட்சியின் நிகழ்ச்சியை ஊரவர்க்கும், ஏனையோர்க்கும் அறிவிக்கப்பட்டது. முகபடாம் அணிந்த மலைகளை ஒத்த இரு வாரணங்கள் முன்னே செல்ல, மகரதோரணங்கள் கவின் செய்ய, எடுபிடிகள் தீவர்த்திகள் வரிசைபெறத் துலங்க, திருச்சின்னங்கள் ஒலிப்ப, ஒளி விளக்குகள் மிளிர, மத்தாப்பு முதலிய பன்னிற ஒளிகள் சுடர்விட, சிவவேடம் பூண்ட மெய்யடியார்களும் பேரன்பர்களும் சூழ, திருநெறித் தமிழ்மறை இசை முன்னே செல்ல, திருவுலாக் காட்சி நிகழ்ந்தது. இத்திருவோலக்கக்காட்சி உலாவில் மக்கள் தத்தம் வீடுகள்தோறும் மகரதோரணங்கள் நாற்றிப் பூரண கும்பங்கள் வைத்து, அணி விளக்குகள் ஏற்றித் தேங்காய், பழம், வெற்றிலைபாக்கு முதலியன வைக்கப்பட்ட தட்டுகளிலே கற்பூர தீபங்கள் காட்டி வழிபாடு யியற்றினர்கள்.

இரதம் நிலைவந்து சேரும்போது மறுநாட்காலை மணி 8. திருமுகப்பில் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னிதானம் வைதீக சம்பிர தாயப்படி திருமுறைவுலாத் திருவோலக்கத்தைச் சேவித்த பின்னர் இத்திருக்காட்சி நிழற்படம் பிடிக்கப்பட்டது.

இதற்குப் பின்பு "சரக்கொன்றை மலரும், பிரணவமும்" எனும் அரும்பொருள்பற்றி அம்மலரைக் காட்சிப் பிரமாணமாக வைத்து, திருமறைக்காடு பிரதோஷ மடத்து அதிபர் சிவத்திரு. **சுப்பையா பட்டாரகர் அவர்கள்** வடமொழி ஆகமங்களிலிருந்தும், பன்னிரு திருமுறைகளிலிருந்தும் பற்பல மேற்கோள்களை எடுத்துக்கூறி அரியதோர் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள்.

திருமுறைத் திருநாள் நிகழ்ச்சிகளின் முடிவுரையாக, திருமுறைத் திருவுலாக்காட்சி, திருமுறைத் திருநாளன்றே நிறைவேறாது சிறு தூறல் முதலியவற்றால், இறைவன் தொடர்ந்து நடக்கச் செய்தமையை உன்னி நோக்கும்போது இத்திருமுறைகளுக்கு முதல் பதிகம் சீகாழியில் திருஞானசம்பந்தப் பெருமானிடம் இருந்து தோன்றிய நேரமும் இப்போது திருமுறை உலாதொடங்கிய விடியற்போதும் ஒன்றேயாம் எனப் பரங்கருணைத் தடங்கடலாகிய பெருமான் நம்மனோர்க்கு உணர்த்துதல் போன்றது எனவும், ஆதீன குருமரபுக்கு மிக உகந்த தினமாகிய குருவாரத்தில் தொடங்கிய மகாநாடு ஆத்மார்த்த பூசைக்கு மிக உகந்த சோமவாரத்தில் முடிவடைந்தது எவ்வகையாலும் இயைபுடையதே எனவும் பல அருங்கருத்துக்களை இனிமையுற தலைவர் சிவக்கவிமணி அவர்கள் சிறப்புரை ஆற்றினார்கள். எங்கும் திருமறை மங்கலஒலி முழங்க, பல்லியங்கள் ஆர்ப்ப திருவுருவ ஓவியங்கள், திருச்சுவடிகள் ஆகியவைகளை ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் ஆலயத்துக்கு எழுந்தருளுவித்து ஆங்கமைக்கப்பட்டுள்ள பீடங்களிலமர்த்தி ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னிதானம் அவர்களால் வழிபாடுகள் செய்விக்கப்பெற்றன. திருநீற்றுப் பிரசாதமும் அன்பர்களுக்கு வழங்கப்பட, "வாழ்க அந்தணர்" தேவாரப் பாசுரம் ஓதப்பெற, திருமுறை ஊர்வலக் காட்சி இனிது நிறைவேறியது. அன்பர்கள் எல்லாப் பேறுகளையும் பெற்றுய்ய வேண்டுமென ஆசீர்வதிக்கு முகத்தான் திருநந்திதேவர் சிவபிரானிடம் அருளுமாறு விண்ணப்பித்துக் கொண்ட பதினாறுபேறு,

1. மறைக ணிந்தனை சைவநிந் தனைபொறா மனமும்[1]
தறுக ணைம்புலன் களுக்கேவல் செய்யாச் சதுரும்[2]
பிறவி தீதெனப் பேதையர் தம்மொடு பிணக்கும்[3]
உறுதி நல்லறஞ் செய்பவர் தங்களோ டுறவும்[4]

2. யாது நல்லன்பர் கேட்கினு முதவுறு மியல்பும்[5]
மாத வத்தினே ரொறுப்பினும் வணங்கிடு மகிழ்வும்[6]
ஓது நல்லுப தேசமெய் யுறுதியு[7] மன்பர்
தீது செய்யினுஞ் சிவச்செய லெனக்கொளுந் தெளிவும்[8]

3. மனமும் வாக்குநின் னன்பர்பா லொருப்படு செயலும்[9]
கனவி லும்உன தன்பருக் கடிமையாங் கருத்தும்[10]
நினைவில் வேறொரு கடவுளை வழிபடா நிலையும்[11]
புனித நின்புகழ் நாடொறு முரைத்திடும் பொலிவும்[12]

4. தீமை யாம்புறச் சமயங்க ளொழித்திடுந் திறனும்[13]
வாய்மை யாகவே பிறர்பொருள் விழைவுறா வளனும்[14]
ஏமு றும்பர தாரநச் சிடாதநன் னேண்பும்[15]
தூய்மை நெஞ்சின்யா னெனதெனுஞ் செருக்குறாத் துறவும்[16]

5. துறக்கமீ துறையினு நரகிற் றேய்க்கினும்
இறக்கினும் பிறக்கினு மின்பந் துய்க்கினும்
பிறைக்கொழுந் தணிசடைப் பெரும விவ்வரம்
மறுத்திடா தெனக்குநீ வழங்கல் வேண்டுமால்.

6. துதிவாணி[1] வீரம்[2] விசயம்[3] சந்தானம்[4] துணிவு[5] தனம்[6]
மதி[7] தானியம்[8] சவுபாக்யம்[9] போகம்[10] அறி[11] வழகு[12]
புதிதாம் பெருமை[13] யறந்[14] குல[15] நோயல் பூண்வயது[16]
பதினாறு பேறுந் தருவாய் **மதுரைப் பராபரனே.**

திருச்சிற்றம்பலம்.

என அடங்கிய துண்டுத்தாள்கள் வழங்கப்பெற்றன.

இங்ஙனமாக இனிது பூர்த்தியான திருமுறைத் திருநாளின் சிறப்பை எங்கும் சிவமணமும், தமிழ்மறை இசை மணமும் வீசுகின்றதென அறிஞர்கள் பாராட்டிப் புகழ்ந்து, "யாம் பெற்ற இன்பம், பெறுக இவ்வையகம்" என்ற தொல்லாணை நல்லாசிரியர் முதுமொழியை எண்ணி இக்கூட்டத்துள் கலந்து கொள்ள இயலாத ஏனைய பெருமக்களும் பெற திருவருள் சுரப்பதாக என மொழிந்து வாழ்த்தினர்.

•

கடல்சூழ் புவிக்கே சோபனம்!
மறை வாணர்க்கே சோபனம்!
சைவ சமயத்திற்கே சோபனம்!
சுப சோபனம்! சுப சோபனமே!!

நலம்! நலம்!! நலம்!!!

# பாராட்டு

திரு. தெ. ச. சு. சோமசுந்தரம், அமைச்சர்,
சைவசித்தாந்த சபை, தூத்துக்குடி,
25—8—41

* * * மகாநாட்டின் நிகழ்ச்சிகள் இனிது நிறைவேறும் வண்ணம் திருவருள் பாலிக்க ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் பொன்னடிக் கமலங்களை இறைஞ்சுகின்றேன்.

திரு. V. திருவரங்கம் பிள்ளை, தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி.
25—8—41

* * * மகாநாடு சிறப்பாய் நடைபெற எல்லாம்வல்ல பிரானை வேண்டுகிறேன்.

திரு. A. கணபதி பிள்ளை, கரந்தைத் தமிழ்ச்சங்கம், தஞ்சை.
28—8—41

* * * Karanthai Tamil Sangam pays respects to Mahasannidhanam and wishes all success to Meikandar Siddhanda Mahanadu. (Telegram)

திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை, காரியதரிசி,
சென்னைமாகாணத் தமிழ்ச்சங்கம், திருநெல்வேலி.
29—8—41

* * * மகாநாடு வெற்றிகரமாக நடைபெறுவதாக.
* * *

திரு. P. A. C. ராமஸ்வாமி ராஜா, ராஜபாளையம்.
28—8—41

* * * நமது ஆதீனங்களிலிருந்து ஞானத்தைப் பக்த கோடிகளுக்குப் புகட்டும்படியான ஏற்பாடு சன்னிதானங்கள் மூலமாக ஆரம்பித்ததும் மற்ற ஆதீனங்களுக்கும் மதசம்பந்த பரிபாலன ஸ்தாபனங்

களுக்கும் ஒரு வழிகாட்டியாக நமது ஆதீனம் முன்னேறி வந்ததும் நமக்கு மிகுந்த குதூகலத்தை அளிக்கிறது. இந்த மகாநாடு எப்பொழுதும் நீடுழி சிறப்புடன் நடந்தேறி, தற்காலத்திலுள்ள அஞ்ஞானத்தை போக்கி, ஞானஒளிவீசி, பக்தகோடிகளெல்லாம் க்ஷேமமாய் வாழ ஞான சொக்கனுதன் திருவருள் சித்திக்கவேணுமென்று சதா பிரார்த்திக்கின்றேன்.

திரு. வ. சுப்பையா, திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை.
30—8—41

எல்லாம்வல்ல சிவபெருமான் திருவருளால் ஸ்ரீ மெய்கண்டான் மகாநாடு மிகவுஞ் சிறப்பாக நடைபெற்று வருகிறதென நம்புகிறேன்.
* * *

ஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான ஞானியார் சுவாமிகள்,
திருக்கோவலூராதீனம். திருப்பாதிரிப்புலியூர்.
28—8—41

* * * ஆதீனங்கள் செய்யவேண்டிய இச்செய்கையைப் பல காலமாகத் தமிழ்நாடு எதிர்பார்த்தது. தருமபுர ஆதீனம் முற்பட்டது. தமிழ்நாடு பொதுவாக, சைவமக்கள் சிறப்பாக நலம் பெறுகிறார்கள். இம்மகாநாடு நன்கு நடைபெற முருகப்பிரானை இறைஞ்சுகின்றோம்.

Sri T. M. Narayanaswami Pillai, M. A., B. L.,
President, H. R. E. Board, Madras.
29—8—43

* * * Wish conference all success under Sannidhanams inspiring guidance and Commissioner's enlightened presidentship. (Telegram)

சிவ ஸ்ரீ ச. குமாரசாமிக் குருக்கள், மானேஜர்
ஸரஸ்வதி வித்யாசாலை, அச்சுவேலி, யாழ்ப்பாணம்.
24—8—41

* * * சித்தாந்த மகாநாடு சிறந்த முறையில் நடைபெற வேண்டுமென்று சிவபெருமான் திருவருளைப் பிரார்த்திக்கின்றேன்.

*  *  * நாஸ்திகமே மிகுந்து சிவதரும வழியில் மதி செல்லாது தடுமாறும் இக்காலத்தில் தாங்கள் வைதிக சைவத்தின் பொருட்டு மகாநாடு கூட்டி சிவஞானப் பயிரை வளர்க்க முன்வந் தமைக்கு நாமெல்லாம் பெருநன்றி யுடையேம். இந்த மகாசபை எல் லாம்வல்ல இறைவனருளால் சிறந்த பிரசாரமாக நிறைவேற வேண்டு மென்பது நமது பேரவா.

மகாநாடு வாழ்க! தருமை ஆதீனம் வாழ்க! சிவனடியார் கூட்டம் வாழ்க! மகாநாட்டிற் பங்குபற்றிய அன்பர்கள் சமஸ்தரும் வாழ்க!

### Hon'ble Dr. P. Subbarayan, Esq.,
### (Minnister for Education for Madras) Triuchengodu, Salem Dt.
*27—8—41*

*  *  * I am sure the Conference will be a success and the lectures on the various days will be inspiring and will help to develop the interest in the Saiva agamas.

### தக்ஷிணாத்யகலாநிதி, மகாமகோபாத்யாயர், டாக்டர்
### உ. வே. சாமிநாதையர் அவர்கள்,
### திருவேட்டீஸ்வரன்பேட்டை, சென்னை.
*26—8—41*

*  *  * தெய்வபக்தியும் சைவசமயப் பற்றும் பல காரணங் களால் குறைந்துவரும் இக்காலத்தில் ஸந்நிதானம் மனமுவந்து முன்வந்து ஜனங்களுக்குச் சைவசமயத்திலும், சமய நூல்களிலும் உண்மை யுணர்ச்சி யுண்டாகும்படி ஒரு சிறந்த மகாநாடு அவ்விடம் மடாலயத்தில் நடைபெறும்படி ஏற்பாடு செய்து, தக்கோர்களைத் தேர்ந் தெடுத்து ஒவ்வொருநாளும் அவர்கள் சைவசமய சம்பந்தமான சிறந்த விஷயங்களை உபந்நியாசம் செய்யவும், சிவஞானபோதத்தின் கருத்துக் களைத் தெளிவுபட உரைக்கவும் நல்லமுறையில் அமைத்திருப்பது சைவாபிமானிகள் யாவராலும் மிகவும் பாராட்டத்தக்கது. *  *  * எனக்குத் தெரிந்தவரையில் இத்தகைய மகாநாடு இதுவரை கூட்டப் பெற்றதில்லை. ஆதலின் இது தனிச் சிறப்புடையதாகும்.

மகாநாடு செவ்வனே நடைபெறும்படிக்கும் சந்நிதானத்தின் திரு வுளப்பாங்கின்படியே எல்லாம் இனிது நிறைவேறும்படிக்கும் செய்வித் தருளும்வண்ணம் ஸர்வேசுவரனைப் பிரார்த்திக்கின்றேன்.

### Sri S. Muthiah Mudaliar, C. I. E., Madras.

*28—8—41*

* * * Wishing successful conference. (Telegram)

### செட்டிநாடு டாக்டர், ராஜா சர். மு. அ. அண்ணாமலைச் செட்டியார் அவர்கள்.

*24—8—41*

* * * மகாநாடும் சிறப்பாக நடைபெறவேணுமாய்க் கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

### செட்டிநாடு குமாரராஜா, சர். மு. அ. முத்தய்யா செட்டியார் அவர்கள்.

*28—8—41*

* * * மகாநாடும் சிறப்பாக நடக்கவேணுமாய்ப் பிரார்த்திக்கின்றேன்.

### A. S. P. Ayyar, M.A., I.C.S., F.R.S.L., Esq., (Bar-at-Law) District Judge, Vellore.

*28—8—41*

* * * I wish this great religious conference all success. "I am neither earth nor water, nor fire, nor air, nor either, nor sensory organ, nor the conglomeration of all these, for all these are transient. I am He that alone remains in dreamless sleep, the One without a Second, the Uncontradicted, the Attributeless Siva. I recognize no caste, or caste rules. Nor are mere concentration, meditation, yoga and other practices of any use by themselves. This illusion of "you" and "I" must dissolve in the Non-Self, by knowledge of the Self. I am the One without a Second, the Uncontradicted, the Attributeless Siva. I am neither Father nor Mother, nor the gods, nor the Smritis, nor the Vedas, nor sacrifices nor holy places. I am existence and non-existence combined. I am the One without a Second, the Uncontradicted, the Attributeless Siva."

(Dasa Sloki)

Sri Thomus aroul, President, French Legislature, Karikal.

*30—8—41*

* * * May god give full success for the Tamil Siddhantha Conference. Respects. (Telegram)

Sri S. Satyamurti M. L. A., (Central) Thyagarajanagar.

*26—8—41*

* * * தங்கள் மகாநாடு வெற்றிகரமாயும், சிறப்பாயும் நடைபெற வேண்டுகிறேன்.

திரு. C. N. முத்துரங்க முதலியார் M. L. C., நசரத்பேட்டை. (முகாம்)

*27—8—41*

* * * தமிழை வளர்க்க ஆதீனம் செய்துவரும் முயற்சிகளைக் காண மகிழ்ச்சியடைகிறேன். மகாநாட்டு ஏற்பாடுகளும் நிகழ்ச்சி முறையும் நன்ருகவே அமைக்கப்பட்டிருக்கின்றன. மகாநாடு இனிது நடைபெற வேண்டுகிறேன்.

Sri K. S. Jayarama Aiyar, Advocate, Mylapore.

*28—8—41.*

* * * I wish the Conference success. Such enterprises of the Mutt will certainly enhance the reputation of the Institution, and immensely help the propagation of Saiva Siddhanta Philosophy.

Sri T. M. Krishnaswami Aiyar B.A., B.L., Advocate, Mylapore.

*27—8—41.*

* * * தங்கள் அன்பு ததும்பிய கடிதம் கிடைத்தது. தங்கள் இஷ்டம் பூரணமாக சித்திக்கவேண்டும். முருகன் கருணையால் சிவானந்தப் பெருவாழ்வில் நான் தேங்கவேண்டும். * * *

Sri S. Satchidanandam Pillai, B. A., L. T.,
Deputy Director of Public Instruction, Madras.

*30—8—41*

* * * சுவாமிகள் நெடுங்காலமாகச் சைவசமய வளர்ச்சி குறித்து நீள நினைந்துள்ள பேரெண்ணங்கள் பல நடைமுறையில் நிகழ்தற்குத் திருவருள் துணைசெய்ய முற்பட்டுள்ளது என்று நம்புகின்றேன். காலத்தின் தேவையை உணர்ந்து சமயப் பணி புரிய அருள் சுரந்திருக்கும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னிதானத்திலிடத்து மிக்க நன்றியுடையவனாயிருத்தல் வியப்பன்று.

Sri S. Subbaraya Mudaliar, Shiyali.

*28—8—41*

* * * மகாசன்னிதானம் இவ்வளவு சிரத்தையுடன் நடத்தும் மகாசபை செவ்வனே நடந்து முடிவுபெற எல்லாம்வல்ல சிவபெருமானைப் பிரார்த்திக்கிறேன்.

Sri G. Ramanuja Mudaliar, Chairman Municipal Council,
Tiruvarur

*27—8—41*

* * * I wish all success to the Conference.

Sri K. Manathunainatha Desigar B. A., Valivalam, Tanjore Dt.

*27—8—41*

* * * சைவசமயமே உலகிற் சிறந்த சமயமாகுமென ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். அச்சமயம் அன்பையும், அறத்தையும் அடிப்படையாகக்கொண்டது. அச்சீரிய சமயத்தைப் பின்பற்றும் மக்கள், அச்சமயத்தின் உண்மையினை அறியாமல், இருந்து வருகின்றனர். அத்தகையோரைத் தெருட்டி நன்னெறியில் உய்க்கவேண்டியது தங்கள் போன்ற சமயாசாரியார்களின் கடமையாகும். இம்மகாநாடு, ஏனைய மகாநாடுகள்போல், கூடிக் கலைவதோடு நின்றுவிடாமல், ஆக்கவேலைக்குரிய திட்டம் வகுத்து, பொதுமக்களிடையே சைவசமயப் பற்றை நிலைபெறச் செய்யவேண்டிய நெறியினைப் புகட்ட அடிகோலுவீர்களாக. சமையப்பற்று மக்களிடையே செல்வாக்கு இழந்துவரும் இந்நாளில், இத்தகைய மகாநாடு இன்றியமையாததாகும். மகாநாடு இனிது நடைபெறக் கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

Sri K. K. Sundaram Aiyar, President Negapatam Circle Temple Commitee, Negapatam.

*26—8—41*

It is really praise-worthy that His Holiness has come forward to convene this great Conference, probably the first of its kind and thus fulfilling the fundamental and primary objects of the foundation. I am glad also that the H. R. E. Board President and Commissioners are partaking in these functions and that they also realise that their duty does not end with the supervisory jurisdiction. If these Mutts and the Commisioners will but work together to expound the great truths of the various sects in compartmental co-ordination without conflict that would have certainly jnstified their existence. I see the dawn of the renaissance in rich co-operation. I wish the conference all success.

சித்தாந்த ஆசிரியர், திரு. ந. சிவகுருநாத பிள்ளை, தூத்துக்குடி.

*25—8—41*

* * * தேவரீரவர்கள் ஆதீனத்தின் சார்பாக "மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு" கூட்டத் திருவருள் பாலித்திருப்பது பற்றிக் களிபேருவகை யடைகின்றேன். சித்தாந்த சைவம் இறைவன் திருவருள் முழுதும் விளங்கப்பெற்றதாகவும், வித்தகச் சித்தர் கணங்களால் கைக்கொள்ளப்பெற்றதாகவு முள்ள உண்மைச் சைவமாதலின் என்றும் அழிவுபெறுதன்றே? ஆதலின் தேவரீரவர்கள் திருவருட் பெருக்கால் இப்பொழுது மீண்டும் புத்துயிர்பெற்று எழப்போவது கண்டு சைவ உலகம் மிகவும் விம்மித மடைகின்றது. மகாநாடு எல்லாவகையானும் சிறப்புற்று இனிது நிறைவேறும் வண்ணம் எல்லாம் வல்ல ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் அருள்புரிவாராக.

Dewan Bahadur, Sri K. S. Ramaswami Sastrigal,
District & Sessions Judge (Retired), Royapettah.

*27—8—41*

* * * சிவநேசச் செல்வர்கள் தேசபக்தர்கள் திவான் பகதூர் T. M. நாராணசாமி பிள்ளை அவர்களும், ராவ்பகதூர் C. M. ராமச்சந்திரன் செட்டியார் அவர்களும் தலைமை வகிக்கும் மகாநாடு மிகச் சிறப்புள்ளது. இம்மகாநாடு நன்ருக நடைபெற திருவருளைக் கோரு கின்றேன்.

திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை M. A., M. L., அண்ணமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத் தலைவர், அண்ணமலைநகர்.

*23—8—41*

* * * மகாநாடு சிறப்பாக நடைபெறுகிறதைப் பற்றி மகிழ்ச்சி யடைகிறேன்.

Sri F. G. Natesa Aiyar, Retd. D. T. S., (S. I. Ry.)
Woriur P. O.

*30—8—41*

* * * மகாநாடு சிறப்பாய் நடக்கவேண்டுமென்பது என் பிரார்த்தனை. அதற்கு ஏற்பாடு செய்த ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னி தானத்திற்குத் தமிழ்நாடு மிகவும் கடமைப்பட்டுள்ளது. மகாசன்னி தானம் திருச்சிராப்பள்ளிக்கு முன் விஜயம் செய்த சமயம் எனக்குப் பரிச்சியம் சிறிதளவு உண்டு. அன்று அவர்களிடம் நான்கண்ட தெய்வீக உற்சாகமும், அதுமுதல் பற்பல புனிதமான விஷயங்களில் மடத்தில் எடுத்திருக்கும் போற்றத்தக்க சிரத்தையும், என்மனதை ஆகர்ஷித்திருக் கிறது. இப்போது நடத்தப்படும் இம்மகாநாடு ஒரு சிகரம் போலாகிறது. இதன் மூலம் நமது சிறுவர்கள் சிறுமிகள் சைவசித்தாந்த அடிப்படை விஷயங்களைப் பள்ளியிலும், வீட்டிலும் படித்து அறியுமாறு ஒரு சிறு புஸ்தகம் எளிய நடையில் (Catechisim) பிரசுரித்து (கிறிஸ்தவப் பாதிரிகள் செய்வது போல்) குறைந்த விலையிலோ அல்லது இனமாகவோ வழங் கினல் நமது ஹிந்து சமூகத்திற்குப் பெரும் பலனளிக்கும் என்பது என் அபிப்பிராயம். மகாநாட்டின் அங்கத்தினர்களுக்கும ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னி தானத்திற்கும் என் அன்புநிறைந்த வணக்கத்தைச் சமர்ப்பிக்கிறேன்.

Sri P. A. C. Ramaswami Raja, Rajapalayam.

*29—8—41*

* * * Wish the Conference success. (Telegram)

Sri Avudayappa Pillai B. A., Deputy Collector, Trichinopoly.

*29—8—41*

* * * Wish Mahanadu all success * * * (Telegram)

Rao Bahadur Dr. T. S. Tirumurti, B.A.,M.B. & C.M., D.T.M. & H., Civil Surgeon (Retired), Nungumbakam.

*29—8—41*

* * * My best wishes for the success of the celebrations arranged in connection with the Mahanadu.

Sri Sivangnana Mudaliar, B. A., Trichy.

*29—8—41*

* * * Wish conference every success. May the atheenam be ever storehouse of knowledge and truth and be disseminator of such not only to South India but also world at-large. (Telegram)

Rao Bahadur, Sri Avudayappa Pillai, Advocate, Tinnevely.

*30—8—41*

* * * Praying success Siddhantha Conference. (Telegram)

Sri Gopaulrau, Tanjore.

*29—8—41*

* * * Wishing you success prosperity Meikandan Conference. (Telegram)

Sri. M. R. Jambunathan, Editor Vedas & Upanishads in Tamil, Bombay.

*29—8—41*

* * * ஒரு காலத்தில் சுமார் 2000-வருஷம முன்னர் மொஹன்சொ-தாரோவில் சிவமதமிருந்ததாக அறிகிறேம். இப்போது மெக்கா எனச் சொல்லப்படும் மகம்மதியர் திவ்யஸ்தலம் ஒரு சமயம் சிவன்கோயிலாயிருந்தது. அங்கு இப்போது யாத்திரிகர்களால் முத்த மிடுங் கருப்புக்கல் அக்காலத்திலிருந்த சிவபிம்பமாக சில ஐரோப்பிய சரித்திராசிரியர்கள் கூறுகிறுர்கள். ஆதியில் மகம்மதியர்கள் சைவர்களா யிருந்தார்கள். அவர்கள் இப்போது அநுசரித்துவரும் 'இரம்சான்' என்னும் நோன்பு சாந்திராயண விரதத்தின் ஒரு விகாரமே. அமெ ரிக்காவிலும் சிவமதமிருந்ததாக மிஸ்டர் சமன்லால் சொல்லுகிறுர். இண்டோ சைஞ முதலிய பழைய நாடுகளிலும் சிவமயமோங்கிற்று. உலகமெல்லாம் ஒரு காலம் பரவியிருந்த சைவம் இப்போது படுத்துச் சயனஞ் செய்கிறது. ஆனல் அதைத் தட்டி எழுப்பி மறுபடியும் அச்சூரியனைப் பிரகாசிக்கச் செய்யத் தாங்கள் செய்யும் பணி உலகத்திலே ஒரு பெரிய யுகத்தைத் தோற்றுவிக்கும். அதற்கு அடிப்படையாக தாங்கள் ஆரம்பஞ் செய்த மகாநாடு வெற்றியுடன் நடைபெறவேண்டு மென ஈசனைப் பிரார்த்திக்கிறேன்.

Sri. M. K. Vaidyanatha Aiyar, B. A., B. L., Kumbakonam.

*28--8—41*

* * * இம்மாதிரி சைவசித்தாந்த மகாநாடு நடப்பதும் அதில் பல இடங்களிலிருந்து பண்டிதர்கள் சைவ மடங்களில் முக்கியமான மடங்களில் கூடுவதும் ஈசுவரனை மறந்து மனம்போன போக்குப்படி வரம்புகளில்லாமல் நடக்கும் இக்காலத்திற்கு மிகவும் அவசியமானதே. இது ஸ்ரீ-ல-ஸ்ரீ சன்னிதி அவர்களின் ஆதரணையின் கீழ் தங்கள் எல்லோருடைய பார்வையிலும் அழகாய் நடைபெறுமென்பதில் என்னைப்போலொத்தவர்களுக்கு மிகவும் ஸந்தோஷம் விளைவிக்கிறது.

Sri V. Ramachandra Aiyar, B. A., L. T.,

Deputy Inspector of Schools, Saidapet.

*28—8—41*

I am happy to hear of the great celebrations and Conferences to take place there this week. Though I cannot be there to

take part in them my heart is with you all and I wish success in your laudable efforts to revive our religion and revitalise our peoples' life with nobler and higher ideals through such celebrations and Conferences. I am particularly proud that the turning point for beneficient influence should be under the generous direction of our present Holiness to whom I would request you to convey my best appreciation, thankfulness, aud congratulations.

Once again paying my humble tribute of praise for the religious foundations and the great work they are carrying on.

**Sri V. P. Narayana Nambiar, Executive Officer, Tiruvarur.**

*30—8—41*

* * * Wish Conference complete success. (Telegram)

**Sri Ramalinga Naidu, Executive Officer, Rock Fort Devasthanam, Trichinopoly.**

*30—8—41*

* * * தங்கள் முயற்சி வெற்றியடையவேண்டி ஸ்ரீ தாயுமான ஈசரைப் பிரார்த்திக்கிறேன். தங்களுக்கு என் மனமார்ந்த வந்தனம்.

**Sri R. Sundaralingam, Advocate, Mylapore.**

*30—8—41*

* * * எல்லாம் சரியாகவும், ஆதீனத்தின் கீர்த்தி யோங்கவும், தாங்கள் யாவராலும் போற்றப்படும்படியாகவும் நடக்கும் படி இறைவனை வேண்டுகிறேன்.

**Sri K. V. Jagannathan, Editor "Kalaimagal" Mylapore.**

*28—8—41*

* * * சைவமும் தமிழும் தழைத்தினிதோங்குவதற்கு ஏற்ற முயற்சி இது. சந்நிதானத்தைப்போன்ற தகுதியும் பொருள் நலமும் உடையவர்கள் இத்தகைய செயலை மேற்கொண்டு தமிழைவளப் படுத்தினால் உலகுக்கு பேருபகாரமாக இருக்கும்.

எங்கும் இத்தகைய மகாநாடு நடந்ததாகத் தெரியவில்லை. தனிச் சிறப்புடைய இதனை நடத்தத் திருவுள்ளங்கொண்ட சந்நிதானத்தின் விருப்பப்படி சைவசித்தாந்தமும் தமிழும் தனித்துயர்ந்து சிறக்கும் என்று நம்புகிறேன்.

## ஸ்ரீ S. ரெங்கசாமிப் பிள்ளை வக்கில், விருத்தாசலம்.

*27—8—41*

* * * ஆதீனத்தில் சித்தாந்த மகாநாடு நடைபெற ஏற்பாடு செய்தது மிகவும் ஆனந்தத்தை உண்டுபண்ணுகிறது. சமீப காலமாய் நம் சைவசமயம் மறைபட்டிருக்கிறதை இப்போது தட்டி எழுப்புவதுபோல் இருக்கிறது.

## Professor Sundaram, Tinnevelly.

*28—8—41*

* * * Pray almighty success Siddhantha Mahanadu. (Telegram)

## ஸ்ரீ வீர. சாமிநாதன், அன்பு நிலையம், காரைக்குடி.

*27—8—41*

* * * அழைப்பு இதழ்கள் நிலைய அன்பர்களுக்கு அனுப்பக் கொடுத்திருக்கிறது. திருநாள் சிறப்பெய்துக!

## Guhadas Sri S. V. Nataraja Iyer, Sengalipuram.

*28—8—41*

* * * மகாநாடு பகவதர்ப்பணமாகவும், சாந்தமாகவும் நடைபெறவும், மகாநாட்டுக்கு வருகிற ஸமஸ்த பக்தர்களும், மகாநாட்டில் பெரியோர்களினால் உபந்நியசிக்கப்படுகிற உத்தம விஷயங்களை நம்பிக்கையுடன் அநுபவத்துக்குக் கொண்டுவரவும் அதன் வாயிலாக இஹபர க்ஷேமங்களை ஹ்ருதய பூர்வமாகப் பரம்பொருளைப் பிரார்த்திக்கின்றேன்.

### Sri V. Ragavachari, B. A., B. L., Advocate, Tiruvarur,
29—8—43

* * * மகாநாடு மிகவும் சிறப்பாய் நடந்து மடத்திலுடையவும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சந்நிதானத்திலுடையவும் பெருமை மேன்மேலும் விருத்தியாகும்படிச் செய்ய வேணுமாய் ஈசனை எப்போதும் பிரார்த்திக்கிறேன்.

### திரு. க. பொன்னையா பிள்ளை, சென்னை சர்வகலாசாலை.
*28—8—1941*

* * * எல்லாம வல்ல இறைவனின் அருள்கொண்டு சிறப்புற்றோங்க மனமாற சிந்திக்கின்றேன்.

### திரு. நா. தணிகைஅரசு, வள்ளலார் இல்லம், வாலாஜாபாத்.
*28—8—1941*

* * * அடியேங்களது இல்லம் தமிழ்நாட்டுக் குழந்தைகளின் தமிழ்மொழி வளர்ச்சிக்கும் சைவசமய உயர்வுக்கும் தொண்டாற்றுவது. எங்கள் இல்லத்தில் 300 குழந்தைகளின் சார்பில் தங்கள் திருவுள்ளத்தின் குறிப்பின்வழி நடாத்தப்பெறும் மாநாடு பெருஞ் சிறப்புடனும் பயனுடனும் நிறைவேற எங்கும் நிறைந்து யாவற்றையுமியக்கும் அருளுருவினனை அம்பலவாணரின் அடிமலர்களைப் பரவிப் பணிகின்றனன். தங்கள் சிவத்தமிழ்ப் பணிக்கு வணக்கம்.

### Sri P. G. Subramanya Iyer, B.A., Tanjore.
*8—9—41*

* * * நிகழ்ச்சி முறையைப் பார்க்க என்மனதில் அளவில்லாக் களிப்பு உண்டாயிற்று. ஏக காலத்தில் சிறந்த வித்வான்களை அழைத்து அவர்களை ஆதரித்து அவர்கள் சொற்பொழிவைக் கேட்பதற்கு எவ்வளவோ பாக்கியம் செய்திருக்கவேண்டும். அவர்களை ஒன்றுகூடி கூட்டுவது சாதாரண விஷயமல்ல. விசேஷ சிரத்தையும் செலவும் ஆகவேண்டிவரும். முன்னாளில் அரசர்களால் இது சாத்தியமாக விருந்தது. தற்காலம் அவர்களுக்குப் பதில் ஸந்நிதானத்தால் இது ஆகக்கூடிய காரியமே தவிர வேறில்லை. வித்வான்கள் கூட்டத்தை இந்திரசபைக்கு ஒப்பிட்டிருக்கிறார்கள். அவர்கள் சொற்பொழிவு **(விஷயங்கள்)** ருசியாக இருக்கும்.

Sri P. K. Lakshmanayyah, Engineering office, Kumbakonam.

*29—8—42.*

சைவ ஞான உண்மைகளைப் பரப்புவது சென்ற ஜென்மப்பயனால் கிடைத்த தங்களைப்போன்ற உத்தமஞானிகளின் பணியேயன்றி வேறு யாவருளர். எல்லாம் வல்ல ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானின் திருவருட் செயல். மகாநாடு செவ்வனே நடைபெறுமாறு நம் ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் திருவருள் பாலிப்பாராக.

Sri A. Appulingam, Sekkelar Illam, Tiruvanaikoil

*29—8—41*

காம மென்ற கலையை எடுத்தான்
நாம நாற்றினை நட்டு வளம்பெற
நேம நீரை நிறப்பிடு மெங்குரு
சோம சுந்தர சுத்தமெய் ஞானியே — 1

துன்ப இன்பத் துடக்கறு தாயனே
முன்பு தாங்கள் முடித்து அனுப்பிய
அன்ப ழைப்பை அடைந்தனன் காணவு
மின்ப முற்றது என்மன முண்மையில் — 2

இருமை நீங்கி இறைவனைச் சேர்ந்திடும்
பெருமை கொண்டு பிறங்கிடுஞ் சைவர்தங்
குருமை கொண்டரன் கோயில் கொளுந்திருத்
தருமை யென்ற தமிழ்வளர்ப் பண்ணையில் — 3

சைவ நன்னெறி சாற்றிடும் பண்டையத்
தெய்வ நூல்கள் தெளிந்தவர் சொன்மழை
பெய்வ தற்குமிப் பேருல கேற்றதால்
உய்வ தற்கு முதவிடக் கொண்டதன் — 4

நாட்டத்தால் மகா நாடென ஒன்றினைக்
கூட்டுந் தங்கள்நற் கொள்கை உருப்பெற
மூட்டு விக்கும் மயங்கு விக்கு மெலா
மாட்டு விக்கு மரன் துணையாகவே — 5

தருமையில் மடந் தன்னிடை வந்துளத்
திருமைப் பாச விருண்மலம் போக்கிய
பெருமை கொண்டநும் பேருளம் முன்னினுல்
அருமை என்ப தவனியி லேதுபின் 6

வங்க நாட்டிலோர் வாலிபன்|| தோன்றியே
சிங்க ஏறெனச் சென்று வுலகெலாந்
தங்கள் தர்மந் தனை‡ எடுத் தோதவும்
எங்கணு மது பொங்கிடக் கண்டவர் 7

"வங்கம் போல இவ் வண்டமிழ் நாட்டினில்
எங்கும் வாலிபர் இல்லைகொ லோ"வென
இங்குளேனென் றெழுந்துமுன் னேவரு
எங்குரு சிவ சண்முக தேசிகன் 8

தாளிணைக்கு என் தாட்சிகள் சொல்க. இன்
னுளி லவ்விடம் நானு மிருந் தறி
வாளிகள் பலர் வந்துரைக் கும்மொழிக்
கேளும் பாக்கிய கிட்டில தென்செய 9

Vidwan, Muthyyan, Karanthai, Tanjore.

*29—8—41.*

* * * Pray Conference success. (Telegram)

பண்டித ஸ்ரீ மு. நடேசமுதலியார், திரிசிரபுரம்
மலைக்கோட்டை.

*29—8—41*

* * * அவ்விடத்திய பெருமுயற்சியால் நடைபெறும் ஸ்ரீ மெய்கண்டான் சித்தாந்த மகாநாட்டின் மாண்பெல்லாம் தெரிந்து இன்புறுகின்றேன். நேற்று மகாநாடு தொடங்கப்பெற்றிருக்குமென்றும் அன்பு நிறைந்த அறிஞர்கள் குழுமி யிருப்பார்களென்றும் எண்ணுகிறேன்.

---

|| விவேகாநந்தர். ‡ வேதாந்த மதம்.

Vidwan V. Sivakkolundu, Ukkadi.

*29—8—41*

* * * சைவமும் தமிழும் தழைத்தினிதோங்க அம்மையப்பரை வழுத்துகிறேன். மகாநாடு இனிது நிறைவேற சொக்கலிங்கப் பெருமானைத் துதிக்கின்றேன். மெய்கண்ட தேவன் திருவடி வாழ்க.

பண்டிதரத்னம். புழலை குக ஸ்ரீ திருநாவுக்கரசு முதலியார், செம்பியம்.

30—8—41.

சீரணியும் பொன்னிநதி வயப்பெருக்கா லுலகூட்டுஞ் சீர்மைத்தாய
பேரணியும் புண்ணியநற் சிவநெறிக ளொருங்கமையப் பெற்றுநாளும்
நாரணியுஞ் சமயவளர்ச் சிக்குரிய மடங்களமர் நாட்டின்மேலாம்
வாரணியுஞ் சோழவள நாட்டிலுயர் முதன்மைபெறு மடமென்பாரால். 1

கஞ்சமலர் சொறிதேற லுண்டநுணல் தேக்கெடுக்குங் கழனிசூழ்ந்த
மஞ்சுதவழ் பொழிலுடுத்த மணிமாட நிறைவீதி மகிழ்மீக்கூரத்
தஞ்சமென வந்தடைவார்க் கஞ்சலென வருள்சுரக்குந் தகைமைசான்ற
நஞ்சறியும் பரமரருட் டிருக்கோயில் வலம்வருவார் நாடுந்தெய்வ. 2

பண்ணிறைந்த பாவினங்க ளெவ்வளவோ கோடியெனும் பண்பின்மிக்க
உண்ணிறைந்த மெய்ஞ்ஞானப் புலமைமிகுந் துயரியதோ ருவப்பத்
[துய்க்கும்
எண்ணிறந்த அறிஞரெலாங் கணக்கிறந்த விற்றவரை யிறும்பூதெய்தும்
தண்ணிறைந்த சிவசமய மணங்கமழு மினியதமிழ் சார்பிற்றோய்ந்த. 3

தன்னிகரிற் சைவத்துல் லியராகுந் தெய்விகத் தன்மைவாய்ந்த
பன்னரிய புராதனநற் றருமபுரத் தாதீனப் பரிவைநல்கும்
தென்னமருஞ் சிவானுபவச் செல்வரெலாம் வதிதருநற் சீர்கண்மிக்க
மன்னுதிருக் கயிலாய பரம்பரையா தீனமெனும் மாண்புற்றோங்கும். 4

அத்தகைய பெருமடத்துச் சுத்தாத்து விதசைவ சித்தாந்தத்தின்
உத்தமநற் கொள்கையெலா நனிதிரட்டி யுதவியதோ ருத்தபோதப்
பத்திமிகு மெமதுசிவா சாரியராங் குமரகுரு பரசுவாமி
சத்தியசம் பந்தசர ணாலயரா தியர்வளர்த்த சன்மார்க்கத்து. 5

எத்திசையும் புகழ்பரவுஞ் சிவசமய நெறிபிறழா திருநிலத்திற்
சித்தமகிழ் விக்குமுயர் தபோதனர்பொற் கழலேநிதஞ் சிந்தித்தேத்தும்
முத்திநெறிக் கானசிவ பூசைவழி பாடியற்றி முதியோராகும்
சுத்தசிவ மெய்யடியார்க் குபதேசஞ் செய்தருளுந் தொன்மைசான்ற. 6

துண்டமதிச் சடைப்பரமன் றந்தகுரு நாதனடி துதித்துவாழும்
பண்டிதருக் கருள்சுரக்குந் திண்டிறல்சேர் மூதறிஞர் பரவிச்சூழ
மண்டுதவப் பயனுய்வந் தெங்களையாண் டடிமைகொளும் மகிமையோடு
கண்டவர்க ளதிசயிக்கச் சிவவேடந் தாங்குபுனற் கருணையாளர். 7

பொய்கண்டார் காணாத புனிதமெனு மத்துவிதப் பொலிவிற்றோய்ந்த
மெய்கண்ட நாதனுயர் சித்தாந்தத் தெளிபொருளை மேன்மையாக
நெய்கண்ட வெள்ளதுபோற் சிவஞான போதமதை நினைவிற் கூட்டும்
கைகண்ட பயனிதென வுளங்கவரச் செயுமந்த கருத்துணர்ந்து. 8

மாதவநற் சிவஞான முனிவரர்போற் சற்குருவாய் மகிதலத்துச்
சாதனமாய் நிற்குமந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னி தானத்துற்ற
ஆதரவில் விமரிசையாம் நடைபெறுவ தானவெலாம் அணிபெறச்செய்
நாதனருட் கோலமொடு நிலைத்துசுக போகமுற நன்குவாழ்க! 9

மன்னுபுகழ் மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு மகிழ்மீக்கூர
என்னவுநன் குரிமையொடு திருத்தமுற மிகவழகா யியற்றற்கான [த்தாய
சொன்னயமும் பொருணயமும் மிகத்தொனிக்க எடுத்துரைக்கும் தூய்மை
அன்னவரும் பொருட்கல்வி யருட்செல்வம் பெற்றுநெறி யமர்ந்து வாழ்க!!

கோலமிகுஞ் சிவசமய குரவரொடு சந்தான குரவர்மற்றும்
ஞாலமுயர் திருத்தொண்டர் புராணமதை விரித்துரைத்த ஞானியெங்
சீலமுறுங் கந்தபுரா ணஞ்சொற்ற கச்சியப்பன் சித்தாந்தத்தின் [கோன்
ஏலமமர் பரஞ்சோதி முனிவரன்ப ருளமகலா திருந்துவாழ்க!!! 11

நற்றுணையாய்த் திருமுறைகள் வெளிவரச்செய் தாட்கொண்ட நலங்கிளர் [மெய்
பெற்றபொல்லாப் பிள்ளையறு முகச்சிவனுர் அம்மையப்பர் பெட்புற் [றென்றும்
உற்றமடா லயத்துவள ராதிமகா குரவரெனு முயர்வாய்ச்சொற்ற
முற்றுமுணர் குருஞான சம்பந்த தேசிகநன் மூர்த்திவாழ்க! 12

சுண்ணவெண்ணீ றணியுமடா லயமண்ட பத்துவளர் சொக்கலிங்கம்
எண்ணருமா ராதனைமெய் வழிபாடு திறப்புவிழா வெழின்மிக்கார்ந்த
நண்ணரிய சொற்பொழிவு முகவுரைப்பின் முடிபுரையி நன்காராய்ந்த
தண்ணளியிற் சார்புரையாங் கிலத்துக்கட் டுரையாதி தழைத்துவாழ்க! 13

வீதிவலந் திருவுருவப் படம்வருதல் புண்ணியநல் விபூதிநல்கல்
சோதிமணி மன்றினடம் புரிபரம னருட்டிருநற் சொக்கலிங்கம்
ஆதிமடா லயமண்ட பத்துவர அணிபெறச்செய் அன்புவாழ்க!
நீதிதவ றாதசிவ சமயநெறி நீடூழி நிலைத்துவாழ்க! 14

சிற்றறிவிற் கெட்டுதற்கிங் குரிமையிலே னாயினுமென் னார்வமிக்க
பற்றுதலே தன்வசமாய் முன்னிழுக்கப் பெற்றதனாற் பகராநிற்றேன்
கற்றவர்தஞ் சைவமடத் தலைமையெனுஞ் சுதந்தரமுங் கருத்திலிங்கா
துற்றதன்மை யிணைநோக்கிக் குறைகூறா தான்றவரும் நட்புவாரால் 15

சொன்னடுங் கலயனார்க் குரியசிவ கடாட்சமது துலங்கப்பெற்ற
நன்னாளின் னண்மூல தினமாகு மாதலினா னன்மையாகும்
என்னவெம்பெற் றிமையாகப் பூர்த்திபெறுந் திருவருளா லிலங்கும்வான்
பொன்னாடு தனைநிகர்க்குந் தருமபுர வாதீனம் பொருந்தி வாழ்க! [நேய்

திருவாடுதுறையாதீன வித்வான் 'தெய்வத்தமிழ் கவிகுலசிகாமணி'
சித்தாந்தசைவப்பிரசாரகர்
திரு. தே. பெரியசாமிப்பிள்ளை உறையூர். திரிசிரபுரம்.
31—8—41

தருமபுர வாதீனச் சண்முகதேசிகஞான தானவள்ளற்
குருபரனார் சிவஞான போதநெறி குவலயத்தோர் கொள்ளைகொள்ளக்
கருதியருண் **மெய்கண்டார் சித்தாந்த மாநாடு** கவினக் கூட்டி
**திருமுறையா வணிமூலத் திருவிழா** வும்புரிந்தார் செகத்தில்வாழி!

Vidwan, V. Kunchithapatham Pillai, Corporation High School,
Nungampakam, Madras.
30—8—41.

* * * எல்லாம் வல்ல இறைவனருளால் மகாநாடு இனிதாய் நிறைவேறி உலகிற்குப் பெரும்பயன் அளிப்பதாக என அம் முழுமுதற்கடவுளின் இணையடிகளை வழுத்துகின்றேன்.

வேதாரணிய ஆதீன வித்துவான்,
திரு. ஆ. முத்துச்சட்டைநாததேசிகர், புத்தூர்.
31—8—41,

விண்ணுலாங் கொண்மூ விதமலி கொழிக்கும்
விரிதிரைக் கடலினை யணுகி

கண்ணியாங் குண்டு முடலெலாங் கருகி
நயமொடு கலைக்கொளாப் பொறிய
மண்ணவன் றயவாய்க் கலசமு தேந்தி
வனைக்கர மீட்டுவாள் போல
என்னுளார் தெங்கு வாழுற வோங்கி
யெழிறரு சோமுகன் றுட்டிமை. 1

திகழுறு தரும புரமதுதன்னில்
திருவளர் மடந்தனி யமரும்
புகழ்பெறு கமலை ஞானப்பிர காசன்
புண்ணிய னருளினைப் பெற்ற
மகிழ்வுறு ஞான சம்பந்த ராகு
மாண்புறு குருபரம் பரையில்
நிகழ்வுற வமர்ந்து சிவனின் னருளை
நிறைவுறப் பெற்றுவாழ் நிமலா. 2

அன்பருட் செல்வங் கல்விசேர் ஞான மழகுறு மீகையே யாதி
மன்பெருங் குணங்கள் மாண்புறப் பெற்று மாதவர் வணங்குமா மணியே
இன்புறு மங்கை பாகர்தங் கோயி லெழிலுறப் பணிகளு மாற்றி
நன்குறு பூசை நாளிலம் போற்ற நாடொறு நடத்துநற் குருவே. 3

பல்லரும் புகழாள் பாண்டிமா தேவி பணிசெய்து நாடொறும் பரவும்
நல்லரு ளுடைய நாயனுஞ் சொக்க நாதனை யர்ச்சனை யியற்றி
சொல்லருங் குணத்தாய் தோன்றலே துணைவா துகளிலாய் தூயவர் போற்
மல்லலாம் புகழாய் எனத்துதி செய்து மலரடி வணங்குமா தேவே. [றும்

நலந்தரு கைலை நாதனின் னருளால் நால்வர்தா முரைத்தருள் செய்த
பலந்தரு தமிழின் வேதமா தோதும் பகர்தரு சாலையொன் றமைத்து
வலந்தரு சைவச் சிறார்தமை நிறுவி வளமுறு போனகந் தாசும்
இலகுற வளித்து இன்பமு தளிக்கு மிறைவனே இசையுறு தேவே. 5

மங்கையோர் பாகன் மகிழ்ந்தருள் செய்த மாமறை யாகம மெல்லாம்
சங்கையில் ஞானந் தெளிதலே யன்றிச் சமூகத்துவே றிலையெனத் தேர்ந்த
பங்கமில் பெய்கண் டான்சபை நிறுவிப் பற்பல புலவரைத் தேர்ந்து
இங்கித மாக விறைவனின் னருளை யியம்பிட வருளினை யிறைவா. 6

சிவனடி யாரைத் தினந்தொறும் பேணித் திருவமு தளித்திடுந் திறனும்
தவமுடைக் கல்வி யறிவுடை யவர்க்குத் தகுநிதி யளித்திடுந் தயையும்
நவமுடைத் தூசு கன்னிதி முதலா நாடினோர்க் களித்திடு நலனும்
இவணிடைக் கண்டே னித்திற வெவரு மியற்றுதற் கரிதரி தாமால். 7

நங்குல மணியே ஞானநன் மணியே நாவலர் போற்றுநன் மணியே
பங்கமி றவத்தோர் பகருமா மணியே பகர்தரு கலைவல மணியே
மங்கலக் குமர குருமகிழ் மணியே மன்னவர் துதிக்கருண் மணியே
சங்கரர்க் கன்பு தழைத்திடு மணியே சண்முக சற்குரு மணியே. 8

நன்மையார் மதுரை நாதனைத் தமக்கு நலமுறு மூலநா டன்னில்
பன்மையார் பூசைப் பணியெலா மாற்றிப் பகர்திரு முறைவிரா யியற்றி
தன்மையா ரடியார்க் கின்னருள் புரிந்து தகைபெறு சற்குணக் குன்றே
வன்மையார் சொக்க நாதனின் னருளால் வாழ்கநாள் பற்பல மாதோ! 9

## திரு. க. குப்புசாமிப்பிள்ளை, (மறைசைக்) குறுக்கை.

12—9—41

கார்திகழும் பொழிலெழில்கூர் தருமபுரக் கைலைபரம் பரையாய் வந்த
சீர்திகழும் மெய்ஞ்ஞான சம்பந்த மூர்த்திதே சிகனே யிங்கு
பார்திகழ்சண் முகநாத தேசிகோத் தமனைப் பண்பின் மிக்கான்
ஏர்திகழும் அடியவர்கள் இம்மைஅம்மை இன்பநலம் எய்தவெண்ணி. 1

உலகுபுகழ் மெய்கண்ட தேவரருள் சிவஞான போதம் ஒப்பில்
அலகில்சைவ சித்தாந்த அரும்பொருளை அடியார்கள் அன்பு கூற
புலவர்சிகா மணிசங்கம் பொருத்திமிகு வித்தருளிப் புனித மாகும்
பலகலையுங் கற்றுணர்ந்த பண்டிதரின் பண்டிதனும் பரம மூர்த்தி. 2

தவங்கீர்த்தி வண்மையினில் உவமையிலாக் குருமூர்த்தி தகைசால் மிக்க
சிவஞான போதத்தைத் தெளிவாக அடியார்சிந் திக்குமாறு
நவநவமாய் உரைத்தருள நாவலருக் கருள்புரிந்த நலமார் மூர்த்தி
சிவபெருமான் எமையாளுந் தேசிகனின் திருவடியைச் சிந்தை செய்வாம். 3

## வித்துவான், திரு. இராம. கோவிந்தசாமி பிள்ளை, அரசர் கல்லூரி, திருவையாறு.

9—9—41

சீர்தருமை யாதீனத் தேசிகராஞ் சண்முகநற்
சீரடிகள் போற்றும் திருவுற்றார்—யாரொருவர்
பெற்றா ரவரே பிறங்குவரிந் நீணிலத்தே
பெற்றாலு மீடின் றியைந்து. 1

மெய்கண்டான் சாத்திரமா நாட்டினது மேலுலக
பொய்கண்டாரும் புகழ்ந்து போற்றுவரேல்—மெய்கண்ட
சாத்திரத்தைச் சாலகனி சாற்றிடுநற் சாத்திரிகள்
ஆத்திகங்கொண் டேனறையா ரார்ந்து. 2

சண்முகா என்றொருகால் சாற்றுவரேல் சால்புறுவர்
உண்முகமா வப்பெயரை யுன்னுவரேல்—மண்ணில்
தொடக்கற்று வாழுந் துரியநிலை யெய்வர்
கடக்கரிய மாயை கடந்து. 3

தருமைத் திருத்தளிபோல் சற்குருவாந் துங்க
வருமையளி சண்முகவண் ணல்போல் — பெருமையா
மாநாடு கூட்டி மகிழவளி வண்மை போல்
மாநாட்டி லெங்குமிலை மன். 4

வாழி திருமடங்கள் வாழி குருமணிகள்
வாழி மெய் கண்டவருள் மாநூல்கள் — வாழிமறை
வாழி தமிழ்மணக்கு மாநாட்டுச் சைவமுமே
வாழி மெய்யன்பர் மகிழ்ந்து. 5

உ

சிவமயம்

ஸ்ரீ சண்முகநாதன் றுணை.

சிவமணங் கமழும் தருமபுர ஆதீனம்

24-வது பட்டத்துக் குருமூர்த்தியாக எழுந்தருளிய

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின்**

சமய வளர்ச்சிச் சற்கருமங்களைக் கண்டுவியந்து, மதுரை

திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீன வித்துவான்

**ஆ. சத்திவேற் பிள்ளை கூறிய**

## வாழ்த்துப்பாமாலை

---

### நேரிசை வெண்பா

திருமன்னு சோலை திகழும் வளஞ்சால்
தரும புரமா தலத்தில்—உருமன்னு
சைவ மடாலயத்துச் சற்குருவாஞ் சண்முகப்பேர்த்
தெய்வமுனி வன்பெருமை தேர். 1

தெய்வமெய் கண்டான்சீர்ச் சித்தாந்த மாநாட்டை
வையமெலாங் கொண்டாடி வாழ்த்தவே—பொய்யில்
புலவர் தமைக்கூட்டிப் பொற்ப நடாத்தி
நலமளித்தான் சண்முகநா தன். 2

பவஞான போதமற்றுப் பாருளோ ரென்றுஞ்
சிவஞான போதநெறி சேர்ந்து—தவஞானச்
செல்வராய் வாழவருள் செய்தான் றருமை
நல்வளத்த சண்முகநா தன். 3

சைவம் வளர்ப்பான் றவம்வளர்ப்பா னெந்நாளும்
தெய்வத் தமிழ்வளர்ப்பான் செம்மைபெற—வையத்து
மாந்தரெலாங் கொண்டாட மாதவமெய்ஞ் ஞானகுரு
வேந்துசண் முகன்றினமு மே. 4

ஆதிகுரு மூர்த்தியிவ னுமெனவே கண்டவர்கள்
ஓதியுவக்கு முயர்துறவன்—மாதிடத்தன்
சைவநெறி காட்டுஞ் சதுரமிகு சண்முகப்பேர்த்
தெய்வமுனி நேரார்நீ தேர். 5

பாதிமதி சூடும் பரமர்திரு வாலயமும்
ஆதிகுரு மூர்த்திதிரு வாலயமுஞ்—சோதிபெறச்
செய்துபரி பாலித்துத் திங்கள்சூ ருள்ளளவும்
வையத்து வாழி மகிழ்ந்து. 6

## வித்துவான், வை. மு. ஷண்முகதேசிகர் தமிழாசிரியர், நாஷனல் ஹைஸ்கூல், நாகப்பட்டினம்.

11—9—41

தண்ணியநீர் தனைச்சுமந்தே தவழ்ந்துவந்து
    மக்களுணத் தகுதி யாகப்
பண்ணியுநற் பயிர்கடமைப் பரிபாலித்
    தன்பினொடு பயிலு கின்ற
மண்ணுடனே பொன்றுகளை பட்டித்துக்
    கொண்டுவரும் மாண்பு சான்ற
புண்ணியக்கா விரியதன்றென் புறத்தமைந்த
    தருமைவளம் புகழற் பாற்றே. 1

இன்னபுகழ்த் தருமைதனி லிருபத்து
நான்கெனவே யிசைக்கும் பட்டந்
தன்னிலமர் சற்குருவாஞ் சண்முகதே
சிகருரவர் தாமு மிந்தப்
பன்னிடுநல் விசுவாண்டு பகர்ந்திடுநல்
லாவணியிற் பன்னி ரண்டு
என்றிடுநன் னாள்தொடங்கி யேற்றமதாய்
நான்குதினம் எவரும் போற்ற. 2

மெய்கண்டான் சித்தாந்தம் மேதினியெல்
லாமுணர மேன்மை யாகப்
பொய்கொண்டா ருள்ளமெலாம் புனிதமடைந்
தரனடியிற் பொருந்தி வாழச்
செய்கொண்ட தருமையதிற் சித்தாந்த
மாநாடென் றியற்றி யிட்டார்
மெய்கொண்ட பூதிமணி யக்கமிவை
யெவ்விடத்தும் மிளிரச் செய்தார். 3

ஆதிகுரு ஞானசம் பந்தனம
ராலயத்தி லமைய முன்னாட்
சோதிதரு மாறுபல சோடனைகள்
தமைச்செய்தே சொலற்கு மெட்டாப்
பாதிமதி வேணியரன் பதம்பணியு
நந்திக்குப் பரம ஞானம்
ஓதியிடும் முறைமையினி லொளிருமொரு
திருப்படத்தை யுயர வைத்தே. 4

நால்வரவர் திருப்படம்போல் லாப்பிள்ளை
யார்படமும் நன்கமைத்துப்
பால்வடியும் முகமுடைய பான்மையராம்
மெய்கண்டார் படமும் வைத்தே
சால்புடைய தேவாரந் தமையோதும்
பெரியவர்கள் தாமும் பாட
நான்மறையோர் தீபமதை நன்கெடுத்துக்
காட்டியிட நயந்திட் டாரே. 5

ஈசான சிவாச்சா ரியராய
வந்தணரை யிரண்டாம் நாளில்
தேசான தலைவர்பதஞ் சேர்ந்திருக்க
வேண்டுமெனத் தெரித்த பின்னர்
தேசாறுஞ் சிவஞான போதமுத
லாறுசூத் திரங்க டம்மை
மாசான பதமொழித்து மாண்புடனே
பலர்பேச மகிழ்ந்திட் டாரே. 6

மூன்றநாட் காலையெச், ஆர், ஈ;போர்டு
கமிஷனராம் முதன்மை யாளன்
குன்றாத புகழுடையன் குணவனிரா
மச்சந்திரன் கொண்டு தாங்கப்
பின்னாறு சூத்திரமும் பிரியமுடன்
பலர்பேசும் பேச்சுங் கேட்டே
நன்றாயச் சூத்திரங்கள் நவில்பொருளை
யச்சியற்றி நல்கிட் டாரே. 7

நான்கெனுநாள் சி.கே.சுப் பிரமணியப்
பெரியரவர் நன்கு தாங்க
மேன்மையதாந் திருமுறைகள் பன்னிரண்டும்
படித்தறிந்த மேலோர் தாமும்
பான்மையுடன் ஒவ்வொன்றின் பண்புயர்வெல்
லாமெடுத்துப் பகரக் கேட்டுத்
தான்பெற்ற மகிழ்ச்சியையித் தரணியுளார்
தாமுமுறத் தான்செய் தாரே. 8

இந்தமகா நாட்டினுக்கு ஈடாக
நடத்துபவர் யாண்டு மில்லை
சந்தமுறத் தலைமைதாங் கியபெரியார்
தமைப்போலுந் தக்கோ ரில்லை
வந்தபெரும் புலவோர்கள் வாய்மொழிகேட்
டின்படைய வசதியாகத்
தந்தவுண வுண்டுறைந்த தரையோரி
னளவுரைக்குந் தகையு மில்லை. 9

வேண்டியவர் வேண்டியதை விருப்புடனே
பெறுவரென விளம்பிச் சென்ற
தாண்டகவேந் தவருடைய தருமொழியின்
உண்மையினைத் தரணி யோர்கள்
காண்டிடவே செய்தமைத்தார் கயிலையினிற்
சேர்ந்திருக்குங் கடவுள் போல
ஆண்டிருக்கு மடியருட னமர்ந்திருக்குந்
தருமையமர் அண்ணல் தாமே. 10

சித்தாந்த மாநாடு சீர்பெறச்செய்
செயலாளர் சிறந்து வாழ்க!
எத்தேயத் துள்ளிருந்து மிங்குவந்தே
கேட்போர்க ளிசைந்த வாறு
நித்தியநற் கடமைகளை நிகழ்த்துவதற்
குதவியவர் நிதமும் வாழ்க!
உத்தமராம் மெய்கண்டா ருரைத்தநூற்
றிருமுறையும் உலகில் வாழ்க! 11

ஏறுறுமிம் மாநாட்டி லின்புடன்பண்
பாடியவர் என்றும் வாழ்க!
சீறுறுமிம் மாநாட்டிற் சேர்ந்திருந்த
தலைவரெலாஞ் சிறக்க வாழ்க!
நாடுறுமிம் மாநாடு நண்ணியர் சொற்
பொழிவுசெய்த நல்லோர் வாழ்க!
நேருறுமிம் மாநாடு நிகழ்ந்ததரு
மைப்பதியும் நீடு வாழ்க! 12

தருமையமர் சண்முகப்பேர்ச் சற்குருவும் வாழி!
பெருமையுடன் சைவரவர் பேணும்—அருமையதாம்
பூதிமணி யக்கம் புகழுடனே வாழியவே!
ஆதிபக வன்னருளாற் றூன். 13

மெய்கண்டான் சித்தாந்த மகாநாட்டிலும், திருமுறை விழாவிலும் கலந்து கொண்ட
தலைவர், புலவர், திருமுறை யோதுவோர், செயலாளர்களின்
பெயர்களமையப் பாடியது.

திருத்தரு மைப்பதி சேர்ந்துறை சற்குரு
நிருத்த நிமலனுஞ் சண்முக னருளுரு
குருத்திரு வுளங்கொடு குறைவிலாற் றியதாற்

சித்தாந்த மாநாடு சீர்பெற வந்த
உத்தமத் தலைவரு முயர்ந்தநற் புலவரும்
இத்தகை யோரென இயம்புவன் சிறிதே
இராமலிங் கம்மென விசைத்திடு தம்பிரான்
தராதலந் தன்னிற் றகவுடன் கூறிடும்
அருணந் தியென அறைந்திடுந் தம்பிரான்
இருவரி லொருவர் எவரையும் வரவேற்
றிருந்திடுங் கழகத் திசைந்திடுந் தலைவராய்
இருந்திட வொருவர் இன்புட னுபசரித்
திருந்திடுஞ் சங்கத் தேற்றநற் தலைவராய்
இருந்திட மதுரைவாழ் இறைவர்பேர் கொண்ட
சோமசுந் தரமெனச் சொற்றிடுந் தம்பிரான்
ஏமமார் செயலாள ரென்றிடும் பெயருடன்
தக்கவர் தங்களைச் சன்னிதா னத்தின்முன்
பக்குவ மாயவர் பண்புரைத் திருத்திச்
சண்முக தேசிக சற்குரு தாமும்
உண்மையா யுழைக்கு முயரெச் ஆர்ச
போர்டதிற் கமிஷனர் போற்றிடுந் திருமான்
ராவ்பக தூரெனும் நற்புகழ்ப் பட்டம்
ஏற்றொளிர் சிஎம் இராமச் சந்திரஞ்
செட்டியா ரென்றே தெரித்திடும் பெரியரும்
கழனி யார்ந்த பழனியம் பதியுறை
அழகன் வேதா கமங்களைக் கற்றோன்
மாசிலா தொளிரும் மாணவர் மனமுணர்ந்
தாசிலா தாகம மதையுரைத் திடுவோன்
சிவஸ்ரீ ஈசான சிவாசா ரியரெனுஞ்
சிவபக் தியினிற் சிறந்திடு பெரியருஞ்
சிவக்கவி மணியெனச் செகமெலாம் புகழுஞ்
சிவனருள் பெற்றிடுஞ் சிலரூங் கோவை
சுப்பிர மணியரென் றுரைத்திடு செல்வருந்
தப்பிலா திருந்தே தலைமைதாங் கிட்டனர்
அரன்ற யாகவந் தருளிய வூரமர்
அரங்கசா மிப்பெய ரறிஞரு மாரணி
வாழ்ந்திடு முத்துசு மாணிக்க வாசகன்
தாழ்விலாக் காஞ்சியிற் றங்கிடு வஜ்ரவேல்
பண்பொடும் பாரிப் பாக்கமார் நின்றநற்
கண்ணப் பன்னெனுங் கண்ணியன் ருமும்

திருநெல் வேலியிற் சீருடன் வாழும்
பெருமைசேர் முத்தைய பிள்ளையுந் தாம்பரம்
பொருந்திவாழ் சமர புரிப்பெயர்ப் பெரியனும்
சலைகண் டபுரஞ் சேர்ந்தொளிர் கின்ற
புலமைசேர் வரதநஞ் சையனும் வண்டமிழ்த்
திருவா ரூரமர் சீர்தண் டபாணித்
திருவனுந் திருச்சி சேர்ந்துவாழ் தீரன்
துங்கமாய் நாளுந் தூயயோ காசனம்
இங்கிதமாய்ச் செயுந் தங்காம் பிள்ளையும்
இரவும் பகலு மிருந்துபா நாட்டுன்
இரண்டா நாளி லிருந்சொற் பெருக்கினர்.
நெல்வே லிக்கிழார் நெல்லை யப்பரும்
திருவையா றதனின் சேர்ந்துவா ழாசான்
கோவிந்த சாமிக் குரிசிலும் விழுப்புரம்
மேவிவாழ்ந் திடுமயர் மேலோ னாகிய
இராமலிங் கப்பெய ரேற்றவர் குளித்தலை
அரங்க சாமிப்பெய ரையருஞ் செங்கம்
அன்னை துரைசாமி யருந்தமிழ்ப் புலவனும்
கோயம் புத்தூர் குலவிவாழ்ந் திடுபவர்
ஏயநற் றுடிசைக் கிழாரெனக் கூறிடுஞ்
சிதம்பர னாரும் திருநெல் வேலி
இதமுடன் வாழு மீச்வர மூர்த்தியும்
ஐயா றதனி லழகுட னொளிருந்
துய்யனுஞ் சோம சுந்தரப் பெரியரும்
சுந்தரேச வாண்டை யாரெனுந் தோன்றலும்
தேவகோட் டையமர் சீர்பால கவியென
எவருங் கூறிடு இராமநா தப்பெயர்த்
திருவனுஞ் சென்னையைச் சேர்ந்துவாழ் கின்ற
மையா துமிலா வையா புரியும்
பாலசுப்ர மண்யப் பண்பனுஞ் சிறுமியும்
பாலசுப்ர மண்யனைப் பாடலாற் போற்றிடுஞ்
திருப்புகழ் மணியெனச் சிறப்பொடுங் கூறுந்
திருத்தகு சிலருஞ் செப்பிய விவரெலாம்
அன்பொடும் மூன்றா நாள்மகா நாட்டில்
இன்புடன் வந்துநின் றினியசொற் பெருக்கினர்.
நான்கா வதுநாள் நலம்பெற நடந்த
திருமுறை விழாவிற் றிருமுறைப் பெருமையைத்

திருத்தகு சென்னையிற் சீருற வாழும்
பாலசுப்ர மண்யப் பண்பன் றானும்
பாளையங் கோட்டையிற் பயில்தரு கின்ற
சிதம்பர நாதச் செல்வனுஞ் சென்னை
இதம்பெற வாழும் இருங்குண வானும்
வையா புரியென வழங்கிடும் பெரியனும்
இச்சையாய்ச் சென்னையி லிருந்திடு கின்ற
சச்சிதா னந்தச் சற்குணன் றானும்
அருணா சலமென அழைத்திடுந் திருவனும்
அண்ணா மலைநக ரதனி லார்கின்ற
கண்ணியன் சுப்ர மண்யன் றானும்
சென்னையில் வாழுஞ் சிறப்புடைச் செல்வன்
சண்முக சுந்தரத் தக்கோன் றானும்
திருச்சியில் வாழ்க்கை செலுத்தி வாழ்கின்ற
பஞ்சந தப்பெயர்ப் பண்பன் றானும்
நாகைம் பதியில் ஓகையா யொளிரும்
தோகை வாகனற்குச் சொற்றிடும் பெயராஞ்
சண்முக னெனும் பெயர் சார்ந்துள சீலனும்
கண்ணியன் சென்னைவாழ் கற்றோ ருறுஞ்
சோமசுந் தரப்பெயர் சொற்றிடும் பெரியனும்
நாமமார் புரிசைவாழ் நன்முரு கேசனும்
நத்திப் பெரியர்கள் நவில்நாரை யூரமர்
முத்துக் குமரனும் முதல்வன் றானும்
ஓங்கிய தில்லையில் ஒழுக்கமாய் வாழும்
வேங்கடா சலமென விளம்பிடும் பெரியனும்
பத்தியா யெடுத்துப் பகர்ந்திட் டனரினும்
உத்தமர் பலரும் ஒன்றியே பேசினர்
இருஞ்சிறப் புடனிரா விரசத ரதத்திற்
றிருவீ தியினிற் றிருமுறை வரமுன்
திருநெல் வேலியிற் சிருடன் நாளும்
ஒருவாப் புகழ்பெற் றோங்கிவாழ் கின்ற
சுந்தர வோதுவா மூர்த்திகள் தாமும்
சந்தமார் வேதா ரணியநற் றலத்தில்
அந்தமாய்த் திருமுறை அனைத்தையு முணர்ந்த
அருணாசலமென அழைத்திடும் பெரியரும்
இடரெலா நீங்கிடு மிடைமரு தூரமர்
நடரா சப்பெயர் நவின்றிடு பெரியரும்

பராபரன் கிருத்தம் பயின்றமர் தில்லைவாழ்
இராமலிங் கப்பெயர் ஏற்றிடும் பெரியரும்
ஊழியில் மிதந்தே உம்பரைக் காத்த
காழிவாழ் கந்த சாமியாம் பெரியரும்
ஆதி னந்தனி லழகுடன் பண்களை
ஓதிவாழ் மூன்று ஓதுவா மூர்த்தியும்
கோதிலாச் சிறுவருங் குணமுடைப் பலரும்
இன்னிசைக் கருவிக ளிசைத்திடு பெரியரோ
டுன்னிநற் பண்களை யோதிவந் திட்டனர்
விண்மாரி பெய்யவே விடியற் காலையில்
மண்ணவர் கண்டே மகிழுடன் வாழ்த்த
புண்ணியம் புரியச் சண்முக தேசிகன்
மன்னிவாழ் திருமடம் மாண்பது முற்றதுஞ்
சொற்றநற் றிருமுறை சொக்கலிங் கப்பிரான்
உற்றிடுஞ் சந்நிதி உய்த்ததன் பின்னர்ச்
சண்முக தேசிக சற்குரு தாமும்
அன்பொடும் பூதி அளித்தே வாழ்த்தினர்
பண்பொடு மிவ்விழாப் பண்ணிய குரவராஞ்
**சண்முக தேசிக சற்குரு மணியும்**
இன்பொடு மிவ்விழாக் கண்டவர் கேட்டவர்
நன்னய மாகவிந் நாளினி லுழைத்தவர்
யாவருங் குறைவிலா யாண்டுபல் லாண்டு
தாவரும் புகழ்பொருள் சற்புத் திரரையும்
மேவிவாழ்ந் திடுகவிம் மேதினி தனிலே. 138.

## திரு. டி, கே. சிதம்பரநாத முதலியார், B.A., B.L., மீனம்பாக்கம் சென்னை.

*8—9—41.*

* * * ஆதீனத்தில் நடந்த சைவமகாநாடு பற்றித் தமிழ்நாடு முழுதும் ஒரே உத்ஸாகமாய்ப் பேசிக்கொண்டிருக்கிறார்கள். தருமபுரம், மடம், கோயில்கள், ஆறு எல்லாம் சேர்ந்து அழகான புனிதமான காட்சி தருகிறது. எங்கும் கிடையாத காட்சிதான். வசதிகளும் மற்ற ஏற்பாடுகளும் ரொம்ப அருமையாய் இருந்தன. வந்தவர்கள் எல்லாரும் ஒரேபடியாய் அதிசயித்து அதிசயித்துப் புகழ்ந்தார்கள். திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஞானியார் சுவாமிகளை வருகிற வழியில் பார்த்தேன். நடந்த விருத்தாந்தங்களையெல்லாம் சொன்னேன். ரொம்ப

வும் மகிழ்ச்சி கொண்டார்கள். தனக்கு உடம்பு அசௌகரியமாய் இருந்ததால்தான் வர இயலாமல் போயிற்று என்றும் சொன்னார்கள். சைவம் பொலிவு கொண்ட சபையைப் பார்த்து எவ்வளவோ அநுபவித்திருப்பார்கள்.

செட்டிநாட்டரசர் அண்ணாமலைச் செட்டியாரவர்களையும் முந்தாநாள் சந்திக்கநேர்ந்தது. அவர்களிடமும் என்றும் இல்லாத சைவமகாநாடு நடந்ததென்று விவரித்துச் சொன்னேன். அவர்களும் ரொம்ப சந்தோஷப்பட்டார்கள்.

நிச்சயமாகச் சொல்லலாம். தமிழுக்கும் சைவத்துக்கும் புத்துயிர் உண்டாய்விட்டது என்று. மகாசன்னிதானம் எவ்வளவோ சிரமம் எடுத்து மகாநாடு நடக்கும் போதெல்லாம் அலங்கரித்த சிறப்பை எளிதில் பாராட்டிவிட முடியாது.

Thiruppugazhmani Sri T. M. Krishnaswami Iyer, B.A.,B.L.,
Mylapore.
*6—9—41*

* * * தங்களுடைய ஆதீனத்தின் பார்வையில் நடந்தேறிய மகாநாடு நினைக்க நினைக்க சந்தோஷத்தையும் ஊக்கத்தையும் கொடுத்து வருகின்றது. அனுபூதி பெற்றோர்கள் உபதேசிக்க வேண்டியவைகளை சாதாரணமாகக் காணப்படும் தெய்வீக உணர்ச்சியற்ற உலகர் கைத்தூக்குக்கு (vote) உட்படுத்தாமல் பலரையும் அனுபூதி வழியில் ஒழுகவும், கற்று உணரவும் செய்வித்த ஒரு பான்மையை நான் வெகுவாய் கொண்டாடுகின்றேன். அரிய பெரிய பொருள்களை காதால் கேட்டு மனதால் சிந்தித்து ஒழுக்கத்தில் கொண்டுவரச்செய்ய இவ்வித மகாநாடுகள்தான் சிறந்த நன்மையைப் பயக்கும்.

தாங்கள் மடத்தில் இருந்த நாள் எனக்கு ஒரு மறவா நாளாயிற்று. என்னை கவனித்துக் கொண்டதற்கும், தாங்கள் சொன்ன நன்மொழிகளுக்கும் எனது மனமார்ந்த நன்றி வந்தனங்கள்.

Sri M. Balasubramanya Mudaliar, B.A.,B.L.,
Secretary, Saiva Siddhantha Mahasamajam, Advocate, Madras.
*2—8—41*

* * * மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு மிகச் செம்மையாகவும் சிறப்பாகவும் நடந்ததுபற்றி அனைவர்க்கும் மகிழ்ச்சி உண்டு.

சொற்பொழிவாளர்கட்குக் காலங்களை வகுத்தும், அவர்களை அழைத்துச சொற்பொழிவாற்றச்செய்து உபசரித்தும், வேறுபல வழிகளில் தொண்டு புரிந்தும் மகாநாட்டைச் சிறப்புற நடத்தினமைக்காகத் தங்கட்குப் பெரிதும் நன்றி செலுத்துகின்றேன்.

இம்மகாநாடுபோன்ற பல மகாநாடுகள் கூட்டப்பெற்று, நமது ஆருயிரனைய சைவசமயம் இத்தமிழ்நாடெங்கணும் பரவும்படித் தொண்டு புரியும் ஆணையை இவ்வாதீனத்து அடியார் குழாங்கட்கு அளிக்குமாறு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் திருவுளம் பற்றத் திருவருளை வழுத்து கின்றேன்.

திரு. ரா. சண்முகசுந்தரஞ் செட்டியார், திருவொற்றியூர்.

* * * தங்கள் முயற்சியால் நடைபெற்ற இந்த மகாநாடு சைவவுலகம் பெரிதும் போற்றக்கூடியது. இத்தகைய மகாநாடு பலகூட்டி நன்மைபயக்குமாறு எல்லாம்வல்ல இறைவனிடத்து விண்ணப் பிப்பன். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் என்னையும் பொருட்படுத்தி இம் மகாநாட்டில் கலந்துகொள்ளுமாறு, கருணைபூத்ததற்குப் பெரிதும் நான் கடமைப்பட்டுள்ளேன்.

## சங்கத்தீர்மானங்கள்.

சைவசித்தாந்த சபை, பழநி.

18—2—1941

* * * தருமபுர ஆதீன பேராதரவின்கீழ் மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு கூட்டி, சைவமும் தமிழும் தழைக்க, பேருதவி செய்த திருக்கயிலாய பரம்பரைத் தருமபுரம் மகாசந்நிதானமவர்களைப் பழநி சைவசித்தாந்த சபையார் பாராட்டுவதோடு இனியும் இத்தகைய மகாநாடுகள் கூட்டியும், சைவம் தழைக்க வேண்டிய வகையெல்லாம் தேடியும் கருணைபுரிய வேண்டிக்கொள்ளுகிறது.

தம்பிரான் தோழர் தமிழ்ச் சங்கம், திருவாரூர்.

24—9—1941

* * * திருக்கயிலாய பரம்பரைத் தருமபுரப் பதியின்கண் பெரும் பொருட் செலவில் நடைபெற்ற மெய்கண்டான் சித்தாந்த மகாநாட்டை **ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

அவர்களால் தக்கார் யாவரும் கண்டதிசயிக்கத்தக்கவாறு அழகுபெறச் செய்தும், சுவாமிகளின் திருமுகத்திற்கிணங்கி ஆங்குக் குழுமியிருந்த கற்றோர்க்கும் மற்றோர்க்கும் வேண்டுவ வேண்டியாங்கு அளித்தும், ஸ்ரீ சமயாசாரியர் சந்தான குரவர் முதலியவர்களின் திருவுருவப் படங்களின் பிரதிட்டை செய்யப் படக்காட்சியும், இன்னிசைக் கருவிகளுடன் நடந்த தமிழ் வேத பாராயணத்தின் சிறப்பும், மாநாட்டுப் பந்தலில் தமக்கென வமைத்த ஆசனத்தி லமர்ந்த காட்சி,

> நால்வகை மரபுந் தந்த நன்னெறி நடப்ப நீத்த
> சீலமா முனிவர் செய்யுந் தெய்வமா தவந் தழைப்ப
> வாலொளி அறிஞர் போற்றும் வைதீக சைவ மோங்க
> வாலமர் கடவுளீசன் அருளினால் அரசு செய்தான்.

என்னும் பனுவற்கிணங்கத் திறம்படக்கூறிய ஆதீனகர்த்தரவர்களை இக் கூட்டம் முழுமனதுடன் பாராட்டுகிறது.

# NEWS & NOTES

## ஆவணிமூலத் திருநாளும், தருமபுர ஆதீனமும்.

இது மதுரையில் நடந்த திருவிளையாடல்களிலொன்று. தென்னவன் பிரமராயன் பொருட்டுச் சிவபெருமான் வைகையைப் பெருகச் செய்ததும், அவ் வெள்ளத்தை அடைத்தற் பொருட்டு, அனைவரையும் அடிமைகொண்டான் பிட்டுவாணிச்சியின் அடிமையாகி, வைகைக்கரையில் கூலியாளனாகி கூடைமண்சுமந்து வாணிச்சியின் பங்கை அடைப்பதும், அது அடைபடாதுக், கரைபுரண் டோடுவதும், இதனைக்கண்ட பாண்டியன் தன் கைப்பிரம்பால் கூலியாளை ஓச்சவும், அது பாண்டியன் முதல் எல்லோர் முதுகிலும் பட்டதும், பின் எல்லாமுந் தாமாகவே கலந்துநின்ற பெருமான் பாண்டியனுக் குண்மை யுணர்த்தியருளியது மாகிய திருவிளையாடலாகும். இதனை, ஆவணி மாதம் மூல நட்சத்திரத்திற் கொண்டாடுவது தொன்றுதொட்டுள்ள ஏற்பாடு.

திருக்கைலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தில், அங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்கு, இவ்விழாவை மிகச் சிறப்பாய் நடத்துவது வழக்கம். சென்ற ஆண்டுவரை இது ஒவ்வோர் முறையில் கொண்டாடப்பட்டது. அன்று இத்திருவிளையாடற் சரித்திரத்தை உபன்யசிக்கச் செய்வது, இதனைப் புராணபடனம் செய்விப்பது, கதாகாலக்ஷேபமாக இலக்கியச் சுவையுடன் இசைச்சுவையையும் சேர்த்து அனுபவிக்கச் செய்வது முதலியவைகள் நடத்தி மகாசந்நிதானம் அருள்வழங்கி வந்தார்கள்.

இவ்வாண்டு ஓர் புதிய முறையைக்கையாள ஏற்பாடாகியிருக்கிறது. மகாசந்நிதானம் காலப்போக்கை நன்குணர்ந்து எவ்வெவ்வகையில் மக்களுக்கு சமய மொழி உண்மைகளை உணர்த்தக்கூடுமோ, அவ்வவ்வகையில் உணர்த்திவரும் பெரியார் ஆகலின் இவ்வாண்டிலோர் புதுமுறையில் இவ்விழாவைக் கொண்டாடச் செய்திருப்பது, இவர்களது அறிவுப் பெருக்கத்தையும் ஆற்றல் மிகுந்த நிர்வாகத்தையும் நன்கு விளக்குகின்றது.

அன்று சமய உண்மைகளை மக்கள் உணர்ந்து பயன்படத்தக்க வகையில் மெய்கண்டசாத்திர மகாநாடொன்றைக் கூட்டுவித்து உபன்யசிக்கச் செய்து, தகுதிக்குத்தக்க சன்மானங்களை யளித்துத் தமிழ் சமய சாத்திர வித்வான்களை யாதரிப்பது என்பதாகும். இம்முறை மிகவும் பாராட்டத்தக்கது என்பதை அறிவுடையுலகம் ஒப்புக்கொண்டே தீரும்.

இம் மகாநாட்டுத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கும், இராவ் பகதூர் ஸ்ரீ ராமச்சந்திரன் செட்டியார் அவர்களைப்பற்றி நாமறிகம் எழுதித் தமிழுலகத்திற்கு அறிமுகப்படுத்த வேண்டுவதில்லை. இவர்களைத் தமிழுலகம் நன்கறிந்தே யிருக்கிறது. சிறந்த சிவபக்தர்; நிறைந்த கல்வி, யறிவு, ஒழுக்கம் முதலிய நற்குணங்களைப் படைத்தவர்; தற்காலத்துக் கேற்ற ஆராய்ச்சித் துறையில் அதிகத் தேர்ச்சியுடையார்; பல பாஷா ஞான முடையார்; தூய மனத்தினர்; பரந்த நோக்குடையார்; சிறந்த நியாயவாதி. இவர் தலைமைதாங்கும் இம்மகாநாட்டில் சமயவாதியாய்க் கடனாற்றுவார் என்று எதிர் பார்ப்பது மிகையல்லவே.

இம்மகாநாட்டை நடத்துவதற்கு முன் வந்துள்ள தருமபுரவாதீன மகாசந்நிதானம், சிறப்பாக நடைபெறவேண்டிய ஏற்பாடுகள் யாவற்றையும் செய்துவருகிறார்கள். இது இவர்களுக்கன்றி ஏனையோர்க்கு இயலாதென்பதை முன்னரே எடுத்துக்காட்டியுள்ளோம். ஒருவருக்குப் பொருள் மாத்திரமிருந்தால் போதாது. அதைப் பிறருக்குப் பயன்படச் செய்யவும், அதையும் நல்ல வழியிலேயேசெய்ய ஆற்றலும், அவ்வத் துறையில் ஆர்வமும் அதிகம் வேண்டுமன்றோ? இவைகளையெல்லாம் ஒருங்கே பெற்றுள்ள **ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளது** செயற்கரிய செயலை வியந்து பாராட்டி, இவர்கள் பன்னெடுங் காலந் துறவரசுவீற்றிருந்து, செங்கோலோச்ச வேண்டுமாய்ப் பன்னகாபரணன் பாதமலர்களை இறைஞ்சுகின்றோம்.

நவ இந்தியா, 17—8—41.

### மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு
### ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் திறப்புரை

தருமபுரம் ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பண்டார சன்னதிகள் மெய்கண்டான் சித்தாந்த மகாநாட்டை இன்று திறந்துவைத்தார்கள்.

'இந்த ஆதீன பிரதிஷ்டாபகர்களாகிய பிரதமபரமாசாரிய ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகளது திருவுளப் பிரசாத மகிமையினாலே இந்த மகாநாடு நடைபெறுகின்றது. இன்றுமுதல் நடைபெறும் சிவஞானபோத உபந்நியாசங்களைக் கேட்டும் ஆவணிமூலத் திருநாளில் நிகழும் திருநெறிச் சைவத் திருவிழாப்பொலிவைத் தரிசித்தும். சகல சம்பத்தும் பெற்றும் இம்மை, மறுமை, வீடு என்னும் மும்மைப் பெருவாழ்வும், பெறுவீர்களாக எனத் திருவருளை சிந்திக்கின்றோம்' என்று அவர்கள் குறிப்பிட்டார்கள்.

தென் இந்தியாவில் முதன் முதலாக ஸ்ரீ மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு எல்லாம் வல்ல சித்தராகிய ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் திருவருளாலும் தருமபுரம் ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பண்டாரசன்னதி திருவுளப்படியும் இன்று காலை 8-மணி முதல் ஆரம்பமாகி நடந்து வருகிறது.

ஹிந்துமத தேவஸ்தான போர்டு கமிஷனர் இராவ்பகதூர் சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், மகாநாட்டின் தலைவர் காசிவாசி சிவஸ்ரீ ஈசான சிவசாரியார், மற்றும் பல முக்கியஸ்தர்கள் இன்று வந்து சேர்ந்தார்கள். வரவேற்புக் கழகத் தலைவர் ஸ்ரீ இராமலிங்கத் தம்பிரான், உபசரணைச் சங்கத் தலைவர் ஸ்ரீ அருணந்தித் தம்பிரான், பொதுக் காரிய தரிசி ஸ்ரீ மௌன - சோமசுந்தரத் தம்பிரான் மற்றும் ஸ்ரீ மடத்தின் உத்தியோகஸ்தர்கள் பிரதிநிதிகளை மிகவும் உபசரித்து வருகிறார்கள்.

மகாநாடு நாளையதினம் காலை 8-மணிக்கு மறுபடி ஆரம்பமாகிறது. மகாநாட்டின் வெற்றிக்குப் பிரார்த்தனை செய்து அநேகர் செய்திகள் அனுப்பியுள்ளார்கள்.

சுதேசமித்திரன், 31—8—41.

## SAIVA SIDDHANTHA CONFERENCE

The Meikandan Saiva Siddhantha Conference organised under the auspices of the Dharmapuram Adhinam, began to-day. There was a large gathering from all Tamil Districts.

Kasivasi Siva Sri Esana Sivachariar of Palni, President of the Conference, and Rao Bahadur C. M. Ramachandran chettiar, Commissioner, Hindu Religious Endowments Board, were accorded

a reception and taken in a procession to the Conference pandal. His Holiness the Mahasannidhanam of Dharmapuram Adhinam received the President and the Commissioner and blessed them.

Sri Arulnandhi Thambiran, President of the Reception Committee, welcomed the gathering.

Mr. C. M. Ramachandran Chettiar and Mr. K. Rangaswami Mudaliar spoke on the need for and usefulness of the Conference.

The President then gave a long and learned discourse on Saiva Siddhantham ( a system of Hiudu philosophy).

Messrs Vajiravel Mudaliar of Conjeevaram, Kannappa Mudaliar of Madras and Manikkavachaga Mudaliar of Arni spoke.

Later, there was a poor feeding on a large scale.

The Mail, 31—8—41.

### மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு,
### தருமபுரத்தில் கூட்டம்.

மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு நேற்று முன்தினம் காலை 8 மணிமுதல் ஆரம்பமாயிற்று. ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசன்னிதானம் மகாநாட்டில் பிரசன்னமாகி அமர்ந்த பிறகு திருமுறை ஓதல் நடந்தது. அதன்பின் மகாநாடு துவங்கியது. தென்னிந்தியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் பல பிரமுகர்கள் விஜயம் செய்திருந்தார்கள். மகாநாடு ஆரம்பித்ததும் ஸ்ரீ மகாசந்நிதானத்தின் பிரசங்கம் படிக்கப்பட்டது. மகாநாட்டின் தலைவருக்கு ஓர்வரவேற்புப் பத்திரமும் படித்துக் கொடுக்கப்பட்டது.

மகாநாட்டின் நோக்கங்களை விளக்கிக் காரியதரிசி ஸ்ரீ மௌன சோமசுந்தரத் தம்பிரான் பேசினார். இன்று மகாநாட்டுக்கு வந்திருந்த செய்திகள் படிக்கப்பட்டன. ஹிந்துமத பரிபாலன போர்டு கமிஷனர் C. M. இராமச்சந்திரன் செட்டியார் முதலில் பேசினார். இம்மாதிரி மகாநாடுகளால் ஏற்படக்கூடிய அனுகூலங்களை அவர் எடுத்துரைத்து விரிவாகப் பேசினார், பிறகு ஸ்ரீமான் K. அரங்கசாமி முதலியார் (Deputy Inspector of Local Boards) சமய மகாநாட்டின் அவசியத்தை வற்புறுத்திப் பேசினார்.

## தலைவர் பிரசங்கம்

மகாநாட்டின் தலைவர் காசிவாசி சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார் தமது அக்கிராசனப்பிரசங்கத்தைச் செய்தார். மகாநாட்டின் விசேஷம் ஆராய்ச்சியினால் விளையும் பயன் இவற்றை அவர் விரிவாக எடுத்துக் கூறினார். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் முயற்சி காரணமாகச் சமய நூல்கள் வெளியிடப்பட்டு வருகின்றனவென்றும் அவர் தெரிவித்தார்.

சிவஞானபோத சூத்திரத்தின் முதற் பகுதியைப்பற்றி ஸ்ரீமான்கள் முத்து. சு. மாணிக்கவாசக முதலியாரும், க. வச்சிரவேல் முதலியாரும் பிரசங்கம் செய்தனர்.

பிற்பகலில் மகாநாடு கூடியதும் ஸ்ரீமான்கள் கண்ணப்ப முதலியார், சமரபுரி முதலியார், A. முத்தையாபிள்ளை முதலியோர் சிவஞான சூத்திரங்கள் பற்றிப் பேசினர்.

மூன்றாம்நாள் நடவடிக்கைக்கு இராவ்பகதூர் சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் தலைமை வகித்தார்.

சமய உண்மைகளை நன்கு விளக்குவதற்கு இந்த முதல் மகாநாட்டைக் கூட்டியதற்காக ஸ்ரீ மகாசன்னிதானத்துக்கு நன்றி தெரிவிப்பதாயும், சமய உண்மைகளுக்குப் பலமளிப்பது ஆலயங்களும், மடாலயங்களுமே என்றும், இத்துறையில் இங்கு மடாதிபதிகள் செய்துவரும் தொண்டு அரியதாகுமென்றும், சமய நூல்கள் கிடைக்குமிடத்தை நாடிச்சென்று அவற்றைப் பெறவேண்டுமென்றும், ஆகம தேவாரப் பாடசாலைகள் ஏற்படவேண்டுமென்றும் அவர் விரிவாகப்பேசினார்.

சூத்திரங்களின் முக்கிய அம்சங்களைக் குறித்துப் பலர் பேசினர். தலைவர் முடிவுரைக்குப் பின் ஸ்ரீ மகாசன்னிதானத்தின் ஆசியுரை படிக்கப் பட்டது.

மகாநாடு இரவுடன் கலைந்தது. இன்று மகாநாட்டின் கடைசி நாள். இதற்குக் கோவை சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார் தலைமை வகித்தார். தலைவர் பேசியபின் ஸ்ரீமான்கள் எம். பாலசுப்ரமணிய முதலியார், டி. கே. சிதம்பரநாத முதலியார் முதலிய பல அறி

ஞர்கள் பிரசங்கங்கள் புரிந்தனர். தலைவர் முடிவுரைக்குப்பின் ஆசிச்
செய்தி படிக்கப்பட்டது. இத்துடன் மகாநாடு முடிவடைந்தது.

சுதேசமித்திரன், 3—9—1941.

## மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு

[ம. பாலசுப்பிரமணிய முதலியார்]

இப்பெயர்கொண்ட மகாநாடு மிகச் சிறப்பாக 1941 ௵ ஆகஸ்டு௴
28, 29, 30, 31-ம் தேதிகளில் தருமபுர மடாலயத்தில் நடந்தது. இம்
மகாநாட்டு நிகழ்ச்சி வரலாற்றைத் திருமடத்தினர் அன்புகூர்ந்தெழுதி
யனுப்பி நமது பத்திரிகையில் வெளிவருதற்குத் துணைசெய்தனர். இவ்
வரலாறு இரண்டாம் பகுதியாகச் சேர்க்கப்பெற்றுள்ளது. இதிலிருந்து
இம்மகாநாடு நமது சென்னை மாகாணம் முழுமையும் விளம்பரம் செய்யப்
பெற்று இதற்குரிய வேலைகள் ஏறக்குறைய நான்கு மாதங்களாக நடை
பெற்றன. நமது சமாஜம் திருமடத்தினரோடு வேண்டியவாறெல்லாம் ஒத்
துழைத்தது. சமாஜத்தலைவர், உதவித்தலைவர், காரியதரிசி, பத்திராசிரியர்,
உதவிப் பத்திராசிரியர், நிர்வாகசபையினருட் பெரும்பான்மையோர், அங்
கத்தினர் பலர் நேரிற் சென்று மகாநாட்டிற் கலந்துகொண்டனர். மகா
நாட்டுக்குச் சென்றோர்க்கு அன்பு கனிந்த உபசரிப்பு அளிக்கப்பட்டது.
எல்லோரும் கண்ணாரக்கண்டு செவியாரக்கேட்டு வயிறார உண்டு
வாயாரப் புகழ்ந்து வாழ்த்தினார்கள் என்பது உண்மையேயாகும்.

மகாவித்வான் மீனாக்ஷி சுந்தரம்பிள்ளையவர்கள் “சோறு மணக்
கும் மடங்களெலாம்” என்றனர். சோறு என்பதற்கு உணவு, மோக்ஷம்
என்ற இரண்டு பொருளுண்டு. ‘இம்மையே தரும் சோறும் கூறையும்’,
‘பாதகமே பற்றினவா தோணோக்கம்” என்ற அருள் வாக்குக்களால்
இஃது அறியப்படும். தருமபுரத் திருமடத்தில் இவ்விருவகைச் சோறும்
தனிமணம் வீசி யாண்டும் சிவமணமே கமழ்ந்தது. இம்மகாநாட்டுப்
பிரசங்க மேடைக்கெதிரில் “மடங்களைப்பற்றி இம்மகாநாட்டில் பேசுவது
பொருத்தமாகாது. இங்கே பிற மடங்களைக் குறைகூற அனுமதிப்பது எங்களுக்
கழகல்ல. இதைக் கருத்திற்கொண்டு பேசும்படி விரும்பப்படுகிறது-காரியதரிசி”
என்று எழுதப்பட்டிருந்த எச்சரிக்கை தொடக்கத்தில் சிறிது வியப்பை
விளைவித்ததேனும், விரைவில் மகாநாட்டின் நடைமுறையின் செம்மை,
உபசரிப்பின் மேன்மை முதலியன எல்லோருள்ளத்தையும் கொள்ளை
கொண்டுவிட்டன.

சமாஜத் தலைவரவர்களுடன் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமவர்களைத் தனியே கலந்துபேசும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது. அப்போது நிகழ்ந்த சம்பாஷணையிலிருந்து இத்திருமடத்துத் தலைவரவர்கள் சமயப் பிரசாரம் செய்வதில் நிரம்பிய ஊக்கமுடையவர்களென்பதும், எடுத்த காரியங்களை மிகச் செம்மையாகச் செய்து முடிக்கும் பேராற்றல் வாய்ந்தவர்களென்பதும், தகுதியுள்ளவர்கள் செய்யும் விண்ணப்பங்களை ஏற்றுக்கொள்ளும் மனப்பான்மை யுடைவர்களென்பதும், இத்தகைய மகாநாடுகளை அவ்வப்போது கூட்டுவிக்கும் உறுதிகொண்டுள்ளவர்களென்பதும் பிறவும் நன்குபுலனாயின.

சைவசமயத்துக்கு நல்ல காலம் வந்துள்ளதென்று மகாநாட்டுக்கு வந்தோர் பலர் மகிழ்ந்து கூறினர். இந்த நல்ல காலம் விரைவில் மாறாது நீடித்திருந்து திருமடங்கள் சைவத்தொண்டர்கட்கு முன்னணியில் நின்று, பிறசமயிகள் செய்கின்ற வேலைகட்குப் பதின்மடங்கு வேலைகளைச் செய்து, பொன்றாப்புகழையும் குன்றாத புண்ணியத்தையும் பெறுமாறு முழுமுதற் கடவுள் அருள்புரிவாராக. தருமபுரம் வாழி! திருமடத்துத் தலைவர் வாழி! திருத்தொண்டர்கள் வாழி!

(இரண்டாம் பகுதி)

சீர் சிறந்த செந்தமிழ் நாட்டுக்கே மேலான சிறப்பை நன்கு விளைவித்த இம்மகாநாடு நிகழும் விஷு ஆண்டு ஆவணித்திங்கள் 12, 13, 14, 15-ம் நாட்களில் வியாழன், வெள்ளி, சனி, ஞாயிற்றுக்கிழமைகளில் (1941-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 28, 29, 30, 31) தருமபுர ஆதீனம் 24-வது மகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக சுவாமிகளின் பேராதரவில் ஆதிதருமூர்த்தி ஸ்ரீ குருஞானசம்பந்தர் ஆலயத்தில் நன்கு அலங்கரிக்கப்பெற்ற திருப்பந்தலில் நடைபெற்றது. தமிழ் நாட்டின் நான்கு பக்கங்களிலிருந்தும், யாழ்ப்பாணத்திலிருந்தும் சைவசீலமும், தமிழறிவும், சிவஞானமும் நிரம்பிய புலவர் பெருமக்களும், தமிழன்பர்களும், சைவப்பற்றுடைய பெருநிலக்கிழார்களும், அறிஞர்களும் பெருங்கூட்டமாக வந்து அருமையாக நிகழ்த்திய பிரசங்கங்களைக்கேட்டு இதயம் பூரித்தனர்.

தருமபுர ஆதீனத் திருமடாலயத்துள்ளும் வீடுகளிலும் திருவீதிகளிலும் சைவமணமும், தமிழ்மணமுமே வீசிக்கொண்டிருந்தன. அன்றியும் ஒவ்வொருவர் வாயிலும் சைவமணமும் தமிழ்மணமும்

ஒருங்கே செழுமிய பெரியதொரு மகாநாடு தமிழ்நாட்டில் எங்குமே இவ்வளவு செம்மையாகக் கோலாகல வைபவத்துடன் அழகாக நிகழ்ந்த தில்லை என்னும் சொல்லே பெருஞ் சொல்லாக முழங்கிக் கொண்டிருந்தது. மெய்கண்ட சித்தாந்த மகாநாட்டைக்கண்டு களிக்க வந்த யாவருக்கும் உரிய காலத்தில் அன்புமொழியும் உபசாரமாக நான்கு நாட்களும் காலை மாலைகளில் சிற்றுண்டிகளும் பகல் இரவுகளில் அறுசுவையுடன் கூடிய நல்லுணவும் பாயாச பலகாரங்களுடன் நன்கு வழங்கப்பட்டன. இரவு பகலின் பாலும் தரப்பட்டது நிர்வாக சக்தியும் அநுபவமும் பெற்ற அடியார்குழாங்கள் காரியஸ்தர்களுடைய மேற்பார்வையில் ஒழுங்கான முறையில் எல்லா விஷயங்களையும் குறையென்பதின்றி நிறைவுடன் நிகழ்த்தியது பெரிதும் பாராட்டற்குரியது. ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் தேர்ந்த நிர்க்காலோசனையும், திறமைமிக்க கண்ணோட்டமும் அன்பு கனிந்த கவனிப்புமே இத்துணைச் சிறப்பிற்கும் காரணம் எனக் கூறின் அது மிகையாகாது. சுருங்கக்கூறின் மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு பெரிய சிறப்பில் மகிழ்ச்சி பொங்கும் வகையில் தமிழ்மணமும், சைவமணமும் இனிது கமழ, தெய்வ மகாசபையாக விளங்கியும் கண்டார் கண்ணிற்கும் மனதிற்கும் செவிக்கும் தேக்கித் திளைக்கும் இன்ப விருந்தாக இருந்ததென்றே கூறவேண்டும்.

மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு முதல் நாள் 28—8—41 வியாழக்கிழமை நிகழ்ச்சிகள்:-

ஆதி குருமூர்த்தி ஸ்ரீ குருஞானசம்பந்தர் ஆலயத்தில அமைந்த மகாநாட்டு மண்டபத்தில ஸ்ரீ பொல்லாப்பிள்ளையார் கல்லால் நிழலில் சந்தான முதற் குரவர்க்குச் சிவஞானபோத உபதேசம், சமயாசாரியார், மெய்கண்டதேவர் ஆகியவருடைய திருவுருவப்படப் பிரதிட்டையும் ஆதிகுரவர் ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக மூர்த்திகளுக்கு அபிடேக ஆராதனை வழிபாடும் நிகழப்பெற்றுச் சபையார்களுக்குச் சித்தாந்த சைவ வினாவிடை என்னும் புத்தகம் இலவசமாக வழங்கப் பெற்றது.

இரண்டாம் நாள் 29—8—41 வெள்ளிக்கிழமை நிகழ்ச்சிகள்:—

மெய்கண்டான் சித்தாந்த மகாநாட்டுத் தலைவர், காசிவாசி சிவ ஸ்ரீ ஈசான சிவாசாரியார் அவர்களையும், சென்னை H. R. E. Board கமிஷனர் இராவ்பகதூர் திரு C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் B. A., B. L., அவர்களையும் மகாநாட்டு மண்டபத்திற்கு ஆதீன தேவாரப் பாடசாலையிலிருந்து இனிய வாத்திய கோஷ்டியுடன் அழைத்தலும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் மகாநாட்டு மண்டபத்திற்கு

எழுந்தருளுதலும் நிகழ்ந்த பின்னர், இன்னேசை மிக்க தேவாரப் பண்ணேசை இன்னிசைக் கருவிகளுடன் இனிதொலிக்க, ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானம் மகாநாட்டைத் திறந்தருளியதும், திறப்புரை வழங்கப்பெற்றது.

வழிமொழியாகக் காரியதரிசி ஸ்ரீ மௌன சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் 'மெய்கண்டான் சித்தாந்தம்' பற்றி விளக்கிப் பேசினர். திருவாளர் இராவ்பகதூர் C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்களும், திருச்சி திருவாளர் அரங்கசாமி முதலியார் அவர்களும், (Deputy Inspector of Local Boards and Municipal Councils) சார்புரை மொழிந்தார்கள்.

சார்புரையில் திரு. இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்கள் இவ்வாதீனத்தில் இம்மகாநாட்டைக் கூட்டிச் சிறந்த முறையில் அழகாக நடத்திக்காட்டிய மாண்பு மகாசந்நிதானத்துக் குரித்தானது என்றும், இம்மகாநாடு வழிகாட்டியாக இருந்து பல மகாநாடுகளை நடத்த மற்றவர்களுக்கும் ஊக்கமும் உணர்வும் கொடுக்கக்கூடியதென்றும், இது முதல் மகாநடாக இருந்தபோதிலும் முதல்தர மகாநாடாக நடத்தப் பெற்றதுபற்றி மிக மகிழ்ச்சியுறுவதாகவும் பேசினுர்கள். ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் நகரசபைகளுக்கும் உதவி இன்ஸ்பெக்டர் திரு அரங்கசாமி முதலியார் அவர்களுடைய சார்புரையில் தமிழ்நாட்டுக்கே மிகுந்த பெருமை தரத்தக்க முறையில், இந்த மகாநாடு சைவத்தில் மிக்கதோர் ஊக்கமும் பற்றுதலும் உண்டாக்கும் என்றும் பல பேரறிஞர்களை ஒருசேரக் காணும் காட்சி 'சைவநெறி தழைத்தோங்க அறிகுறி' என்றும் கூறி, இம்மகாநாட்டைக் கூட்டி இவ்வளவு செம்மையாக நடத்திக் காட்டும் மகாசன்னிதானத்துக்கு நன்றிகூறி முடித்தார்.

பின்னர் பழநி வேதாகமபாடசாலைத் தலைமை ஆசிரியராகிய காசிவாசி சென்னிமலை சிவஸ்ரீ ஈசானசிவாசாரியார் அவர்களுக்கு வரவேற்புப் பத்திரம் ஆதீனத் திருக்கூட்டத்து ஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமிகளால் மகாசன்னிதானத்தின் திருவுளப்படி வாசித்தளிக்கப் பட்டது.

அவர்கள் தலைமைதாங்கி, இக்காலத்தில் தமிழகத்தில் விவாதத்திலிருக்கின்ற வடமொழி சிவஞானபோத முதல்நூலைப்பற்றிய ஆசங்கைகட்கு வடமொழி தென்மொழி நூல்களிலிருந்து சிறந்த ஆதாரங்களை

அறிஞர்கள் சரியென்று ஒப்பும் வகையில் திறமையாக எடுத்துக் கூறியும் ஒற்றுமை நயங்களை அழகுபெற எடுத்துக்காட்டியும் தலைமையுரை மொழிந்தனர். இவரது அருமைமிகுந்த சொற்பொழிவு மெய்கண்டான் சித்தாந்த மகாநாட்டுக்கே தனிப்பெருஞ் சிறப்பை விளைவித்தது மகிழ்ச்சிக்குரியது.

பின்னர் முதல் சூத்திரத்தைப்பற்றி முறையே திருவாளர்கள் ஆரணி முத்து சு. மாணிக்கவாசக முதலியார், காஞ்சிபுரம் வச்சிரவேல் முதலியார் B.A.,L.T., சென்னை பாரிப்பாக்கம் கண்ணப்ப முதலியார், தாம்பரம் பூ. சமரபுரிமுதலியார் ஆகியவர்கள் ஒருவர் கூறியதை மற்றொருவர் கூறாமல் அவரவர்களும் தாம் தாம் நுணுகி ஆராய்ந்த சாத்திர சாரங்களை எளிய நடையில் சபையில் எடுத்துச் சொன்னார்கள். இரண்டாம் சூத்திரம்பற்றி நெல்லைப் பேரறிஞர் A, முத்தையாபிள்ளை அவர்கள், B.A.,B.L., தெளிந்த கருத்துக்களை வெளியிட்டார்கள். மூன்றாம் சூத்திரம்பற்றி ஜலகண்டபுரம் அ. வரதநஞ்சையபிள்ளை அவர்கள் தம் முதுமொழிகளை வெகுவேகமாகச் சபையார்க்கு நகைப்பு வரத்தக்க முறையில் மொழிந்தார்கள். திருவாரூர், வித்துவான் S. தண்டபாணி தேசிகர் நான்காம் சூத்திரம்பற்றி எழுதி அனுப்பிய கட்டுரையைத் தழுவி இனிய மொழிகளால் பேசினார்கள். ஐந்தாவது ஆறாவது சூத்திரங்களைப்பற்றி அரும்பொருட் சீரிய மொழிகளோடு எழுதியனுப்பி அச்சிட்டிருந்ததையொட்டி திருநெல்வேலி அ. முத்தையாபிள்ளை அவர்கள் ஆழ்ந்த கருத்துக்கள் தெளிவுறும்படிக் கூறினார்கள். தலைவர் முடிவுரை, திருமுறைப் பாராயணம் நடக்கச் சபை கலைந்தது. மாலை அநுட்டானுதிகளை முடித்துக்கொண்டு அனைவரும் மறுபடியும் கூடினார்கள். திருச்சி தங்கசாமி பிள்ளை யோகாசனங்களைப் போட்டுக் காண்பித்து அநுட்பங்களை எடுத்துக் கூறினார். அவர் மாணவர் சிதம்பரம் N. தண்டபாணி பிள்ளை அவர்கள் யோகாசன உட்கருத்துக்களைப்பற்றிப் பாராட்டிப் பேசினார்.

மூன்றாம் நாள் *30—8—41* சனிக்கிழமை நிகழ்ச்சிகள்:—

இன்றைய தினம் தலைமை வகிக்கும் இராவ்பகதூர் C. M. இராமச்சந்திரஞ் செட்டியார் அவர்களை ஆதீன தேவார பாடசாலையிலிருந்து சகல மரியாதைகளுடன் மகாநாட்டு மண்டபத்துக்கு அழைத்துவந்து அப்போது அங்கெழுந்தருளிய மகாசந்நிதானத்தால் வரவேற்கப்பெற்று ஆதீனம் அடியார் குழாத்துள் ஒருவராகிய வெகுருநாதத் தம்பிரான் சுவாமிகளால் மகாசந்நிதானத்தின் திருவுளப்படி வரவேற்புப் பத்திரம்

வாசித்து அளிக்கப்பட்டது. அவைத்தலைமை தாங்கிச் சமய சம்பந்தமான மகாநாடுகளின் அவசியத்தையும், பயனையும் எடுத்துக்கூறி இம்மகாநாடு இனிமேல் நிகழவேண்டிய சைவசமய மகாநாடுகளுக்கெல்லாம் எடுத்துக் காட்டாக அமைந்துள்ள சிறப்பையும் அழகாகப் பேரானந்த முகமலர்ச்சியுடன் விரித்துரைத்தனர். ஆழ்ந்து படித்துச் சிந்தித்தால்தான் சித்தாந்தக் கருத்துக்களை நன்றாய் அனுபவிக்க முடியுமென்று சிறுகதைமூலம் விளக்கினர். பின்னர் ஏழாஞ்சூத்திரக் கட்டுரை எழுதியனுப்பிய திருநெல்வேலி மா. வெ. நெல்லையப்ப பிள்ளை B. A. அவர்கள் தம் தளர்ந்த வயதில் ஆர்வத்தோடும் அன்போடும் சுருக்கமாக அச்சூத்திர அரிய விஷயங்களை அழுத்தமாகக் கூறினர்கள். இவர்கள் கட்டுரை அச்சாகியிருந்து சபையோருக்கு வழங்கப்பட்டது. எட்டாம் சூத்திரத்தின் பொருளையும் கருத்தையும் நயம் மலியத் திருவையாறு தமிழ்க் கல்லூரி வித்துவான் இராம. கோவிந்தசாமி பிள்ளை, விழுப்புரம் முனிசிபல் கமிஷனர், கி. இராமலிங்க முதலியார் B. A., குளித்தலை அரங்கசாமி அய்யர் B.A., ஆகிய இவர்கள் மூவரும் பேசினர்கள். ஒன்பதாம் சூத்திரத்தை ஔவை துரைசாமிப்பிள்ளை அவர்கள் திண்ணியமொழிகளால் உதாரண மேற்கோள்களுடன் பேசினர்கள். யாழ்ப்பாணம் சிவஸ்ரீ ச. குமரசாமி குருக்கள் எழுதியனுப்பிய ஒன்பதாஞ் சூத்திரக் கட்டுரை அச்சிட்டு வழங்கப்பட்டது. பத்தாவது சூத்திரத்தைப் பற்றித் துடிசைக் கிழார் அ. சிதம்பரனுரும், திருவையாறு வித்வான் சோமசுந்தர தேசிகரும் பொருள் நயம், கருத்து நயம்பொலிய எடுத்துப் பேசினர்கள்.

மாலை நான்கு மணிக்கு மறுபடி சபை கூடினதும் சென்னை சோமசுந்தரனர் அருந்தவச் சிறுமி மீனாட்சியம்மை, மெய்கண்டார் அருளிய சிவஞானபோத மூல நூலை உரையோடு மனப்பாடமாக அழகாக உரைத்தது சபையோருக்கு உவகையுண்டுபண்ணியது. உத்திரமேரூர் பாடசாலை ஆசிரியர் ஆ. ஈசுரமூர்த்திபிள்ளை எழுதியனுப்பிய 10,11,12, சூத்திரக் கட்டுரைகள் அச்சிட்டவை சபையில் வழங்கப்பட்டன. பதினேராவது சூத்திரத்தைக் காஞ்சி வச்சிரவேல் முதலியார் B.A.,L.T., எடுத்துக் கம்பிர முறையில் சித்தாந்த நயங்களை விளக்கமாய் மொழிந்தார்கள். அதையொட்டியே ஜலகண்டபுரம் வரதநஞ்சைய பிள்ளையும், முதுமைப் பருவம் தோன்றுத நிலையிற் சொற்களை அடுக்கடுக்காக எடுத்துச் சைவ சமயப்பற்றேடு, சிவபெருமான் உலகை நடத்துவதுபோல் மகாநாட்டை மகாசந்நிதானத்தில் நடத்திக் காட்டுவதாக உவமை கூறி, விளங்கவைத்தார்கள். திருவையாறு சுந்தரேச வாண்டையாரும் அச்சூத்திர நயங்களைப்பற்றிப் பேசினர். தேவகோட்டை பாலகவி வயினாகரம்,

இராமநாதஞ் செட்டியார் பன்னிரண்டாவது சூத்திரத்திற்கூறிய கருத்துக்களைத் தனது இனிய வசனங்களால் கேட்போர் மனங்குளிர எடுத்துரைத்தார்கள். ஈசுரமூர்த்தி பிள்ளையும் தன்கட்டுரையைத் தழுவிப் பேசினர்.

சென்னை சர்வகலாசாலைத் தமிழ்ப்பகுதித் தலைவர் இராவ்சாகிப் திரு. S. வையாபுரிப்பிள்ளை B.A., B.L., அவர்கள் எழுதி அச்சிட்டிருந்த சைவசமயம் பற்றிய ஆங்கிலக்கட்டுரை வழங்கப் பெற்றது.

சென்னை சைவசித்தாந்த மகாசமாஜக் காரியதரிசி திரு ம. பாலசுப்ரமண்ய முதலியார் அவர்கள் எழுதியனுப்பியுள்ள ஆங்கிலக் கட்டுரையைத் தழுவிச் செந்தமிழில் சித்தாந்த கருத்துக்கள் மனதில் படும்படி விந்நியாசமாகப் பேசினர்.

சென்னை Queen Mary's College Physics Professor E. T. இராஜேஸ்வரி அம்மாள் எழுதிய ஆங்கிலக் கட்டுரை அச்சிட்டுச் சபையோருக்கு வழங்கப்பெற்றது. அதன் சாராம்சத்தைப்பற்றித் தலைவரவர்கள் சபைக்கு எடுத்துச் சொன்னார்கள்.

தலைவரவர்கள் முடிப்புரை கூறிப் பேரானந்தம் அடைந்தார்கள். சபை கலைந்து மறுபடியும் கூடியது. இரவு 8-மணிக்குமேல் சென்னை திருப்புகழ்மணி பிர்மஸ்ரீ T. M. கிருஷ்ணசாமி ஐயரவர்கள் இன்னிசைக் கருவிகளுடன் 'சிவகருணை' என்னும் பொருள்பற்றிச் சத்கதா காலக்ஷேபஞ் செய்தனர். எல்லோரும் கேட்டு இன்புற்றனர். தலைவர் சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார் மகாநாட்டு முடிப்புரை கூறினர். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானத்தின் ஆசிகூறி, ஆசியுரை வழங்கப்பெற்றது. தேவார இன்னிசையில் சித்தாந்த மகாநாடு முடிவடைந்தது.

## திருமுறைத் திருவிழா நிகழ்ச்சிகள்

31—8—41 ஞாயிற்றுக்கிழமை காலை எட்டுமணிக்கு விழாவுக்குத் தலைவரான சைவத் திருமான் சிவக்கவிமணி C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்களை ஆதீனத் தேவாரப் பாடசாலையினின்றும் வாத்தியங்களுடன் மகாநாட்டுப் பந்தலுக்கு அழைத்துவந்து வரவேற்புரை வாசித்துக் கொடுத்தபின் அவர் தலைமைபூண்டு தமது முன்னுரையில் திருமுறைகளின் சிறப்பையும் அது அமைந்த திருநாளின் விசேடத்தையும், திரு

முறைகளில் அமைந்திருக்கும் அரும் பெரும் விஷயங்களையும் மற்றும் பல செய்திகளையும் அன்புததும்பவும் உள்ளம் உருகவும் கேட்போர் சிரக் கம்பர், கரக்கம்பம் செய்யவும் அழகானமேற்கோளுடனும், இனிமையுடனும் எடுத்துமொழிந்து வியக்கச் செய்தனர். இடையிடையே தேவாரப் பாடல்கள் இசையுடன் பாடப்பட்டன. தலைவர் முன்னுரை நிகழ்த்துகையில் ஆதீனத்தாரால் வெளியிடப்பெற்ற நால்வர் சரித்திரம் யாவருக்கும் இலவசமாக வழங்கப்பெற்றது. பின்னர் அவர் தலைமையின் கீழ்ப் புலவர் பெருமக்கள் பன்னிரு திருமுறைகளையும் ஒவ்வொருவரும் தனித் தனியாக ஒவ்வொரு திருமுறைபற்றி அழகுபெறப் பேசினர். இவர்கள் திருவாளர்கள் சென்னை சச்சிதானந்தம் பிள்ளை B.A., L.T., வையாபுரிப் பிள்ளை, B.A.B.L., M. பாலசுப்ரமண்ய முதலியார் B.A., B.L. (சைவ சித்தாந்த மகாசமாஜக் காரிதரிசி), T. K. சிதம்பரநாத முதலியார் B.A.B.L' காஞ்சிபுரம் சச்சிரவேல் முதலியார் B.A., L.T., அரியலூர் தமிழாசிரியர் அ. சரவணமுதலியார், ஜலகண்டபுரம் வரதநஞ்சய பிள்ளை, தேவ கோட்டை தனவணிகர் பாலகவி இராமநாதஞ் செட்டியார், M. அருணை ஜலம்பிள்ளை M.A., சென்னை R. சண்முகசுந்தரஞ் செட்டியார், K. சுப்ர மண்ய பிள்ளை, M.A., M.L., நாகப்பட்டணம் ஷண்முகதேசிகர் முதலானோ ராவர்.

இரவு 10-மணிக்குத் தலைவரவர்கள் சொற்பொழிவாளர்களின் திறமையையும், அவர்கள் பேசிய விஷயங்களின் அருமையையும், விளக்கியும் பாராட்டியும் பேசினார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் மகாநாடு சிறப்புற நடந்ததுபற்றிச் சிவபெருமான் திருவருளைப் போற்றி அதில் நிகழ்த்தப்பட்ட சைவ நற் சொற்பொழிவுகளைக் கேட்டதேயல்லாமல் சிந்தித்து நற்பயன் எய்துமாறு சபையோருக்கு ஆசி கூறினார்கள். பிறகு பொதுக் காரியதரிசி ஸ்ரீ மௌன சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் மகாநாட்டுக்கு வந்து சிறப்பித்த அன்பர்களுக்கு நன்றியறி தலைத் தெரிவித்து, ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் திருவுளப்பாங்கின் படி மகாநாடு சிறப்புற நிகழ்ந்தமையையும், ஆதிமூர்த்திகளின் குருவருளையும், சொக்கலிங்கப் பெருமான் திருவருளையும் சிந்தித்துப் பிரார்த்தித்தனர்.

இதன் பின்னர் இரவு பதினொரு மணிக்கு நன்றாக அலங்கரிக்கப் பெற்ற வெள்ளிரதத்தில் ஸ்ரீ சமயாசாரியார் நால்வர் திருவுருவப் படத்தையும், ஆதீனத் திருமுறைச் சுவடிகளையும், எழுந்தருளுவித்து அரனடியார்கள் பின்தொடர, தமிழ் இசைமணி திரு. சுந்தர ஓதுவா

மூர்த்திகள், வேதாரண்யம் அருணாசல தேசிகர் முதலிய வெளியூர் ஓதுவா மூர்த்திகளும், ஆதீன ஓதுவார் மூர்த்திகளும், தேவாரப் பாடசாலை மாணவர்களும் தேவாரப் பண்களை இன்னிசை பொலிய இசைக் கருவிகளுடன் பாடிவர, எடுபிடி சாமான்கள் வரிசைபெற முன் செல்லத் திருவெண்காடு T. P. சுப்ரமண்யம் கோஷ்டி நாதசுர வாத்தியம் முழங்கத் திருவீதிகள் வலம் வந்து திருமுறைக் காட்சிப் புகைப்பட நிகழ்ச்சிக்குப் பிறகு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் திருமுன்னர் சிவக்கவிமணி C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள் பன்னிரு திருமுறை விழாப் பெருமையை இனிதெடுத்து விளம்பியும், வேதாரண்யம் பிரதோஷ மடம் அதிபர் ஸ்ரீ சுப்பையா பட்டாரகர், சரக்கொன்றை மலர்க்கும் பஞ்சாக்ஷரத்திற்கும் பொருந்திய சம்பந்தத்தை அம்மலரைக் கொண்டே விளக்கிக் காட்டியும் முடிந்த பின்னர் சமயாசாரியர் திருவுருவப் படத்தையும் திருமுறைகளையும் திருக்கூட்டம் சூழ்ந்துவரத் தேவார இன்னிசைகளுடன் எழுந்தருளச் செய்து ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் திருச்சந்நிதானத்தைச் சார்ந்து ஆராதனை செய்து ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் யாவருக்கும் தம் திருக்கரத்தால் திருவெண்ணீறு வழங்கினர். திருநந்தி தேவர் சிவபெருமானிடம் அருளிச் செய்யும்படி விண்ணப்பித்துக் கொண்ட பதினாறு பேறுகள் துண்டுப்பிரசுரம் வழங்கப் பெற்றது.

அன்பர்கள் அனைவரும் திருவருள் கவசமாக வணிந்து சிவபுண்ணியப் பெரும்பேறெய்தி இன்புற்றிருந்தனர். திருமுறை விழாவும் இனிது நிறைவேறியது. பொங்கும் மங்களம் எங்கும் தங்குக! மெய்கண்டான் திருவடி வாழ்க!

**ஏற்பாடுகள்:—** தஞ்சை ஜில்லாவில் தருமபுரம் ஒரு சிறு கிராமம். மாயவரத்துக்கு ஈசான திசையில் காவிரியின்தென்பா லமைந்திருக்கிறது. நாற்புறமும் வளம்மிக்க நெல் வயல்களாலும் சோலைகளாலும் சூழப்பெற்றுள்ளது. சாந்தமும் சீலமும் ஒருங்கே அமையப்பெற்றது. புலவர் பெருமக்கள் வருணிப்பது போலக் கயிலையாகத் திகழ்வது. மாயவரம் தரங்கம்பாடி கற்சாலையிலிருந்து இங்குவர ஒரு கிளைப் பாதை அமைந்திருக்கிறது. ஊரின் மத்தியில் திலகமெனத் தருமபுரம் ஆதீன மடாலயம் அமைந்திருப்பது ஊருக்கு ஒரு கம்பீரத்தோற்றத்தை அளிக்கிறது.

மகாநாடு கூடுவதைப்பற்றி முன்னுடியே சுவர்ப் பத்திரிகைகள் மூலமும், துண்டுப்பிரசுரங்கள் மூலமும், ஆங்கிலம், தமிழ்த்தினசரிகள் மூலமும் பிரசித்தப்படுத்தப்பட்டிருந்தது. ஆயிரக்கணக்கானவர்களுக்கு நிகழ்ச்சிக் குறிப்பும், அழைப்பும் அனுப்பப்பட்டிருந்தன.

கற்சாலையிலிருந்து இவ்வூருக்குப் பாதை பிரியுமிடத்தில் ஒரு பெரிய வளைவு போடப்பட்டிருந்தது. அதில் பொன்னெழுத்துக்களில் மகாநாடு நடக்குஞ்செய்தி எழுதியிருந்ததும் தவிர,

காகமுறவு கலந்துண்ணக் கண்டீர் அகண்டா காரசிவ
போகமெனும் பேரின்ப வெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமா
யேகவுருவாய்க் கிடக்குதையோ! இன்புற்றிட நாமினியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேரவாரும் சகத்தீரே.

என்னும் பாசுரமும் பொறித்திருந்தது சாலையில் போவோர் வருவோரை இம்மகாநாட்டைக் கண்டு களித்துக் கேட்டு இன்புறக் கூவி அழைப்பது போல் அமைந்திருந்தது. அதிலிருந்து மகாநாட்டுக் கொட்டகைவரையிலும் இருமருங்கிலும் மகரதோரணங்கள் கட்டப்பெற்றிருந்தன. நடுநடுவே தோத்திரப் பாக்களமைந்த வளைவுகள் அமைக்கப்பெற்றிருந்தன. மகா நாட்டுப் பந்தல் ஒலிமுகம் கயிலைக்கோபுரமோ என ஐயுறத்தக்க முறையில் அமைக்கப்பெற்றிருந்தது.

ஆதீன ஆதிஸ்தாபகர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் ஆலயத்தில் ஆயிரக் கணக்கான மக்கள் அமைதியாக இருந்துகேட்க வசதி தரத்தக்க ஒரு பெரும் கொட்டகை அமைக்கப் பெற்றிருந்தது. மகாநாட்டுக் கொட்டகையில் தொங்கல்களும் துகிற்றோரணங்களும் விடப்பட்டிருந்ததும் தவிர விண்மீன்களெனத்திகழ் மின்னொளி விளக்குகள் அமைக்கப் பெற்றிருந் தன. சொற்பொழிவுகளை அப்பெரும் கூட்டத்தினர் நன்கு கேட்டு உணரத்தக்கதாக வேண்டியபடி இரண்டு இடங்களில் ஒலிபரப்பிகள் அமைக்கப்பெற்றிருந்தன. மகாநாட்டுத் தலைவர்கள் தங்குமிடங்களும் பெருநிலக்கிழார்கள், புலவர் பெருமக்கள் முதலியோரும் ஏனையோரும் தங்க அவ்வவருக்கு வசதியான விடுதிகளும் ஏற்பாடு செய்யப்பட்டு ஏற்ற முறையில் அலங்கரிக்கப் பெற்றிருந்தன. வந்திருந்தோர்க்கு உண வருந்தப் போஜன சாலைகளும் அமைக்கப் பெற்றிருந்தன. அவரவர் விருப் பின்படித் தங்கள் தங்கள் விடுதிகளிலும் சாப்பாட்டு விடுதிகளிலும் சிற்றுண்டி முதலிய ஆகாரங்கள் வழங்க ஏற்பாடாகியிருந்தது. வேண்டு வோருக்குப் பாயுந் தலையணையுங்கூட வழங்கப்பட்டது. "சம்பந்தன் பதி மடத்தில் கவுளி உரைத்திடும் பதிபசுபாசப் பனுவலுமே" என்று கர்ண

பாம்பரையாகத் திருநாடகத்தைப்பற்றிச் சொல்லும் செய்தி ஒன்று உண்டு. அதைப்பொய்த்து அவைகள் உயிருள்ளவைகள், உயிரற்றவைகளாகிய நாங்களும் பதிபசுபாசம் சொல்லவல்லேம் என்று மொழிவான்போலப் பந்தற் கால்களிலும், பிற இடங்களிலும் பாமரரும் அறிந்துகொள்ளும் வண்ணம் எளிய நடையிலமைந்த சைவநீதிமொழி அட்டைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. இவைகளையெல்லாம் பார்த்த பெரியார் இந்நகரில் எங்கணும் சைவமணமும் தமிழ்மணமும் வீசிக்கொண்டிருந்தன என்று சொல்லிக்கொண்டிருந்தது மிகையாகாததே.

வந்திருந்தாருக்குப் பல் துலக்க ஆல், வேல், பூலா, வேம்பு முதலிய பற்குச்சிகளும், பற்பொடிகளும், தேய்த்துக்கொண்டு ஸ்நானம் செய்ய எண்ணெய், சீயக்காய் முதலியனவும் வழங்கப்பெற்றதுடன், க்ஷவரம் செய்துகொள்ளுவோருக்கு நாவிதனும், துணி துவைக்க வண்ணானும், வெந்நீரில் ஸ்நானம் செய்வோருக்கெனத் தனியிடமும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. வந்திருந்தோர் தங்கள் தங்கள் சொந்த வீட்டிற்கூட இவ்வளவு வசதிகளில்லை என்று சொல்லும்படியாயிற்று. பிற ஊர்களிலிருந்து வருவோர்க்கு வேண்டும் தகவல்கள் கொடுக்கத் தனியாகச் சிப்பந்திகளும் (Enquiry Office) நியமிக்கப்பட்டிருந்தனர். மகாநாட்டுக்கு வருவோர் போவோருக்கு வண்டி வாகனாதிகளும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன.

வீதிகளைத் தினமும் இருமுறை சுத்தம் செய்து தண்ணீர் தெளிக்கவும் இதர சுகாதார வசதிகளைக் கவனிக்கவும் வேண்டும் சிப்பந்திகள் நியமிக்கப்பட்டிருந்தனர். மகாநாட்டு மண்டபத்தில் நடுவே சந்தான முதற் குரவர் சிவஞானபோத உபதேசம், ஸ்ரீ பொல்லாப் பிள்ளையார், சமயாசாரியர், ஸ்ரீ மெய்கண்டார் இவர்கள் திருவுருவப்படங்கள் அமைத்து வைக்கப்பெற்றிருந்தன. அதன் மத்தியில் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானமவர்கள் அடியார் குழாங்கள் சூழ எழுந்தருளியிருந்தும், ஒருபுடை மகாநாட்டுத் தலைவர்கள் பிரசங்கிகள், மற்றொருபுறம் சிவசின்னங்கள் அணிந்து ஓதுவா மூர்த்திகளும் மேடைகள் மீதும், சபையில் புலவர் பெருமக்களும் பெரு நிலக் கிழார்களும், பெண்மணிகளும், மற்றையோரும் கெழுமி இருந்தது பார்க்கத் தெவிட்டாத கயிலைக் காட்சியாகவே திகழ்ந்தது. பிரசங்கம் நடக்குங்கால் அவரவர் விருப்பம் தெரிந்து சுக்குவெந்நீர், சுத்தஜலம், நீர்மோர், சோடா, கலர் முதலிய பான வகைகள் கொடுத்துக்கொண்டேயிருக்கவும் ஏற்பாடாகியிருந்தது. வெப்பம் தெரியாதிருக்க அவரவர்க்கும் கைவிசிறிகளும் வழங்கப்பட்டன. இடையிடையே ஓதுவா மூர்த்திகளாலும் ஆதீனத் தேவாரப் பாடசாலைச் சிறுர்களாலும் பண்ணிசை

முழங்கப்பட்டது. இவ்வளவையும் கண்டவர்கள் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் செய்திருந்த ஏற்பாட்டையும் மகாநாட்டு வைபவத்தையும் கண்டும் கேட்டும் மகிழ்ந்து ' நான் பெற்ற பேறு இவ்வையகமும் பெறவேண்டும் ' என்று தாங்கள் தாங்களாகவே பேசிச்சென்றார்கள்.

சித்தாந்தம் செப்டம்பர் மீ 1941.

## தருமபுரத்தில் திருமுறை விழா
## ஆவணிமூலத் திருநாள்

மெய்கண்டான் சித்தாந்த மகாநாட்டு நான்காம் தினத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பண்டாரசந்நிதிகள் ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்கு 31-8-41ல் காலை 10-45 மணிமுதல், சுமார் 3-மணி நேரம் சைவாசரணைபடிக்கு விசேஷ அபிஷேக ஆராதனை முதலியவைகளைச் செய்தார்கள். மகாநாட்டிற்குவந்த ஆயிரக் கணக்கான பக்தகோடிகளுக்கு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் விபூதிப் பிரசாதங்களைத் தானே நேரில் வழங்கி ஆசீர்வதித்தார்கள். பிறகு சந்தர்ப்பணை நடந்தது.

இரவு 11-மணிக்கு திருநெல்வேலி ஸ்ரீ சுந்தரஓதுவாமூர்த்தி, வேதாரண்யம் அருணசல தேசிகர், நடராஜ தேசிகர், இராமலிங்கதேசிகர், கந்தசாமி தேசிகர் ஆகியவர்கள் இனிமையாகத் திருமுறைப் பாராயணம் செய்தனர்.

பிறகு சமயாசாரியத் திருவுருவப் படங்களையும் திருமுறைகளையும் வெள்ளி இரதத்தில் எழுந்தருளச்செய்து உயர்தர நாதசுர வாத்தியங்களுடனும், ஓதுவார் கூட்டங்களுடனும், விருதுகளோடும் வீதிவலம் செய்யப்பெற்றது.

சுதேசமித்திரன், 4—9—1941.

## MEIKANDAN SAIVA SIDDANDHA CONFERENCE

The Meikandan Saiva Siddandha Conference was held here on August 28, 29, 30, and 31 under the presidency of Sri Easana Sivachariar of Palni. The Conference was convened by His Holiness the Mahasannidanam of Dharmapuram Adhinam.

Sri-la-Sri Arulnandhi Thambiran, President of the Reception Commitee welcomed the gathering and spoke on 'Saiva Siddandha'.

Rao Bahadur C. M. Ramachandran Chettiar and Mr. K. Rengaswami Mudaliar spoke about the necessity and the usefulness of the Conference which was bound to give an impetus to the Saiva Siddandham and its philosophy.

Siva Sri Easana Sivachariar delivered his presidential address on Saiva Siddandham.

On all the four days many lectures were delivered by learned pandits, prominent among whom was Sri Chamundi Sankaracharya of Mysore.

The Hindu, 4-9-1941.

## மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு

இம்மகாநாடு 28, 29, 30-ம்தேதிகளில் திருத்தருமையம்பதியிற் கூடித் தன் கடனைச் செவ்வனே ஆற்றியுள்ளது. இம்மகாநாடு கூடவேண்டிய அவசியத்தைப்பற்றி, சென்னை H.R.E. போர்டு கமிஷனர், இராவ் பகதூர் C. M. இராமச்சந்திரஞ் செட்டியாரவர்கள் "மகாநாட்டின் அவசியம்" என்ற தமது பிரசங்கத்தில், மிகத் தெளிவாக எடுத்துக்காட்டியிருப்பதை வாசகர்கள் கவனிக்க விரும்புகிறோம். அம்மட்டோடன்றி போர்டாருக்கும் மத விஷயத்திலுங் கூடக் கவனஞ் செலுத்தக் கடமையுண்டென்பதை விளக்கியிருப்பது மிகவும் பாராட்டத்தக்கதாகும்.

சிலகாலமாக மக்களுணர்ச்சியில் சைவசமய வளர்ச்சிக்கும் மொழி வளர்ச்சிக்கும், அதற்கென்றேற்பட்ட ஸ்தாபனங்களும், சிறப்பாக மடங்களும் ஒன்றுங் கவனஞ் செலுத்தவில்லையென்ற எண்ணமேற்பட்டு எங்கு மதுவே பேச்சாக இருந்தது. இதைத் தவறு என்றும், அந்தந்த ஸ்தாபனங்களுந் தங்கள் தங்களா லியன்றவரையில், அந்தந்தத் துறைகளில் வேலை செய்து வருகின்றன என்றும், அதற்கெடுத்துக்காட்டாக, தருமபுர ஆதின கர்த்தரவர்கள் செய்துவரும் பல அரிய செயல்களையும் குறிப்பிட்டு நாம் எழுதிவந்தது வாசகர்கள் ஞாபகத்திலிருக்கலாம். சமய சம்பந்தமான பலநூல்களை வெளியிட்டு இனமாக வழங்கிவந்ததையும் வருவதையும், ஆலயங்கள்தோறும் தக்க வித்வான்களைக்கொண்டு சமயப் பிரசாரம் செய்து வந்ததையும்-வருவதையும், தேவாரப்பாடசாலையமைத்து சற்றேறக்குறைய இருபது பையன்களுக்கு உண்டியும் உறைவிடமும்

கொடுத்தாதரித்துப் பயிற்சிபெற்று வருவதையும் மீண்டுமொருமுறை எடுத்துக் காட்டுவது மிகையாகாது. அம்மாணவர்கள் திருமுறை வீதியுலாக் காட்சியில் தேவாரம் ஓதியதைக்கேட்டவர்கள் பாடசாலையினலுண்டான நன்மையை உணர்ந்திருப்பார்களென்றே எண்ணுகிறோம். சந்நிதானம் அவர்களே முன்வந்து, இப்பெரும் மாநாட்டைக்கூட்டி, மிகுந்த பொருட்செலவில் பல வித்துவான்களது பிரசங்கத்தை நடத்திவைத்தும், அவைகளை அச்சிட்டு வழங்கியதும், நாம் முன்னரறிவித்தபடி சந்நிதானத்திற்கு மொழி வளர்ச்சியிலும் சமய வளர்ச்சியிலுமுள்ள ஆர்வத்தையன்றோ காட்டுகிறது? இவர்களையன்றி வேறெவர்களாலும் இதனை நடத்த முடியாதென்று நாம் முன்னரறிவித்தது உண்மையென்பதையும், மக்களுணர்வார்களென்பதிலும் ஐயமில்லை.

மகாநாட்டிற்கு உபந்நியாசகர்களையும், தலைவர்களையும் தேர்ந்தெடுத்திருப்பதொன்றே, மகாசந்நிதானத்தின் அருஞ்செயலைக் காட்டுகிறது. தலைவர்களும் உபந்நியாசகர்களுந் தங்கள் தங்கள் விஷயங்களை மிகவுந் தெளிவாகப்பேசியது போற்றத் தக்கது. பொதுவாக இம்மகாநாடு நல்ல தருணத்தில், நல்ல முறையில், நல்ல இடத்தில், நல்லாரொருவரால் கூட்டப்பட்டு இனிது நிறைவேறி சைவ உலகத்துக்குப் பல நன்மைகள் உண்டாக்கியிருக்கிறது என்பதே நமதபிப்பிராயம். மகாசந்நிதானம் இதுபோன்ற செயற்கரிய காரியங்கள் பலவற்றையுஞ் உவப்புடன் செய்து கொண்டு, சிவப்பணி-சிவப்பணி ஆற்றிவரக் கருணைக் கட்லாம் கடவுளைப் பிரார்த்திக்கிறோம்.

நவஇந்தியா, 7—9—41.

## மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு
## ஆவணிமூலத் திருமுறை மகோத்ஸவம்

தருமபுரம் ஆதினத்தைச் சேர்ந்த மகாசந்நிதானத்தின் ஆதரவில் மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு ஆகஸ்டு 28உ முதல் 31உ யிருக வெகு விமரிசையாக நடந்தது.

மகாநாட்டின் தலைவர் பழநி காசிவாசி சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார், இந்துமத தருமபரிபாலன போர்டு கமிஷனர் இராவ்பகதூர் சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் இருவரும் மகாநாட்டுப் பந்தலுக்கு ஊர்வலமாக அழைத்து வரப்பட்டனர். தருமபுர ஆதீன ஸ்ரீ-ல-ஸ்ரீ பண்டார சந்நதிகள் வந்திருந்தோரை வரவேற்று, அவர்களை ஆசிர்வதித்தார்கள்.

பல பிரமுகர்கள் மகாநாட்டுக்கு விஜயம் செய்திருந்ததுடன், ராஜா சர். அண்ணாமலைச் செட்டியார், இந்துமத பரிபாலனபோர்டு தலைவர் திவான்பகதூர் டி. எம். நாராயணசுவாமி பிள்ளை, ஸ்ரீமான்கள் எஸ். சத்தியமூர்த்தி, டாக்டர் பி. சுப்பராயன், சி. என். முத்துரங்க முதலியார் ஆகியவர்கள் வாழ்த்துச் செய்தி அனுப்பியிருந்தார்கள்.

வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ-ல-ஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சைவசித்தாந்தத்தைப்பற்றிச் சாரமாக இரண்டொரு வார்த்தைகள் கூறி தலைவரை வரவேற்றார்.

இராவ்பகதூர் சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் சைவசித்தாந்தத்திற்கு இம்மகாநாட்டால் நேரிடும் பிரயோசனத்தை விளக்கிவிட்டு அதற்காகத் தருமபுர ஆதீனம் செய்துவரும் முயற்சியைப் பாராட்டிப் பேசினார்.

மகாநாட்டுத்தலைவர் காசிவாசி சிவஸ்ரீ ஈசான சிவாசாரியார் மெய்கண்டான் சித்தாந்தத்தைப்பற்றிச் சுமார் 1½மணி நேரம் சொற்பொழிவாற்றினார்கள். சைவசித்தாந்தத்தைப்பற்றிச் சிறு புத்தகமும் இனமாக எல்லோருக்கும் வழங்கப்பட்டது.

இரண்டாந் தினத்தன்று இராவ்பகதூர் சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் தலைமையில் மகாநாடு கூடியது. பல அறிஞர்கள் சைவசமயத்தின் அரிய சிந்தாந்தத்தைப்பற்றிப் பேசினார்கள். சென்னை வக்கீல் திரு. எம். பாலசுப்ரமண்ய முதலியார், திருவையாறு வித்துவான் கு. சோமசுந்தர தேசிகர், சென்னை மேரி ராணி கல்லூரி பௌதிக சாஸ்திர ஆசிரியை ஸ்ரீமதி ஈ. டி. ராஜேசுவரி அம்மாள் முதலியோர் பேசினர். சிவஞானபோதத்தை அப்படியே ஒப்புவித்த குமாரி மீனாட்சி என்கிற எட்டுவயதுப் பெண்ணின் ஞாபகசக்தி போற்றத்தக்கது. அன்று மாலையில் திருப்புகழ்மணி T. M. கிருஷ்ணசாமி அய்யர் இசையுடன் 'சிவகருணை' என்பதுபற்றிப் பேசினார்.

தருமபுர மடத்தின் ஆத்மார்த்த பூஜாமூர்த்தியான ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானுக்கு மிக உகந்த தினமான ஆவணிமூலத்திருநாள் மிக விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. பன்னிரு திருமுறையைப்பற்றி ஸ்ரீமான்கள் டி. கே. சிதம்பரநாத முதலியார், திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை, ஆக்டிங் உதவி கல்வி டைரக்டரான சச்சிதானந்தம் பிள்ளை முதலியோர் பேசினார்கள்.

மகாநாடு நடந்த தினங்களெல்லாம் ஸ்ரீ சுந்தரஓதுவாமூர்த்திகள் தலைமையில் தேவாரப் பாடசாலை கோஷ்டி நடைபெற்று வந்தது. திரு வெண்காடு சுப்பிரமணிய பிள்ளை நாதசுரம் வாசித்தார்.

கடைசி தினத்தன்று நால்வரும் திருமுறையுடன் மடத்துக்கு எழுந் தருளப்பட்டனர். அன்று பண்டார சன்னதிகள் பிரமுகர்களுக்கெல்லாம் திருநீறு பிரசாதம் வழங்கினர்.

மகாநாட்டுக்காகச் செய்யப்பட்டிருந்த வசதிகளைப்பற்றி எல்லாரும் அகமகிழ்ந்தனரென்பது குறிப்பிடத் தக்கது. சைவசமயம் என்பது என்ன வென்று தெரியாதவர்களுக்கெல்லாம், அதைப்பற்றிக் கண்ணைத் திறந்து விட்ட பெருமை ஆதீனத்தைச் சார்ந்ததாகும்.

பாரததேவி, 9—9—41.

## சைவ சித்தாந்த மகாநாடு

சொற்பொழிவு மண்டபம் அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. முன்பக்கம் அழகிய வளைவுகளும், மாடியமைக்கப்பெற்ற பந்தல்களும் விளங்கிற்று. எங்குப்பார்த்தாலும் கொடிகளும் விதானங்களும் பொலிந் தன. நல்லுணர்ச்சியை எழுப்பக்கூடிய சொற்றொடர்கள் அமைந்த கடிதங்கள் ஒவ்வொருதூணையும் காத்துக்கொண்டிருந்தன. பேர்பெற்ற ஓதுவாமூர்த்திகள் இசையுடன் தேவாரகானங்கள் செய்தனர். தமிழ், ஆங்கிலப் புலவர்களும், தனித்தமிழ்ப் புலவர்களும், சென்னை மாகாணத் தில் யார் யார் சொற்பொழிவு செய்வார்களோ, அவர்கள் எல்லோரும் ஒருங்கே கூடியிருந்தனர். ஈசான சிவாசரியார், இராவ்பகதூர் இராமச் சந்திரஞ் செட்டியார் அவர்கள் B.A.,B L., கோயமுத்தூர் C. K. சுப்பிர மணிய முதலியார் B. A., இம்மூவரும் முறையே தலைமை வகித்தனர். இவர்களைப்பார்க்கிலும் இம்மகாநாட்டிற்குத் தலைமைவகிக்கத் தகுதியுடை யார் வேறு காண்பதரிது என்பதை அறிஞர்கள் அறிவார்கள்.

மகாநாட்டுச் சொற்பொழிவு மண்டபத்தில் ஏறக்குறைய இரண் டாயிரம் பேருக்குமேல் குழுமியிருந்தார்கள்.

தருமபுர ஆதீனம் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் மகாநாட்டைத் திறந்து வைத்தது. இந்தச் சைவ சித்தாந்த மகாநாட்டை திறந்து வைப் பதற்கு அதிகாரியாவார் மகாசந்நிதானமேயாகும். திறந்து வைத்தது என் ருல் என்ன? சைவசித்தாந்த நூல்களில் (அதாவது மெய்கண்ட நூல்

களில்) மறைந்து உள்ளேவதிந்திருக்கின்ற பொருள்களை நமக்குத் திறந்து வெளியாக்குவதேயாம். குரு என்ற சொல்லின் பொருள் அஞ்ஞானத்தைப்போக்கி ஞானத்தை விளங்கச் செய்வதே என்பதாகும். தேசிகர் என்கிற பொருள் ஆன்மாக்களை மலத்தினின்றும் பிரித்து சிவத்தோடு அணைமயதாகும்படிச் செய்வதே ஆகும். ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக பரமாசாரிய சுவாமிகள் நாம் மேலே முன்னர்க் குறித்த பொருள்களால் இந்த மகாநாட்டைத் திறப்பதற்கும், நடத்துவதற்கும் உரியர் என்பது மறுக்கப்படாத உண்மையாகும். சைவஉலகம் தூக்கத்தினின்றும் விழித்துக்கொண்டது.

தமிழ் நன்மக்கள் பழமை பாராட்டி மகிழ்ந்து வருகின்றனர். இவ்வாறு மகா சந்நிதானம் மகாநாட்டைத் திறந்தவுடன் தேவாரம் முழங்கிற்று. தலைவர்களும் சொற்பொழிவாளர்களும் மெய்கண்ட நூலை வடித்தெடுத்த சாருகச் சொற்பொழிவு ஆற்றினர். சொற்பொழிவைக் கேட்பதற்குக் கூடியிருந்த நன்மக்கள் அனைவரும் சித்திரப் பாவையின் அத்தகவடங்கிக் கேள்வியின்பத்தில் ஈடுபட்டிருந்தனர். கூச்சல் ஒரு சிறிதும் இல்லை. ஆதீனப் பணியாளர்கள் வந்தவர்களுக்கு எது தேவை என்பதை உபசரிப்பதில் கண்காணிப்பாய் இருந்தனர். ஒவ்வொருவருக்கும் விசிறி கொடுக்கப்பட்டிருந்தது. வென்னீர் அறை ஒன்று அமைத்து நீராடுவதற்கும் பல்துலக்குவதற்கும் வேண்டிய கருவிகளுடன் பணியாட்களும் எதிர்நோக்கி நின்றனர். உணவுச்சாலை ஏறக்குறைய ஈராயிரவர் இருந்து உண்ணும்படியாக அமைக்கப்பட்டிருந்தது. அதன் பின் பக்கத்தில் சமையல் செய்வதற்கான இடமும் அமைக்கப்பட்டிருந்தது. சைவர்கள் சமையல் செய்யும் வன்மை வாய்ந்த புலவர்களாக அமைந்திருந்தனர். காலைச் சிற்றுண்டிகள் ஏராளமாக வழங்கப்பட்டன. வந்தவர்கள் தங்குவதற்குத் தனிஇடங்களும் பொதுஇடங்களும் அமைக்கப்பட்டிருந்தன. அங்கங்கேயும் வந்திருந்தவர்களுக்கு உண்டி, சிற்றுண்டி தனித்தனியே கொண்டுபோய்ச் சேர்க்கப்பட்டன. இவைகளைப் பற்றியெல்லாம் நாம் மகிழ்ச்சியடையவில்லை. கேட்ட அளவில் சொற்பொழிவுகளைப் புத்தக வடிவில் அச்சிட்டு வெளியிட்டது மிக மிகப் பயனுள்ளதாகும். இது மட்டுமன்று. சந்நிதானம் கருணைகூர்ந்து சைவ நூல்களையும், தமிழ் நூல்களையும் அச்சிட்டு இலவசமாக வழங்கி வருகின்றனர்.' இவை தமிழ்நாட்டுக்குப் பெரிதும் உபகாரமாகும். தமிழ்நன்மக்கள் சந்நிதானத்திற்கு இவ்வண் நன்மைக்கு கடைப்படுகின்றனர். இவைகளையெல்லாம் பார்க்கிலும் நாம் ஆச்சரியப்படும் பெருங் காரியம் ஒன்று இருக்கிறது. அதுவென்னவென்றால் சொற்பொழிவுகள் ஒவ்வொரு நாளும் எட்டுமணி நேரத்துக்குக் குறைவில்லாமல் நடந்தது. ஒவ்வொரு

நாளும் அவ்வெட்டுமணிநேரமும் மகாசன்னிதானம் தனி ஆசனத்தில் சொற்பொழிவு மண்டபத்தில் வீற்றிருந்து உடல் நிலையை சிறிதும் பொருட்படுத்தாது அடியார்களுக்கு உணர்வை அளிப்பதில் சனகாதிகளுக்கு நம் முழுமுதற் கடவுள் இருந்து காட்டிய காட்சியைப்போல் சந்நிதானம் இருந்துகாட்டிய கருணைத் திறத்தைச் சைவ நன்மக்களும், தமிழ்மக்களும் மறக்கவே மாட்டார்கள். மகாநாட்டின் வரவேற்பு, உபசரணை அமைச்சர் பொறுப்பு இவைகளுக்கு ஆதீனத்துத் தம்பிரான் மூர்த்திகளே அமைந்தது திருக்கூட்டத்தின் சிறப்பையும் திறமையையும் தெளிவித்துக் காட்டுகின்றது. இவ்விழாவை அணிபெற நடத்திய திறமை மகாநாட்டின் பொது அமைச்சர் மௌன ஸ்ரீ-ல-ஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளைச் சார்ந்தது என்பதை வாய்கூசாமல் சொல்கிறோம்.

நவ இந்தியா விஷு–ஹூ புரட்டாசி மீ 5உ.

## மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு

மாயவரத்திற்குச் சமீபமாயுள்ள தருமபுர ஆதீன மடாலயத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ தருமபுரம் மகாசந்நிதானத்தின் ஆதரணையின்கீழ் தமிழ்நாட்டில் இதுகாறும் நடைபெறாத ஓர் மகாநாடு சென்ற 29—8—41 முதல் 31—8—41 முடிய நான்கு நாளைக்கு வெகு விமரிசையாக நடந்தேறியது. அம்மகாநாட்டிற்கு சுமார் ஆயிரம்பேர்களுக்கு மேல் வந்திருந்தார்கள்.

அம்மகாநாட்டில் முக்கியமாக மெய்கண்ட சித்தாந்தத்தைப்பற்றியுள்ள சிவஞானபோதத்திலுள்ள 12 சூத்திரங்களை பல ஊர்களிலிருந்து பிரபல வித்துவான்களைக்கொண்டு தெளிவாக எடுத்துரைத்து ஜனங்களுக்கு மெய்கண்டான் அல்லது அத்வைத சித்தாந்தத்தின் தத்துவத்தைப்பற்றி உபன்னியாசம் நடத்தப்பெற்றது. 29—8—41 பழநியிலுள்ள வேதாகம படசாலைத் தலைமை ஆசிரியர் காசிவாசி சிவஸ்ரீ ஈசான சிவாசாரியாரவர்கள் மகாநாட்டின் தலைமையின்கீழ் சிவஞானபோதத்தின் முதல் ஆறு சூத்திரங்களையும் அன்று பல வித்துவான்களைக்கொண்டு விவரமாக எடுத்துரைக்கப்பட்டது. இந்துமத எண்டோமெண்டு போர்டு கமிஷனர் இராவ்பகதூர் சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியாரவர்களும் அன்று மகாநாட்டுக்கு விஜயம் செய்திருந்தார்கள். ஒவ்வொரு சூத்திரமும் குறிப்பிட்ட பலவித்துவான்களால் கட்டுரைகள் ரூபமாகவோ அல்லது உபன்னியாசமாகவோ தெளிவாகச் சொல்லப்பட்டது. 30-8-41உயன்று

எண்டோமெண்டு போர்டு கமிஷனர் இராவ்பகதூர் C. M. இராமச் சந்திரஞ் செட்டியார் அவர்களின் அக்கிராசனத்தின் கீழ் சிவஞான போதத்தில் 7-முதல் 12-ம் சூத்திரம் முடிய முதல் நாள் நடந்ததுபோல் பலவித்துவான்களால் உபன்யாசம் நடந்தது.

நமது இந்துமதத்தின் முதன்மையாயுள்ள அத்வைத சித்தாந்தத்தின் தத்துவங்களை எடுத்துரைத்து ஜனங்களுக்கு அவைகளின் தாத்பரியங்களைத் தெளிவாகச் சொல்லி அவர்களுக்கு விவேகமும், பரலோக சாதகத்திற்குண்டான வழியும் காட்டக்கூடிய இத்தகைய மகாநாட்டைக் கூட்டிப் பலவிடங்களிலுள்ள அறிஞர்களை ஒன்று சேரும்படிச் செய்து அவர்களின் அரிய போதனைகளைப் பல பொது ஜனங்கள் கேட்டுத் தங்கள் அஞ்ஞான இருளிலிருந்து வெளிவரச் செய்யும்படி ஏற்படுத்தியுள்ள ஸ்ரீ-ல-ஸ்ரீ தருமபுரம் ஆதீன கர்த்தரவர்களுக்கு நமது மனமார்ந்த நன்றியைச் செலுத்துகிறோம்.

இம்மகாநாடானது ஒவ்வொரு வருஷமும் நடைபெறுமென நம்புகிறோம். முதன் முதலாக ஏற்பட்டுள்ள மகாநாட்டின விமரிசையானது முக்கியமாய் ஆதீனத்தின் ஏகதேச முயற்சியின் பயனே யொழிய வேறு ஒருவருடைய யத்தனமும் இல்லை. இனிக் கூட்டப்படும் மகாநாடுகளில் பிறரும் உற்சாகத்துடன் கலந்துகொண்டு இன்னும் விமரிசையாகச் செய்ய எத்தனிப்பார்களென்பதில் சந்தேகமில்லை. தற்காலம் தருமபுரத்தின் படாலயத்துப் பீட த்தை வகித்து வரும் ஆதீனகர்த்தர் தாம் வந்தது முதல் சைவசித்தாந்தத்தைப் பரவச்செய்ய பலவிதமான முயற்சிகள் எடுத்துக்கொண்டிருப்பது பலரும் அறிந்த விஷயமே. சைவசித்தாந்தத்தைச் சார்ந்த பல நூல்களைத் தாமே புத்தக ரூபமாக அச்சிட்டு ஜனங்களுக்கு விலையில்லாமல் கொடுத்துக்கொண்டிருக்கிறார்கள். பொது ஜனங்கள் இதையுணர்ந்து, அப்பெரியார் செய்துவரும் பேருதவியினால் தங்கள் ஞானத்தை விருத்தி செய்துகொண்டு அஞ்ஞான இருளைப் போக்கிக்கொள்ள மார்க்கம் தேடுவார்களேயானால் அதுவே அவர்கள் ஆதீன கர்த்தரவர்களுக்குச் செய்யும் பிரதியுபகாரமாகும்.

பாரதமணி, 17—10—41.

# APPENDICES *

1. Some Thoughts on Sivagnanabhodam
2. The Essence of Saivism
3. The Saiva Mutts
4. திருமுறைப் பெருமை

* மகாநாட்டில் வழங்கப்பட்டவை.

# Some thoughts on Sivagnanabhodam

[Sri. E. T. Rajeswari Ammal, M.A., L.T.]

Thanks to the earlier translation of the works of Sankara, it was his school of Vedanta that has come to be identified with Indian thought in the minds of most Westerners. The other schools of Vedanta are slowly coming, in their turn, for recognition. Except, however, for occasional notices, the Saiva Siddhanta remains still in oblivion. A systematic study of this school of thought is not possible for the Westerners. It is a Tamilian school of thought and most of the works are in Tamil. It is only recently that Tamil is gaining its proper place in the scheme of things. For getting a proper perspective, one must have all the necessary literature. Even the source books have not all of them seen the light of day. An important commentary on Sivagnana Siddhiar by one of the great saints of Dharmapuram Mutt *viz;* வெள்ளியம்பலவாணத் தம்பிரான் has still to be printed. Fortunately, the Mutts which were keeping the Sacred Literature, from the profane gaze of the market place, as their close preserve, have realised atlast the necessity for publishing and popularising them. Thanks to the timely attempt of this mutt, this famous commentary may be available to the public at an early date.

Therefore, the history of this school of thought has yet to be written. But one cannot assess the value of the contribution of the Sivagnanabhodam to Indian thought, except when placed in its historical perspective. The merest outline may, however, be attempted to be traced. The Civilisation of Sindh, as revealed by the excavations at Mohenjodaro and Harappa, is older than Indo-European civilisation. There the seeds of Saivite thought had already begun to sprout. The Lord of creation with all the souls at his feet, representing the conception of Pasupathi (பசுபதி)—the Silent watcher as the great Master representing the conception of

Dakshinamoorthi—the Brahmini bull representing the sacred worship of Nandi—the Great mother representing the conception of Divine love—these ideas probably had already developed into creeds. Everytime one thinks of Dakshinamoorthi, plain living and high thinking involved in the life of meditation, are set as the goal of every seeker after truth. God is not above truth. He is Himself a Seer lost in its contemplation. The idea of unity of creation and God's power of knowledge are involved in the conception of (பசுபதி) Pasupathi. Divinity of all creation demanding our reverence and love and leading to a happy communion and hearty co-operation in this world is involved in the conception of the Sacred Bull. The idea of love as the fundamental principle of the universe is involved in the conception of the Divine Mother.

These slowly influenced the Vedic thought. There was no longer any derision of phallic worship. The praise of Siva as the *summum bonum* of life came to be sung, in the Svetasvataropanishad. Beef eating gave place to worship of the cow. The conscious unity amidst a show of plurality was strengthened by Vedic thought. Tantras and Agamas are said to preserve the pre-Aryan thought and these grow in number and volume in their passage through time.

Dr. Grierson tells us that the word Siva itself is Dravidian in its origin; probably it is another form of the Tamil word "Seyon" (சேயோன்) the Red, which came to be translated into Rudra. சேயோன் Seyon, according to Tolkappiyam is no other than Muruga. The conception of Muruga as the unchanging youth, the eternal bliss, the omniscient divinity and perfect love, shining in and through every sensual pleasure which is but a reflection or an echo of divinity, is a great Tamilian contribution as may be proved by reference to the dictionary meaning of this word or by a study of Tirumurugattruppadai, the universal Bible of the Tamilians. This conception, thus, carries forward the ideals of the Sindh civilisation. The creator and the created do not form a duality. Knowledge becomes one with love. There is no

other worldliness here. Nor is this a Bohemian life. When the out - look is changed and passions are sublimated, divinity shines every where.

This leads on to the theory of Ashta Murta or the octave of divine forms which is represented as the quint-essence of Saivism in Manimekhalai. The five mighty elements of the world which feed us with pleasures and kindle in us all the feeling of wonder and awe and reverence for the unknown power, every time our sense organs come in contact with them, the shining glories of the sun aud the moon which we see higher up in the firmament and which lead us on to the conception of infinity, that which shines more than all these the soul whose very form is the resplendent intelligence - all these form the Temple of God. This is not dry pantheism but a rich poetic vision which is equally a divine vision. The world ceases to be a snare and a delusion. The three fundamental categories of God, Soul, and Universe stand transformed into a perfect union. Meykandar's disciple Manavachakam Kadantar (மனவாசகங் கடந்தார்) proclaims this great truth:—

" முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தஅணு போகத்தைத் துய்த்தலணு—மெத்தவே
இன்பங் கொடுத்தல்இறை இத்தைவிளை வித்தல்மலம்
அன்புடனே கண்டுகொள் அப்பா" (உண்மைவிளக்கம்)

Those who have gained this vision, no more suffer from the world of bondage or the universe of sorrow.

" எட்டுக் கொண்டார்தமைத் தொட்டுக் கொண்டே நின்றார்
விட்டா ருலகம்என் றுந்தீபற,
வீடே வீடாகுமென் றுந்தீபற" —உய்யவந்ததேவ நாயனார்.
(உந்தியார்)

Thus sings Uyyavandadeva Nayanar in another Saiva Siddhanta work. Here there is no running away from the world on which you stand, for you cannot; such kind of negative renunciation has no meaning.

"அஞ்சும் அடக்கடக் கென்பர் அறிவிலர்
அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கிலை
அஞ்சும் அடக்கில் அசேதன மாமென்றிட்டு
அஞ்சு மடக்கா அறிவு அறிந்தேனே" — திருமந்திரம்.

Negation leads to the great void; sublimation of the desire throws open the gates of heaven, here and now.

There is another truth involved in this conception, a truth of great value, immense importance and supreme significance to the world. The ideal, be it noted is not merely individual perfection; salvation is to be social and universal; it is a communion with all the souls and all nature in their divine unity. Sings Pattinathar,

"என்னையும் கண்டேன் பிறரையும் கண்டேன்
நின்னிலை யனைத்தையும் கண்டேன், என்னை!
நின்னைக் காணா மாந்தர்
தம்மையுங் காணாத் தன்மை யோரே"

This is explained at length in the commentary on the 10th sutra of Sivagnanabodham. This theory of Ashtamurta as a Tamilian conception has been adopted by the Alwars and has become an Indian creed in the hands of Kalidasa and others.

The relationship of God to this Temple of His is analysis by the seer and the Advaita of Meikandar is the result. This Advaita of Meikandar is unique, as a harmony of all warring creeds. There is here monism, qualified monism and dualisim. Reduced to words, these creeds seem to be contradictory. But the Absolute will cease to be so, if it cannot resolve these contradictions in its wonderful harmony. This theory of Meikandar's Advaita, is explained by that great master of exposition, Umapathi Sivam, thus:—

"புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளியாய்ப்
புகலளவைக் களவாகிப் பொற்பணிபோல் அபேதப்
பிறப்பிலதாய் இருள்வெளிபோற் பேதமும் சொற்பொருள்போல்
பேதாபே தமுமின்றிப் பெருநூல் சொன்ன
அறத்திறனால் விளைவதாய் உடலுயிர்க்கண் அருக்கன்
அறிவொளிபோற் பிரிவறு மத்துவித மாகும்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ
சித்தாந்தத் திறன் இங்குத் தெரிக்கலுற்றாம்"

The illustrations given in this song explain the organic unity representing Spiritual Statics, the active monism representing the Spiritual Dynamics, and also the spiritual communism of living communion and divine co-operation with the Being through Becoming representing the Spiritual History. Here is thus established in the place of absolutism and tyranny, so well known in other religions, a real spiritual democracy of love and learning. Perfection is in the union and no where else. It is this spiritual conviction of Divine Experience which makes the Tamilian Alvar (*திருமழிசை ஆழ்வார்*) proclaim.

"இன்றாக நாளையே யாக இனிச்சிறிதும்
நின்றாக நின்னருள் என்பாலதே—நன்றாக
நான் உன்னையன்றி இலேன்கண்டாய் நாரணனே
நீ என்னை யன்றி இலை"

It is in the self same spirit Pattinathar (*பட்டினத்தார்*) also sings the great Magna Carta of Spiritual Democracy. The poem beginning with the words (*புண்ணிய புராதன*) is too big to be quoted in full and therefore the closing lines are alone given.

* * *

"ஐந்து புலன்களும் ஆர ஆர்ந்து
மைந்தரும் ஒக்கலும் மனமகிழ்ந் தோங்கி
இவ்வகை இருந்தோ மாயினும் அவ்வகை
மந்திர எழுத்தைந்தும் வாயிடை மறவாது
சிந்தை நின்வழி செலுத்தலின் அந்த
முத்தியும் இழந்திலம் முதல்வ! அத்திறம்
நின்னது பெருமை யன்றோ என்னின்

வல்லா ஞெருவன் கைம்முயன் றெறியினும்
மாட்டா ஞெருவன் வாளா வெறியினும்
நிலத்தின் வழாஅக் கல்லேபோல்
நலத்தின் வழாஅர்நின் நாமம் நவின்றோரே."

These lines form in addition a poetic commentary on the implications of the theory of Ashtamurta. These remind us of Meikandar's words:—

"அவைதாம் ஊசல் கயிறு அற்றால் தரையே
யாம் துணையான்"

God and soul have been often compared by the poets all the world over, to a loving couple, God representing the active man and soul the passive woman. Saivism though singing in the same strain to explain the beginning stages of spiritual progress, does not accept this interpretation of activity and passivity, as final. According to this school, Soul is the man and God his lady love. That is the metaphysical interpretation of Thirukkovaiyar (திருக்கோவையார்). This does not mean that the Saivites do not believe in the surrunder of self to God. What the Vaishnavites call (சரணகதி) Saranagati is translated into Saivite phraseology as (ஆத்ம நிவேதனம்) Atmanivedanam.

"நாயிற் கடையாம் நாயேனை நயந்து நீயே ஆட்கொண்டாய்
மாயப் பிறவி உன்வசமே வைத்திட் டிருக்கும் அதுவன்றி
ஆயக் கடவேன் நானோதான் என்னதோ இங் கதிகாரம்
காயத் திடுவாய் உன்னுடைய கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே"

So sings Manikkavasagar. Sivagrayogi uses the very word (பிரபத்தி) Prapatti made much of by the Vaishnavites in this connection, in his Sivaneri Prakasam (சிவநெறிப் பிரகாசம்). Therefore, the attitude under reference is not opposed to this. It is not sheer arrogance of self but confidence in God. That apart, this conception of spiritual democracy deserves to be delivered as a message to the present day world.

"அவனே தானே யாகிய அந்நெறி
ஏக னாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே'

is indeed a great message.

God is the supreme experience. It is the fundamental datum. It, therefore, cannot be the subject matter of logical or scientific analysis. The axiom cannot be demonstrated. Our knowledge is relative but our experience, if real, is absolute. Our experience in the present level, is impure and is a series of sensations. But divine experience is not a mere sensation. God cannot be seen but only experienced. There is a beautiful Tamil word "உணர்வு" representing this Paragnana (பரஞானம்) or intuition, not to be confused with instinct, as contrasted with அறிவு or ordinary knowledge. In the realm of poetry and art, one gets a glimpse of this intuition but never in its pure form. There are thus two poles in our conciousness, intuition and knowledge. Sivagnanabhodam consists therefore of two parts, the first half dealing with general or relative or finite knowledge of the work-a-day world and the second half dealing with the absolute experience of the mystic.

Proofs are offered and definitions attempted, to start with from the relative point of view. There, it speaks the language of the world. The position is clearly pragmatic. Births and deaths, misery and change, these set us a-thinking. They send us in search of a remedy. God is a pragmatic truth. There is even here in this world an order shining in and through Nature seemingly omnipotent, leading on to the various states of conciousness. Real truth is vouchsafed to us, as it were, in a dream of the supreme state. There is therefore an inner principle vivifying the whole scheme of things.

The outer principle of the Universe and the inner principle of God-head gain a meaning and significance—possibly a pragmatic value again—only through the soul who alone realises their interplay. The position althrough is equally realistic. But ultimately

there is also idealism when one expresses the means and ends of the realisation. From pragmatism, through realism, on to idealism, the Saiva Siddhanta takes us all on a holy pilgrimage and therein, these find their respective level and value, completion and harmony. Utility alone cannot make a thing true and real; the pragmatic truth must also be the absolute truth, to be so called. The finite knowledge of the Realists is but a warped knowledge. They know not of the absolute knowledge of the mystics and that is why they deny it. When the real truth dawns, there comes in its wake, the infinite knowledge of the idealist and the mystic. To talk of it in the market place is to run mad; and that is the fault of idealism.

This distinction, therefore, between பொது and உண்மை is fundamental. It denies that God can be a matter of knowledge and yet it asserts He can be experienced. God cannot be expressed in a logical formula; he cannot be brought to the discharge tube. Science and logic deal with logical constructions which have no reality beyond them. God, on the other hand, is a reality as an experience of the mystic. The dead bones of the dry arguments of self-conceited logic are only for the hungry bite of the barking dogs of futile debate of all smoke and no light. The eternal intoxication of divine bliss is the actual fact of the real experience of the clear sighted mystic. Experience and not debate is conclusive.

Sivagnanabhodam, consisting as it does of only 41-lines, is the shortest of the religious or philosophical works now extant in this world. The Gita, compared to this, is mammoth like. Sivagnanabohdam represents the quintessence of the mystic experience of Meikandar. But in the dark days of the Middle Ages, when Tamil came to be looked upon as a vernacular or the language of the slaves and when the Theory of Divine origin of Sanskrit came to be developed, nothing had any value except the Sanskrit works. Sivagnanabhodam, for its very existence, had to pass off for a translation. It had to shine through its reflected

light. Its greatness was traced to its Sanskrit version in the (ரௌரவ ஆகமம்) Rowrava Agama. That there is such a Sanskrit version, nobody can dispute. But anyone who reads the Tamil original and the Sanskrit version, without prejudice, can, at once, realise the vigour and grandeur of the Tamil work. The Tamil work is an artistic perfection, as is revealed by Sivagnanaswami's commentary. Not so the Sanskrit version; and it is not its fault; it gives only a rough and ready summary of the work and nothing more; in this it has succeeded exceedingly well. The last verse in Sanskrit clinches the issue: "Thus learn the conclusive truths of Saivism from Sivagnanabhodam" - a patent admission that it is giving only the gist of some other work. If Meikandar took upon himself the serious task of translating a portion of a Sacred and Divine Text and admittedly no one is prepared to say that he is attempting to give us only the gist of the book, he could not have taken so many liberties with his original as he must be taken to do, in the translation of almost every verse.

He is not only an author but the founder of a school of thought. He has himself, thus, taught this work to his disciples and that has resulted in the short but sweet commentary and those valuable illustrative verses, attached to these sutras. It is again an Indian usage to write a commentary on one's own work. The work, one may grant, represents the traditional teachings vouchsafed to him; and in that sense, the thoughts, if not the language, may be old.

Meikandan (மெய்கண்டான்) means a seer. The Sanskrit phrase (சத்தியஞானதரிசனி) Satyagnanadarsini is but a translation of this term. The usage, prevalent in the intellectual world of the Tamils, is to christen a poet afresh, with the beautiful and suggestive phrase used by him, baptising him, as it were, in the white heat of his own poetic fire. "தொடித்தலை விழுத்தண்டினார்", "செம்புலப் பெயனீரார்" and a host of other names of the Sangam poets amply illustrate this usage. In a similar way, Meikandar

